


'உம்முல் குரா'—நகரங்களின் தாய் என வான மாமறை குர்ஆனின் வாய்மொழி பெற்றிலங்கிடும் மக்கமா நகரிலிருந்து ஏறத்தாழ முன்னூறு கல் தொலைவில் ஒளி வீசிக் கொண்டிருக்கும் மற்றொரு புனித நகரம் மதீனா!

'அல் முனவ்வரா' என்ற அணிமொழி சேர்த்தே அழைக்கப் பெற இன்று விழையப் பெறும் இப்புனித நகரத்தின் பூர்வீகப் பெயர் 'யத்ஸ்ரிப்'. பிணக்குகளை விளைவித்து, தங்களிடையே பிரிந்தே வாழும் குணக்கேடர்களைத் தன்னகத்தே கொண்டிருந்ததால், 'குழப்பமுடையது' என்ற பொருள்பட அக்காலத்தில் அவ்வாறு அழைக்கப்பட்டது அப்பட்டணம்.

வரலாற்றில் அறியப்பட்ட காலத்திலிருந்து அதன் பூர்வீகக் குடிகளாக இருதரப்பினர் வாழ்ந்து வந்தனர். வேத மருளப் பெற்ற யூதர்கள் ஒரு கூட்டத்தார்; வணக்க வழிபாடுகள் பற்றிய ஒழுங்கு முறைகள் ஏதுமறியாத 'முஷ்ரிக்'குகள் மற்றொரு கூட்டத்தார்.

பெருமானார் திரு நபி (ஸல்) அவர்களின் வருகைக்குப் பின்னரே 'மதீனா-அல் முனவ்வரா'வாக—ஒளி பொருந்திய பட்டணமாக மாறிய 'யத்ஸ்ரி'பின் பூர்வீகம் மிகத் தொன்மையுடையது.

பிரளயத்திலிருந்து பிழைத்து, ஹழ்ரத் நூஹ் (அலை) அவர்களோடு கரையிறங்கிய எண்பது பேர் பாபிலைச்

சூழ்ந்த நிலப்பரப்பில் வாழலாயினர். 'கர்ய(த்)துத் ஸமானீன்—எண்பதின்மரின் பட்டணம்' என்ற ஒரு நகரமும் அங்கு நிர்மாணிக்கப்பட்டு விளங்கியது. அவர்கள் அனைவரும் பின்னர் மரணமடைந்து நபி நூஹ் (அலை) அவர்களின் மக்களான ஸாம், ஹாம், யாஃபத்ஸ் எனப்பட்ட மூவரும் அவர்களின் மனைவிமாருமே மிஞ்சி நின்றனர். அவர்களி லிருந்து பல்கிப் பெருகியதே இம்மனித வர்க்கம் என்பதை அல்லாஹ்வின் திருமறை,

وَلَقَدْ نَادٰىنَا نُوْحٌ فَلَنِعْمَ الْمُجِيْبُوْنَ ۝ وَنَجَّيْنٰهُ وَاَهْلَهٗ مِنَ الْكَرْبِ الْعَظِيْمِ ۝
وَجَعَلْنَا ذُرِّيَّتَهٗ هُمُ الْبٰقِيْنَ ۝

"நூஹ் (நபி உதவி கோரிப் பிரார்த்தித்து) நம்மை அழைத்தார். நாமோ (பிரார்த்தனைக்குப்) பதிலளிப் பதில் மிகச் சிறந்தோர்.

"ஆகவே அவரையும் அவருடைய குடும்பத்தாரை யும் மகத்தான கஷ்டத்திலிருந்து இரட்சித்துக் கொண்டோம்.

"அவர்களுடைய சந்ததிகளையே (பிரளயத்தி லிருந்து தப்பிப் பிழைத்து, பிற்காலத்தில் என்றும்) நிலைத்திருக்கும்படி செய்தோம் — என்ற (37 : 75 to 77) வசனங்களால் உறுதிப்படுத்துகிறது. இதனா லேயே ஹழ்ரத் நூஹ் (அலை) அவர்கள் 'அபுல் கல்க் — படைப்புகளின் தந்தை', 'ஆதமுத் ஸானீ — இரண்டாம் ஆதம்' என்றெல்லாம் சிறப்பிக்கப் படு கிறார்கள்.

இவர்களின் வழிவாறுகள் பூமியில் பல்கிப் பெருகலா னார்கள். ஆரம்பத்தில் அவர்களெல்லாம் ஒரே கூட்டத் தினராகவே வாழ்ந்தார்கள்; ஒரே அரசனையும் ஏற்றிருந்

தார்கள். தலைமுறைகள் மாற மாற முன்னோர்களின் நினைவுகள் சன்னஞ் சன்னமாக அவர்களின் எண்ணங்களை விட்டும் விலகத் துவங்கின; கருத்து வேறுபாடுகள் முளை விடலாயின. நிராகரிப்பும் அவர்களிடையே நுழைந்தது. ஒருவரோடொருவர் பேதப்படத் துவங்கி முகந்திருப்பிக் கொள்ளப் பழகினர். ஆண்டவனின் தூதர் காட்டிச் சென்ற அறவழியை மறந்து புதுப்புதுப் பாதைகளில் நடந்த அவர்கள் எழுபத்து இரண்டு விதமான மொழி வழியினராகப் பிரிந்து போயினர்.

அவர்களில் ஸாம் இப்னு நூஹ் (அலை) அவர்களின் வழிவாறுகளில் ஒரு கூட்டத்தினர் அரபியைத் தங்களின் மொழியாக அமையப் பெற்றனர். அவர்கள், இன்று மதீனாவாக உள்ள அப்பூமியில் தங்கி வாழலாயினர். பேரீத்தங் கன்றுகளை முதன் முதலாக ஊன்றி வளர்த்தவர்கள் அவர்களே; அத்துடன் வேளாண்மையும் செய்தனர். ஸாமின் மகன் அர்ஃபக்ஷதின் மகன் அம்லாக்கின் வழிவாறுகளான அவர்கள் தங்களை 'அமாலிக்கர்'களென அழைத்துக் கொண்டனர். நீண்ட ஆயுளை அருளப் பெற்றிருந்த அவர்களிடையே நானூறு ஆண்டுகளுக்கிடையிலும் கூட ஒரு பிரேத ஊர்வலத்தைக் காண்பதோ, மரண ஒப்பாரியைக் கேட்பதோ அரிதாக இருந்தது. காலத்தின் களிப்பை நிரம்பமாகவே சுகித்த அவர்களின் ஆதிக்கம் நாளடைவில் பஹ்ரைன், அம்மான், ஹிஜாஸ், ஸிரியா, எகிப்து வரையிலும் பரவியது. ஸிரியாவில் வாழ்ந்த வலிமை மிக்க 'ஜபாபிரா'க்களும், எகிப்தில் வாழ்ந்த 'ஃபிர்அவ்னி'யர்களும் இவர்களிலிருந்து வந்தவர்களே — என்ற செய்திகளை ஹழ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறக் கேட்டு வரலாற்றாசிரியர்கள் எழுதியுள்ளனர்.

அமாலிக்கர்களையடுத்து இந்தப் பூமியில் யூதர்களின் பாதங்கள் பட்டது பற்றிய பல்வேறு செய்திகள் காணப்படுகின்றன:

இறைவனின் இறுதிப் பெருந் தூதராய்ப் பிந்திய காலத்தில் பிறக்கவிருந்த பெருமான் முஹம்மத் (ஸல்) அவர்களைப் பற்றிய முன்னறிவிப்புகளை தங்களின் வேத நூலாகிய 'தவ்ராத்'தில் கற்றிருந்தனர் யூதர்கள். அந்நபிகளார் (ஸல்) புகலிடம் பெற்று புகழ் மணக்கப்போகும் இடமும், 'ஈச்சமரச் சோலைகளால் முப்புறமும் சூழப்பெற்ற — இரு பாறைகளுக்கிடைப்பட்ட பட்டண'மென 'தவ்ராத்'தில் அடையாளங் காட்டப் பட்டிருந்தது. 'தவ்ராத்' அருளப் பெற்ற — யூதர்களின் மாபெரும் ரஸூலாகிய ஹழ்ரத் மூஸா (அலை) அவர்கள் ஹஜ்ஜை நாடி மக்கா வந்தபோது அவர்களோடிணைந்தே இஸ்ரவேலர்களாகிய யூதர்களின் பெருங்கூட்டமும் வந்தது. ஹஜ்ஜை முடித்து 'யத்ஸ்ரிபி'ன் புறமாகவே திரும்ப நேர்ந்த அவர்கள், பிந்திய காலப் பெருநபிகளார் (ஸல்) அவர்கள் குடிகொண்டு முடியாளப் போகும் பட்டணத்தைப் பற்றி வேத நூல்களில் தாங்கள் கற்றிருந்த அடையாளங்களை அங்கே கண்டனர். நபிகளுக்கெல்லாம் நாயகமான அப்பெருநபியைத் தாங்களும் காண வேணவா கொண்டவர்களாக அவர்களில் ஒரு கூட்டத்தினர் ஹழ்ரத் மூஸா (அலை) அவர்களிடம் அனுமதி பெற்று அங்கேயே தங்கி வாழலாயினர். அவ்விடத்தைச் சூழ்ந்த ஹிஜாஸில் வாழ்ந்த வானாந்திரவாசிகளில் ஒரு கூட்டமும் அவர்களோடு சேர்ந்து, அவர்களின் மதத்தையும் ஏற்றுக் கொண்டது — என 'அபுல் முனத்ஸிர்' என்ற பெரியார் கூறக் கேட்டு 'ஜ்ஸர்ரீன்' என்பவர் அறிவிக்கின்றார்.

இதன் மூலம் யூதர்களே 'யத்ஸ்ரி'பின் முதற்குடிகளோ என எண்ண நேர்ந்தாலும், வரலாற்று வல்லுனர்கள் தங்களின் ஆய்வின் முலம் அதனை மறுத்து அமாலிக்கர்களையே யூதர்களுக்கு முற்படுத்துகிறார்கள்; அமாலிக்கர்களைச் சார்ந்த 'யத்ஸ்ரப்' எனப்பட்ட ஒருவரின் பெயராலேயே அறியப்பட்ட நாளிலிருந்து அப்பட்டணம் 'யத்ஸ்ரிப்' என அழைக்கப்பட்டு வந்ததாகக் குறிப்பிடுகிறார்கள்.

அமாலிக்கர்கள் பல்கிப் பெருகி ஹிஜாஸின் முழுப் பகுதிக்கும் அதிக்கர்களானபோது தற்பெருமையும் தறுதலைத் தனமும் அவர்களில் மிகைத்து விட்டது. தட்டிக் கேட்க எவருமற்றிருந்த ஏகபோகத்தின் தீமைகள் முழுவதுமே அவர்களிடையே பரவி நின்றன. அக்காலத்தில் இறைவனின் பேரருளால் ஃபிர்அவ்னை மூழ்கடித்து எகிப்திலிருந்து வெளியேறி வந்த ஹழ்ரத் மூஸா (அலை) அவர்கள், ஸிரியாவை வெற்றி கொண்டு அங்கு தரிகெட்டு வாழ்ந்து கொண்டிருந்த 'கன்ஆனி'யர்களையெல்லாம் கொன்றொழித்து விட்டிருந்தார்கள். அமாலிக்கர்களையும் முறியடிக்க அங்கிருந்தே ஒரு படையை அனுப்பி வைத்த ஆண்டவனின் தூதரவர்கள், பெண்களையும் சிறார்களையும் கொடுமைப்படுத்த வேண்டாம் என தங்களின் படையினருக்கு அறிவுறுத்திய அதே சமயம், அமாலிக்கர்களில் மற்றவர்களை—ஒருவரையும் விட்டு விடாது கொன்று திரும்பக் கட்டளையிட்டிருந்தார்கள். அவ்வாறே சென்ற அப்படையினர் அமாலிக்கர்களை நிர்மூலம் செய்தனர்; ஒருவரையும் விட்டு விடாது—'அர்க்கம்' எனப்பட்ட அவர்களின் அரசன் உட்பட—அனைவரையுமே கொன்றொழித்தனர். ஆயினும் அர்க்கமின் மக்களில் இளையவனான ஒருவனின் அழகு அவர்களைக் கவர்ந்தது. அவனைக் கொல்லவிடாது மனித பலஹீனம் அவர்களைத் தடுத்து விட்டது. தங்களின் நபியிடம் அவனைக் காட்டி அவர் கூறுகிறபடி பின்னர் செய்துக் கொள்வோம் என முடிவு செய்தவர்களாக, அவனையும் தாங்களோடேயே அழைத்துக் கொண்டு அனைவரும் ஸிரியா திரும்பினர். ஆனால் அவர்கள் வந்து சேருமுன்பாகவே ஹழ்ரத் மூஸா (அலை) அவர்கள் இவ்வுலகைப் பிரிந்து சென்று விட்டிருந்தார்கள்.

வெற்றியாளர்களாகத் திரும்பி வந்துள்ள தங்களின் சகோதரர்களை வரவேற்க வந்த இஸ்ரவேலர்கள் குசலம் விசாரித்தனர். பெண்களையும் சிறார்களையும் விடுவித்து,

மற்ற அமாலிக்கர்கள் அத்தனை பேரையும் ஒழித்து, தாங்கள் திரும்பியுள்ள செய்தியை விவரித்தனர் படைத் தலைவர்கள். அவர்களிடையே தாங்கள் காணும் அந்தப் புதிய இளைஞனைப் பற்றி இஸ்ரவேலர்கள் வியப்பு கொண்டு வினவினர். அவனின் பாரம்பரியத்தையும் பேரழகையும் புகழ்ந்துரைத்த படைத்தலைவர்கள், நபியவர்களிடம் காட்டி அவர்களின் கருத்தறிந்து நடந்து கொள்ள முடிவு செய்து தாங்கள் அவ்விளைஞனை உயிருடன் அழைத்து வந்துள்ள விபரத்தையும் கூறினார்கள். அதனைக் கேட்டு வெகுண்டனர் இஸ்ரவேலர்கள்; 'ஆண்டவனின் தூதரின் கட்டளைக்கு மாறு செய்துவிட்ட நீங்கள் பெரும் பாவிகள். உங்களுக்கு எங்களிடையே இடமில்லை' என சினந்துரைத்தவர்களாக படையினரை ஊருக்குள் நுழைய விடாமலே புறக்கணித்து விட்டனர்.

ஸிரியாவினுள் நுழைய வழியற்றுப் போன படையினர் தங்களிடையே கலந்தாலோசித்தனர். அமாலிக்கர்களை ஒழித்து, தாங்கள் விட்டு வந்த ஹிஜாஸை விடச் சிறந்த இடம் இனி தங்களுக்கு அமையாது என முடிவு செய்த அவர்கள் அங்கேயே திரும்பி வந்து வாழலாயினர். சிலர் 'வாதியுல் குரா'விலும் சிலர் 'பதக்'கிலும் தங்கிக் கொண்டனர். மற்றவர்கள் 'யத்ஸ்ரிப்'பில் குடியேறினர்—என ஹழ்லரத் உர்வா இப்னு ஜ்ஸுபைர் (ரலி) அவர்கள் கூறக் கேட்டு இப்னு ஜ்ஸபாலா (ரஹ்) அவர்கள் அறிவிக்கின்றனர்.

ஆனால் ஹழ்லரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்களால் அறிவிக்கப்பட்ட ஒரு ஹதீஸை ஆதாரமாகக் கொண்டு 'தபரீ' என்னும் வரலாற்றாசிரியர் 'பக்த்து நஸர்' எனப்படும் கொடுங்கோலனின் காலத்திலேயே யூதர்கள் மதீனாவில் குடியேறியதாகக் குறிப்பிடுகின்றார்.

பாபிலில் தோன்றிய பக்த்து நஸர் ஸிரியாவின் மேல் படையெடுத்து, அங்கிருந்த இஸ்ரவேலர்களை முறியடித்து,

பைத்துல் முகத்தஸையும் நாசப்படுத்தினான். விரட்டப் பட்டு நிர்க்கதியடைந்த இஸ்ரவேலர்கள் ஒன்று கூடி ஆலோசித்தனர். அருகேயிருந்த அரபு பூமியைத் தவிர்த்த வேறு புகலிடம் அவர்களுக்குத் தோணவில்லை. அவர்களில் கற்றறிந்த அறிஞர்களும், துறவிகளும், இறுதித் திருநபி (ஸல்) அவர்கள் பற்றிய செய்திகளையும், அவர்கள் வந்து தங்கப்போகும் தலத்தைப் பற்றிய அடையாளங்களையும் தங்களின் வேத நூல்களில் படித்தறிந்திருந்தனர். அவ்வித அடையாளங்களில் ஏதாவதொன்றை பயணத்திடையே அவர்களில் எவரெவர் எங்கெங்கே கண்டனரோ அங்கங்கே அவரவர் தம் குடும்பத்தோடு தங்கி வாழலாயினர். நபி ஹாரூன் (அலை) அவர்களின் வழிவாறுகளில் ஒரு கூட்டத்தினர் மட்டும் தாங்கள் அறிந்திருந்த எல்லா அடையாளங் களும் ஒன்றிணைந்து அமையப் பெற்ற ஒரு தலமாக 'யத்ஸ்ரிபை'ப் கண்டு அங்கேயே தங்கி வாழலாயினர்; சிலர் கைபரிலும் குடியேறினர்' என்று அவர் குறிப்பிடுகின்றார்.

ஹழ்ரத் ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாக 'இப்னு ஷைபா' என்ற பெரியார் அறிவித்துள்ள ஒரு செய்தியும் ஈண்டு கவனத்திற்குரியது!

ஹஜ்ஜை நாடி ஒரு சமயம் வந்த ஹழ்ரத் மூஸா, ஹாரூன் (அலை) முதலியோர் ஸிரியாவுக்குத் திரும்பிய போது மதீனாவைக் கடக்க நேரிட்டது. அச்சமயம் யூதர் களின் துரோகத்தைப் பற்றிய அச்ச உணர்வு கொண்ட அவர்கள் பிரிந்து தங்களின் உடைமைகளோடு உஹது மலையின் மீது ஒதுங்கிக் கொண்டார்கள். அங்கேயே ஹாரூன் (அலை) அவர்கள் இவ்வுலகைப் பிரிந்தார்கள். இறை திருச்சமுகத்திலிருந்து அழைப்பு தம் உடன்பிறந்த வருக்கு வந்து கொண்டிருப்பதை புரிந்து கொண்ட ஹழ்ரத் மூஸா (அலை) அவர்கள் மலையின் மீதே ஒரு குழியைத் தோண்டிச் சித்தப்படுத்தி, "என் தாயின் மகனே! இவ்வுலகில் உமக்கு அனுமதிக்கப்பட்ட காலம் முடியப்

போகிறது. எனவே நீர் உம் முகத்தை மாறு உலகின் புறம் திருப்பிக் கொள்வீராக'' என வேண்டினார்கள். அதனை ஏற்று ஹழ்லரத் ஹாரூன் (அலை) அவர்கள் நல்ல உணர்வோடேயே அக்குழியில் இறங்கி படுத்துக் கொண்டார்கள். மறுகணமே அவர்களின் ஆன்மா பிரிந்தது — என்பதே அச் செய்தி.

இவ்வாறான பல செய்திகளைக் கொண்டு பார்க்கும் போது யூதர்கள் வெவ்வேறான பல தருணங்களில் அங்கு குடியேறியிருக்க வேண்டும் என்றே தெரிகிறது. ஆயினும் அவர்களனைவருமே, பிந்திய காலத்தில் அங்கு வந்து தங்கப் போவதாகத் தாங்கள் அறிந்திருந்த அப்பெரு நபியைக் காண வேணவா கொண்டவர்களாகவே இருந்தனர். அவர்களின் வேதக் கட்டளையும் அவரைக் கண்டு ஏற்று, அவரின் வழி பற்றியே அவர்கள் நடக்க வேண்டும் என்பதாகவே இருந்தது.

அவ்வாறாகத் தங்கி வாழ்ந்து அவர்களில் முதுமை அடையப் பெற்றோர் தங்களின் காலங்களைக் கடக்க நேரிட்டபோது, தங்களின் மக்களை அங்கேயே தங்கி வாழ்ந்து, அவர்களாவது அப்பெரு நபியைத் தரிசித்து அவரின் திருவழி பற்ற வேண்டும் என எச்சரித்தே பிரிந்தனர். அவ்வாறே தங்கி வாழ்ந்த அம்மக்களையும் முதுமை விரட்டியபோது அவர்களும் தாங்கள் அறிந்திருந்த செய்திகளையும், தங்களின் முன்னோர்களிடமிருந்து தாங்கள் பெற்றிருந்த எச்சரிக்கைகளையும் தங்களின் மக்களுக்கு நினைப்பூட்டியே பிரியத் தவறவில்லை. இவ்வாறாகவே பல தலைமுறைகளுக்கு ஆவலூட்டப் பெற்று மதீனாவிலும் அதன் சூழலிலும் பாரம்பரியமாக வாழ்ந்து வந்தனர் யூதர்கள்.

இவர்களையல்லாத 'முஷ்ரிக்'குகளின் பூர்வீகம் பற்றியும் செவிவழிச் செய்திகள் பல பேசப்பட்டாலும், மதீனாவின் பழம்பெரும் வரலாற்றறிஞரான குக்ஹுத்நின் அலீ

ஸம்ஹூதி (ரஹ்) அவர்கள் தம் 'வபாஉல்வபா' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளதை அல்லாமா ஷா வலிய்யுல்லாஹ் (ரஹ்) அவர்கள் தம் நூலில் எடுத்தெழுதுகிறார்கள் :

ஹழ்ரத் நூஹ் (அலை) அவர்களின் மகனார் ஸாமின் மகன் அர்ஃபக்ஷதின் மற்றொரு மகன் 'ஷாலிக்கி'ன் மக்கள் 'யமன்' நாடு சென்று வாழலாயினர். அவரின் வழிவாறுகளில் வந்த 'ஸபா' எனப்பட்ட ஒருவரின் பெயரால் ஒரு பட்டணமும் அங்கே நிர்மாணிக்கப்பட்டிருந்தது. நலமும் வளமும் எந்த அளவுக்கு அவ்வூரைச் சூழ்ந்திருந்ததெனில், முடைப்பட்ட ஒருவன் தன் தலையில் ஒரு கூடையைச் சுமந்து கொண்டு பிழைப்பை நாடிப் புறப்படுவானாகில், கரங்களால் நூல் நூற்றுக் கொண்டே அவன் வழிகடந்திருந்தாலும் சரியே, சேர வேண்டிய இடத்தை அடைந்து அவன், தலையில் தான் சுமந்து வந்த கூடையை இறக்கினானாயின் கனிவர்க்கங்களால் அக்கூடை நிரம்பியிருக்கும். பறிக்கப்படாமலே கூடையில் பட்டுப் பட்டே பழங்கள் உதிர்ந்து குவியுமளவுக்குச் செழித்துக் கொழித்த சோலைகளை—ஒரு மனிதன் இரண்டு மாதகாலம் நடந்து கடக்கும் தொலை தூரத்துக்குக் கொண்டிருந்தது அப் பட்டணம். ஆனால், மனிதப் பிறப்பிலேயே இயற்கையாக ஊறி வளர்ந்திருந்த நன்றி கெட்ட தன்மை அவ்வூராரையும் பிரிந்திருக்கவில்லை. நறிகெட்டத் தறுதலைகளாக நாளடைவில் மாறிவிட்ட அவ்வூராரின் மீது இறைவனின் வேதனை இறங்கிய வரலாற்றை திருக்குர்ஆனும் தன் (34 : 15, 16) வசனங்களால் சுட்டிக் காட்டுகிறது.

لَقَدْ كَانَ لِسَبَإٍ فِي مَسْكَنِهِمْ آيَةٌ ۖ جَنَّتَانِ عَن يَمِينٍ وَشِمَالٍ ۖ كُلُوا مِن رِّزْقِ رَبِّكُمْ
وَاشْكُرُوا لَهُ ۚ بَلْدَةٌ طَيِّبَةٌ وَرَبٌّ غَفُورٌ ○

''மெய்யாகவே 'ஸபா' (வென்னும் ஊர்) வாசிகள் வசித்திருந்த இடத்தில் அவர்களுக்கு ஒரு (நல்ல) அத்தாட்சி இருந்தது. (அதன் வழியாகச் செல்வோருக்கு) வலப்புறமாகவும் இடப்புறமாகவும் இரு சோலைகள் இருந்தன. (இவற்றின் மூலம்) உங்கள் இறைவன் (உங்களுக்கு) அருள் புரிந்தவற்றைப் புசித்துக் கொண்டு அவனுக்கு நன்றியும் செலுத்தி வாருங்கள். (இம்மையில்) வளமான நகரமும் (மறுமையில்) மிக்க மன்னிக்கக் கூடிய இறைவனும் (உங்களுக்கு) உண்டு (எனவும் கூறப்பட்டது.)''

فَأَعْرَضُوا فَأَرْسَلْنَا عَلَيْهِمْ سَيْلَ الْعَرِمِ وَبَدَّلْنَاهُم بِجَنَّتَيْهِمْ جَنَّتَيْنِ ذَوَاتَيْ أُكُلٍ
خَمْطٍ وَأَثْلٍ وَشَيْءٍ مِّن سِدْرٍ قَلِيلٍ ○

''எனினும் அவர்கள் (நம்முடைய கட்டளையைப்) புறக்கணித்து(ப் பாவத்தில் ஆழ்ந்து) விட்டனர். (ஆகவே அவர்கள் 'மஆரி'பில் கட்டியிருந்த மகத்தான) 'அரிம்' (அணையை உடைக்கக் கூடிய பெரும்) வெள்ளத்தை அவர்கள் மீது அனுப்பி வைத்தோம். அவர்களுடைய (உன்னதமான கனிகளையுடைய) இரு சோலைகளை கசப்பும் புளிப்புமுள்ள பழங்களையும், சில இலந்தை மரங்களையுமுடைய இரு தோப்புகளாக மாற்றி விட்டோம்'' என சுட்டிக் காட்டுகிறது இறைவனின் திருமறை.

உடைந்த அணையின் பாறை ஒவ்வொன்றையும் பெரும் பலவான்களான ஐம்பது பேர் ஒன்று சேர்ந்தும் நகர்த்தச் சிரமப்பட்டார்களெனில், உடைத்த வெள்ளத்தின் பயங்கரத்தைக் கணித்துக் கொள்ளலாம். அத்தகைய பயங்கர வெள்ளம் வரப் போவதைப் பற்றி முன்னதாகவே அறிந்து தப்பினார் அம்ரு இப்னு ஆமிர் எனப்பட்ட ஒருவர்.

'ஸபா'வின் மைந்தர் 'கஹ்லானி'ன் குடும்பத்தில் பிறந்த ஒருவரே அம்ரு இப்னு ஆமிர். அவருடைய மனைவி

'ஹுமைரியா' சோதிடக் கலை அறிந்தவளாயிருந்தாள். அணை உடைந்து வெள்ளப் பிரவாகத்தால் ஊர் அழியப் போவதை எப்படியோ தெரிந்து கொண்ட அவள், அது பற்றி தன் கணவனை எச்சரித்தாள். அவள் சொன்னதைக் கேட்டு அம்ரு இப்னு ஆமிர் 'ஸபா'வை விட்டும் வெளியேறிவிடவே முடிவு செய்துக் கொண்டார். ஆயினும் அதற்குக் காரணம் வேண்டுமல்லவா? பாரம்பரியமாகச் செல்வாக்கோடு வாழ்ந்து வரும் தம்மை, பிரிந்து வெளியேற ஊர் மக்கள் எளிதில் விடமாட்டார்கள் என்பதை உணர்ந்தவரே அம்ரு. மனைவியின் சோதிடத்தைப் பற்றி கூறி பிறரின் நகையாடலுக்குப் பலியாகவும் அவர் விரும்பவில்லை. எனவே அவர் அதற்காக ஒரு யூகம் வகுத்தார்!

அனாதைச் சிறுவன் ஒருவன் பல ஆண்டுகளாக அவரிடம் வளர்ந்து வந்தான். அவனைத் தனிமையில் அழைத்துச் சென்ற அவர், மறுநாள் ஊர் பிரமுகர்களிடையே இருக்கும் போது தம்மிடம் ஏதாவது தர்க்கம் வளர்க்கும் படியும் தாம் கோபங் கொண்டு விட்டதுபோல் அவனைக் கடுமையாக ஏசுவதாகவும், அவன் ஆத்திரங் கொண்டு விட்டவனாக நடித்து அவரின் முகத்தில் அறைந்தே விட வேண்டுமென்றும் கற்பித்து வைத்திருந்தார். மறுநாள் அவ்விதமே எல்லாம் நடந்து முடிந்தது. உடனே கூக்குரலிடலானார் அம்ரு. ''என்னிடத்தில் வளர்ந்த அனாதையே இன்று என் முகத்திலறைந்து விட்டான். நாளை மற்றெவனும் என்னைத் தாக்க ஏன் துணிய மாட்டான். இனி இவ்வூரில் வாழ்வது எனக்கு மரியாதை தராது'' என புலம்பிக் கிளம்பிய அவரை எவரும் தடுக்கத் துணிந்தனரில்லை.

தம் பதின் மூன்று ஆண்மக்களுடனும் குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களுடனும் 'ஸபா'வை விட்டும் வெளிப்பட்ட அம்ரு இப்னு ஆமிர், பயண வழி நெடுகிலும்

எதிர்ப்பட்ட இடங்களின் தன்மைகளையும் சிறப்புகளையும் விவரித்துக் கொண்டே வந்தார். ஒவ்வொரு மகனும் தம் மைக் கவர்ந்த ஒவ்வோர் இடத்தில் தத்தம் குடும்பத்து டனும் தங்கிக் கொண்டனர். 'த்ஸஅலபா' என்ற ஒரு மகன் ஹிஜாஸை உவந்து அங்கே தங்கி வாழலானார். அவரின் வழித்தோன்றல்களில் பிறந்தவர்களே 'அவ்ஸ்', 'கஸ்ரஜ்' என்ற சகோதரர்கள். இவர்களின் அன்னையின் பெயர் 'கைலா'. அதன் காரணமாக இவர்களின் பிந்திய வழிவாறுகளான 'அவ்ஸ்'களும் 'கஸ்ரஜ்'களும் பொதுவாக 'கைலாவின் மக்கள்—பனூ கைலா' என்றும் அழைக்கப் பெற்றனர்.

ஒரே தாயின் மக்களான இவர்கள் மணமுடித்து வாழத் துவங்கி, அவர்களின் குடும்பங்களும் பெருக்கமடைந்தபோது 'யத்ஸ்ரிபி'ன் புறமாகச் சென்றனர். 'யத்ஸ்ரிப்' அதுவரை யூதர்களின் குடியேற்ற நகரமாக இருந்து வந்தது. 'கைனுக்கா' 'நழ்லைர்', 'குறைழ்லா' என மூன்று கோத்திரத் தினர்களாக யூதர்கள் 'யத்ஸரிபி'னுள் வாழ்ந்து கொண் டிருந்தனர், புதிதாக வந்த 'அவ்ஸ்'கள் யத்ஸரிபின் தென் புறமாகவும், 'கஸ்ரஜ்'கள் அதன் மத்தியிலும் வடபுறமாக வும் தங்கி வாழலாயினர்.

யூதர்களைப் போன்றே அவ்ஸ்—கஸ்ரஜ்களும் நபிமார் களுடைய பாரம்பரியத்தைச் சார்ந்தவர்களேயாவர். ஹழ் லரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் இளைய மகனார் ஹழ்லரத் இஸ்ஹாக் (அலை) அவர்களின் திருமகனார் ஹழ்லரத் யஅ(க்)கூப் (அலை) அவர்களின் சந்ததியினரே இஸ்ரவேலர்களான யூதர்கள். ஹழ்லரத் யஅ(க்)கூப் (அலை) அவர்களின் மறுபெயரே 'இஸ்ராஈல்' என்பது. அது போன்றே ஹழ்லரத் இப்ராஹீம் (அலை) அவர் களின் தலை மகனார் ஹழ்லரத் இஸ்மாஈல் (அலை) அவர் களின் பாரம்பரியத்தைச் சார்ந்தவர்களே 'அவ்ஸ்'களும்

'கஸ்ரஜ்'களும்; எனினும் காலப் போக்கில் சிலைகளை வைத்து வணங்கத் துவங்கி, மக்காவாசிகளைப் போன்றே முஷ்ரிக்குகளாகி விட்டிருந்தனர். அவர்களிடையே ஹழ்ரத் இஸ்மாஈல் (அலை) அவர்களுக்குப்பின் எந்த நபியுமே தோன்றாத ஒரு துர்ப்பேற்றால் வணக்கத்தைப் பற்றிய ஒழுங்கு முறைகள் ஏதும் அவர்களுக்குத் தெரியாதிருந்தது. வீரமும் போர்த்திறனும் பாரம்பரியச் சொத்தாக அவர்களிடம் இருந்து வந்தன. விருந்தோம்பும் பண்பும் மற்றவர்களால் விரும்பப்படுமாறு அவர்களுக்கு மெரு கூட்டியது. எனினும் இறைவனுக்கு இணை வைத்து வணங்கிய ஈனத்தனம் காலப்போக்கில் அவர்களைத் தரந்தாழச் செய்து விட்டிருந்தது.

யூதர்களோ வேதமருளப் பெற்றிருந்த காரணத்தினாலேயே மனிதர்களிடையே மதிக்கப்படவேண்டியவர்களாகத் தங்களைக் கருதினர். அடுத்தடுத்துப் பல நபிமார்கள் அவர்களிடையே தோன்றிக் கொண்டிருந்த பேற்றினால்—எத்தனையோ தடுமாற்றங்களுக்கிடையிலும்—வணக்க முறைகளில் ஏறத்தாழ சில ஒழுங்கு முறைகள் அவர்களிடம் இருந்தன. அதன் காரணமாக சமூக வாழ்க்கையில் ஒரு கண்ணியம் அவர்களுக்கு இருந்ததன்றியும், வாணிபத்திலும்—குறிப்பாக வட்டித் தொழிலின் மூலம் பொருளாதாரத்திலும் கொழுத்து வாழ்ந்தனர். மதீனாவின் தோட்டந்துரவுகளிலும், நிலபுலன்களிலும் அவர்களின் ஆதிக்கமே மேலோங்கியிருந்தது. தங்களின் ஏக வணக்க முறையின் பிரதிபலிப்பாகவோ அவர்கள் பெற்றிருந்த தோற்றக் காம்பிரமும், பொருளாதாரப் பெருக்கத்தினால் பெற்றிருந்த வாழ்க்கைப் பொலிவும் அவர்களோடு உடன்பாடு கொண்டே வாழ புதிதாக வந்து சேர்ந்த 'அவ்ஸ்—கஸ்ரஜ்'களை நிர்ப்பந்தப் படுத்தியிருந்தன.

பெருமானார் திருநபி (ஸல்) அவர்களின் பிறப்புக்கு எழுநூறு ஆண்டுகளுக்கு முன் மதீனாவுக்கு வந்த 'துப்பஉ'

மன்னரைப் பற்றியும் வரலாற்றுக் குறிப்புகள் உள்ளன. 'துப்பஉ' என்பது ஒரு பாரம்பரியத்தின் பெயர். 'கிஸ்ரா' என பாரஸீகத்திலும், 'ஃபிர்அவ்ன்' என எகிப்திலும், 'நஜ்ஜாஷீ' என அபிஸீனியாவிலும் பரம்பரைப் பட்டங்களைச் சூடி பல மன்னர்கள் ஆட்சி செய்ததைப் போலவே 'யமன்' நாட்டில் 'துப்பஉ' என்ற ஒரு பரம்பரையினர் ஆட்சி செய்தனர். அவர்களில் ஆரம்பகால ஒரு 'துப்பஉ' நாடு பிடிக்கும் நோக்குடன் படை நடத்திப் புறப்பட்டார். சென்றவிடங்களையெல்லாம் வென்று கிழக்கே 'சமர்கந்த்' வரையிலும் தம் ஆட்சியை நிறுவிய அவர் யத்ஸ்ரிபுக்கும் வந்தார். அங்கே தம் மகனை பொறுப்பில் அமர்த்தி விட்டு ஸிரியாவை நோக்கிச் சென்றார். அவர் சென்றபின் 'யத்ஸ்ரிப்' வாசிகள் தந்திரமாக அவரின் மகனைக் கொன்று விட்டனர். செய்தியறிந்து திரும்பிய 'துப்பஉ', 'யத்ஸ்ரிப்'வாசிகளோடு போர் நடத்தினார். ஆரம்பத்திலேயே அவருடைய குதிரை கொல்லப்பட்டுப் போனது. அதனால் வெறி கொண்டு விட்ட 'துப்பஉ' மக்களையெல்லாம் கொன்று தீர்த்து 'யத்ஸ்ரி'பை நிர்மூலமாக்கிவிடவே முடிவு செய்து விட்டார். 'யத்ஸ்ரிப்'வாசிகள் பகலெல்லாம் அவரோடு போர் செய்தனர்; மாலையானதும் போர் நிறுத்தம் செய்து இரவானதும் மன்னருக்கும் அவரின் படையினருக்கும் விருந்து படைத்தனர். அதனைக் கண்டு வியப்படைந்தார் மன்னர் 'துப்பஉ'! காரணம் வினப்பட்டபோது, ''வெளியிலிருந்து வந்திருக்கும் எங்களின் விருந்தினர்களல்லவா நீங்கள். உங்களை உபசரிக்காது நாங்கள் எப்படி உணவுண்ண முடியும்? நாங்கள் உணவருந்துமுன் உங்களைப் பசிதீரச் செய்வது எங்கள் கடனாகும்'' என 'யத்ஸ்ரிப்'வாசிகள் தந்த விளக்கம் மன்னரின் மனதை நெகிழச் செய்து விட்டது. அதே சமயம் அவரை வந்து சந்தித்த யூத ஞானிகள் இருவர், யத்ஸ்ரிபை நிர்மூலமாக்கும் திட்டத்தைக் கைவிட்டு விடும்படி அவ

ருக்கு அறிவுரை கூறினர். அந்நகரில் பிந்திய காலப் பெரு நபி ஒருவரின் குடியேற்றம் பற்றி 'தவ்ராத்'தில் கூறப்பட்டுள்ள முன்னறிவிப்புகளை அவருக்கு எடுத்து விளக்கி, 'யத்ஸ்ரிப்' அதற்கென இறைவனின் பாதுகாப்பைப் பெற்றுள்ள ஒரு பட்டணம். அதனைத் தகர்க்க நினைப்பவர் தோல்வியடைவதோடன்றி பாதிக்கவும் படுவார் என அவர்கள் செய்த எச்சரிக்கையை மன்னரும் ஏற்றார்.

அங்கிருந்து பயணம் புறப்பட்ட அவர், அவ்வறிஞர்கள் இருவரையும் தம்மோடு அழைத்துக் கொண்டு மக்காவை நோக்கிச் சென்றார். வழியில் அவரின் சந்திப்புக்குக் கிடைத்த வனாந்திரவாசிகளின் ஒரு கூட்டம், பொன்னும், மணியும், வைர வைடூரியங்களும், மரகதமும், பவளமும் போர்களாய்க் குவிக்கப்பட்டுள்ள கருவூலத்தையே தாங்கள் அறிந்து வைத்திருப்பதாகக் கூறி மன்னருக்கு ஆசையூட்டினர். மன்னரும் ஆசையுற்று அதனைத் தமக்குக் காட்டித் தரும்படி அவர்களிடம் கேட்டார். 'மக்கமா நகரில் கருங்கற்களினாலான ஒரு பெருங்கட்டிடமுண்டு. அதனைப் பலமாகப் பாதுகாத்து வரும் அவ்வூர் மக்கள் அதனையும் இடம் சுற்றியும் பூசித்தும் வருகின்றனர்; தங்கள் வேண்டுதல்களையும் அதன்முன் சமர்ப்பிக்கின்றனர்'' என கஅபாவையே அவ்வனாந்திரவாசிகள் அவருக்கு அடையாளங் காட்டினர்.

கஅபாவுக்குக் கேடு விளைவிக்க நாடுபவன் தானே கெட்டழிந்து போவான் என்பதை அவ்வனாந்திரவாசிகள் அறிந்தே இருந்தனர். அப்படியாகிலும் 'துப்பஉ' அழிந்தே போகட்டும் என்றே அவர்கள் மன்னருக்கு ஆசையூட்டினர். ஆனால் மன்னர் துப்பஉவோ தம்முடன் வந்திருந்த இரு அறிஞர்களையும் அழைத்து அதுபற்றி விசாரித்தார். அவர்களிருவரும் ஈராயிரம் ஆண்டு காலத்துக்கு முன்னால் ஹழ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்களால் நிர்மாணிக்கப்பட்ட அப்புனித தேவாலயத்தின் தொன்மையையும், பிந்திய

காலத்தில்வரவிருக்கும்—இறைவனின்இறுதிப் பெருந்தூதரால் அது பெறப்போகும் பெருமையையும், சிறப்பையும், அதன் கண்ணியத்தையும் மன்னரின் முன் விவரித்துரைத்ததோடு, ''உமக்கு ஆசையூட்டியவர்கள் உம்முடைய அழிவையே யன்றி மற்றெந்த நன்னோக்கமும் கொண்டவர்களல்லர். அல்லாஹ், தன்னை மக்கள் வணங்க, தன் கலீலைக் கொண்டு நிர்மாணித்த இந்தத் திருவீட்டுக்கு நிகரான எந்த ஒரு வீட்டையும் உலகில் நாங்கள் அறியமாட்டோம். எவருடைய சொல்லைக் கேட்டும் நீர் தீய எண்ணங் கொண்டு அதனை நெருங்கிடில் நீரும் உம் வர்க்கமும் நாச மடைவது நிச்சயம்'' எனவும் எச்சரித்தார்கள்.

கேடான எண்ணங்கொண்டு தமக்குக் கேடு நினைத் தவர்களைப் பிடித்து, அவர்களின் கரங்களைத் துண்டித்து, தண்டித்து விட்டு மக்கா வந்தடைந்த மன்னர் துப்பஉ அங்கே தாம் செய்ய வேண்டியதென்னவென அவ்வறிஞர் களிடமே வினவினார். ''இவ்வூர் மக்களாற்றும் கிரியை களையே நீரும் ஆற்றும். தேவாலயத்தை இடம் சுற்றி வணங்கும். அதன் கண்ணியத்தைப் பேணும். அதன் எதிரே உம் தலையை மழித்துக் கொள்ளும். இவ்வூரில் தங்கி நிற்கும் காலமெல்லாம் தாழ்மையையும் மரியாதை யையும் மேற்கொள்ளும்'' என அவ்வறிஞர்கள் அவருக்குப் போதித்தனர். அவ்விதமே அனைத்துக் கிரியைகளையும் செய்து முடித்த மன்னர் துப்பஉ அவ்வூர் மக்களுக்கெல் லாம் ஒரு வார காலம் வரை பெரும் விருந்துகளும் அளித் தார். அவ்வளவு காலமும் அமைதியுடனிருந்த யூதப் பேரறி ஞர்களை நோக்கி இறுதியில் மன்னர், ''எனக்குச் சொல்லித் தந்தபடி நீங்கள் ஏன் செயலாற்றவில்லை?'' என விசாரித் தார். நபி மூஸா (அலை) அவர்களின் வழிமுறையை வழு வறப் பேணி வந்த அப்புனிதர்களிருவரும், ''மன்னவா! எங்கள் பாட்டனார், நபி இப்ராஹீம் (அலை) அவர்களால் எழுப்பப்பட்ட இத்திருவீட்டைப் பற்றி உண்மைக்குப் புறம்

பான எதையும் உம்மிடம் நாங்கள் பேசிடவில்லை. ஆனால் இவ்வூர் மக்கள் சிலைகளை இங்கே நட்டுவித்து, அவற்றை யும் சுற்றி வந்தும், அவற்றுக்கு முன்னால் மண்டியிட்டும், பலி தந்தும் அருவசையாலான ஒரு தடையை இப்புனித வீட்டுக் கும் எங்களுக்கும் இடையே ஏற்படுத்தி விட்டனர். அதனா லேயே நாங்கள் ஒதுங்கி நிற்கின்றோம்'' என விடையளித்த னர். அவர்களின் வாக்குகளில் வெளிப்பட்ட உண்மையின் வெளிச்சத்தைக் கண்டு மன்னர் துப்பஉ தாமும் அவர்களின் மதத்தை ஏற்றுக் கொண்டார்.

கிருஸ்துவ மதமே தோன்றாத காலமது. நாடு திரும்பிய மன்னர் துப்பஉ தம் மக்களையும் யூத மதத்தை ஏற்க அழைத்தார். சிலை வணக்கம் புரிந்து வந்த அவர்கள் புதிய மார்க்கத்தை ஏற்கப் பின்னடைந்தனர்; மன்னரோடும் தர்க் கிக்க முற்பட்டனர். வாதம் வளர்ந்து இறுதியாக தெய்வீக நெருப்பின் தீர்ப்பை ஏற்பது என அனைவரும் முடிவு செய்தனர்.

அவர்களின் நாட்டில் எரிந்து கொண்டிருந்த ஒரு நெருப் புக் குண்டத்தினருகே மக்கள் பிரச்னைகளை எடுத்துச் செல்வது வழக்கம். அநீதக்காரர்களை அந்நெருப்பு தீய்த்து விடும், அதன் தீண்டுதலுக்குத் தப்பித் திரும்புபவர்களே உண்மையாளர்கள் என்பது அவர்கள் பேணி வந்த மரபு. அதன்படியே யமானியர்கள் தாங்கள் வணங்கி வந்த தெய் வங்களைத் தலைகளில் தூக்கிக் கொண்டனர். வந்திருந்த யூத அறிஞர்களிருவரும் தங்களின் கழுத்துகளில் 'தவ்ராத்' தைச் சுமந்து கொண்டனர். அனைவரும் நெருப்புக் குண் டத்தினுள் பாய்ந்தனர். யமானியர்களையும் அவர்கள் சுமந்துச் சென்ற சிலைகளையும் நெருப்பு தீய்த்து விட்டது. யூத அறிஞர்களோ தங்களின் நெற்றிகளில் வியர்வை முத்து கள் கொப்பளிக்க, 'தவ்ராத்'தைச் சுமந்த வண்ணமே பக்தி மலர்ச்சியுடன் மீண்டு வந்தனர். அந்தச் சம்பவத்தைத் தொடர்ந்து யமானியர்களிடையே யூத மதம் பரவலாயிற்று.

2

அதற்கு மிகப் பிந்திய காலத்தில் ஆட்சிக்கு வந்த 'அஸ் அத் அபூகரீப் இப்னு மலீகரப்' என்ற பெயருடையவரே 'யத்ஸ்ரிபு'க்கு வந்த இரண்டாம் 'துப்பஉ' மன்னர். ஏறத் தாழ முன்னூற்று இருபதாண்டு காலம் ஆட்சி செய்யப் பேறு பெற்றிருந்த அவர், அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் பிறப்புக்கு எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னரே மரணமடைந்து விட்டார். வேதங்கற்ற நானூறு அறிஞர் பெருமக்களுடன் ஹஜ்ஜுக்கு வந்த அவர் மதீனாவுக்கும் வந்தார். தூதர்களின் நாயகராய் அங்கே குடிவரப்போகும் கோமான் முஹம்மத் (ஸல்) அவர்களின் சிறப்புகளைச் செவியேற்றுப் பரவசமடைந்த அவர், அன்னவர்களைக் காணத் தாமும் ஆவல் கொண்டு நெடுங்காலம் மதீனாவி லேயே தங்கியிருந்தார். ஆயினும் ஆட்சிப் பொறுப்போ அல்லது ஆண்டவனின் அழைப்போ நிர்ப்பந்தப் படுத்தியதன் பேரில் பிரியா விடை பெற்று மதீனாவைப் பிரிய நேர்ந்த அவர் தம்முடன் வந்த நானூறு அறிஞர் பெருமக்களும் விரும்பியபடி அவர்கள் அங்கேயே தங்கி வாழ எல்லா வசதிகளையும் செய்தளித்துத் திரும்பினார். அவர்களில் வந்தவர்களே அவ்ஸ்—கஸ்ரஜ் சந்ததியினர் என்றும் கூறப் பட்டாலும், பாரம்பரிய இன ஒற்றுமையின் காரணமாக இவர்கள் யாவரும் ஒன்றறக் கலந்து விட்டிருக்கவும் கூடும்.

யூதர்கள் பல்வேறு காலங்களில் யத்ஸ்ரிபில் நுழைந்தது போலவே பல்வேறு பிரிவினராகவே அங்கு வாழ்ந்தனர். 'நுழ்லைர்'களும் 'குறைழ்லா'க்களும் ஒரு புறம் வாழ்ந்தனர். அவர்களை விட்டும் பிரிந்தே 'கைனு(க்)கா'கள் மறு புறம் வாழ்ந்தனர். அவர்களை யொட்டியே 'கஸ்ரஜ்'களின் தங்கு மிடமும் அமைந்து இருந்தது. அதுபோலவே உடன்பாடு களும் உறவுப் பழக்கங்களும் 'அவ்ஸ்'களுக்கும் 'கஸ்ரஜ்' களுக்கும் அவரவர்கள் தங்கிய பகுதியில் வாழ்ந்த யூதப் பிரிவினரோடேயே இருந்தன.

காலப் போக்கில் 'அவ்ஸ்'களும், 'கஸ்ரஜ்'களும் கூடசெழிப்படையலாயினர். அவர்களிலும் பலர் செல்வந்தர்களாக மாறினர். அந்த மாறுதல்கள் யூதர்களின் கண்களை விரியச் செய்தன. அவர்களின் இயல்பிலேயே மறைந்திருந்த குரோதமும் பகையுணர்வும் பொங்கலாயின. புகைச்சலுக் காட்பட்டுப் போன அவர்கள் தத்தம் மருங்கே வாழ்ந்த 'அவ்ஸ்' 'கஸ்ரஜ்'களோடு மேற்கொண்டிருந்த உடன்பாடு களின்படி தாங்கள் அளித்திருந்த வாக்குகளை முறிப்பதற் கான வாய்ப்புகளையும், வழி முறைகளையும் தேடலானார் கள்; சிரமங்களையும் நிர்ப்பந்தங்களையும் 'அவ்ஸ்—கஸ்ரஜ்' களின் மீது சுமத்த முனைந்தார்கள். செல்வப் பெருக்கமும் மிதமிஞ்சிய சுகபோகமும் அவர்களைத் தத்தம் மனப்போக் கின்படி தடம் புரளச் செய்தன. நபிமார்களின் போதங்களை யெல்லாம் மறந்து வேதக் கட்டளைகளையும் புறக்கணித் துப் பழக்கப்பட்டுப் போயிருந்த அவர்கள் எத்தகைய அநா கரிகத்துக்கும் அஞ்சாதவர்களாக அநீதங்களை விளைவிக் கவும் துணிந்து விட்டிருந்தனர். அவ்வநீதங்களுக்கெல்லாம் மகுடமாக இருந்தது 'ஃபத்யூன்' என்ற யூதத் தலைவனின் கொடூரம். 'அவ்ஸ்—கஸ்ரஜ்'களிடையே மணமுடிக்கப் பெறும் எந்த மணப்பெண்ணும் தன் கற்பை அவனிடத்தில் சிதைத்துக் கொள்ளாமல் தன் கணவனின் அணைப்பைச் சுகிக்கவே முடியாது என்ற அளவுக்கு கொடூரம் வளர்ந்து விட்டது. அத்தகைய அருவருப்பான உறவில் வெறுப் படைந்த ஓர் இளைஞர், அன்று மணமுடிக்கப் பெற்ற தன் தங்கையின் தோழியாகவே மாறு வேடம் பூண்டு, ஃபத்யூன் காத்திருந்த தனியறையில் புகுந்து அவனைக் கொன்று தீர்த்தார். அத்துடன் நில்லாது ஸிரியாவில் வாழ்ந்து கொண்டிருந்த 'கஸ்ஸானி'யர்களின் உதவியை நாடியும் சென்றாரவர். அச்சமயம் ஸிரியாவில் கிருஸ்துவ மார்க்கம் பரவி இருந்தது. ஹழ்லரத் ஈஸா (அலை) அவர்களைச் சிலுவையிலறைந்துக் கொல்ல முயன்ற யூதர்கள் மீது ஸிரியக் கிருஸ்துவர்களுக்குக் குரோதமும் இருந்தது. ஏறத்தாழ அரபு

இனத்தவர்களேயான அவர்கள் தங்கள் இனவழிச் சகோதரர்களுக்கு உதவுவதாகவே காரணம் கொண்டு விரைந்து வந்தனர். அவர்களின் துணையோடு போர் புரிந்து அவ்ஸ்களும் கஸ்ரஜ்களும் தங்கள் மீது கொடுமைகளை இழைத்து வந்த யூதர்களை முறியடித்தனர்.

அதற்குப் பின் அவ்ஸ்—கஸ்ரஜ்களின் கரங்கள் ஓங்கலாயின. அவர்களின் நிழலிலேயே யூதர்கள் கஸ்ஸானியர்களிடமிருந்து தங்களின் உயிர்களையும் உடைமைகளையும் காத்துக் கொள்ள நிர்ப்பந்தப்பட்டுப் போயினர்.

ஹழ்லரத் மூஸா (அலை) அவர்களின் மறைவுக்குப் பின் தங்களின் மார்க்கத்தைப் பரவச் செய்ய எந்த அக்கறையும் கொண்டவர்களல்லர் யூதர்கள். வேதக்காரர்களாகிய தாங்களே மற்றெல்லா இனத்தவர்களையும் விட உயர்ந்தவர்கள் என்ற மேலெண்ணம் கொண்டிருந்த அவர்கள், மற்றவர்கள் யூத மார்க்கத்தை ஏற்று, 'தவ்ராத்'தைப் பின்பற்றுவதன் மூலம் தங்களின் சம பங்காளிகளாகி விடுவதைச் சகிக்க மாட்டாதவர்களாக விளங்கினர். அந்தக் குறுகிய மனப்பான்மையே அவர்களை, பாலை பூமியில் பல்கிப் பெருகிய அரபு வர்க்கத்துக்கு முன்னே தொகையில் குறைந்தவர்களாக நலியச் செய்து விட்டது.

'அவ்ஸ்—கஸ்ரஜ்'களின் இனப் பெருக்கம், அவர்களுக்குப் பின்னணியாக வந்து சேர்ந்த அரபு வர்க்கம்—இவை யாவும் கூடி கூட்டத்தில் குறைவு பட்டிருந்த யூதர்களைச் செயலிழக்கச் செய்து விட்டன. எனினும் அவர்களின் சீரழிந்த செல்வாக்கை மெருகிட்டுக் காட்ட ஒரேயொரு கருவி 'தவ்ராத்'தில் அவர்களுக்குக் கிடைத்திருந்தது. இறுதித் திருநபி பெருமானார் (ஸல்) அவர்களைப் பற்றிய முன்னறிவிப்பே அது. பிந்திய காலத்தில் வரவிருந்த அப்பெரு நபியைப் பற்றி 'தவ்ராத்'தில் தாங்கள் அறிந்திருந்த உண்மைகளையெல்லாம் அவ்ஸ்—கஸ்ரஜ்களிடையே கதைகளாகக்

கூறி, 'அப்படி வரும் அவரோடு நாங்கள் விரைந்து சேர்ந்து உங்களையெல்லாம் பூண்டோடு ஒழித்து விடுவோம்— 'இறம்'வாசிகள் ஒழிக்கப்பட்டதுபோல்' என தம்பட்ட மடித்துக் கொண்டிருந்தார்கள் யூதர்கள்.

யூதர்களின் நிம்மதிக்கு ஒரு பெரும் சோதனையாகவே இருந்தது அவ்ஸ்—கஸ்ரஜ்களின் புதிய மலர்ச்சி. ஒன்றுபட்ட அவர்களின் வளர்ச்சியைப் பராமுகமாகச் செழிக்கவிட்டு இழந்துபோன தங்களின் ஆதிக்கத்தை மீட்டுக் கொள்வதோ அல்லது எஞ்சியுள்ள செல்வாக்கைத் தக்க வைத்துக் கொள்வதோ கூட சாத்தியமே அல்ல என்பதை நன்கு உணர்ந்து கொண்ட யூதர்கள் தங்களின் நயவஞ்சக நடவடிக்கைகளால் அவ்ஸ்—கஸ்ரஜ்களிடையே பூசலையும் பொருமலையும் உருவாக்கினார்கள். அவற்றையே பொருதல்களாகவும் வளரச் செய்து நிரந்தரப் பகைமையையும் பிளவையும் அவர்களிடையே நிலைத்திருக்கச் செய்வதற்கான நடவடிக்கைகளைத் தங்களின் வாலாயமாக்கிக் கொண்டார்கள்.

சூழ்ச்சிக்குப் பலியாகி விட்ட அவ்ஸ்களும் கஸ்ரஜ்களும் ஒருவருக்கொருவர் விரோதிகளாகி விட்டனர். அற்பக் காரணங்களால் அவர்களிடையே முளை விடத் துவங்கிய கருத்து வேறுபாடுகளே பெரும் போர்களாகப் பல தலைமுறைகளுக்கும் வளர்ந்து அவர்களின் வழிவாறுகளையே அழிக்கலாயின.

தங்களிடையே வினைகளை விதைத்த யூதர்களின் சூழ்ச்சியை அவ்ஸ்களும் கஸ்ரஜ்களும் வெகு தாமதமாகவே விளங்கிக் கொள்ளலாயினர். அதற்கிடையே பலஹீனப்பட்டு விட்ட அவ்விரு கோத்திரத்தினரும் தனித்தனியே யூதர்களை எதிர்த்து எதுவும் செய்ய முடியாமலும் ஆகிவிட்டது. அவர்களின் உள்ளங்களில் வேரூன்றிப் போய்விட்ட வெஞ்சினமும் அவர்களை ஒருவரோடொருவர் நெருங்கவிடாமல் தடுத்தே வந்தது. இவ்வாறாகவே ஏறத்தாழ ஒரு நூறாண்டு

காலத்துக்கும் மேலாக தொடர்ந்து பல தலைமுறைகளுக்கு நடந்த பெரும் போர்கள் அவ்ஸ்களையும் கஸ்ரஜ்களையும் சிதறிச் சீரழியச் செய்திருந்த நிலையில், அவர்களில் மனம் நொந்த பலர் தங்களின் மன உளைச்சல்களுக்கு மருந்து தேடியும் புலர்வாழ்வுக்குப் புகல் நாடியும் மக்க மாநகருக்குப் போய் வரலாயினர்.

ஸுவைத் இப்னு ஸ்வாமித் எனப்பட்ட ஒருவர் மக்க மாநகரம் வந்திருந்தார். மக்காவில் அண்ணலார் (ஸல்) அவர்கள் இஸ்லாத்தைப் பற்றி எடுத்துரைக்கக் கேட்ட முதல் 'யத்ஸ்ரிப்'வாசியாக இவரே காணப்படுகிறார். தம் குடும்பப் பெருமையாலும், உடல் வனப்பாலும், கவிதைத் திறனாலும் 'அவ்ஸ்'களிடையே ஒரு 'காமிலான—நிறை மனித'ராக அழைக்கப் பெற்ற—சகலகலா மேதையாக மதிக்கப் பெற்ற அவரின் வரவு பற்றிச் செவியுற்று, அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் சென்று அவரைச் சந்தித்தார்கள்; தங்களின் நபித்துவம் பற்றி அவருக்கு எடுத்துரைத்தார்கள்; இஸ்லாத்தை ஏற்குமாறு அவரையும் அழைத்தார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் சொல்லழகைக் கண்டு பரவசமடைந்த ஸுவைத், ''என்னிடம் இருப்பதைப்போன்ற ஒன்றேயல்லவா உமக்கும் கிடைத்திருப்பதாகத் தெரிகிறது!'' என வியந்தார்.

''உம்மிடம் இருப்பதென்ன?'' என நபிபெருமான் (ஸல்) அவர்கள் வினவினார்கள்.

''லுக்மானின் ஞானம்'' என விடையளித்த ஸுவைத் தம் பையில் வைத்திருந்த ஒரு பேழையைத் திறந்து அதிலிருந்த, ஹழ்ரத் லுக்மான் (அலை) அவர்களின் ஞான போதங்கள் சிலவற்றை அண்ணலார் (ஸல்) அவர்கள் செவியேற்க ஓதிக் காட்டினார்.

அவற்றை முழுமையாகக் கேட்டு முடித்து, ''நிச்சய மாக இது அழகிய போதமே. ஆயினும் என்னிடத்தில் இருப்பது இதனினும் மேலானது. அல்லாஹ் என் மீது குர் ஆனையே அருளியுள்ளான். அது நேர்வழி காட்டக் கூடியது; ஒளி பொருந்தியது'' என்றுரைத்தவர்களாக அண்ணலார் (ஸல்) அவர்கள் அருள்மறை குர்ஆனின் வசனங்களை அவருக்கு ஓதிக் காட்டினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் கரத்தினைப் பற்றி ஸுவைத் அன்று இஸ்லாத்தை ஏற்றாரா என்பதை உறுதி படக் கூற முடியாவிட்டாலும், மற்றவர்களைப் போன்று அவர், அண்ணலார் (ஸல்) அவர்களை விட்டும் தம் முகத்தைத் திருப்பிக் கொள்ளவில்லை என்றே வரலாற்றாசிரியர் 'இப்னு ஹிஷாம்' குறிப்பிடுகின்றார்.

''நிச்சயம் இது அதினினும் சிறந்த ஒன்றே; நேர்வழி காட்டக் கூடியதே; ஒளி பொருந்தியதே'' என்றெல்லாம் புகழ்ந்தார் ஸுவைத். விடைபெற்று 'யத்ஸ்ரிப்' திரும்பிய அவர் அதற்குப் பின் நடைபெற்ற போரில் 'கஸ்ரஜ்'களால் கொல்லப்பட்டுப் போனார். கொலையுண்ட சமயம் அவர் ஒரு முஸ்லிமாகவே இருந்தார் என 'அவ்ஸ்'கள் கூறிக் கொண்டனர்.

நடைபெற்ற போரில் 'கஸ்ரஜ்'களால் பாதிப்படைந்த 'அவ்ஸ்'கள் குரைஷிகளிடம் உபகாரம் பெற 'அபுல் மயஸ்ஸர் இப்னு ராபிஇ'ன் தலைமையில் ஒரு தூதுக் குழுவை மக்காவுக்கு அனுப்பி வைத்தார்கள். அவர்களின் வரவு பற்றியறிந்து அண்ணலார் (ஸல்) அவர்கள், அவர்களையும் சந்திக்க விரைந்தார்கள். மற்றெவரையும் அத்தூதுக் குழுவினர் சந்திக்கு முன்னதாகவே முந்திக்கொண்ட பெருமானார் (ஸல்) அவர்கள், ''நீங்கள் நாடி வந்துள்ளதை விட மேலானதொன்று என்னிடம் உள்ளது; ஏற்கச் சம்மதிப்பீர்களா?'' என வினவினார்கள்.

''உம்மிடத்தில் என்ன இருக்கிறது?'' என அவர்கள் விசாரித்தனர்.

''அல்லாஹ்வின் தூதனாக நான் அவனின் அடியார்கள் பால் அனுப்பப்பட்டிருக்கிறேன். அல்லாஹ் ஒருவனையே வணங்க அவர்களை அழைக்கவும், அவனுக்கு எவரையும் இணை வைக்காதிருக்க அவர்களைப் பணிக்கவும் நான் ஏவப் பட்டிருக்கிறேன். வேதச் செய்திகள் என்பால் அருளப்படு கின்றன'' என்றெல்லாம் அவர்களுக்கு விவரித்த அண்ணலார் (ஸல்) அவர்கள், திருக்குர்ஆனின் சில வசனங்களையும் அவர்களுக்கு ஓதிக் காட்டினார்கள். அவர்களிடையே மிக இளைஞராக இருந்த ஒருவரின் இதயத்தை மட்டும் வெளிச் சம் பெறச் செய்து விட்டன அவ்வசனங்கள். ''என் சமூ கத்தார்களே! ஆண்டவன் மீதாணையாக, நாம் நாடி வந்துள்ளதைவிட மிகச் சிறந்ததே இது'' என உணர்ச்சிப் பெருக்கோடு கூறினாரவர். அயாஸ் இப்னு மஆத் எனப் பட்ட அவ்விளைஞரின் செயல் தலைமையேற்று வந்திருந்த 'அனஸ் இப்னு ராபி'ஐச் சினங் கொள்ளச் செய்தது. ''என் வாழ்நாளின் மீது சத்தியமாகக் கூறுவேன்! இதற் காக நாம் இங்கே வரவில்லை. முந்திக் கொண்டு அவசரப் படும் நீ எங்களை விட்டும் விலகிச் செல்'' என அனஸ், கீழே கிடந்த கூழாங் கற்களை அள்ளி அயாஸின் புறம் வீசக் கண்டு மற்றவர்கள் வாய் மூடி இருந்துக் கொண்ட னர். தொடர்ந்து அவர்கள் மேற்கொண்ட முயற்சியில் தோல்வியுற்றவர்களாகவே மதீனா திரும்பினர். ஆனால் அயாஸ் இப்னு மஆதின் விழிப்படைந்த இதயம் மட்டும் மீண்டும் மயக்கமடையவே இல்லை என்றே தெரிகிறது. அதன்பின் நடைபெற்ற 'புஆஸ்' போரில் கொல்லப்பட்டுப் போன அவரின் ஆன்மா பிரிகையில், அண்ணலார் (ஸல்) அவர்களின் திருவாய் மொழியத் தாம் கேட்டிருந்த, 'அல்லாஹு அக்பர், அல்ஹம்துலில்லாஹ், லா இலாஹ இல்லல்லாஹ்' என்ற திருமொழிகளைக் கூறி அவரின் நா

நுதித்துக் கொண்டிருக்கத் நாம் கேட்டதாக பஹ்ருத் இப்னு லுபைத் என்பவர் அறிவித்தார்.
—மஸ்னதே இப்னு ஹம்பல்.

'அவ்ஸ்'களால் பாதிக்கப்பட்டு 'கஸ்ரஜ்'களும் உதவி தேடி மக்க மாநகரம் வந்ததுண்டு. யத்ஸ்ரிபின் அச்சகோதர வர்க்கத்தினருக்கும் மக்காவின் குரைஷிகளுக்குமிடையே பூர்வீகமான தங்களின் இன உறவு பற்றிய உணர்வு இருந்தே வந்தது. அவர்களிடையே சில குடும்பங்களில் திருமணத் தொடர்புகளும் ஏற்பட்டு இருந்தன. அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் பாட்டனார் ஹாஷிம் என்ற அப்துல் முத்தலிபவர்கள் குரைஷித் தந்தை ஹாஷிமுக்கும் 'கஸ்ரஜ்'களில் நஜ்ஜார் குடும்பத்தைத் சார்ந்த ஒரு தாய்க்கும் பிறந்தவர்தாம். அண்ணலார் (ஸல்) அவர்களைப் பெற்ற அன்னை ஆமினா அம்மையாரும் 'கஸ்ரஜ்'களைச் சார்ந்தவர் தாம். இவ்வாறான தொடர்புகள் இருந்து வந்திருந்தும் யத்ஸ்ரிப் வாசிகள் தேடி வந்த ஒத்துழைப்பை மக்காவின் குரைஷிகள் வழங்க முடியாமலே ஆகிவிட்டது. மக்காவில் அவர்களிடையிலேயே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களால் ஏற்பட்டு விட்ட பிரச்னையே காரணம்! இந்த நிலையில் யத்ஸ்ரிபில் 'புஆஸ்' போர் துவங்கி கொழுந்து விட்டெரியலாயிற்று.

யத்ஸ்ரிபின் வரலாற்றில் மிகவும் பயங்கரமானது 'புஆஸ்' போர். 'அவ்ஸ்-கஸ்ரஜ்'களிடையே நடைபெற்ற இறுதிப் போர் அதுவே. யூதர்களும் பிரிந்து இருபுறமிருந்தும் அப்போரில் பங்கேற்றார்களாயினும் அவர்கள் அடைந்த இழப்புகள் மிகக் குறைவே. ஆனால் 'அவ்ஸ்'களும் 'கஸ்ரஜ்'களும் ஏற்க நேர்ந்த சிரமங்களும் நட்டங்களும் ஏட்டிலடக்க முடியாதவை. மீள முடியாத மரணாபத்தைத் தாங்கள் எட்டி விட்டதை இரு கோத்திரத்தாருமே அப்போதுதான் உணரலாயினர். தங்களுக்கு எதிரான யூதர்களின் சதிச் செயல்களை வெம்பிய அவர்களின் உள்ளங்

கள் ஒவ்வொன்றும் அப்போதுதான் வெடித்து வெளிப்படுத்த லாயின. அரசியலிலும், சமூக வாழ்க்கையிலும், பொருளா தாரத்திலும், வாணிபச் சந்தைகளிலும் பரிதாபகரமான தங்களின் பின்னடைவை எண்ணி நொந்த அவ்விரு கோத் திரத்தவரும் கூடிக் கலந்து இனி தங்களுக்கிடையே போரிடு வதில்லை என்ற முடிவுக்கு வந்தனர்.

'கஸ்ரஜ்' களைச் சார்ந்த அப்துல்லாஹ் இப்னு உபை ஏதோ காரணத்தால் புஆஸ் போரில் கலந்து கொள்ள வில்லை. எப்பக்கமும் சாராது நடுநிலை நின்ற அவனைப் பற்றிய ஒரு நல்ல கண்ணோட்டம் 'அவ்ஸ்' களிடையும் இருந்தது. எனவே அவனையே தங்களிரு கோத்திரத்துக் கும் ஒரே தலைவனாக்கி, பிணக்குகள் தங்களிடையே எழும்பிடில் அவனின் தீர்ப்பின்படியே நடந்து கொள்வது என இரு கோத்திரத்தினரும் முடிவு கொண்டனர். யூதர் கள் இனி தங்களை ஏய்த்து விடாமலிருக்க யத்ஸ்ரிபின் மன்னனாகவே அப்துல்லாஹ் இப்னு உபையை நியமித்து விடவும் முடிவு செய்த 'அவ்ஸ்—கஸ்ரஜ்' கள் முடி சூட்டு விழாவுக்கான ஒரு நாளையே எதிர் பார்த்திருந்த நிலை யில், அவர்களை எதிர் நோக்கி வந்து கொண்டிருந்தது அவர்கள் எதிர்பார்த்தே இராத ஒரு பேரருள்!

மனிதர்கள் அல்லாஹ்வைத் தொழ மிக ஆரம்ப காலத் திலேயே எழுப்பப்பட்ட 'கஅபா' வென்னும் தேவாலயத் தைத் தாங்கி நிற்கும் புனித பூமி மக்க மாநகரம். ஆனால் அதுவே அந்தகாரச் சகதிக் குட்டையாக மாறி விட்ட கால மும் ஒன்றிருந்தது. கோத்திரத்துக்கொன்றாய்க் குடும்பத் கொன்றாய்க் கூறு போட்டு, தெய்வீகத்தைக் கற்களாக்கி, நட்டு வைத்து, முணுமுணுத்துச் சுற்றி வந்தனர் மக்கள். அவற்றின் முன்னேயே வேண்டுதல்கள் வைக்கப்பட்டன; பலிகளும், காணிக்கைகளும் சமர்ப்பிக்கப்பட்டன. ஆக்கவும்

அழிக்கவும் ஆற்றலுடையவையாக அவை கற்பனை செய்யப்பட்டு மனிதர்களால் அஞ்சப்பட்டும் வந்தன!

'ஷிர்க்'கென்னும் இணை வைத்தலின் ராஜபீடமாகவே அக்காலை விளங்கிய மக்க மாநகரின் திருவிழாச் சந்திப்புகளிலும் வாணிபச் சந்தைகளிலும் பங்கேற்கும் வாலாயம் மற்றெல்லா அரபுக் கோத்திரத்தவருக்கும் இருந்ததே போன்று 'அவ்ஸ் — கஸ்ரஜ்'களுக்கும் இருக்கத்தான் செய்தது. அக்காலை வழக்கத்துக்கு முற்றிலும் மாறான புதிய ஒரு வணக்க முறையை மக்காவில் போதித்துக் கொண்டிருந்த பெருமான் முஹம்மத் (ஸல்) அவர்களைச் சந்திக்கும் வாய்ப்பு யத்ஸ்ரிபின் அப்பயணிகளுக்குக் கிடைக்காமலே இருந்திருக்க முடியாது. ஆனால் அண்ணல் முஹம்மத் (ஸல்) அவர்களின் சொற்கள் எவருடைய செவிகளையும் எட்டிவிடா வண்ணமும், அவர்களை எவரெனவே எவரும் அறிந்திடாதவாறுமல்லவோ மிகக் கவனமாகக் கண்காணித்து வந்தனர் குரைஷிகள்! பெருமானார் (ஸல்) அவர்கள் எங்கெங்கே சென்றார்களோ அங்கெல்லாம் அவர்களைப் பின் தொடர்ந்தே சென்று, பயித்தியக்காரர் என்றும் சூனியக்காரர் என்றும் அவர்களைப் பரிகசித்து இகழும் தொழிலை அபூஜஹ்ல், வலீத் இப்னு முகீரா போன்ற மக்காவின் மேட்டுக்குடி சீமான்களே முன்னின்று நடத்தினர். சொந்த ஊர் மக்களாலேயே பரிகசிக்கப்பட்ட ஒருவரின் சொற்களை வந்த மக்களில் எவர்தான் ஏற்பர். அதிலும் அப்துல்லாஹ் விட்டுச் சென்ற ஓர் அனாதை மகனாகவே அதுவரை அறியப்பட்டிருந்த அண்ணலவர்களின் சொற்கள் செல்வச் சீமான்களின் வினைகளை மீறி விலையாவது பெருஞ் சிரமமாகவே இருந்த நிலையில், 'அவ்ஸ் — கஸ்ரஜ்'களின் கவனமும் ஒரு நீண்ட இடைக்காலம் வரை அண்ணலார் (ஸல்) அவர்களின்பால் திரும்பாமலே இருந்ததில் வியப்பேதுமில்லை.

பெருமானார் (ஸல்) அவர்கள் நபித்துவப் பிரகடனம் செய்து பத்தாண்டுகள் முழுமையாகவே கழிந்து விட்டிருந்

தன. தங்களின் மார்க்கத்தை ஏற்க வேண்டு மென்பதற்காக, வேத வசனங்களை ஓதிக் காட்டி, தெளிவான ஆதாரங்களை எடுத்து விளக்கி, தூதர் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவில் மேற்கொண்ட முயற்சிகள் ஒன்றல்ல இரண்டல்ல; ஏற்ற சிரமங்களும் கொஞ்ச நஞ்சமல்ல. என்றாலும் அம் மாநபிகளார் பிறந்த மக்க நகர மக்களின் துர்ப்பேற்றைத்தான் என்னென்பது! தங்களின் முற்றத்திலேயே தவழ வந்த மழலை மார்க்கத்தை—தங்களின் வாசலை வலியவே தேடி வந்த—இறைவனின் பேரருளை ஏற்க அவர்களில் மிகுதமான பேர் சித்தமாகவே இல்லை. பேரொளியின் பிரகாசத்தைக் காண, கூசிய கண்ணினராய்த் தங்களின் முகங்களைத் திருப்பிக் கொண்டதோடேயல்ல, அப்பேரொளியை ஏந்தி வந்த பெருமான் முஹம்மத் (ஸல்) அவர்களின் பரிசுத்தத் திருவாழ்வைக் கொச்சைப்படுத்துவதற்குண்டான எந்த முயற்சியையுமே தவற விட்டு விடவில்லை மக்காவின் குரைஷிகள். ஏளனமும் எகத்தாளமும், தூற்றுதலும் தாக்குதலுமான அவர்களின் கொடுமைகள் அனைத்துக்கும் ஆட்பட்டு அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும், அவர்களின் தோழமையை அதுவரை ஏற்றுத் துணிந்திருந்தவர்களும், தொல்லைகளையும் துயரங்களையும் தாங்கி, ஒவ்வோர் இரவையும் பகலையும் அல்லலுக்கும் ஆதங்கத்துக்குமிடையிலேதான் கழிக்க நேர்ந்தது. அந்த நிலையிலும் அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்களின் அழைப்புப் பணியை அயராது நடத்தியேதான் வந்தார்கள்.

உற்றார் உறவினரால், சுற்றத்தினரால், சொந்த மண்ணுக்குடையவர்களால் புறக்கணிக்கப்பட்ட தூதர் நாயகம் (ஸல்) அவர்கள், மக்காவின் சுற்றுப் புறங்களிலிருந்தும் தொலைதூரப் பகுதிகளிலிருந்தும், வாணிபத்தின் பொருட்டும் சுற்றுலாவாகவும், நகரைச் சூழ பல்வேறு சந்திப்புகளிலும் சந்தை மேடுகளிலும் வந்து கூடிய பல்வேறு கோத்திர அரபுகளையும் சந்தித்து, கொள்கை விளக்கம் புரியலானார்

கள். 'வாயிலி'ன் மக்களான 'பக்கர்'கள், 'ஸஅஸஆ'வின் மக்களான 'ஆமிர்'கள், 'ஷைபானி'யர்கள், 'ஸலீம்'கள், 'அப்ஸ்'கள், 'நழ்ல்ர்'கள், 'புஜ்ஸாரா'கள், 'மஹாரிப்', 'முர்ரஹ்', 'கல்ப்', 'ஹனீஃப்'கள் என பல கோத்திரத்தினரின் சந்திப்புகள் கிடைக்கப் பெற்றும், அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு அவர்கள் தேடிய ஒத்துழைப்பு மட்டும் கிடைக்கப் பெறவே இல்லை! தங்களை அவர்களோடு அழைத்துச் சென்று, ஆதரவளித்து, தங்களின் கரங்களுக்கு வலிவூட்டி, தங்களின் மார்க்கத்தை நிலைப்படுத்தத் துணை புரிவதற்குண்டான பிரதிபலனாக அண்ணலார் (ஸல்) அவர்களால் வாக்களிக்கப்பட்ட சுவர்க்கம் அவர்களில் எவருடைய செவிகளுக்கும் சுவை கூட்டாமலே போன காரணம் தான் என்ன?

அநீதங்களை விளைவித்து உலகை அந்தகாரப்படுத்தியிருந்த அக்கிரமக்காரர்களுக்கு ஆண்டவனின் தண்டனையைப் பற்றி அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காக,

நெறிபிறழா நல்லோர்க்குச் சித்தப்படுத்தப்பட்டுள்ள சன்மானங்களை எடுத்தறிவித்து நன்மாராயங் கூறுவதற்காக,

மணிவிளக்காய் ஒளி வீசி, மண்டலங்களைச் சூழ்ந்திருந்த இருளையகற்றி, இறைவனின் கட்டளையின் பேரில் மக்களைக் குண வழியின்பால் அழைப்பதற்காக,

உலகில் தோன்றி மறைந்து விட்டிருந்த ஒரு நூறாயிரத்துக்கும் மேற்பட்ட தூதர்கள் விட்டுச் சென்ற அறப் பணியை நிரப்பமடையச் செய்வதற்காக,

இறுதிப் பெருந்தூதராக அனுப்பப்பட்டவர்கள் பெருமானார் (ஸல்) அவர்கள்.

தூதர்களுக்கெல்லாம் நாதரென முத்திரையிடப் பெற்று, அகிலங்களனைத்துக்கும் அருட்பெருங் கொடை

யென பிரகடனப்படுத்தப் பெற்றவர்கள் அண்ணல் எம் பெருமானார் (ஸல்) அவர்கள்.

காத்தமுன்னபிய்யீனாகத் தெரிந்தெடுக்கப்பட — 'அல் வ னுன்னபி'ய்யாக வெளிப்படுத்தப்பட்ட அந்தத் தூதர் நாயகத்தின் தோழமையுந்தான் எத்தகையப் பெரும் பேரருள்!

அந்தப் பேரருளைப் பெறுவதற்கே ஒரு தகுதி வேண்டமா மனிதர்களிடையே? அத்தகு தகுதி பெற்றவர்களான ஒரு கூட்டத்தினரையும் இறைவனே தெரிந்தெடுத்திருந்தான்.

பாலை பூமியின் ஒரு தொலை தூரப் பகுதியில், அவ்வாறாகத் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் தங்களை அருகி வர நிர்ணயிக்கப்பட்டிருந்த காலம் நெருங்கி வரும் வரை பெருமானார் (ஸல்) அவர்கள் பொறுத்திருக்க வேண்டியிருந்ததேயன்றி, முற்றிலும் நிராகரிக்கப்பட்டவர்களாக, நிராதரவாக அவர்கள் நின்றிட நேர்ந்திடவில்லை.

அல்லாஹ்வின் அருளுக்குத் தாங்களே அனந்தரக்காரர்கள் என்ற இறுமாப்பில் மிதந்து கொண்டிருந்தார்கள் வேதமருளப் பெற்றிருந்த யூதர்கள். நபி இப்ராஹீம் (அலை) அவர்களுக்குப்பின் ஹழ்லரத் இஸ்ஹாக் — யஅ(க்)கூப் (அலை) ஆகியவர்களின் பாரம்பரியத்திலேயே அது நாள் வரையிலான நபிமார்கள் அனைவரும் தோன்றி மறைந்திருந்தனர். வேதச் செய்திகள் மூலமறிந்து தாங்கள் எதிர்பார்த்திருந்த இறுதிப் பெருந் தூதரும் தங்களின் வர்க்கத்தினரிடையேதான் தோன்றுவார்கள் என்ற கற்பனை உணர்வு கொண்டே அவர்கள் நம்பிக்கையுடன் 'யத்ஸ்ரிபி'ல் காத்திருந்தனர். ஆனால்,

எதிர்பார்க்கப்பட்ட ஏந்தல் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவில் இஸ்மாஈலியப் பாரம்பரியத்தில் தோன்றி வரவும்,

அவர்களின் கரம் பற்ற யத்ரிபின் 'அவ்ஸ்' களும் 'கஸ்ரஜ்' களும் தங்களை முந்திக் கொள்ளவும் கண்டபோது யூதர்களின் பார்வையில் குரோதம் குத்திட்டு நின்றது. பொறுமலின் பொங்கலுக்குப் பலியாகி, காலங்காலமாக அப்புனித மண்ணில் பாரம்பரியமாகத் தாங்கள் காத்திருந்த காரணத்தையே மறந்து விட்டார்கள் யூதர்கள். பெருமான் நபி (ஸல்) அவர்களுக்கும், அவர்களுக்குத் துணை நின்றுத் தொடர்ந்தோர்க்கும் கேடுகள் நினைத்து, பிந்திய காலத்தில் அவர்கள் புரிந்த வஞ்சகச் சதிகள் பயங்கரமானவை. எனினும் முடிவில்,

ضُرِبَتْ عَلَيْهِمُ الذِّلَّةُ وَالْمَسْكَنَةُ وَبَاءُوْ بِغَضَبٍ مِّنَ اللهِ

''வீழ்ச்சியும் அழிவும் அவர்கள் மீது விதிக்கப் பட்டு விட்டன. அல்லாஹ்வின் கோபத்திலும் அவர்கள் சார்ந்து விட்டார்கள். —அல்குர்ஆன் (2 : 61)

இத்தகைய பாதகர்களின் துணையும் தோழமையும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்குக் கிடைத்திருந்தாலும் அதன் பிந்திய விளைவுகள் எத்தகையனவாய் இருந்திருப்பன என்பதை யூதர்களிடையே தோன்றி மறைந்து போன முந்திய நபிமார்கள் பலரின் வரலாறுகள் நமக்கு வெளிச்சமிட்டுக் காட்டுகின்றன.

மக்காவின் குரைஷிகள் தானென்ன? ஆண்டவனின் திருவீட்டைத் தாங்கி நிற்கும் பூமியில் பிறந்து வாழக் கிடைத்த பேற்றினால் அவர்கள் தங்களை அல்லாஹ்வின் அண்டை வீட்டுக்காரர்கள் என்றே கூறிக் கொண்டார்கள். மமதை அவர்களின் அறிவை மழுங்கச் செய்து விட்டிருந்தது! அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் அவர்களிடையே தான் பிறந்திருந்தார்கள். வளர்ந்து வாழத் துவங்கி, அன்னார் வறியவர்களுக்கு வழங்கி, எளியவர்

களுக்கு உதவி, உறவினரை அணைத்து, வாதுகளைத் தீர்த்து, நீதிகளைப் பேசி, இன்ன பிற தம் குணநலச் செழுமைகளால் நிலத்தை நாற்பதாண்டு காலம் வளங் கமழச் செய் திருந்தும் — தம்மை ஆண்டவனின் தூதர் என அவர்கள் அறிவித்ததை மட்டும் ஏற்கவிடாது குரைஷிகளின் அறிவை அகம்பாவம் தடுத்துவிட்டது.

அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ்க்கை புலப்பார்வைக்கு ஏழ்மையுடையதாய்த் தெரிந்தது. ஆனால் வந்த வளத்தையும் நொந்தவர்களுக்கு அர்ப்பணித்து அவ்வள்ளலரசர் உவந்து வரிந்தேற்ற பெருமையல்லவா அவ்வேழ்மை!

அவர்கள் ஓர் அனாதையாகவே புறக்கண்பார்வைக்குத் தெரிந்தார்கள். ஆனால் புவனத்தையே வாழ்விக்க வந்த புரவலராக அவர்களைப் புரிந்து கொள்வதற்குத் தேவையான அகக்கண் வெளிச்சத்தைக் குரைஷிகள் பெற்றிருக்கவில்லையே! காலம் அந்த நபியின் காலடி தேடிச் சென்று குற்றேவல் புரிய தங்களை விரட்டும் என்பதை அறிந்திராத குரைஷிகள் ஏழ்மைத் தோற்றம் வழங்கிய அந்த ஏந்தலரைக் கண்டு,

لَوْلَا نُزِّلَ هٰذَا الْقُرْاٰنُ عَلٰى رَجُلٍ مِّنَ الْقَرْيَتَيْنِ عَظِيْمٍ ○

''(தாயிஃப், மக்கா ஆகிய) இரண்டு ஊர்களிலுள்ள யாதொரு பெரிய மனிதர்களின் மீது இந்தக் குர்ஆன் இறங்கியிருக்க வேண்டாமா?'' என இளக்காரம் பேசினார்கள். —அல்குர்ஆன் (43 : 31)

மக்காவாசிகளுக்கும் சரி, அவர்களைச் சூழ்ந்த வனாந்திரவாசிகளுக்கும் சரியே நம்பிக்கையே தராத ஒரு புதுமைச் செய்தியாக இருந்தது நபித்துவம். ஹழ்லரத் இஸ்மாஈல் (அலை) அவர்களுக்குப் பின் கழிந்து போயிருந்த ஈராயிரமாண்டுகளைக் கொண்ட இடைப்பட்ட காலத்தில் அவர்

களிடையே எந்த ஒரு நபியுமே தோன்றாமல் போன துர்ப்பேற்றை,

قَوْمًا مَّا أُنذِرَ آبَاؤُهُمْ فَهُمْ غَافِلُونَ ○

''(யாதொரு தூதராலும்) தங்கள் மூதாதைகளுக்கு எச்சரிக்கை செய்யப்படாத(தால் மறுமையைப் பற்றிய) முற்றிலும் கவலையற்றிருந்த (அரபிகளாகிய இந்த) ஜனங்கள்'' என அடையாளங் காட்டுகிறது அல்லாஹ்வின் திருமறை. (36 : 06) நேர்மையும் ஒழுக்கமும் அவர்களை விட்டும் வெகு தொலைவிலாகி, பண்பில்லாத ஒரு மிருக வாழ்க்கையையே அவர்கள் பழக்கத்தில் கொண்டிருந்தனர். ஊனும் உல்லாசமுமேயன்றி மற்றெந்த குறிக்கோளும் அவர்களிடம் இருந்திராத காரணத்தால் வாணிபப் பயணங்களில் தங்களுக்கு எதிர்ப்பட்ட கிருஸ்துவ ஞானிகளைக் கொண்டும் எந்த உணர்வையும் பெற்றுக் கொள்ள அவர்கள் தவறி விட்டிருந்தனர். அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்களின் பிறப்பு, தங்களிடையே அல்லாஹ்வின் பேரருளின் பிரசன்னம் என்பதை உணரத் திறனற்றுப் போன அவர்கள், ஆண்டவனின் அந்தத் தூதரை ஒரு சாதாரண மனிதராகவே நினைத்த மூடத்தனத்தை,

وَمَا مَنَعَ النَّاسَ أَن يُؤْمِنُوا إِذْ جَاءَهُمُ الْهُدَىٰ إِلَّا أَن قَالُوا أَبَعَثَ اللَّهُ بَشَرًا رَّسُولًا ○

''மனிதர்களிடம் நேரான வழி வந்த சமயத்தில், ''அல்லாஹ் ஒரு மனிதரையா தன் தூதராக அனுப்பி வைத்தான்'' என்று கூறுவதைத் தவிர, அவர்கள் விசுவாசங் கொள்வதற்குத் தடையாக வேறெதுவுமே இல்லை—என கோடிட்டுக் காட்டுகிறது வேதமாமறை. (17 : 94)

3

لَن نُّؤْمِنَ لَكَ حَتَّىٰ تَفْجُرَ لَنَا مِنَ الْأَرْضِ يَنبُوعًا

''இப்பூமியிலிருந்து ஓர் ஊற்றுக்கண் நமக்காகத் தோன்றினாலன்றி நாம் உம்மை விசுவாசிக்கமாட்டோம்.

أَوْ تَكُونَ لَكَ جَنَّةٌ مِّن نَّخِيلٍ وَعِنَبٍ فَتُفَجِّرَ الْأَنْهَارَ خِلَالَهَا تَفْجِيرًا

''அல்லது மத்தியில் சதா நீரருவிகள் ஓடிக் கொண்டிருக்கக் கூடிய திராட்சை, பேரீச்சை {(மரங்) களையுடைய சோலை உமக்கிருந்தாலன்றி,

أَوْ تُسْقِطَ السَّمَاءَ كَمَا زَعَمْتَ عَلَيْنَا كِسَفًا أَوْ تَأْتِيَ بِاللَّهِ وَالْمَلَائِكَةِ قَبِيلًا

''அல்லது நீர் எண்ணுகிற பிரகாரம் வானம் இடிந்து அதில் ஒரு துண்டு எங்கள் (தலை மீது) விழுந்தாலன்றி, அல்லது அல்லாஹ்வையும் மலக்கு களையும் நம்முன் கொண்டு வந்தாலன்றி,

أَوْ يَكُونَ لَكَ بَيْتٌ مِّن زُخْرُفٍ

''அல்லது (மிக்க அழகான) பொன்னாலாகிய ஒரு மாளிகை உமக்கு இருந்தாலன்றி நாம் விசுவாசங்கொள்ளவே மாட்டோம். (அல்குர்ஆன்—17 : 90 to 93)

—என்றெல்லாம் எகத்தாளம் வாசித்துக் கொண்டிருந்தவர்களின் நெஞ்சங்களுக்கு வெளிச்சங் கிட்டுவது எங்ஙனம்? பெருமையும் அகம்பாவமும் அவர்களைப் பேறிழக்கச் செய்துவிட்டது என்பதற்கான அடையாளமே பெருமானார்

(ஸல்) அவர்களை விட்டும் அவர்கள் தங்களின் முகங்களைத் திருப்பிக் கொண்டது தான்.

மக்காவின் குறைஷிகளையோ மற்ற வனாந்திரவாசிகளையோ போலன்றி 'யத்ஸ்ரிபி'ன் 'அவ்ஸ்—கஸ்ரஜ்' கள் மென்மையான மனமும் இனிமையான குணமும் கொண்டு விளங்கினார்கள். மமதை, இறுமாப்பு, மூர்க்கத்தனம், முரட்டுப் பிடிவாதம் போன்ற குணக்கேடுகள் அவர்களிடம் இருக்கவில்லை. அவர்களும் மக்காவாசிகளைப் போன்றே ஹழ்ரத் இப்ராஹீம்—இஸ்மாஈல் (அலை) ஆகியவர்களின் வழிவாறுகளாகவே இருந்தனர். அவர்களிடையிலும் கழிந்து போன ஈராயிரமாண்டுகால இடைவெளியில் வேறெந்த நபியும் தோன்றியே இராத நிலையிலும், நபித்துவப் பாரம் பரியத்தின் பாசறையான யூத சமூகத்தவரோடு 'அவ்ஸ்—கஸ்ரஜ்' களுக்குப் பழக்கத் தொடர்பு பல தலைமுறைகளாக இருந்து வந்தது. அண்டை வாசிகளாக வாழ்ந்து உடன்பாடுகள் வாயிலாகவும், உரையாடல்கள் மூலமும் ஒருவரோடொருவர் கலந்து பழகியிருந்தார்கள். அந்தப் பழக்கத்தின்பலனாக நபிமார்களைப் பற்றிய வரலாறுகளை—செய்திகளைத் தெரிந்தவர்களாயிருந்ததோடன்றி,'தவ்ராத்' தை யூதர்கள் ஓதக் கேட்கக் கூடிய வாய்ப்பும் 'யத்ஸ்ரிப்' வாசிகளுக்கு இருந்தது. மக்காவின் குறைஷிகளைப் போன்றே 'அவ்ஸ்—கஸ்ரஜ்' களும் கூட இணை வைத்து வணங்கும் 'முஷ்ரிக்கு' களாகவே இருந்த நிலையிலும், வேதக்காரர்களான யூதர்களோடு பழகி, வேத நூலான 'தவ்ராத்' தை அவர்கள் ஓதக் கேட்டு வந்த வாலாயத்தால், நபிமார்கள், தூதுத்துவம், வேதச் செய்திகள், மரணத்துக்குப் பிந்திய மறுமை நிலை போன்ற மதவாதங்களைக் கேட்டுப் பழகியிருந்தார்கள். மாண்டபின் மீண்டும் உயிர் பெற்றெழுப்பப்படுவது—விசாரணை நாள் பற்றிய எண்ண ஊசாட்டங்களாவது அவர்களிடையே காணப்பட்டன. அப்போதைக் கப்போது தோன்றி மறைந்திருந்த அநேக நபிமார்களைப்

பற்றி மட்டுமின்றி, மனப்பொருமல் கொண்டு யூதர்கள் தங்களுக்குச் செய்து வந்த எச்சரிக்கைகளின் வாயிலாக, பிந்திய காலத்தில் தோன்றி தங்களின் பூமிக்கே குடிவரப் போகும் இறுதி நபியவர்களைப் பற்றியும் செவியுற்றிருந்த னர் 'அவ்ஸ்'களும் 'கஸ்ரஜ்'களும்.

அதே சமயம், அவர்களின் நிலை மிகப் பரிதாபத்துக் குரியதாயிருந்தது. நரித்தன மிகுந்த யூதர்களின் நயவஞ்சகச் சதிகளுக்காட்பட்டு, தங்களுக்கிடையிலேயே பேதப்பட்டுப் பிளவு பட்டு, போராடிப் போராடி, பொருள்களையும் உயிர்களையும் எண்ணிலடங்கா அளவுக்கு இழந்து, இழி வடைந்துச் சோர்ந்து விட்டிருந்தனர் அச்சமூகத்தார். விரிந்த மனமும் விருந்தோம்பலில் மிகைத்த பண்பும் சேமிக் கும் சிந்தனையே இல்லாதவர்களாக அவர்களை ஆக்கி விட்டிருந்தன. அவர்களிடையே இறுதியாக நடை பெற்ற 'புஆத்ஸ் போர்'—''அல்லாஹ் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்குச் செய்த மறைமுகமான ஓர் உபகாரம்'' என அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். அப்போர் விளைவித்த பயங்கரத் துன்பங்களைத் தாங்கி, கரை காணாத் துயரக் கடலில் ஒரு கலங்கரை விளக்கைத் தேடித் தத்தளித்துக் கொண்டிருந்தனர் 'யத்ரிபி'ன் 'அவ்ஸ்'களும் 'கஸ்ரஜ்'களும்.

தங்களை வழி நடத்தத் தகுதிமிக்க—மிகச் சரியான ஒரு தலைமைக்காக,

தங்களிடையே பிணக்குகளைக் களைந்து இணக்கத்தில் தங்களை ஒன்று படுத்தக் கூடிய பாச மனங் கொண்ட ஒரு நேசருக்காக,

தாங்களே வலியத் தேடிச் சுமந்து கொண்ட இன்னல் களையும் இடுக்கண்களையும் இறக்கி வைத்து மீண்டும் ஒரு புனர் வாழ்வைத் தங்களுக்கு அருளக் கூடிய தரு நிழ

லுக்காகத் நவித்துக் கொண்டிருந்தனர் 'யத்ஸ்ரிபி'ன் 'அவ்ஸ்'களும் 'கஸ்ரஜ்'களும். அவ்வாறாக அவர்களிருந்த அப்போதைய பரிதாபகரமான நிலையில் ஒரு பெரும் பேற் றுக்காகத் தாங்கள் தெரிந்தெடுக்கப்படுவோம் என அவர்கள் எண்ணியே பார்த்திருப்பார்களா?

சூழ்ச்சிக்குப் பலியாகி, தாங்கள் அடைந்திருந்த இழப்பு களால் பலஹீனப்பட்டுத் தத்தளித்துக் கொண்டிருந்த அந்த 'கைலாவின் மக்கள்' தங்களை எதிர்நோக்கி வந்து கொண் டிருந்த பேரருளைப் பற்றி கற்பனையேனும் செய்திருப் பார்களா —

ஒரு கனவாகிலும் கண்டிருப்பார்களா ?

அநீதங்களுக்காட்பட்டு அலங்குலைந்துபோயிருந்த அவர் களின் வேதனைக் குரல்கள்—அல்லல்பட்டு நொந்திருந்த அவர்களின் அவலப் பெருமூச்சுகள் 'அர்ஷ்' என்னும் மணி மண்டபத்தையே எட்டியிருக்கக் கூடும் !

அருள்மாரியை அவர்கள் மீது அள்ளிச் சொரிய இறை வனின் திரையில்லாத் திருவாசல்கள் திறந்து கொண்டன போலும் ! !

ஆணவக்காரர்களை விட்டு, அக்கிரமத்துக்காட்பட்டவர் களை அல்லாஹ் தன் அருளுக்குச் சொந்தமாக்கத் தெரிந் தெடுத்துக் கொண்டதற்கடையாளமாக, அண்ணலவர்களின் சொல்லேற்க 'அவ்ஸ்—கஸ்ரஜ்'கள் அருகிவரும் காலமும் நெருங்கியே வந்தது ! ! !

**'ஹி**ஜ்ரத்'துக்கு முந்திய மூன்றாம் ஆண்டு !

ஹஜ்ஜுக்காக வந்திருந்த பல கோத்திரத்து அரபிகளும் குழுமியிருந்தனர் 'மினா'வின் பெருவெளியில். 'யத்ஸ்ரிபி லிருந்தும் பலர் வந்திருக்கக் கூடும். குறிப்பாக அவர்களில் 'கஸ்ரஜ்'களைச் சார்ந்த ஆறு பேர் 'அக்கபா'பள்ளத்தாக்

இல் தங்கியிருந்தனர். பயணக்கிரியைகளை ஆற்றி முடித்தவர்களாக, ஓய்வுடன் அவர்கள் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்த ஒரு மாலை நேரம்—தங்களின் கூடாரத்தை நோக்கி வந்துக் கொண்டிருந்த ஒருவரின் புறம் திரும்பின அவ்வறுவரின் பார்வைகளும் !

நெட்டையுமல்லாமல் குட்டையுமல்லாமல் நடுத்தரமான உயரம்; வெண்ணிறமென்றோ செந்நிறமென்றோ வரையறுத்துக் கூற முடியாத பொன்னிறம்; விரிந்த மார்புடன் கூடிய திடகாத்திரமான உடல்; படர்ந்த நெற்றி; வட்டமானதென்றோ நீளமானதென்றோ நிர்ணயிக்க இயலாத—இனிமை இணைந்துத் திளைத்த முகம்; செவ்வரி படர்ந்த வெண்மையான கண்கள்; கரிய விழிகள்; நீண்ட இமைகள்; வளைந்த மெல்லிய புருவங்கள்—இத்தலைக்கும் உடையவரான, பண்பட்ட வயதைக் கடந்தவராகத் தோற்றம் வழங்கிய அவர் யார்?

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களேதாம்!

சந்தை மேடுகளிலும் மக்களின் சந்திப்புக் கூடங்களிலும் பைத்தியக்காரர் என பரிகசிக்கப்பட்டு, சூனியக்காரர் என சுட்டிக் காட்டப்பட்ட நிலையிலும், சோர்வுக்கே இடந்தராது பெருமானார் திருநபி (ஸல்) அவர்கள் 'மினா'வில் வந்து கூடும் புனிதப் பயணிகளிடையிலும் சந்திப்புகளை மேற்கொண்டு தங்களின் நூபுத்துவத்தை எடுத்துரைப்பதை சமீபகால வாடிக்கையாக்கிக் கொண்டிருந்தார்கள். புனித மாதங்களில்* எத்தகைய எதிரியின் மீதும் தங்களின் கண் காணிப்புகளை விலக்கிக் கொள்வது அரபுகள் பேணி வந்த மரபு. நடைபெற்றுக் கொண்டிருக்கும் போர்களையும் கூட அவர்கள் அம்மாதங்களின் பிறை கண்ட மறுகணமே நிறுத்தி

* ரஜபு, துல்காஇதா, துல்ஹஜ், முஹர்ரம் ஆகிய நான்கு மாதங்கள்.

விடுவர். அவ்வாலாயத்தின் பலனாக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள், புனிதப் பயணிகளிடையே சந்திப்புகளை மேற்கொள்வதும், சகஜமாக உரையாடுவதும் ஓரளவு எளிதாக இருந்தது. அப்படியொரு சந்திப்புக்காகவே நெருங்கிக் கொண்டிருந்த அண்ணலார் (ஸல்) அவர்களின் பேரெழில் திருமுகம் தன் முதல் தோற்றத்திலேயே அவ்வறுவரையும் கவர்ந்து விட்டதெனலாம். முகமன் கூறிய அன்னாரை முகம் மலர எழுந்து வரவேற்றனர் அவ்வறுவரும்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் அடுத்தடுத்த வினாக் கூருக்கு விடையாக, தாங்கள் 'யத்ஸ்ரிபி'லிருந்து வந்தவர்கள் என்பதையும், 'கஸ்ரஜ்' கோத்திரத்தைச் சார்ந்தவர்களென்பதையும், யூதர்களோடு தொடர்புடையவர்களே என்பதையும் அவர்கள் தெரிவித்தனர்.

''உங்களோடு நான் உரையாட சற்று அமர்ந்து கொள்ளமாட்டீர்களா?''—என அண்ணலார் (ஸல்) அவர்கள் அன்புடன் வினவினார்கள்.

''ஆகா அமருவோம்; உரையாடுவோம்'' என பரிவுடன் அவர்கள் அண்ணலவர்களையும் தங்களிடையே அமரச் செய்து கொண்டனர்.

''நீர் கூற வந்துள்ள செய்திகளைக் கூறும்'' என முக மலர்ச்சியுடன் அவர்கள் கேட்க, அண்ணலார் (ஸல்) அவர்கள், ஏகத்துவத்—தவ்ஹீ—தின் நறுமணத்தை, தங்களின் ரிஸாலத்—தூதுவத்—தை, அவனியில் அமைதி தழைக்க ஆண்டவனால் காட்டப்பட்டுள்ள இஸ்லாமிய நேர்வழியை யெல்லாம் சுருக்கமாக அவர்களிடம் எடுத்துரைத்தார்கள்.

''விண்ணிலிருந்து உம்பால் அருளப்படுவதாக நீர் கூறும் வேதச் செய்திகள் எதையேனும் நீர் எங்களுக்கு ஓதிக் காட்ட முடியுமா?'' என அவர்கள் வினவினர்.

'தாராளமாக' என இசைந்த ஏந்தல் நாயகம் (ஸல்) அவர்கள், ''இப்ராஹீம்'' என்ற தலைப்பில் திருமறையில் அருளப்பட்டுள்ள (பதினான்காம்) அத்தியாயத்தின் ஆரம்ப வசனங்களை ஓதலானார்கள்:

الٓرٰ ۚ كِتٰبٌ اَنْزَلْنٰهُ اِلَيْكَ لِتُخْرِجَ النَّاسَ مِنَ الظُّلُمٰتِ
اِلَى النُّوْرِ ۙ بِاِذْنِ رَبِّهِمْ اِلٰى صِرَاطِ الْعَزِيْزِ الْحَمِيْدِ ۙ

''அலிஃப் லாம் றா! (நபியே! இது) வேதநூல். இதனை நாமே உம்மீது அருட் செய்திருக்கிறோம். (இதன் மூலம்) மனிதர்களை அவர்களின் இறைவனின் கட்டளையின் பிரகாரம் இருளிலிருந்து வெளியேற்றி பிரகாசத்தின் பால் நீர் கொண்டு வருவீராக! (அப்பிர காசமோ) மிக்க புகழுக்குரிய (அல்லாஹ்வாகிய யாவரையும்) மிகைத்தவனின் நேரான வழியாகும்.

اللّٰهِ الَّذِيْ لَهٗ مَا فِي السَّمٰوٰتِ وَمَا فِي الْاَرْضِ ؕ وَوَيْلٌ لِّلْكٰفِرِيْنَ مِنْ عَذَابٍ شَدِيْدِ ۙ

''அந்த அல்லாஹ் (எத்தகையோனென்றால்)— வானங்களிலும் பூமியிலும் இருப்பவை யாவும் அவனுக்குச் சொந்தமானவையே. இதனை நிராகரிப்போருக்கு வந்தடையும் வேதனையின் காரணமாக (அவர்களுக்கு)ப் பெருங்கேடுதான்—என ஆரம்பச் சில வசனங்களையே அண்ணலார் (ஸல்) அவர்கள் ஓதியிருந்தார்கள், அதற்குள் அவ்வறுவரின் உள்ளங்களும் வசமிழந்து விட்டிருந்தன. ஒருவரையொருவர் பார்த்துக் கொண்ட அவர்களின் உணர்வுகள் உரையாடலாயின. 'நிச்சயம் இந்த வசனங்கள் மண்ணில் பிறந்த மனிதர்களால் கோர்வை செய்யப்பட்டிருக்கக் கூடியவை அல்ல; விண்ணிலிருந்து அருளப்பட்டிருக்கக் கூடியவேத மொழிகளே' என்ற மனப்பூர்வமான முடிவுகளைப் பெற்ற

அவர்கள், ''யூதர்களின் வாய்வழியே அடிக்கடி நாம் செவியுற்று வந்த அந்த நபி இவராகவே இருக்கவேண்டும். இவரின் கரம் பற்ற யூதர்கள் முந்தி விடாதிருக்க நாம் எச்சரிக்கையுடனிருக்க வேண்டும்'' என்று பேசிக் கொண்டனர்.

திருக்குர்ஆனின் மொழிச் செறிவு, நபித்துவத் தோற்றப் பொலிவு, அண்ணலார் (ஸல்) அவர்களின் குரல் வளம் அனைத்தும் இணைந்து அவ்வறுவரின் விழிகளையும் விரியச் செய்தன. நொந்திருந்த தங்களின் விடிவு காலத்தை—எதிர் கால ஏற்றத்தை விரிந்த பார்வையில் கண்ட அவ்வறுவரின் உரையாடல்களில் அதற்குப்பின் பிரத்தியேகமான ஒரு பரியாதை தொனிக்கலாயிற்று!

''தங்களின் அழைப்பை மனமுவந்து ஏற்கிறோம். அல்லாஹ்வின் மெய்த் தூதர் என தங்களை ஏற்று சாட்சியம் கூறுகிறோம். தாங்கள் எங்களிடமிருந்து எதிர்பார்ப்பதென்ன?'' என அவர்கள் வினவினர்.

தங்களின் பாதையில் குரைஷிகள் விளைவித்திடும் தங்கடங்களையும் அவர்களுக்கு விவரித்து அண்ணலார் (ஸல்) அவர்கள், ''என்னை உங்களின் வாழ்விடத்துக்கு அழைத்துச் செல்வதையும், உள்ளன்போடு எனக்கு நீங்கள் காவலாய் நின்று, இன்னும் மனிதர்கள் ஏராளமாக என் மார்க்கத்தை ஏற்றிட உறுதுணையாய் ஒத்துழைப்பதையுமே நான் உங்களிடம் எதிர்பார்க்கின்றேன்'' என்று கூறினார்கள்.

அடுத்துச் சில வினாடிகள் கஸ்ரஜ்களின் சிந்தனையை ஆக்கிரமித்துக் கொண்டன. மக்க மாநகரின் ஒரு சாதாரண குரைஷியின் முன்னல்ல, மாபெரும் இறை தூதருடனேயே தாங்கள் உரையாடிக் கொண்டிருக்கும் பக்திப் பேணுதலை அவர்களின் தோரணை வெளிப்படுத்தியது. அப்போதைய உரையாடலின் எந்த ஒளிவும் மறைவும் பிந்திய உறவில் மானபங்கத்துக்குத் தங்களைப் பலியாக்கி விடக் கூடாதே

என அஞ்சிய அவர்கள் தங்களின் எந்தப் பலஹீனத்தையும் மறைக்காது பேசலாயினர். ''நிச்சயம் தங்களுக்கு நாங்கள் எல்லா வழிகளிலும் ஒத்துழைப்பு தருவோம். தாங்கள் எங்கள் பால் வருவீர்களானால் தங்களின் பாதுகாப்புக்கு நிச்சயம் நாங்கள் பொறுப்பேற்போம். ஆனால், அல்லாஹ்வின் தூதரவர்களே! தற்போது எங்களின் சமூகத்தவர்களை, தங்களின் உட்பூசல்களால் பிளவு பட்டவர்களாகவே 'யத்ஸ்ரிபி'ல் விட்டு நாங்கள் வந்துள்ளோம். இந்த இன்றைய நிலையில் மேற்கொள்ளப்படும் எந்த முயற்சியிலும் வெற்றிக்கான நம்பிக்கை எங்களுக்குக் குறைவாகவே உள்ளது. இப்போது நாங்கள் சென்று, தாங்கள் எங்களிடம் கூறிய செய்திகளை எங்களின் சகோதரர்களிடமும் எடுத்துரைப்போம். அல்லாஹ் தங்களின் வரவினால்—போதனைகளால் எங்களிடையே நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் வளரச் செய்யலாம்—என்ற உணர்வுகளினாலேயே நாங்கள் பிளவு நீங்கி ஒன்று படலாம். அப்போது தங்களை நாங்கள் எங்கள் பால் வர நிச்சயம் அழைத்துக் கொள்வோம். அல்லாஹ் நாடினால், அடுத்த ஆண்டில் இதே சமயத்தில் தங்களை நாங்கள் மீண்டும் சந்திப்போம்'' என பணிவுடன் கூறினார்கள்.

வெள்ளை மனத்துள்ளிருந்து வெளிப்பட்ட அவர்களின் தெள்ளத் தெளிவான விளக்கம் அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு மனத்திருப்தியையே தந்தது. ''அப்படியே ஆகட்டும்'' என ஏற்று அண்ணலார் (ஸல்) அவர்கள் விடைபெற எழுந்தார்கள். அவர்களை முந்திக் கொண்டு எழுந்தார் அவ்வறுவருள் மிக இளைஞரான ஒருவர். ''பெருமானே! தங்களின் கரத்தை நீட்டுங்கள். அதில் நான் பிரமாணம் செய்கின்றேன். பின்னர் நடப்பதே நடக்கட்டும்'' என துணிந்தார் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா எனப்பட்ட அவர். அண்ணலார் (ஸல்) அவர்கள் அவர் கேட்டபடியே தங்களின் கரத்தினை நீட்டினார்கள். புனித கரத்தினைப்

பக்தியுடன் பற்றிய அவர், ''அல்லாஹ்வைத் தவிர வணங்குதற்குரியவன் எவனுமில்லை என ஏற்று நான் சாட்சியம் கூறுகின்றேன். தங்களை அல்லாஹ்வின் தூதரெனவும் சத்தியமாக ஏற்று நான் சாட்சியம் கூறுகிறேன்'' என பிரமாணம் செய்தார். அவரைத் தொடர்ந்தே மற்ற ஐவரும் அவ்வாறே பிரமாணம் செய்தளித்தார்கள். 'யத்ஸ்ரிபி'ன் வரலாற்றில் புதியதொரு விடியலுக்கு வழி திறந்த ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்களைத் தொடர்ந்த மற்ற ஐவர்,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஹழ்ரத் | ராபிஉ | இப்னு | மாலிக் | (ரலி) |
| 2. | ,, | உக்பா | ,, | ஆமிர் | ( ,, ) |
| 3. | ,, | குத்பா | ,, | ,, | ( ,, ) |
| 4. | ,, | அவ்ஃப் | ,, | ஹாரிஃஸ் | ( ,, ) |
| 5. | ,, | ஜாபிர் | ,, | அப்துல்லாஹ் | |
| | | | ,, | ரபாஹ் | ( ,, ) |

ஆகியோராவர்.

**'அன்ஸார்'கள்** என்ற பரிவட்டத்தைச் சூடிக் கொள்ள **'அவ்ஸ்—கஸ்ரஜ்'**களை அழைத்துச் சென்ற ஆரம்ப கர்த்தாக்கள் இவர்களே. ஆண்டவனின் தூதரின் அகங் குளிரச் செய்து, அவர்களின் அருளாசி பெற்று 'யத்ஸ்ரிபு'க்குத் திரும்பினர் அவ்வறுவரும்.

தாங்கள் கேட்ட புதிய போதனைகள், அவற்றைப் பெருமானார் (ஸல்) அவர்கள் எடுத்துரைத்த பாங்கு, அவர்களின் தோற்றப் பொலிவு ஆகிய யாவும் வழியெங்கும் அவ்வறுவரின் எண்ணங்களுக்கும் வண்ணமூட்டிக் கொண்டேயிருந்தன. தங்களின் பூமியை வந்தடைந்த அவ்வறுவரும் தங்களின் மனக்கிளர்வுகளை நண்பர்களோடு பகிர்ந்து கொண்டார்கள். அதன் மூலம், மக்காவில் தோன்றியுள்ள அந்தப் புதிய நபியைப் பற்றியும், அவரின் கரம் பற்ற யூதர்களை முந்திக் கொண்ட அவ்வறுவர் பற்றியுமான செய்தி

கள் 'கஸ்ரஜ்'களிடையே மட்டுமின்றி 'அவ்ஸ்'களிடையிலும் சிலருக்கு எட்டின. தாங்கள் வாக்களித்து வந்திருந்தபடி மறு ஆண்டில் ஹஜ்ஜுக்காகப் புறப்பட்ட அம்முந்தினவர்களி டையே என்ன காரணத்தாலோ ஹழ்லரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் இப்னு ரபாஹ் (ரலி) அவர்கள் மட்டும் காணப் படவில்லை. ஆனால், மற்ற ஐவரோடு 'கஸ்ரஜ்'களேயான ஹழ்லரத் மஆத் இப்னு ஹாரிஸ், தக்வான் இப்னு அப்து கைஸ், உபாதா இப்னு ஸ்வாமித், யஜீத் இப்னு த்ஸ்அலபா, அப்பாஸ் இப்னு உபாதா (ரலி) ஆகிய ஐவரும், 'அவஸ்'களைச் சார்ந்தவர்களான ஹழ்லரத் அபுல் ஹய்த் ஸம் மாலிக் இப்னுத் தய்யிஹான், உவைம் இப்னு ஸாஇதா (ரலி) ஆகிய இருவரும் புதிதாக இணைந்து கொண்டனர்.

மினாவின் பெருவெளியில் பெருமானார் (ஸல்) அவர் களைத் தங்களின் உள்ளங்களினாலேயே தேடிக் கொண்டி ருந்தனர் ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜ்ஹைாரா, ராபிஉ இப்னு மாலிக் (ரலி) ஆகிய இருவரும். கூடாரங்களிடையே நடமாடி வந்துக் கொண்டிருந்த அவர்களுக்கு அண்ணலவர் களின் சந்திப்பும் கிடைத்தது. முகமன் கூறி தங்களை நெருங் கிய அண்ணலவர்களின் கரங்களைக் குதூகலத்துடன் பற்றிக் கொண்டனர் அவ்விருவரும்; தங்களின் நல்வாழ்த்துக் களைப் பரிமாறிக் கொண்டனர். அவர்களோடு "மற்றெ வரும் வரவில்லையா?" என அண்ணலார் (ஸல்) அவர்கள் வினவினார்கள். தாங்கள் பன்னிருவர் வந்துள்ள செய்தியைத் தெரிவித்தனர் அவ்விருவரும். முந்தின ஆண்டு சந்தித்த அதே 'அக்கபா'வில் அன்றைய இரவில் சந்திக்கலாம் என அண்ணலார் (ஸல்) அவர்கள் செய்த முடிவை ஏற்று அவ் விருவரும் திரும்பினர். அது போன்றே அன்றைய இரவு 'அக்கபா'வில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைச் சந்தித்த அப்பன்னிருவரும் அண்ணலவர்களின் புனித கரங் களைப் பற்றி,

நாயகத் தோழர்கள்

1. அல்லாஹ் ஒருவனையே வணங்குவோம்; அவனுக்கு எவரையும் இணை வைக்கமாட்டோம்.

2. களவு புரியமாட்டோம்; விபச்சாரம் செய்ய மாட்டோம்.

3. பெண் மக்களைக் கொலை செய்ய மாட்டோம்.

4. அவதூறு பேசமாட்டோம்; பழி சுமத்த மாட்டோம்.

5. நாயகப் பெருமான் (ஸல்) அவர்களின் வழி தொடர்ந்து நற்செயல்களாற்றுவோம் — என்றெல்லாம் பிரமாணம் செய்தார்கள். இதுவே 'அக்கபா'வில் நடைபெற்ற முதலாம் உடன்பாடு என வரலாற்றில் காணப்படுகிறது.

இரண்டாண்டு கால இடைவெளியில் 'அக்கபா'வில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களோடு மூன்று சந்திப்புகளை 'யத்ஸ்ரிபி'ன் 'அவ்ஸ்—கஸ்ரஜ்'கள் பெற்றார்கள். முதலாம் சந்திப்பில் அண்ணலார் (ஸல்) அவர்கள், ஏகத்துவத்தையும் தம் தூதுத்துவத்தையும் எடுத்துரைத்து அவர்களை ஏற்கச் செய்தார்களேயன்றி அவ்ஸ்—கஸ்ரஜ்களைச் சார்ந்தவர்களிடம் மற்றெந்த வாக்குறுதிகளையும் பெறாததாலோ, அல்லது மற்றெந்தக் காரணத்தாலோ வரலாற்றாசிரியர்கள் அனைவரும் இவ்வாண்டு இரண்டாம் சந்திப்பின்போது நடைபெற்ற இவ்வுடன்பாட்டையே 'அக்கபா'வின் முதலாம் உடன்பாடென குறிப்பிடுகிறார்கள். இப்போதும் போரிடுவது பற்றிய எந்த நிபந்தனையும் விதிக்கப்படவில்லை. பிற்காலத்தில் பெண்களிடமெல்லாம் இந்த நிபந்தனைகளின் பேரிலேயே பிரமாணங்கள் பெறப்பட்டதால் இந்த உடன்பாடு 'பைஅத்துன் னிஸா—பெண்களின் உடன்பாடு' என்றும் சித்தரிக்கப்பட்டுள்ளது. ஆனால் இந்த நிபந்தனைகளையே அவர்கள் நிறைவேற்றினாலும் போதும்,

அவர்கள் சுவர்க்கம் சேர்வர் என்றும் அப்படியல்லாமல் பிரிந்தபின் வாக்குறுதி மாறிடில் அவர்களை மன்னிப்பதும் தண்டிப்பதும் இறைவனின் சித்தத்தைப் பொறுத்தது என்றும் கூறி பெருமானார் (ஸல்) அவர்கள் அப்பன்னிருவரிடமும் விடைபெற்றுப் பிரிந்தார்கள்.

மென்மையான அந்நிபந்தனைகளின் பேரிலேயே பிர மாணம் செய்து 'யத்ஸ்ரிப்' திரும்பிய அப்பன்னிருவரின் மனங்களும் மகத்தான மலர்ச்சி பெற்றிலங்கின. நாயகப் பெருமான் (ஸல்) அவர்களிடம் பெற்ற ஞான விளக்கம் அவர்களின் எண்ணங்களில் புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்தி விட்டிருந்தது. அவர்களின் வாயிலாகவும் புதிய மார்க்கத்தைப் பற்றிய செய்திகள் யத்ஸ்ரிபின் பல தெருக் களுக்கும் பரவின. வீடுகளெங்கும் இஸ்லாத்தைப் பற்றிய சர்ச்சைகள் நடைபெற்றன. யத்ஸ்ரிபின் தோழர்கள் வேண் டிக் கொண்டபடி, புதிய மார்க்கத்தை அவர்களுக்குப் புரிய வைக்கவும், புதிய வேதத்தை அவர்களுக்கு ஓதிக் காட்டவும் அண்ணலார் (ஸல்) அவர்களால் அனுப்பி வைக்கப்பட்ட ஹழ்ரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களின் வரவும் யத்ஸ்ரிபில் களை கூட்டியது. அன்னவர் தம் இனிய குர லெடுத்து ஓதிக்காட்டிய இறைமறை வசனங்கள் செவியுற்ற வர்களின் சிந்தைகளைக் கவர்ந்தன. விருந்தேற்றும் பல இல் லங்களுக்குச் சென்ற அந்நாயகப் பெருந்தோழர் வெளிப்படுத் திய குண நலப் பண்பாடுகளும் கருத்தாழ மிக்க விளக்கங் களும் 'அவ்ஸ் — கஸ்ரஜ்'களைச் சார்ந்த கோத்திரத் தலை வர்களையே திசை திருப்பின. தலைவர்களைத் தொடர்ந்து குடும்பங் குடும்பங்களாக அநேகர் இஸ்லாத்தி லாயினர். மிகக் குறைந்த காலத்துக்குள் 'யத்ஸ்ரிபி'லிருந்து ஏறத்தாழ மூன்று கல் தொலைவில் உள்ள 'குபா' வரையி லும் கூட ஆன்மீகத் தெளிவு பெற்றவர்களின் நடமாட்டம் சர்வ சாதாரணமாகியது. அருள் வளம் அவர்களைச் சூழத் துவங்கி விட்டதற்கடையாளமாக அவர்களின் உள்ளங்

கள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைக் காணும் ஆவலில் திளைக்கலாயின.

மறு ஆண்டின் ஹஜ்ஜின் காலம் துவங்கியபோது அவர்களில் ஏறத்தாழ ஐந்நூறு பேர் புனிதப் பயணம் புறப்பட்டார்கள். அவர்களிடையே எந்தப் பகையுணர்வும் இருக்கவில்லை. விரோதங்கள், குரோதங்கள் அனைத்தையும் மறந்து ஒன்றுபட்டவர்களாகப் புறப்பட்டுச் சென்ற அவர்களிடையே இஸ்லாத்தை ஏற்றுவிட்டவர்களும் இருந்தனர். அதுவரை ஏற்காதவர்களும் இருந்தனர். ஆனால் அவர்களில் எவரும் எவருக்கும் எதிரிகளாக அப்போதைக்கு இருக்கவில்லை.

ஹிஜ்ரத்துக்கு முந்திய ஆண்டு அது—தன் நிறைவை நெருங்கிய வண்ணமிருந்தது.

ஹஜ்ஜின் கிரியைகள் நிறைவடைந்த இறுதி இரவு—

சுற்று வட்டாரங்களிலிருந்தும் தொலை தூரங்களிலிருந்தும் வந்திருந்த புனிதப் பயணிகள் அனைவரும் உறக்கத்தில் ஆழ்ந்திருந்த சமயம்—

இரண்டு பெண்கள் உட்பட இஸ்லாத்தை ஏற்றுவிட்டிருந்த எழுபத்து ஐந்து 'யத்ரிப்' வாசிகள்—அவ்ஸ், கஸ்ரஜ்கள் — 'அக்கபா'வில் விழித்துக் காத்திருந்தனர், தங்களின் விடியலை எதிர் நோக்கி!

பெருமானார் (ஸல்) அவர்களே அந்தப் பிந்திய சாமத்தை அவர்களுக்கு நிர்ணயித்திருந்தார்கள், தங்களின் சந்திப்புக்காக!

ஒரு நம்பிக்கை நிறைவு பெற—நலிந்துச் சிதைந்து போயிருந்த ஒரு வரலாறு புதிய பொலிவைப் பெற அடித்தளம் அமைக்கப் போகும் அந்தச் சந்திப்பின் போது தடங்கல்கள்.

தங்கடங்கள் எதுவும் எதிர்படாமலிருக்க, தகுதியான ஒரு நேரமாக இருந்தது அந்தப் பிந்திய சாமம்.

யத்ஸ்ரிபின் மக்களின் மனங்கள் அடைந்திருந்த மலர்ச்சியைப் பற்றிய செய்திகள் ஹழ்ரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்கள் மூலம் முன்னதாகவே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை எட்டியிருந்தன. அதுவரை தங்களின் கரம் பற்றி வழிமொழிந்தவர்களில் எழுபத்தி நான்கு பேர் ஹஜ்ஜுக்காக வந்திருப்பதையும், தாங்கள் நம்பி ஏற்றுள்ள நபிமணி (ஸல்) அவர்களின் திருமுகத்தை நேரடியாகக் காண்பதோடன்றி, தூதர் நாயகம் (ஸல்) அவர்களைத் தங்களின் பூமிக்கே அழைத்துச் செல்ல ஆவல் கொண்டு அவர்கள் காத்திருப்பதையும் ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்கள் விளம்பிடக் கேட்டு அண்ணலார் (ஸல்) அவர்களின் நம்பிக்கை பிரகாசிக்கலாயிற்று.

வேனலின் புழுக்கத்திலிருந்து வெளியேறி வசந்தத்தின் நிழலில் புகலிடம் பெற புறப்பட்டுச் செல்ல வேண்டியிருப்பது பற்றிய முன்னறிவிப்பு அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்குச் செய்யப்பட்டேயிருந்தது. அது எங்கே? ஈச்சஞ் சோலைகள் நிறைந்து — செழுமை கொழித்து — கனவில் காட்டப்பட்ட பூமி யமனைச் சார்ந்ததா அல்லது யத்ஸ்ரிபா என்ற சமீப காலச் சிந்தனைக்கு விடை கிடைத்து விட்டது.

முன்னர் இரு சந்திப்புகள் நடைபெற்ற அதே 'அக்கபா'விலேயே புதிய தோழர்களையும் சந்திக்க அண்ணலார் (ஸல்) அவர்கள் விரும்பினார்கள். நள்ளிரவு கழிந்த பிந்திய சாமத்தில்—உறக்கத்தில் ஆழ்ந்திருப்போர் எவரையும் எழுப்பாது — விழித்திருப்பவர் மட்டும் ஒருவர் இருவராக, மற்றவர்களுக்கு எந்தச் சிரமமும் தராமல் வந்து கூட்டும் என அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்கள் மூலமே யோசனை தெரிவித்திருந்

தார்கள். அவ்வாறாகவே, ஒருவர் இருவராகவே வந்து கூடி உற்சாகத்துடன் 'அக்கபா'வில் காத்திருந்தனர் 'யத்ஸ்ரிப்' வாசிகள் எழுபத்து ஐந்து* பேர். அவர்களின் உற்சாகத்தைப் பொங்கச் செய்தது குறித்த சமயத்தில் அங்கு வந்து சேர்ந்த அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் தோற்றம்.

நபித்துவப் பிரகடனத்துக்குப் பின் மக்காவில் கழிந்து போயிருந்த பனிரெண்டு கால இடைவெளியை, பழித்தலையும், முகம் சுளித்தலையுமே கொண்டதாகக் கண்டு கழித்திருந்த பெருமானார் (ஸல்) அவர்களுக்கு, சமீபகால சந்திப்புகளின்போது யத்ஸ்ரிபின் மக்களிடையே வெளிப்பட்ட பரிவு, பாசம், பக்தி போன்ற படிப்படியான வளர்ச்சி தந்த மன அமைதலையும் தெம்பையும் அவர்களின் முகப் பொலிவு பிரதி பலித்தது. யூதர்கள் தங்களுக்கு எச்சரித்து வந்த நபி — வேதங்களில் ஓதப்பட தாங்கள் கேட்டு வந்த நபி தங்கள் முன்னிலையிலேயே வந்து நிற்கக் கண்டு, தங்களின் புனர் வாழ்வுக்குப் பிறந்தே விட்டது வழி என்ற புளகாங்கிதம் மிகைக்கப் பெற்றவர்களாய் பெருமானார் (ஸல்) அவர்களின் கரம் பற்ற விரைந்தனர் யத்ஸ்ரிபின் மக்கள். அவர்களின் அவசரத்தைத் தடுத்து அமைதியாகக் கேட்டது ''கஸ்ரஜ் கோத்திரத்தவர்களே!'' என்ற குரல் — அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் சிறிய தந்தையார் ஹழ்ரத் அப்பாஸ் (ரலி) அவர்களுடையது அக்குரல்!

குடும்பப் பாதுகாப்பென்பது அரபுகளிடையே பேணி வரப்பட்ட ஒரு மரபாகும். எந்த ஒரு தனி மனிதனுக்கும் விளைவிக்கப்படும் கேட்டுக்கு அம்மனிதன் சார்ந்துள்ள குடும்

* அன்றைய பகலிலேயே மினாவில் இஸ்லாத்தை ஏற்றிருந்தார் ஒருவர்.

பமே ஒன்றாய்த் திரண்டு பழி தீர்க்கும். ஹாஷிம் குடும்பத்தின் தலைவராக ஹழ்லரத் அபூ தாலிபவர்கள் வாழ்ந்த வரை அந்தப் பாதுகாப்பு அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு இருந்தே வந்தது. அன்னவரின் மரணத்துக்குப் பின்னரே அண்ணலார் (ஸல்) அவர்கள் மக்காவில் எந்தப் பாதுகாப்புமற்றுத் தவிக்க நேர்ந்தது. ஸஜ்தாவில் மண்டியிட்டு அவர்கள் வணங்கிக் கொண்டிருந்த சமயத்தில் ஒட்டகையின் அழுகுடலைக் கொணர்ந்து அவர்களின் பிடரியின் மேல் அபூ ஜஹல் வைக்கச் செய்ததும், அண்ணலவர்களின் கழுத்தில் உக்பா இப்னு முஈத் தன் மேலாடையை வீசி முறுக்கி வதைத்ததும் அபூ தாலிபவர்களின் மரணத்தின் பின்னர்தான். அடுத்து, தலைமைப் பதவியை ஏற்ற அபூலஹப் குடும்பத்துக்குப் பெயரளவில் பாதுகாவலரே தவிர பெருமானார் (ஸல்) அவர்களின் எதிரிகளுக்கே அவர் துணையாகவென்ன—தூண்டுகோலாகவே இருந்தார். அண்ணலார் (ஸல்) அவர்களின் வீட்டையொட்டியே அபூலஹபின் வீடும் இருந்தது. தங்களின் வாசலிலேயே துயரிழைக்கப்பட்ட ஒரு சமயம் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் வெளியே வந்து 'அப்து மனாஃபின் மக்களே! இது எத்தகைய பாதுகாப்பு' என வினவியதையும் அபூலஹப் கண்டு கொண்டவரல்லர். 'தங்களை இழந்த துயரம் எத்துணைத் துரிதமாக என்னைத் தொட்டு விட்டது என் தந்தையின் உடன் பிறப்பே' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அபூதாலிபவர்களை நினைவு கூர்ந்த சம்பவத்தை ஹழ்லரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த நெருக்கடிகளிலிருந்து ஒரு நிவாரணத்தைப் பெற நாடியே சென்ற தாஹா ரஸூல் நாயகம் (ஸல்) அவர்கள் தாயிஃபின் வீதிகளில் பட்ட துன்பங்களோ நெஞ்சத்தைக் குலைய வைப்பனவாயமைந்தன. மீண்டும் அதே போன்ற ஒரு கொடுமையில் தம் கண்மணி மகனார் அண்ணல் முஹம்மத் (ஸல்) அவர்கள் சிக்கி விடக் கூடாதே என்ற கலக்கம்

ஹழ்ரத் அப்பாஸ் (ரலி) அவர்களையும் அண்ணலார் (ஸல்) அவர்களோடேயே அழைத்து வந்தது அந்த நள்ளிரவில்.

பெருமானார் (ஸல்) அவர்களின் தந்தையோடு பிறந்தவர்களில் அபூலஹபையடுத்த ஒரு சிறிய தந்தையே ஹழ்ரத் அப்பாஸ் (ரலி). அச்சமயம் அன்னவர் இஸ்லாத்தை ஏற்றவராக பகிரங்கமாக அறியப்படாதிருந்த போதிலும் தம் குலக் கொழுந்தாம் பெருமானார் (ஸல்) அவர்களின் காவலில் கவலையுடையவராகவே இருந்தனர். அண்ணலார் (ஸல்) அவர்களைத் தங்களோடு அழைத்தேக வந்து காத்திருக்கிறார்கள் யத்ஸ்ரிபின் மக்கள் என்ற செய்தி ஒருபுறம் ஆறுதலைத் தந்தாலும் மறுபுறம் ஹழ்ரத் அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு ஐ தங்கத்தையும் எழுப்பத்தான் செய்தது.

கஅபாவின் பராமரிப்பைத் தங்களின் கரத்தில் கொண்டிருந்ததாலேயே சுற்றுப்புற வட்டார மக்களிடையேயெல்லாம் மதிக்கப் பெற்றவர்கள் குரைஷிகள். அண்ணலார் (ஸல்) அவர்களை ஆதரிப்பது குரைஷிகளுக்கு எதிராகத் தாங்கள் செய்யும் போர் பிரகடனமாகவே ஆகிவிடும் என்ற அச்சமே பெருமானார் (ஸல்) அவர்களின் அழைப்பை ஏற்பதினின்றும் பிற கோத்திரத்தவர்களையெல்லாம் முகந் திரும்பிக் கொள்ளச் செய்தது. அத்தகைய சூழ்நிலையில் அண்ணலார் (ஸல்) அவர்களின் வழியை ஏற்றதோடன்றி அவர்களைத் தங்களின் பூமிக்கே அழைத்தேகத் துணியும் அவ்ஸ்—கஸ்ரஜ்கள் தங்களின் செயலின் பிந்திய விளைவைப் பற்றி சிந்தித்தார்களா? தங்களின் செல்வாக்கால் அரபுலகத்தையே திரட்டிச் சேர்த்து குரைஷிகள் அடர்ந்தேறி வருவார்களானால் அவர்களை யத்ஸ்ரிப்வாசிகள் சமாளிப்பார்களா? தூதர் நாயகம் (ஸல்) அவர்களை தொலை தூரத்துக்கு அழைத்துச் செல்லும் புனிதப் பயணிகள் இறுதி

வரை உறுதியுடன் அம்மாநபியைக் காத்து நிற்பார்களா? என்ற வினாக்களுக்கெல்லாம் விடை காண விழைந்து அண்ணலவர்களை முந்திக் கொண்டு நின்றனர் ஹழ்ரத் அப்பாஸ் (ரலி).

''இந்த எங்களின் புதல்வர் எங்களிடையே பெற்றுள்ள பெருமையையும் கண்ணியத்தையும் நீங்கள் அறிவீர்களா? குரைஷிகளின் எதிர்ப்பிலிருந்து அவரை நாங்கள் எங்களின் கண்ணேபோல் காத்து வருகிறோம். நாங்கள் எவ்வளவோ தடுத்தும் அவர் தம் வழியில் உறுதியுடன் நிற்கின்றார். உங்களின் நகருக்கு அவரை அழைக்கும் நீங்கள் சுமக்கப் போகும் பொறுப்பை உணர்ந்துள்ளீர்களா? அதனைப் பூரணமாக நிறைவு படுத்துவீர்களா? மரணம் வரையிலும் உங்களின் உயிர்களைப் பணயம் வைத்து அவரை நீங்கள் பாதுகாக்க முடியுமாயின் உறுதி கூறுங்கள். அல்லது சிரமத்தை எதிர்கொள்ள முடியாமல் அவரை நீங்கள் எதிரிகளிடம் ஒப்புவித்து பொறுப்பிலிருந்து தப்பிக்க நேருமாயின், இப்போதே அவரை எங்களிடமே ஒப்படைத்து விடை பெறுங்கள். பின்னர் நீங்கள் பங்கப்படும் படியாகவும் எங்களின் நிரந்தரப் பகையைத் தேடிக் கொள்ளும்படியாகவும் ஆகிவிட வேண்டாம்'' என ஹழ்ரத் அப்பாஸ் (ரலி) அவர்கள் பேசிய பேச்சு யத்ஸ்ரிப்வாசிகளின் உணர்வுகளை உரைத்துப் பார்ப்பதாயிருந்தது. அவர்களில் ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஹராம் (ரலி) என்பவர் எழுந்தார். அன்றைய பகலிலேயே 'மினா'விலேயே இஸ்லாத்தை ஏற்ற அவர் பேசலானார்: குரைஷிச் சகோதரர்களே! ஆண்டவன் மீதாணையாக, போர்க்களம் பெற்றெடுத்த புதல்வர்கள் நாங்கள். போரே பொழுதெல்லாம் எங்களால் ஜீரணிக்கப்பட்டு எங்களின் நாடி நரம்புகளிலெல்லாம் ஓடிக் கொண்டிருக்கிறது. பாரம்பரியமாகப் பாதுகாத்து நாங்கள் வளர்த்து வருவது போர்க் கலை. அதில் நாங்கள் சலிப்பையே அறியமாட்டோம்—என்று.

தம் பாரம்பரியத்தையே போரின் நிழலில் கழித்து விட்டிருந்ததைக் காட்டிய அவரின் முதுமைத் தோற்றமும் பேச்சின் தோரணையும் ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களை மவுனிக்கச் செய்தன. அண்ணலவர்களின் புறம் திரும்பி நோக்கினர் அன்னார். பெருமானார் (ஸல்) அவர்களோ முறுவலித்தவர்களாக யத்ஸ்ரிப்வாசிகளின் புறம் திரும்பி ''பேசுங்கள்; இன்னும் நீங்கள் கூற நினைப்பதை தொடர்ந்து கூறுங்கள்'' என்றார்கள். அவர்களின் திருவாய் மொழி கேட்ட மறு கணமே பல குரல்கள் ஒலித்தன, ''அல்லாஹ்வின் தூதரவர்களே! தாங்களே பேசுங்கள். தாங்கள் கூற வந்துள்ளதைக் கூறுங்கள். அல்லாஹ்வுக்காகவும் நங்களுக்காகவும் எங்களிடம் கேட்க நாடுவதைக் கேளுங்கள்'' என்று. அந்த மக்களின் மடை கடந்த ஆர்வப் பெருக்கு மாநபி (ஸல்) அவர்களின் உதடுகளை பெருமிதங் கொண்டு பிரியச் செய்தன. அவர்களின் முன்பற்கள் முத்தொளி பொழிந்தன. அருள்மறை குர்ஆனின் வசனங்களை ஆரம்பமாக ஓதிய அண்ணலார் (ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் தனித்தன்மையை, இணை கூறப்படவே கூடாத அவனின் பிரத்தியேகத்தை அவர்களுக்கு விளக்கினார்கள்; இருளினை அழித்து, தன் ஒளியினால் உலகை ஈடேற்றத்தின்பால் அழைத்துச் செல்ல வந்துள்ள இறைமார்க்கத்தை அவர்களுக்கு எடுத்துரைத்தார்கள். ''அல்லாஹ் ஒருவனையே நீங்கள் வணங்க வேண்டும். மற்றெப் பொருளையும் அவனுக்கு இணையாக்கக் கூடாது. எந்த நிலையிலும் என் கட்டளைக்கு வழிபட்டு உங்களின் உடலாலும் பொருளாலும் எனக்கு உதவி புரிய வேண்டும். சத்தியத்தைத் தவற விடலாகாது. எவருடைய நிந்தனையையும் பொருட்படுத்தக் கூடாது. நன்மையை ஏவி, தீமையை விலக்குவதை உங்களின் நித்தியக் கடனாக்கிக் கொள்ள வேண்டும். உங்களிடையே நான் வந்திடும்போது என்னை நீங்கள் உங்களின் மனைவி மக்களைக் காத்து நிற்பதே போல் காத்து நிற்கவேண்டும். இவற்றுக்கால உறுதிப் பிரமாணங்களையே

இப்போது நான் உங்களிடம் பெற நாடுகிறேன்'' என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறி நிறுத்தினார்கள்.

பர்ரா இப்னு மஃரூர் எனப்பட்ட 'யத்ஸ்ரிப்'வாசி எழுந்து அண்ணலவர்களின் கரங்களைப் பற்றிக் கொண்டார். ''சத்தியத்தைத் தந்து தங்களை எங்களிடையே அனுப்பியுள்ள அந்த ஆண்டவனின் மீதாணையாக, தங்களின் கட்டளைகளை முழுமையாக ஏற்போம். தங்களை எங்களின் மனைவி மக்களைக் காப்பதேபோல் காப்போம். அல்லாஹ்வின் தூதரவர்களே! தேவையான வாக்குறுதிகளனைத்தையும்தாங்கள் எங்களிடமிருந்து பெறலாம். எங்களின் முன்னோர்களிடமிருந்து வழிவழியாக எங்களுக்குக் கிடைத்துள்ள பாரம்பரியச் சொத்து போர் ஆற்றல். அதனைத் தங்களுக்கு நாங்கள் பூரணமாகவே அர்ப்பணிப்போம்'' என அவர் தம் உணர்ச்சிகளைப் பொழிந்து கொண்டிருக்கையிலேயே 'அவ்ஸ்'களைச் சார்ந்த அபுல் ஹய்த்ஸம் இப்னுத் தய்யிஹான் (ரலி) குறுக்கிட்டவர்.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! பிற மக்களோடு நாங்கள் கொண்டுள்ள தொடர்புகளையெல்லாம் இனி நாங்கள் துறந்து விடுவோம். தங்கள் பொருட்டு இனி நாங்கள் எல்லாத் தியாகங்களையும் செய்வோம். ஆனால், தூதர் பெருமான் (ஸல்) அவர்களே! தங்களின் கரங்கள் மற்றவர்களை மிகைத்து விடும் போது, தாங்கள் எங்களைப் பிரிந்து தங்களின் பூமிக்கே திரும்பி விடுவீர்களா?'' என்ற அவரின் வினா அண்ணலார் (ஸல்) அவர்களின் நெஞ்சத்தை நெகிழச் செய்து விட்டது. பார்வையை அவர்கள் பால் உயர்த்தி, குரலில் காம்பீரத்தை வெளிப்படுத்திய தூதர் நாயகம் (ஸல்) அவர்கள், ''ஒருக்காலும் இல்லை, என்னுடைய இரத்தம் உங்களுடைய இரத்தத்தை ஒட்டியே நிற்கும். என்னுடைய கண்ணியம் உங்களுடையதாயிருக்கும். நான் உங்களுக்குடையவன். நீங்கள் என்னுடையவர்கள். நீங்கள் நேசிப்பவர்களை நானும் நேசிப்பேன்.

உங்களை எதிர்ப்பவர்களை நானும் எதிர்ப்பேன்'' என விடை தந்தார்கள். மறுகணமே அவர்களின் கரத்தினைப் பற்றிட ஆர்வத்துடன் முனைந்தவர் அனைவரும். அவர்கள் அனைவரையும் முந்திக் கொண்டு அண்ணலவர்களின் கரத்தினைப் பற்றிக் கொண்டனர் ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் கரத்தினை அன்று நான்காம் முறையாகப் பற்றிடப் பேறு பெற்ற அவர், தம் தோழர்கள் பால் திரும்பி ஒரு வினா விடுத்தார், ''எத்தகைய பொறுப்போடு நீங்கள் பிரமாணம் செய்ய முந்துகிறீர்கள் என்பதை உணர்ந்துள்ளீர்களா?'' என்று.

''ஆம் உணர்ந்துள்ளோம்'' என மற்ற தோழர்கள் ஒருமித்து விடையளித்தனர். அதனைப் பொருட்படுத்தாமலே தொடர்ந்தவர் ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி).

''கஸ்ரஜ்களே! (இரத்தப் பிரவாகமெடுத்தோடப் போகும்) செந்நிறப் போர்களையும் (முடிவில் கவலை மேகங்களைத் திரட்டிக் கொணர்ந்துச் சேர்க்கக் கூடிய) கருநிறப் போர்களையும் சந்திக்க நீங்கள் துணிந்து விட்டீர்களா? அப்போர்களில் உங்களில் கண்ணியவான்கள் கொல்லப்பட்டு போவர். உங்களின் உடைமைகள் கொள்ளையிட்டு அள்ளிச் செல்லப்படும். அச்சமயம் இந்த நபியை நீங்கள் வைரிகளிடையே விட்டுப் பிரிந்திட நேர்ந்திடுமாகில், இப்போதே பிரிந்து சென்று விடுதல் மேலானதாகும்.

''பின்னர் பிரிந்தீர்களானால், இம்மையின் இழப்புகளோடு உங்களின் மறுமையும் பாழாகி விடும். பொருள்களை இழந்தும் உங்களின் தலைவர்களைப் பலி தந்துமாகிலும் இந்த நபியை நீங்கள் காக்க முடியுமானால் மட்டுமே நீங்கள் பிரமாணம் செய்யுங்கள். நிச்சயம் அது உங்களின்

இம்மையையும் மறுமையையும் சிறப்பிக்கவே செய்யும்'' என்றாரவர்.

யத்ஸ்ரிப்வாசிகளிடையே எந்தத் தயக்கமும் தலைகாட்டவே இல்லை. ''எங்களின் உடைமைகளை இழக்க நேரிட்டாலும் சரியே, எங்களின் கண்ணியவான்களைப் பலி தந்தாகிலும் சரியே, இந்த நபியை நாங்கள் இறுதி வரை பாதுகாத்து நிற்போம்'' என ஒருமித்து முழங்கிய அவர்கள், ''அல்லாஹ்வின் தூதரவர்களே! எல்லாத் தியாகங்களுக்கும் துணிந்து நாங்கள் செய்யும் இந்தப் பிரயாணத்துக்குப் பகரமாக நாங்கள் பெறப் போகும் சன்மானமென்ன?'' என வினவினார்கள்.

''சொர்க்கம்'' என்ற ஒரு சொல்லே அண்ணலவர்களின் விடையாக வெளிப்பட்டது. மறுகணமே வேத வெளிப்பாடுகள் தோன்றலாயின. பெருமானார் (ஸல்) அவர்கள் ஓதலானார்கள்,

إِنَّ اللَّهَ اشْتَرَىٰ مِنَ الْمُؤْمِنِينَ أَنفُسَهُمْ وَأَمْوَالَهُم بِأَنَّ لَهُمُ الْجَنَّةَ ۚ يُقَاتِلُونَ فِي سَبِيلِ اللَّهِ فَيَقْتُلُونَ وَيُقْتَلُونَ ۖ وَعْدًا عَلَيْهِ حَقًّا فِي التَّوْرَاةِ وَالْإِنجِيلِ وَالْقُرْآنِ ۚ وَمَنْ أَوْفَىٰ بِعَهْدِهِ مِنَ اللَّهِ ۚ فَاسْتَبْشِرُوا بِبَيْعِكُمُ الَّذِي بَايَعْتُم بِهِ ۚ وَذَٰلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيمُ

''அல்லாஹ், விசுவாசிகளுடைய உயிர்களையும் பொருள்களையும் நிச்சயமாக அவர்களுக்கு சுவனபதியைத் தருவதாக(க் கூறி) மெய்யாகவே விலைக்கு வாங்கிக் கொண்டான். அவர்கள் அல்லாஹ்வின் பாதையில் யுத்தம் புரிந்து அவர்க(ளின் விரோதிக)ளை வெட்டுவார்கள்; (அல்லது) வெட்டப்பட்டு இறந்து விடுவார்

கள். (இவ்விரு நிலைகளிலும் அவர்களுக்கு சுவனபதி தருவதாக) 'தவ்ராத்'திலும், 'இன்ஜீலி'லும், குர்ஆனி லும் அல்லாஹ் வாக்களித்து, தன் மீது கடமையாக் கிக் கொண்டிருக்கிறான். அல்லாஹ்வை விட வாக்குறுதி யைப் பூரணமாக நிறைவேற்றுபவன் யார்? ஆகவே விசுவாசிகளே! நீங்கள் அவனிடம் செய்துக் கொண்ட இவ்வர்த்தகத்தைப் பற்றி மகிழ்ச்சியடையுங்கள். நிச்சய மாக இதுவன்றோ மகத்தான பெரும் பாக்கியம்— என இறங்கிய (9 : 111) வேத மாமொழி யத்ஸ்ரிப்வாசி களைப் பரவசத்திலாழ்த்தி விட்டது. ''ஆம்! இதுவே பெரும் பாக்கியம், மிக லாபகரமான வர்த்தகமே இது'' என புளகாங்கிதங் கொண்டவர்களாக பெருமானார் (ஸல்) அவர்களின் கரம் பிடித்து, பிரமாணம் செய்தளித்தனர் அனைவரும்.

பாலை பூமியில் மத மலர்ச்சியை மட்டுமல்ல, மனித வரலாற்றிலேயே மகத்தான மறுமலர்ச்சியைத் தங்களின் மன மலர்ச்சியால் தழைக்கச் செய்த 'அக்கபா'வின் அந்தச் செல்வர்களை காலம் எவ்வளவு போற்றிடினும் தகும். அல்லாஹ் அவர்களின் இதயங்களை அன்று இஸ்லாத்துக் காக மிக விரிவாக்கி வைத்து விட்டான்.

إِخْتَارَهُمُ اللهُ لِصُحْبَةِ نَبِيِّهِ وَلِإِقَامَةِ دِيْنِهِ

''தன் தூதரின்தோழமைக்காகவும் தன் மார்க்கத்தை நிலைப் படுத்துவதற்காகவும் அல்லாஹ் அவர்களைத் தெரிந்தெடுத் துக் கொண்டான்'' என ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

அதுவரை வித்தாகவே இருந்த இஸ்லாம் வேர் விட்டுப் படர்ந்து ஆல்போல் தழைத்தோங்க முஹாஜிர்களோடு முழுத்துணை சேர்த்த அந்த முந்திலவர்களையும் அவர்

களைத் தொடர்ந்தோர்களையுமே ''அன்ஸார்''கள் என புகழ்ந்து சிறப்பிக்கிறது வரலாறு.

وَالسّٰبِقُوْنَ الْاَوَّلُوْنَ مِنَ الْمُهٰجِرِيْنَ وَالْاَنْصَارِ وَالَّذِيْنَ اتَّبَعُوْهُمْ بِاِحْسَانٍ رَّضِيَ اللّٰهُ عَنْهُمْ وَرَضُوْا عَنْهُ وَاَعَدَّ لَهُمْ جَنّٰتٍ تَجْرِيْ تَحْتَهَا الْاَنْهٰرُ خٰلِدِيْنَ فِيْهَا اَبَدًا ذٰلِكَ الْفَوْزُ الْعَظِيْمُ

''முஹாஜிர்''களிலும் ''அன்ஸார்''களிலும் எவர்கள் (இஸ்லாத்தில்) முதலாவதாக முந்திக் (கொண்டு விசுவாசங்) கொண்டார்களோ அவர்களையும், நற்கருமங்களில் (மெய்யாகவே) அவர்களைப் பின்பற்றியவர்களையும் பற்றி அல்லாஹ் திருப்தியடைகிறான். அவர்களும் அல்லாஹ்வைப் பற்றி திருப்தியடைகின்றனர். அன்றி, சதா நீரருவிகள் ஓடிக்கொண்டிருக்கும் சுவனபதிகளை அல்லாஹ் அவர்களுக்கென சித்தப்படுத்தி வைத்திருக்கிறான். அவற்றிலேயே அவர்கள் என்றென்றும் தங்கிவிடுவார்கள். இது மகத்தான பெரும் பாக்கியமாகும். — அல்குர்ஆன் (9 : 100)

மிகத் தீர்க்க சிந்தனையோடு தங்களுக்குத் துணை கூட்டத் துணிந்த 'அன்ஸார்'களின் ஆர்வப் பெருக்கில், இனி வெளிப்படப்போகும் அவர்களின் தியாகத் திண்மையைத் தங்களின் நபித்துவத் தொலை நோக்காலேயே கண்ட நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள், மறு நாள் தாருல் அர்கமில் தங்களைச் சந்தித்த தோழர்களிடத்தில்,

اَحْمَدُ اللّٰهَ كَثِيْرًا فَقَدْ ظَفِرَتِ الْيَوْمَ اَبْنَاءُ رَبِيْعَةَ بِاَهْلِ الْفَارِسِ

''அல்லாஹ்வை அதிகமதிகம் புகழ்ந்து துதியுங்கள். அவன் இன்று 'ரபீஆ'வின் வழிவாறுகளுக்கு பாரஸீகர்கள் மீது வெற்றியைத் தந்து விட்டான்'' என நன்மாராயம் கூறி

உற்சாகமூட்டினார்கள். யத்ஸ்ரிபின் மக்களுக்கு மட்டுமின்றி, மக்காவிலேயே இஸ்லாத்தை ஏற்று, கடந்த பனிரெண்டு காலமாக வன்கொடுமைகளிடையே வதைபட்டு வருந்திக் கொண்டிருந்த அனைவருக்குமேயல்லவா ஒரு விடிவாக இருந்தது 'அக்கபா'வின் நிகழ்ச்சி! நெஞ்சம் நம்பிக்கை கொண்டேற்ற ஏக வல்லவனை நிம்மதியுடன் நின்று தொழ ஒரு நிழல் தேடித் தவித்த தங்களின் தோழர்களை அண்ணலார் (ஸல்) அவர்கள் யத்ஸ்ரிபின் புறம் 'ஹிஜ்ரத்' செய்யப் பணித்தார்கள்.

யத்ஸ்ரிபின் வீதிகள் புதிய கலகலப்பைக் காணலாயின. ''அன்ஸார்''கள் தங்களின் நெஞ்சங்களில் ஏற்று வந்த அமானிதத்தை அண்டை அயலகங்களனைத்திலும் பங்கிடலாயினர். 'அக்கபா'வில் தாங்கள் கண்டு வந்த திருமுகத் தோற்றப் பொலிவை, பழக்கச் சிறப்பை, குணநலச் செறிவைப் பற்றிய செய்திகளை அவர்கள் பகிரங்கமாகவே பேசலாயினர். வேதங்கள் போற்றி அதுவரை கேட்கப்பட்டு வந்த தூதர் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவில் தோன்றி விட்டதோடன்றி விரைவில் அவர்கள் 'யத்ஸ்ரிபு'க்கே வரப் போவதற்கான முன்னடையாளமாக 'முஹாஜிர்'களின் வருகை அமைந்தது. மக்காவின் பயணிகளென ஒருவர் இருவராக, குடும்பத்துடன்கூடியவராகபலரும் 'யத்ஸ்ரிபு'க்கு வரலாயினர். தூதர் நாயகம் (ஸல்) அவர்களின் தோழமையை ஏற்க, தங்களையும் முந்திய அவர்கள், தொல்லைகளுக்காட்படுத்தப்பட்டு, அவர்களின் பூமியில் வாழவே தங்கடப்படுத்தப்பட்டு வந்து நிற்கிறார்கள் என்பதை அறிந்த 'அன்ஸார்கள்' ஒருவரோடொருவர் முந்தினவர்களாக அந்த 'முஹாஜிர்'களை வரவேற்று, தங்களின் விருந்தினர்களாகத் தங்க வைத்துக் கொண்டார்கள். அடுத்த மூன்று மாதங்களுக்கிடைப்பட்ட ஒரு நாளில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களே வந்து சேர்ந்த அன்று மணக்கோலமே பூண்டு விட்டது அந்நகரம். மறுவிலா

தெழுந்த முழுமதியின் தோற்றம் யத்ஸ்ரிபின் இருளை வில கச் செய்தது. ஈராயிரமாண்டு கால வரலாற்றுப் பாரம்பரி யத்தைப் பெற்றிருந்த அப்பூமி 'மதீனா முன்னவரா — ஒளி வீசும் பட்டணமா'க மிளிரலாயிற்று.

நீண்ட ஒரு பாரம்பரியத்தைப் போர்களிடையிலேயே கழித்து விட்டிருந்த அந்த அன்ஸார்கள் இழப்பின் பெரும் பளுவைச் சுமந்தவர்களாயிருந்த நிலையிலும் அல்லாஹ் அவர்களின் இயல்பிலேயே அமைத்து விட்டிருந்த ஈந்து வக்கும் பண்பாட்டை இழந்து விடவில்லை. விருந்தோம்பும் இப்ராஹீமியப் பாரம்பரிய கலாசாரத்தை விட்டும் அவர்கள் விலகிச் சென்று விடவில்லை. சூழ்ச்சிகளுக்காட்பட்டுச் சோர்வுற்றிருந்த அவர்களைச் சுண்டி எழுப்பவே அல் லாஹ் அண்ணலார் (ஸல்) அவர்களை அனுப்பி வைத்தான் போலும். பேதைகளாகிப் பரிதவித்து நின்ற தங்களைப் பேறு கொள்ளச் செய்ய வந்த பேரருளாகவே பெருமானார் (ஸல்) அவர்களைக் கண்ட அன்ஸார்கள் அல்லாஹ்வின் அந்தத் தூதருக்கும் அவர்களின் தோழமை கண்ட முஹாஜிர் களுக்கும் துணை புரிவதைத் தங்களுக்கு மனவளஞ் சேர்க் கும் மார்க்கமாகவே வரிந்து கொண்டார்கள்.

புகலிடந்தேடி வந்தவர்களைத் தங்களின் உடன் பிறந்தவர்களாகவே ஒவ்வொருவரும் பிரித்தணைத்து தங்களின் உணவுப் பொருள்களையும் உடைமைகளையும் வீடுகளையும் விளைச்சல் காடுகளையும் பாகமிட்டு, பரிவு டன் அளித்து, புதினமிக்க ஒரு முன்மாதிரியை உலகுக் களித்த புனிதர்கள் மதீனாவின் அன்ஸார்கள்!

வெற்றிகள் பெற்றி சேர்க்கலான பிந்திய நாட்களில், பஹ்ரைனில் கைக் கொள்ளப்பட்ட நிலங்களைப் பங்கிட்டுத் தர பெருமானார் (ஸல்) அவர்கள் அன்ஸார்களை அழைத்த போது முஹாஜிர் சகோதரர்களுக்கும் அதே போன்றே பங்களிக்கப்பட்ட பின்னரே தாங்கள் ஏற்கமுடியும் என கூறி

நின்றார்கள் அன்ஸார்கள். முஹாஜிர்கள் பயிர்த்தொழிலில் பரிச்சயமற்றவர்களாயிற்றே என சுட்டிக் காட்டப்பட்ட போதும் அவர்களின் நிலங்களையும் சேர்த்து தாங்களே வேளாண்மை செய்யப் பொறுப்பேற்றுக் கொண்டார்கள் அன்ஸார்கள் என ஹழ்ரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

வேளாண்மையும் தாங்களே செய்து விளைச்சலில் மேலானதைப் பங்கிட்டளித்த அன்ஸார்களின் பண்பாட்டைக் கண்டு முஹாஜிர்கள் திகைத்தே போயினர்! "இப்போது நாங்கள் வந்து அண்டியுள்ள இந்த சமூகத்தைப் போன்ற ஒரு சமூகத்தை இதற்கு முன் நாங்கள் சந்தித்ததேயில்லை. சின்னஞ் சிறு வரவுகளிலும் அவர்கள் எங்களை மறக்கிறார்களில்லை. பெரும் பெருந் தொகைகளை எங்களுக்காக அவர்கள் மனந்திறந்து செலவழிக்கிறார்கள். உழைப்புக்கு அவர்கள் எங்களை அழைக்கிறார்களில்லை. ஆனால் ஊதியத்தில் எங்களை அவர்கள் தங்களின் சம பங்காளிகளாக்கிக் கொள்கிறார்கள். அல்லாஹ்வின் தூதரவர்களே! நன்மைகள் அனைத்தும் அன்ஸார்களுக்கே சேர்ந்து விடுமோ என நாங்கள் அஞ்சுகிறோம்'' என முஹாஜிர்கள் தங்கள் கவலையை வெளிப்படுத்திய சம்பவத்தையும் ஹழ்ரத் அனஸ் (ரலி) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். ''அவர்களின் சிறப்புகளைப் புகழ்ந்து கொண்டு, அவர்களுக்கு நன்மைகள் பெருக வழுத்திக் கொண்டுமிருக்கும் காலமெல்லாம் நீங்களும் நன்மைகளை இழந்து விடமாட்டீர்கள்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் முஹாஜிர்களுக்கு ஆறுதல் கூறினார்கள்.

மக்காமா நகரில் வதைபட்ட வாழ்வையே சுகித்துச் சோர்ந்து மதீனா வந்தடைந்த 'முஹாஜிர்கள்' அனைவருமே பாரம்பரியப் பஞ்சைகளல்லர். வாழ்க்கையில் நலிவுபட்டு, செல்வர்களின் பிடியில் சிக்கி விட்ட ஹழ்ரத் பிலால், கப்பாப் (ரலி) போன்ற அடிமைகளும் அவர்களி

டையே இருந்தாலும், ஹழ்ரத் அபூபக்கர் ஸித்தீக், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் போன்ற குடும்பச் சீமான்களும் அவர்களில் இருந்தனர்; ஹழ்ரத் ஹம்ஸா, உமர் அல்ஃபாரூக் போன்ற உடல்உரம் பெற்ற வீரர்களுமிருந்தனர்; போஷாக்கிலேயே வளர்ந்த உஸ்மான் துன்னூரைன், முஸ்அப் இப்னு உமைர் (ரலி) போன்ற நாசூக்கான செல்வர்களும்தான் இருந்தனர். இவர்களனைவரையும் பெற்றெடுத்த குரைஷிக் கோத்திரமோ கஅபாவின் பராமரிப்பையும், மக்காவின் அதிகாரத்தையும் தன் கரத்தில் கொண்டு மொத்த அரபினத்தின் மரியாதையையும் பெற்றதாக விளங்கியது. அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் பின்னே சென்று, தங்களின் சொகுசையும் சுகபோகத்தையும் இழக்க எந்த நெருக்கடியும் அவர்களையெல்லாம் நிர்ப்பந்தப்படுத்தாத நிலையிலும்,

'வணக்கத்துக்குரியவன் அல்லாஹ் ஒருவனே' என தெய்வீகத்துக்கு வகுக்கப் பெற்ற ஒரு நாகரீகமான வரைமுறையை வளம் பெறச் செய்வதற்காகவே தங்களின் வளத்தையும் நலத்தையும் அர்ப்பணித்தவர்களை—வாழ்விடத்தையே துறந்தவர்களை தங்களினும் முன்னுரிமை கொண்டவர்களென மதித்தார்கள் மதீனாவின் அன்ஸார்கள்.

தொல்லைகளையும் துயரங்களையும் தூசுகளாகத் தட்டிவிலக்கி, நூதர் நாயகம் (ஸல்) அவர்களின் கண்ணியத்தைப் பன்னீராண்டுகள் பேணித் தொடர்ந்து வந்த அந்த முன்னவர்களை நிம்மதி பெறச் செய்வதற்காக தங்களின் நெருக்கடிகளைப் பொருட்படுத்தாத அன்ஸார்களை,

وَالَّذِيْنَ تَبَوَّؤُ الدَّارَ وَالْإِيْمَانَ مِنْ قَبْلِهِمْ يُحِبُّوْنَ مَنْ هَاجَرَ إِلَيْهِمْ وَلَا يَجِدُوْنَ
فِيْ صُدُوْرِهِمْ حَاجَةً مِّمَّآ أُوْتُوْا وَيُؤْثِرُوْنَ عَلَىٰٓ أَنْفُسِهِمْ وَلَوْ كَانَ بِهِمْ خَصَاصَةٌ

''(மக்காவிலிருந்து வந்த முஹாஜிர்களாகிய) அவர்களுக்கு முன்னதாகவே (மதீனாவையே தங்களின்) ஊராகக் கொண்டு விசுவாசமுங் கொண்டிருந்தார்களே அவர்கள், ஹிஜ்ரத் செய்து தங்களிடம் வருவோரை அன்பாக நேசித்து வரவேற்பதுடன், அவர்களுக்குக் கொடுக்கப்படுவதைப் பற்றி தங்களின் உள்ளங்களில் குறையாகக் காண்பதில்லை. அன்றி, தங்களுக்கு வறுமையே நேரிடினும் தங்களைவிட அவர்களுக்கே கொடுக்கப்படுவதைத் தெரிந்தெடுத்துக் கொள்கின்றனர்.'' என போற்றிப் புகழ்கிறது வான்மறை.

وَمَنْ يُوقَ شُحَّ نَفْسِهِ فَأُولَٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ ۝

''பேராசையிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ளும் இத்தகையோர் தாம் சித்தி பெற்றோர்'' என இலக்கணமும் வகுத்திட்டது அல்லாஹ்வின் அருள் மறை. (59 : 09)

அன்ஸார்களின் அத்தகைய அரவணைப்பு முஹாஜிர்களுக்கும் முஹாஜிர்களின் பிணைப்பு அன்ஸார்களுக்கும் புதிய வலிவையும் பொலிவையும் ஊட்டின. ஒருவரையொருவர் புரிந்து கொண்டு இணங்கி வளர்த்த உறவினால் புதியதொரு சமுதாயம் மலரலாயிற்று மதீனாவில். கேடுகளை விளைவித்து ரத்தக் களரிகளையே நடத்திக் கொண்டிருந்த பூமியில் அமைதியின் அழைப்பொலி கேட்கலாயிற்று. அமைதியையே தேடி அங்கும் இங்குமாகப் பல புறமும் பிரிந்து அலைந்துக் கொண்டிருந்தவர்களெல்லாம் ஒருவர் பின் ஒருவராக வந்து தங்கி வாழும் தாவளமாகியது மதீனா. ஞான மார்க்கத்தின் பால பாடங்கள் போதிக்கப்படலாயின அங்கே. நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் ஒரு பள்ளியை எழுப்பி, அதையே பாசறையாக்கி மனிதம்

பெற பயிற்சியளிக்கலானார்கள் மக்களுக்கு. புதிய சமுதாயம் வளரலாயிற்று. அதன் பார்வையிலும் பழக்கத்திலும் அதற்கு முன் எங்கும் காணப்பட்டிராத புதிய நாகரிகம் தோற்றமளித்தது! அன்பு கொண்டு அரவணைத்து மகிழும் ஓர் அற்புதக் கலாசாரத்தைக் கொண்டு வந்துள்ள நபி—பேதங்களை மறக்கச் செய்யும் போதங்களால் மனிதர் களிடை மரகதப் பண்பாட்டை வளரச் செய்யும் மகிமை நபி — பெருமானார் (ஸல்) அவர்களின் புகழ் மணக்கலா யிற்று. அதுவே புழுக்கத்தைத் தந்து பகைவர்கள் விட்ட பொருமல் மூச்சுகளால் புகை மண்டலம் உருவாயிற்று மதீனாவைச் சூழ!

தீங்களின் பிடியிலிருந்து தப்பிச் சென்ற முஸ்லிம்களுக்கு ஒரு தாவளம் கிடைத்து அவர்கள் தலை தூக்கத் துவங்கி விட்ட செய்தி கிடைத்து அத்திரமடைந்தனர் மக்காவின் குரைஷிகள். தாங்களே ஆண்டவனின் ஏகப் பிரதிநிதிகள், உலகம் தங்களுக்கே உடைமை என்ற மதமதப்பு கொண்ட யூதர்களின் சூழ்ச்சிகள் தோற்று, உருக்குலைக்கப் பெற்ற அவ்ஸ் — கஸ்ரஜ்கள், அன்ஸார்களாகப் புதிய பொலிவும் வனப்பும் கொண்டு வளர்ந்திடக் கண்டு யூதர்களும் ஆதங் கமே கொண்டனர். இவை போதாவென்று அவ்ஸ் — கஸ்ரஜ்களிடையிலும் ஒரு கூட்டம் புறக்கத்துக்கு அடிமைப் பட்டுவிட்டது.

அவ்ஸ்களில் அபூ ஆமிர் எனப்பட்ட ஒருவன், கஸ்ரஜ் களில் அப்துல்லாஹ் இப்னு உபை அபூ ஸலூல், ஆகிய இவ்விருவரின் உள்ளங்களிலும் காழ்ப்புணர்வு கொழுந்து விட்டெரிந்தது. உடன் பிறந்த இரு சகோதரிகளின் மக்க ளான இவர்களைத் தந்தைகளின் பாரம்பரியங்களே அவ்ஸ் — கஸ்ரஜ் என பிரித்திருந்தன. இப்ராஹீமிய வழி யைப் பின்பற்றுவதாகக் கூறிக் கொண்டு, முடியினாலான ஆடையணிந்து, துறவி போலக் கோலம் பூண்டு ஓர் ஆன் மீகத் தலைவனாக மதிக்கப்பட்டு வந்தான் அபூஆமிர்.

சந்திப்பை நாடி வந்த அவனுக்கு பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் கருத்துக்களை விளக்கிக் கூறினார்கள். ஹழ்ரத் இப்ராஹீம் [அலை] அவர்களின் மார்க்கத்தையே அதன் இயற்கை நிலையில் தாங்கள் அறிமுகப்படுத்துவ தாகத் தெளிவாக அவர்கள் விளக்கிக் காட்டிய பின்னரும் அண்ணலார் (ஸல்) அவர்களின் வாதங்கள் அனைத்தையும் பொய்யென மறுத்து அகம்பாவங் கொண்ட அபூ ஆமிர், ''பொய்யனை இறைவன் ஊரைவிட்டும் வெளியேற்றி துணை யற்றுச்சாகச் செய்வானாக'' என்று பிரார்த்தித்தான். அண்ண லார் (ஸல்) அவர்களும் மறுகணமே ''ஆமீன் — அப்படியே ஆகட்டும்'' என்றார்கள். ஆணவக்காரனை சாபக்கேடு பிடித்துக் கொண்டது. தன் சொந்த மகனான ஹழ்ரத் ஹன்ளலா (ரலி) அவர்களே பிரிந்து, பெருமானார் (ஸல்) அவர்களின் தோழமையை ஏற்க, செல்வாக்கை சிரழிய விட்ட அபூ ஆமிர் பத்து சீடர்களுடன் மதீனாவை விட் டும் வெளியேறி மக்கா சென்று தன் கவிதைகளால் பெரு மானார் (ஸல்) அவர்களுக்கெதிராக குரைஷிகளைத் தூண்டினான். *

இவனுடைய ஒன்று விட்ட சகோதரனான — கஸ்ரஜ் களைச் சார்ந்த — அப்துல்லாஹ் இப்னு உபை — ஆன் மீகத் துறையில் எந்தச் சம்பந்தமுமற்றவனாயிருந்த போதி லும் உலகாயத முறையில் அவனுக்கொரு கண்ணியமிருந்

---

* குரைஷிகளோடு உஹதுப் போர்க் களத்துக்கும் வந்திருந்த இவன் எட்டாண்டு காலம் வரை மக்காவிலேயே அலைந்து திரிந்து மக்க மாநகரை அண்ணலார் (ஸல்) அவர்கள் கைக் கொண்டபோது தாயிஃபுக்குத் தப்பியோடி னான். பின்னர் அங்கிருந்து ஸிரியாவுக்குத் தப்பியோடி தனக்குத் தானே தேடிக் கொண்ட சாபக்கேட்டின்படியே நாதியற்றுச் செத்தொழிந்தான்.

தது. புஆத்ஸ் போரில் கலந்து கொள்ளாத அவனை அவ்ஸ் களும் ஓரளவு மதித்து மதீனாவின் மன்னனாகவும் ஏற்க சம்மதித்திருந்தார்கள். ஆயினும் முடிசூட்டு விழாவுக்கான ஆயத்தங்களெல்லாம் மேற்கொண்டிருந்த நிலையிலும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் வருகை அவ்ஸ்— கஸ்ரஜ்களுக்கு மற்ற எவருடைய தலைமையையோ வழி காட்டுதலையோ தேவையறச் செய்துவிட்டது. பாரம்பரி யப் பந்தங்கள் உறவுகள் அனைத்தையும் மறக்கச் செய்து விட்டது பெருமானார் (ஸல்) அவர்களின் தோழமை. அண்ணலார் (ஸல்) அவர்கள் பால் அப்துல்லாஹ் இப்னு உபை காழ்ப்பு கொள்ளக் காரணம் இதுவே. எல்வாறேனும் பெருமானார் (ஸல்) அவர்களைத் தன் கூட்டத்தின ரிடையே செல்வாக்கிழக்கச் செய்திட வேண்டுமென அவன் ஆரம்பத்திலேயே முயற்சித்தானாலும் அம்முயற்சிகளில் அவன் வெற்றி பெறவில்லை.

ஒரு நாள் பெருமானார் (ஸல்) அவர்கள் கஸ்ரஜ் களின் மற்றொரு தலைவரான ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள் சுகவீனமுற்றிருப்பது பற்றிக் கேள்வியுற்று அவரைக் கண்டு வர எண்ணி அவரின் இல் லம் நோக்கிச் சென்றார்கள். செல்லும் வழியிலேயே அப் துல்லாஹ் இப்னு உபையின் விடும் இருந்தது. கோட்டை யைப் போன்றிருந்த அப்பெரிய வீட்டின் நிழலிலேயே அப் துல்லாஹ் இப்னு உபை தன் கஸ்ரஜ் கோத்திரத்தவர் சில ரோடு அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தான். அதுவரை அவன் இஸ்லாத்தை ஏற்றிருக்கவில்லை. இடைவழியில் அவ னைக் கண்டு விட்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் தாங்கள் ஏறியிருந்த வாகனத்தை அவனின் வீட்டின் புறமாகவே திருப்பினார்கள். காழ்ப்புணர்வு கொண்டிருந்த அப்துல்லாஹ் இப்னு உபை பெருமானார் (ஸல்) அவர்களைச் சிறுமைப் படுத்தி, தன் கூட்டத்தினரைத் திசை திருப்புவதெப்படியென சிந்திக்கலானான்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் அவனுக்கு மதிப்பளித்து தங்களின் வாகனத்தினின்றும் இறங்கி அப்துல்லாஹ் இப்னு உபைக்கும் மற்றவர்களுக்கும் சோபனம் கூறி அவர்களி டையே அமர்ந்து உரையாடலானார்கள்; அருள் மறை குர் ஆனின் சில வசனங்களை ஓதிக் காட்டி விளக்கமளித்து இப்னு உபையையும் இஸ்லாத்தை ஏற்குமாறு அழைத்தார் கள். அதற்கு மறுமொழியாக இப்னு உபை, ''மிகச் சிறந்த விஷயங்களையே நீர் கூறுகிறீர். ஆனால் இவையனைத்தும் உண்மையாயிருக்குமாயின் இவற்றை ஏந்திக் கொண்டு நீர் வீதிகளில் அலைய வேண்டாம். உம்முடைய இருப்பிடத் திலேயே தங்கியிருந்து உம்மை நாடி வருபவர்களுக்கு இவற்றை எடுத்துரைப்பீராக. எங்களின் சபைகளுக்கு வந்து நாங்கள் விரும்பாதவற்றை எங்கள் மீது நிர்ப்பந்தமாகத் திணிக்காதீர்'' என்றான். முகத்திலெறிந்தாற் போன்ற அவனுடைய பேச்சு பெருமானார் (ஸல்) அவர்களுக்குச் சற்று வருத்தத்தையே தந்த போதினும் மறுகணமே அவ் வருத்தத்தைத் தட்டி விலக்குவது போல் கேட்டது மற் றொரு குரல், ''அல்லாஹ்வின் தூதரவர்களே! நீங்கள் வாருங்கள். தாங்கள் ஏந்தியுள்ள செய்திகளுடன் எங்களின் சபைகளுக்கு வாருங்கள்; எங்களின் வீடுகளுக்கு வாருங்கள். உங்களின் வரவை நாங்கள் எதிர்நோக்குகிறோம். நீங்கள் ஏந்தி வரும் செய்திகளை அல்லாஹ்வின் அருளென நம்பி நாங்கள் செவியேற்க ஆசிக்கின்றோம். அதன் மூலம் எங் களை வழி நடத்த தங்களிடம் யாசிக்கின்றோம்'' என்ற அக்குரலுக்குடையவர் ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி). 'கஸ்ரஜ்'ஜேயான அவர் தன் இல்லத்தின் நிழலிலேயே தனக்கெதிராகக் குரலெழுப்புவார் என அப் துல்லாஹ் இப்னு உபை எதிர் பார்க்கவில்லை. எரிச்சல டைந்த அவன் 'நண்பர்களைப் புறக்கணிக்கும் ஒருவன் நாதி யற்றுப் போவான்' என்ற பொருள்பட பாடினான். ஹழ்ல ரத் இப்னு ரவாஹா (ரலி) அவர்கள் அதனைப் பொருட் படுத்தவே இல்லை. இப்னு உபையின் மகனான ஹழ்ரத்

அப்துல்லாஹ் (ரலி) அவர்களே அண்ணலரின் தோழமையை ஏற்றவர். மகள் ஜமீலாவும் இஸ்லாத்தை ஏற்றார். நாளடைவில் தன் செல்வாக்கு செல்லாக்காசாகி வருவதைக் கண்ட இப்னு உபை அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு ஆதரவாகி நின்ற அன்ஸார்களை எதிர்த்துக் கொள்ள வழியின்றி இஸ்லாத்தைத் தன் வாயால் ஏற்றுக் கொண்டானாயினும் பொருமல் அவன் நெஞ்சத்தைப் புண்ணாக்கி உள்ளுக்குள்ளே புரையோடிக் கொண்டேயிருந்தது.

ஆன்மீகத் துறவியாகத் தன்னைக் காட்டிக் கொண்ட அபூ ஆமிரின் பின் பத்து சீடர்கள் சென்றதே போல் இந்த லவ்கீகவாதியான இப்னு உபையோடும் அவனைப் போன்றவர்களேயான பலர் தோழமை கொண்டிருந்தனர். இவர்களெல்லாம் மற்ற அவ்ஸ்—கஸ்ரஜ் மக்களின் கூட்டு வலிமைக்கு அஞ்சி வெளிப்பார்வைக்கு முஸ்லிம்களாக நடித்துக் கொண்டாலும், உள்ளுக்குள் தீய எண்ணங்கள் கொண்டே புகைந்து, யூதர்களின் துரோக நடவடிக்கைகளுக்கும் மதீனாவுக்கு வெளியிலிருந்து படையெடுத்து வந்த அன்னியர்களுக்கும் சாதகமாக நடந்து முஸ்லிம்களுக்கு சங்கடங்களை விளைவித்தே வந்தனர். இந்த நயவஞ்சகர்களின் நடமாட்டங்களையும் கண்காணித்து, யூதர்களின் துரோகங்களையும் முறியடித்து பெருமானார் திரு நபி (ஸல்) அவர்களை எதிரிகளிடமிருந்து காத்து நிற்பது அன்ஸார்களுக்கு மிக சாமானியமான ஒரு காரியமாக இருக்கவில்லை என்றாலும் மதீனாவின் அந்த அன்ஸார்கள் மாநபி பெருமான் (ஸல்) அவர்களின் கரங்களில் அக்கபாவில் தாங்கள் செய்தளித்த வாக்குறுதியைக் காக்க தங்களின் உயிர்களையும் உடல்களையும் உடைமைகளையும் தயக்கமின்றி அர்ப்பணித்தார்கள். மாநபி பெருமான் (ஸல்) அவர்களைத் தங்களின் மனைவி மக்களினும் மேலாக—மற்றெல்லாப் பொருள்களினும் அரிதாகக் கிடைத்த அருளாக—நேசித்த மதீனாவின் அன்ஸார்கள் அல்லாஹ்வின் அந்தத் தூதருக்குத் துணை சேர்க்க எந்தத் தருணத்திலும் முன்னின்றார்கள்.

மக்காவிலிருந்து படையெடுத்து வந்த குறைஷிகளைச் சந்திக்க முதன் முதலாக 'பத்ரு' களம் நோக்கிப் புறப்படுவதற்கு முன்பாகப் பெருமானார் (ஸல்) தங்கள் தோழர்களின் கருத்தறியலானார்கள். அச்சமயம் ஹழ்ரத் அபூபக்கர், உமர் (ரலி) ஆகியோர் ஒருவரையடுத்தொருவர் எழுந்து, முன்னேறிச் சென்று எதிரிகளோடு போராட முழு ஆர்வம் தெரிவித்துப் பேசினார்கள். பெருமானார் (ஸல்) பின்னரும் தமக்கு யோசனை கூறுமாறு தோழர்களை வினவினார்கள். அச்சமயம் ஹழ்ரத் மிக்தாத் (ரலி) அவர்கள் எழுந்து, போருக்காக ஹழ்ரத் மூஸா (அலை) அவர்கள் விடுத்த அழைப்பை அவர்களின் சமூகத்தார் புறக்கணித்ததை நினைவு கூர்ந்து, ''அல்லாஹ்வின் தூதரவர்களே! அது போல நாங்கள் உங்களைக் கைவிட்டு ஒதுங்கி விடமாட்டோம். நீங்கள் எங்கே சென்றாலும் தங்களையே பின் தொடர்வோம்'' என்று பெரும் உற்சாகத்தோடு உரையாற்றினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் அத்துடனும் அமைதியடைந்து விடவில்லை. ஏனெனில் அதுவரை பேசிய மூவருமே முஹாஜிர்களாக இருந்தார்கள். முஹாஜிர்கள் ஒரு போதும் தங்களை விட்டும் பிரியமாட்டார்கள் என்ற நம்பிக்கை அண்ணலார் (ஸல்) அவர்களுக்கிருந்தது. அதனை முஹாஜிர்கள் ஹிஜ்ரத்தின் மூலம் உறுதிப்படுத்தியிருந்தார்கள். ஆனால் அன்ஸார்களின் நிலை என்ன?

'அக்கபா'வில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை மதீனாவில் தங்களின் மனைவி மக்களைக் காப்பதே போல் காப்பதாகவே வாக்களித்திருந்தனர் அன்ஸார்கள். இப்போதோ மதீனாவை விட்டும் வெளிச் செல்ல வேண்டியேற்பட்டுள்ள சூழலில் அன்ஸார்களின் நிலை என்ன?

அச்சமயத்தில் முஹாஜிர்களின் எண்ணிக்கை ஒரு நூறுக்கும் குறைவு படவே இருந்தது. அன்ஸார்களே மிகுத

மான பேர். அவர்கள் அனைவரும் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் ஆணையேற்க செவி தாழ்த்தி மவுனித்துக் காத்திருந்தார்களேயன்றி எவரும் ஏதும் பேசவில்லை.

''மக்களே இன்னும் உங்களின் கருத்துக்களைக் கூறுங்கள்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் மீண்டும் கேட்ட போதே அன்ஸார்களுக்கு ஐயம் ஏற்பட்டது. அண்ணலார் (ஸல்) அவர்கள் ''மக்களே!'' என அன்ஸார்களைத்தான் விளிக்கிறார்களா? என ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) வினவினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் 'ஆம்' என தலையசைத்ததுமே 'அவ்ஸ்'களின் அந்தத் தலைவரே பேசலானார்:

''மதீனாவைத் தாக்க வரும் எதிரிகளைத் தங்களோடு ஒன்று பட்டு நின்று நாங்கள் எதிர்ப்போம் என வாக்களித்ததாலேயே மதீனாவை விட்டும் வெளிச் செல்லும் இன்று தங்களுக்குதவுவது எங்கள் கடமையல்ல என்று எண்ணி நாங்கள் பின் தங்கி விடுவோமோ என்று தாங்கள் ஐயமுற வேண்டாம். அல்லாஹ்வின் தூதரவர்களே! தங்களை அல்லாஹ்வின் தூதர் என நாங்கள் நம்பிக்கைக் கொண்டு சாட்சியமும் கூறியிருக்கிறோம். அல்லாஹ்விடமிருந்து எங்கள் பால் தாங்கள் கொண்டு வந்துள்ளதை சத்தியம் என நாங்கள் ஏற்றிருக்கிறோம். தங்களின் கட்டளை எதுவாயினும் கட்டுப்பட நாங்கள் வாக்களித்துள்ளோம். தாங்கள் விரும்புகிறபடி செய்யுங்கள். தங்களோடிணைந்தே நாங்கள் இருப்போம். சத்தியத்தைத் தந்து தங்களை அனுப்பியுள்ள அந்த ஒருவனின் மீதே ஆணையாக இந்த நாட்டின் எல்லையைத் தாண்டி எந்தத் தொலை வரை தாங்கள் எங்களை அழைத்தாலும் தங்களோடு நாங்கள் வருவோம். கடலின் கரைக்கே எங்களை அழைத்துச் சென்று நிறுத்தி அதில் இறங்கத் தாங்கள் கட்டளையிட்டாலும் நாங்கள் இறங்குவோம். நீங்கள் எவரோடு உறவு கொள்கின்றீர்

களோ அவர்களோடு நாங்களும் உறவு கொள்வோம். தாங்கள் எவரை எதிர்க்கின்றீர்களோ அவரை நாங்களும் எதிர்ப்போம். எங்களின் உடைமைகளில் தேவையானவற்றையெல்லாம் தாங்கள் எடுத்துச் செல்லுங்கள். எங்களுக்கென தாங்கள் விட்டுச் செல்வதைவிட (அல்லாஹ்வுக்காகவும் அவனின் தூதருக்காகவும்) தாங்கள் எடுத்துச் செல்வதைக் கொண்டே நாங்கள் மகிழ்வோம். தங்களின் ஆணைகள் எதுவாயினும் நாங்கள் மேற்கொள்வோம். இறைவன் அன்ஸார்களைக் கொண்டு நங்களின் கண்களைக் குளிரச் செய்வானாக'' என வீர உரையாற்றி தங்களின் மன உறுதியைப் புலப்படுத்தினர்.

மரணத்தின் பிடி தங்களின் மூச்சைத் திக்குமுக்காடச் செய்த இக்கட்டான தருணத்திலும் கூட, மாநபி பெருமான் (ஸல்) அவர்களுக்குச் செய்தளித்த வாக்கைப் பேணுவதில் அன்ஸார்கள் கொண்டிருந்த அக்கறையைக் காட்டுகிறது உஹதுப் போர்க்களத்தின் ஒரு காட்சி. வெட்டுண்டு குற்றுயிராய்க் கிடந்த ஹழ்லரத் ஸஅத் இப்னு ரபீஉ (ரலி) அவர்கள் இழையோடிக் கொண்டிருந்த தங்களின் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டு, ''அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு என் ஸலாமைக் கூறுங்கள். ஒரேயொரு அன்ஸாரியே உயிர் தங்கி நிற்க நேரும் நிலையிலும் ஒருக்கால் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் இன்று கொல்லப்பட்டுப் போவார்களாகில், அல்லாஹ்வின் சந்நிதானத்தில் அந்த ஒருவரும் கூட எந்தப் புகலும் கூறித் தப்பிக்க முடியாதென்பதை அன்ஸார்களுக்கு நினைவூட்டுங்கள். ஏனெனில் அல்லாஹ்வின் தூதரின் பொருட்டு எங்களின் உயிர்களைப் பலி தர நாங்கள் அக்கபாவுடைய இரவில் பிரமாணம் செய்தளித்திருக்கிறோம்'' என கூறியதை ஹழ்லரத் உபை இப்னு கஅப் [ரலி] அவர்கள் கேட்டறிவித்துள்ளார்கள்.

போரில் பெருமானார் [ஸல்] அவர்கள் கொல்லப்பட்டு விட்டார்கள் என்ற புரளி கேட்டு மனஞ் சலித்து தங்களின் வாட்களை வீசிவிட்டு அமர்ந்து விட்டனர் சில தோழர்கள். அவர்களைக் கண்டு விபரமறிந்த ஹழ்ரத் அனஸ் இப்னு நள்ர் [ரலி] என்ற அன்ஸாரித் தோழர், ''பெருமானார் (ஸல்) அவர்களையிழந்த பின் நீங்கள் உயிர் வாழ்ந்துதான் என்ன செய்யப் போகிறீர்கள்? அல்லாஹ்வின் மார்க்கத்தைக் காக்கப் போரிடுவதும் கடமையில்லையா?'' என விலவிய வராகத் தம் வாளைச் சுழற்றிப் பறந்தார். இறுதியாக ஓய்ந்து சாய்ந்த அவரின் உடலைப் புரட்டிப் பார்க்கப்பட்ட போது அவ்வுடலில் எழுபது காயங்கள் காணப்பட்டன.

ஆண்கள் மட்டுமின்றி அன்ஸாரிப் பெண்களின் பேரன்பையும் பக்திப் பரவசத்தையும்தான் என்சொன்பது!

உஹதுப் போரில் முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட சோதனையின் விளைவுகளைப் பற்றிச் செவியுற்று, களம் நோக்கி ஓடினார் ஹிந்த் பின்த் அம்ரு இப்னு ஹராம் (ரலி) என்ற அன்ஸாரிப் பெண்மணி. அவருக்கு எதிர்பட்ட ஒருவர் அவரின் கணவர் ஹழ்ரத் அம்ரு இப்னு ஜம்முஹ் (ரலி) கொல்லப்பட்ட செய்தியைக் கூறினார். ஹழ்ரத் ஹிந்த் (ரலி) அவர்களோ அச்செய்தியைத் தம் செவிகளில் ஏற்றவராகவே தெரியவில்லை. ''அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் எங்கே?'' என கேட்ட வண்ணமே ஓடினார். அடுத்து எதிர்பட்ட ஒருவர் அம்மாதரசியின் மகன் கல்லாத் இப்னு அம்ரு (ரலி) கொல்லப்பட்டுப் போனதாகக் கூறினார். அதையும் தம் செவிகளில் ஏற்றவராகத் தெரியவில்லை அப்பெண்மணி, ''அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் என்னவானார்கள்?'' என்று கேட்ட வண்ணமே ஓடினார். மூன்றாவதாக எதிர்பட்ட ஒருவர் அவரின் உடன் பிறந்த அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு அல்ஹராம் (ரலி) போரில் வீர மரணம் பெற்ற செய்தியைக் கூறினார். எதை

யுமே தம் செவியில் ஏற்காதவராக ''அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் நிலை என்ன?''வென்றரற்றியவாறே ஓடிய அவ்வன்ஸாரிப் பெண்மணி, இறுதியாக உஹது மலைச் சாரலில் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் நலமுடனி ருக்கக் கண்டபோது ''அல்லாஹ்வின் தூதரவர்களே! தாங் கள் நலமுடனிருக்கிறீர்களா? அதுபோதும். எந்த இழப்பு களும் என்னை வருத்தா'' என நிம்மதியடைந்தார்.

பெருமானார் (ஸல்) அவர்கள் மதீனாவில் தங்கி வாழ்ந்த பதினோராண்டு காலத்திலும் அவர்கள்பால் தாங் கள் கொண்டுவிட்ட பேரன்பையும் பக்தியையும் வெளிப் படுத்த தத்தம் உடல்களையும் உயிர்களையும் உடைமை களையும் அர்ப்பணிப்பதில் ஒவ்வோர் அன்ஸாரித் தோழரும் தனிச் சிறப்புடையவராகவே விளங்கினார். அதன் பிரதி பலிப்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அன்ஸார் களை மனிதர்களில் மற்ற யாவரையும் விட அதிகமாக நேசித்தார்கள். ''அவர்கள் என் அந்தரங்கத் தோழர்கள், என் பாதுகாவலர்கள்'' என்று புகழ்ந்த பெருமானார் (ஸல்) அவர்கள், ''அவர்களை நேசிப்பவர்களை அல்லாஹ் வும் நேசிப்பான். அவர்களை வெறுப்பவர்களை அல்லாஹ் வும் வெறுத்திடுவான்'' என எச்சரித்தார்கள்.

அன்ஸார்களில் ஒரு தலைவரான ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா(ரலி)அவர்கள் தங்களின் இளம் மகனைக் கரம் பிடித்து அழைத்துக் கொண்டு ஒரு நாள் அண்ணல் எம்பெரு மான் (ஸல்) அவர்களின் சமுகத்துக்கு வந்தார்கள். 'அன் ஸார்களுக்கு சோபனம், அன்ஸார்களுக்கு சோபனம்' என வாழ்த்தி அவர்களை வரவேற்ற அண்ணலார் (ஸல்) அவர் கள் 'இப்படி அமரும், இங்கே அமரும்' என தம் வலப்பக்க மாக அன்னவரை அமர்த்திக் கொண்டார்கள். அவ்வாறே அமர்ந்த அவ்வன்ஸாரித் தலைவர் தம் புதல்வரைப் பெரு மானார் (ஸல்) அவர்களின் முன்னே நிறுத்தினார். அண்ண லார் (ஸல்) அவர்கள் அச்சிறுவரை தமக்கு முன்பாக அமரப்

பணித்தார்கள். அவ்வாறே அவரும் அமர்ந்து கொண்டார். தம்மை நெருங்கி வரும்படியாக அண்ணலார் (ஸல்) அவர்கள் பணிக்க, அவ்வாறே நெருங்கிச் சென்று அண்ணலவர்களின் திருக்கரங்களையும், பாத கமலங்களையும் முத்தி முகர்ந்தார் அச்சிறுவர். அச்சமயம் அண்ணலார் (ஸல்) அவர்கள், ''நான் அன்ஸார்களையும் அன்ஸார்களுடைய மக்களையும் சார்ந்தவன்'' என மகிழ்ந்துரைத்தார்கள். அதனைக் கேட்டு ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள், ''தாங்கள் எங்களைக் கண்ணியப்படுத்துவது போலவே அல்லாஹ்வும் தங்களைக் கண்ணியப்படுத்துவானாக'' என தங்களின் நன்றிப் பெருக்கை வெளிப்படுத்தினார்கள். அதற்கும் பதிலாக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள், ''நான் உங்களைக் கண்ணியப்படுத்து முன்னதாகவே அல்லாஹ் உங்களைக் கண்ணியப்படுத்தி விட்டான்'' என்றருளிய சம்பவத்தை ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு த்ஸாபித் (ரலி) நினைவு கூர்ந்துள்ளார்கள்.

உயிர்களைப் பகடைகளாக உருட்ட பாரம்பரியமாகப் பயிற்சி பெற்றிருந்தனர் அன்ஸார்கள். படை நடத்தி வந்தவர்களைத் தங்களின் வீரியத்தால் வென்ற அவ்வன்ஸார்களிடையே பகை வளர்த்தேனும் மீண்டும் அவர்களைப் பலவீனப்படுத்திட தங்களின் பூர்விக முயற்சிகளை இப்போதும் யூதர்கள் தொடரத் தவறிடவில்லை. அந்த வஞ்சகச் சூழ்ச்சிகளையெல்லாம் விவேகத்தோடு முறியடித்தனர் அன்ஸார்கள்.

எப்படியேனும் மீண்டும் ஒரு ரத்தக் களரியை அன்ஸார்களிடையே விளைவிக்கக் கனவு கண்ட யூதர்களில் ஷாஸ் இப்னு கைஸ் என்ற கைதேர்ந்த அரசியல்வாதி ஒருவன் இருந்தான். அவன் தன் கோத்திரத்திலிருந்து குரல் வளம் படைத்த ஒரு வாலிபனைத் தேர்ந்தெடுத்தான். அன்ஸார்கள் கூடியமர்ந்திருந்த ஓரிடத்துக்குச் சென்று,

அவர்களிடையே இறுதியாக நடைபெற்ற புஆத்ஸ் போர்ச் சம்பவங்களை நினைவூட்டும் பாடல்களைப் பாடும்படி ஏவினான். அவ்வாலிபனும் அவ்வாறே சென்று அன்ஸார்களிடையே அமர்ந்தான்; அவர்களோடு உரையாடலானான்; இடையிடையே பூர்வீகச் சம்பவங்களை நினைவூட்டலானான்; அவ்ஸ்களும் கஸ்ரஜ்களும் முன்னும் பின்னுமாகப் பாடியிருந்த பாடல்களைப் பாடலானான். தங்களைச் சார்ந்தவர்களைப் புகழ்ந்தும், எதிரானவர்களை இகழ்ந்தும், போரில் பலியானவர்களைப் போற்றியும், பழி தீர்க்கப்படத் தூண்டியும் பொறி பறந்த கவிதா வரிகளைக் கேட்டு, அன்ஸார்களின் நரம்புகள் புடைக்கலாயின. அவர்களின் சிந்தனையில் பூர்வீக நினைவுகள் சுழியிட்டன. ஒவ்வொரு கோத்திரத்தவரும் தங்களுக்குச் சாதகமாகப் பாடப்பட்டபோது பூரிப்படைந்தனர். தங்களின் பெருமைகளை உரத்துக் கூவினர். அவற்றுக்கு எதிர்க் குரல்களும் ஒலித்தன. பூமியின் தாகத்தை ரத்தத்தால் தீர்க்கவே அவர்கள் முனைந்து விட்டதைக் காட்டியது சூழல். ''வேட்கை இன்னும் தீரவில்லை யானால் எங்களால் குறையிருக்காது'' என்றார் ஒருவர். வாதங்கள் வளர்ந்தன. வாட்கள் உருவப்படும் ஓசைகளும் கேட்டன. செவியுறுவோரின் சுரணைகளை சீண்டிடும் திறனை இயல்பிலேயே தனக்கமைந்திருந்த குரல் வளத்தால் பெற்றிருந்த அந்த யூத வாலிபன், அன்ஸார்களை அவர்களின் பூர்வீக நிலைக்குத் திருப்பிடும் தன் முயற்சியில் வெற்றியை எட்டிப் பிடித்திடவே இருந்த நிலையில், எப்படியோ செய்தி கிடைத்து அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் சில முஹாஜிர்களோடு அங்கு வந்து சேர்ந்து விட்டார்கள்.

''முஸ்லிம்களே!'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அழைத்த குரல் கேட்டு எல்லா அன்ஸார்களுமே அவர்களின் புறம் திரும்பி விட்டார்கள். ''அல்லாஹ் ! அல்லாஹ் ! !'' என இறை திருநாமத்தை இருமுறை உரத்து உச்சரித்த

பெருமானார் (ஸல்) அவர்கள், தங்களைச் சந்தித்த காலை அன்ஸார்கள் இருந்த அவல நிலையை, தங்களின் வரவைக் கொண்டு அன்ஸார்களின் உள்ளங்களில் அன்பை ஊற்றெடுக்கச் செய்து, பேதங்களை நீங்கச் செய்து, அவர்களை ஒன்று படுத்தியுள்ள அல்லாஹ்வின் பேரருளை, நரகை நெருங்கச் செய்துக் கொண்டிருந்த மூடப் பழக்க வழக்கங்களை விட்டும் அவர்களைத் தடுத்துக் காத்து இஸ்லாத்தின் மூலம் அல்லாஹ் அவர்களுக்களித்துள்ள கவுரவத்தையெல்லாம் அவர்களுக்கு நினைவூட்டினார்கள். கணிசமான நேரம் வரை நீடித்த அப்பேருரையினிடையிலேயே அன்ஸார்களின் உள்ளங்களனைத்தும் அவை அடைந்து விட்டிருந்த தடுமாற்றங்களை உணரலாயின. ''நான் உங்களிடையே இருக்கும் நிலையிலேயே நீங்கள் பூர்விகமான உங்களின் அறியாமைப் பழக்கத்தையே மேற்கொள்ளத் துணிந்து விட்டீர்களா?'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் வினவக் கேட்டு, மீண்டும் ஒரு சூழ்ச்சிக்குத் தாங்கள் பலியாகவிருந்த பேராபத்தை எண்ணி கண்ணீர் விட்டவர் அன்ஸார்கள். அதன்பின் அவர்கள் ஒருவரோடொருவர் கட்டித் தழுவி, ஒன்று பட்டனர்.

இவ்வாறாகவே முஹாஜிர்களை விட்டும் அன்ஸார்களைப் பிரிக்க அவர்களிடையிலேயேயிருந்த நயவஞ்சகர்கள் முயன்ற சம்பவங்களுமுண்டு. அத்தகைய தருணங்களிலெல்லாம் தூதர் நாயகம் (ஸல்) அவர்களின் தோற்றப் பொலிவும் வாக்குச் செறிவுமே அவர்களைக் காத்தருள் புரிந்தன. அந்த அளவுக்கு அண்ணலார் [ஸல்] அவர்களோடு அன்ஸார்களின் உணர்வுகள் ஒன்றித்துப் போயிருந்தன.

முஹாஜிர்களோடு இணைந்து அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு இணங்கி அன்ஸார்கள் செய்த மகத்தான தியாகத்தினாலேயே மிகக் குறுகியக் காலத்தில் இஸ்லாம் தன் படர் நிழல் பரப்பி பெரு வெற்றிகளைப் பெற

முடிந்தது என்பது உண்மையே. அதற்காகவே தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் மதீனாவின் அன்ஸார்கள்.

மக்க மாநகர வெற்றிக்குப் பின் நடைபெற்ற ஹுனைன், தாயிஃப் போர்களில் கிடைத்த வெற்றிப் பொருள்களைப் பங்கிடவாரம்பித்த பெருமானார் [ஸல்] அவர்கள், மக்க நகர வெற்றிக்குப்பின் இஸ்லாத்தில் இணைந்த புதியவர்களை மனத்திருப்தி கொள்ளச் செய்ய நாடி அவர்களுக்கே ஏராளமாகப் பங்கிட்டளித்தார்கள். அன்றைய தினம் அன்ஸார்கள் எவரும் அழைக்கப்படவே இல்லை. சில இளம் அன்ஸார்களின் உள்ளங்கள் சபலமடைந்து விட்டன அச்சமயம். ''போரிடத் தேவைப்பட்டு நாமும்தான் புறப்பட்டு வந்தோம். நம்முடைய வாட்களிலும்தான் எதிரிகளின் இரத்தம் வடிந்து கொண்டிருக்கிறது. இருப்பினும் பங்கிடப்பட்ட பொருள்களை மக்காவாசிகளே பெற்றுச் செல்கின்றனர். இதுதான் இறைவனின் கட்டளை எனில் அதனையே நாமும் பொருந்திக் கொள்வோம். அப்படியல்லாமல் பெருமான் நபி (ஸல்) அவர்களின் உத்திப்படியே பங்கிடப்பட்டதெனில், நம் பாலும் கருணை காட்ட அண்ணலரை நாம் வேண்டிக் கொள்வோம்'' என அவர்கள் முணுமுணுத்த செய்தி அண்ணலவர்களின் செவிகளுக்கும் உடனே எத்தி வைக்கப்பட்டது ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களால்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் உடனேயே அன்ஸார்களனைவரையும் ஓரிடத்தில் ஒன்று சேர்க்கும்படியாக ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களையே ஏவினார்கள். அவ்விதமே அன்ஸார்களனைவரும் ஒரேயிடத்தில் கூடிக் காத்திருந்தனர். அவர்களிடையே வந்து நின்ற அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள், ''அன்ஸார்களே! என்னைப் பற்றி நீங்கள் தர்க்கித்துக் கொண்டதாக நான் செவியுற்ற செய்திகள் உண்மைதானா?'' என வினவினார்கள். சில முதிய அன்ஸார்கள், ''ஆண்டவனின் தூதரவர்

களே! எங்களில் இளம் வயதுடைய சிலர் அவ்வாறு பேசி விட்டனரே தவிர, நாங்கள் எந்தச் சபலமும் கொள்ள வில்லை'' என பதிலுரைத்தனர்.

பெருமானார் (ஸல்) அவர்கள் தொடர்ந்து பேசினார் கள். ''அன்ஸார்களே! எனக்கு பதில் கூறுங்கள், வழிகேட்டிலிருந்த உங்களுக்கு அல்லாஹு தஆலா என் மூலமே நேர்வழியைக் காட்டிடவில்லையா?'' என அவர்கள் வினவ, எல்லா அன்ஸார்களும் ஒருமித்தவர்களாக, ''அல்லாஹ்வுடையவும் அவனுடைய தூதருடையவும் கருணையும் கிருபையும் எங்கள் மீது அதிகமே'' என விடை கூறினார்கள்.

அடுத்து பெருமானார் (ஸல்) அவர்கள், ''முடைப்பட்டவர்களாயிருந்த உங்களுக்கு அல்லாஹ் என் மூலமாகவே செல்வத்தைத் தரவில்லையா?'' என வினவினார்கள். அப்போதும் அன்ஸார்கள் ஒருமித்த குரலில் ''அல்லாஹ்வுடையவும் அவனின் தூதருடையவும் கருணையும் கிருபையும் எங்கள் மீது அதிகமே'' என விடையளித்தார்கள்.

தொடர்ந்து நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''ஒருவரோடொருவர் பகைவர்களாயிருந்த உங்களின் இதயங்களில் அல்லாஹ் என் மூலமே அன்பை ஊற்றெடுக்கச் செய்தானல்லவா?'' என வினவிய போதும் முன் சொன்னவாறே அன்ஸார்கள் ஒருமித்துக் கூறினர்.

''அன்ஸார்களே! இதற்கு மாற்றமாக ஏதேனும் கூறுங்கள்'' என பெருமானார் (ஸல்) அவர்கள் அடுத்து வினவக் கேட்டு கலங்கினர் அன்ஸார்கள்!

''அல்லாஹ்வுடையவும் அவனின் தூதருடையும் கருணையும் கிருபையும் எங்கள் மீது மாரியெனப் பொழியப்பட்டிருக்க, அல்லாஹ்வின் தூதரவர்களே! மாற்றமாக நாங்கள் என்ன கூற முடியும்?'' என வியப்படைந்தார்கள் அன்ஸார்கள்.

''முடியும் ! நீங்கள் விரும்பினால் பேசுவதற்கு இதற்கு மாற்றமான உண்மை உங்களிடம் இருக்கிறது'' என்றுரைத்த ஏந்தலர் [ஸல்] தொடர்ந்து பேசினார்கள் :

''புறக்கணிக்கப்பட்ட நிலையில் எங்களிடம் வந்த உம்மை நாங்கள் உண்மைப்படுத்தி, கண்ணியப்படுத்தினோம்;

''துணையின்றித் தனித்த நிலையில் வந்த உமக்கு நாங்கள் உதவியாளர்களானோம்;

''ஊரை விட்டும் வெளியேற்றப்பட்டவராக வந்த உமக்கு நாங்கள் புகலிடம் தந்தோம்;

''உடைமைகளையிழந்து வெறுங்கையினராக வந்து நின்ற உமக்கு நாங்கள் ஆதரவு தந்து அரவணைத்தோம்'' என நீங்கள் கூறினீர்களானால் அது உண்மையேயாகும். ஆண்டவன் மீதாணையாக அதனை நான் ஏற்பேன். ஆனால், அல்லாஹ்வின் மீதும் அல்லாஹ்வுடைய ரஸூலின் மீதும் நீங்கள் கொண்டுள்ள விசுவாச உறுதியையே உங்களுக்குப் போதுமாக்கி, புதிதாக இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டுள்ளவர்கள் ஏக இறைவனை வணங்க மனமினங்கி நிலைப்பட்டிடும் என்பதற்காகவே அவர்களுக்கு நான் கொடுத்த உலகாயத உடைமைகள் உங்களின் மனங்களை சஞ்சலமடையச் செய்து விட்டனவா?'' என பெருமானார் (ஸல்) அவர்கள் வினவிய சமயம் அன்ஸார்களின் கண்களனைத்தும் கலங்கி நின்றன. கணிப்பிலே தாங்கள் சருகி விட்டதை நினைத்து அவர்களின் உள்ளங்கள் உருகி நின்றன.

''அன்ஸார்களே!'' என மீண்டும் அவர்களை அழைத்த அண்ணலார் (ஸல்) அவர்கள், ''அழிந்து விடக் கூடிய உலகாயதப் பொருள்களான ஒட்டகைகளையும் ஆடுகளையும் மந்தை மந்தைகளாக மற்றவர்கள் ஓட்டிச் செல்லும் அதே சமயம் அல்லாஹ்வுடைய ரஸூலை உங்களின் இல்லங்களின்

புறம் அழைத்துச் செல்வதில் நீங்கள் பொருத்தங் காண வில்லையா?'' என வினவக் கேட்டு அன்ஸார்கள் விக்கித் துப் போயினர். அவர்களின் நாவுகள் அசைவற்றுப் போயின. பேசும் வல்லமையிழந்து அவர்கள் பரிதவித்தனர். வெடித் துக் கிளம்பிய தேம்பல் குரல்கள் அவர்களைத் திணறச் செய்தன. தாரை தாரையாக ஒவ்வொருவரும் வடித்த கண்ணீர் அவர்களின் தாடிகளையெல்லாம் தொப்பலாடச் செய்தது. அன்புப் பெருக்கால் கொந்தளித்த அண்ணலார் (ஸல்) அவர்களின் முகத்திலும் கண்ணீர்த் திவலைகள் உருண்டோடத்தான் செய்தன. ''என்னுடைய ஆன்மா வைத் தன் கையில் கொண்டுள்ள அந்த ஆண்டவன் மீதாணையாகக் கூறுவேன், நீங்கள் உங்களோடு கொண்டு செல்வது அவர்கள் பெற்றுச் செல்லும் உடைமைகளைவிட எத்தனையோ மடங்கு உயர்வானது. (அல்லாஹ்வின் கற்ப னையில்) ஹிஜ்ரத் இல்லாதிருக்குமானால் நான் அன்ஸார் களிடையேயே தோன்றியிருப்பேன். மக்கள் அனைவரும் ஒரு சமவெளியில் நடந்து செல்கையில் அன்ஸார்கள் ஒரு கணவாயில் நுழைவார்களானால் நானும் அன்ஸார்களோ டேயே இணைந்து செல்வேன். அன்ஸார்கள் என் (உட லோடு ஒட்டிய) உள்ளாடைகள். மற்றவர்கள் என் மேலாடைகள்'' என இதமளித்து உரையாற்றிய அண்ண லார் (ஸல்) அவர்கள் தங்களிரு கரங்களையும் ஏந்தி,

اَللّٰهُمَّ اغْفِرْ لِلْاَنْصَارِ وَلِاَبْنَاءِ الْاَنْصَارِ
وَاَبْنَاءِ اَبْنَاءِ الْاَنْصَارِ

''இறைவா! அன்ஸார்கள் மீது நீ அருள்புரி; அவர்களின் மக்கள் மீதும் அருள்புரி; அவர்களின் மக்களின் மக்களின் மீதும் அருள்புரி'' என பிரார்த்தித்தார்கள். அல்லாஹ்வின் தூதரவர்களை தங்களுக்குக் கிடைத்த உயர்ந்த செல்வமாக, ஒப்பற்ற செல்வமாக மனம் பொருந்தி அன்ஸார்கள் அனை வரும் ஒருவரோடொருவர் கட்டித் தழுவி மகிழ்ந்தார்கள்.

பேரன்பின் இந்தப் பரிமாற்றம் - பரிசுத்த நெஞ்சங்களின் பந்தப் பிணைப்பு யாவும் ஆண்டவனின் அருளெனச் சுட்டிக்காட்டுகிறது அல்லாஹ்வின் திருமறை,

لَقَدْ تَابَ اللّٰهُ عَلَى النَّبِيِّ وَالْمُهٰجِرِيْنَ وَالْاَنْصَارِ الَّذِيْنَ اتَّبَعُوْهُ
فِيْ سَاعَةِ الْعُسْرَةِ مِنْۢ بَعْدِ مَا كَادَ يَزِيْغُ قُلُوْبُ فَرِيْقٍ مِّنْهُمْ
ثُمَّ تَابَ عَلَيْهِمْ ؕ اِنَّهٗ بِهِمْ رَءُوْفٌ رَّحِيْمٌ ۙ

''நிச்சயமாக அல்லாஹ் நபியின் மீதும், கஷ்ட காலத்தில் அவரைப் பின்பற்றிய ''முஹாஜிர்''கள் மீதும் ''அன்ஸார்கள்'' மீதும் அருள் புரிந்தான். அவர்களில் ஒரு பிரிவினரின் இதயங்கள் தடுமாறிக் கொண்டிருந்த பின்னரும் அவர்களை மன்னித்தான். நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் மீது அன்பும் கிருபையுமுடையோனாயிருக்கிறான். —(9:117)

அல்லாஹ்வின் அருட் பொருத்தத்தைப் பெற்ற அந்த அருட் செல்வர்களை — மதீனாவின் அன்ஸார்களை அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்களின் உலக வாழ்வின் இறுதிக் கட்டத்திலும் புகழ்ந்து போற்றினார்கள். தங்களின் பிரிவினையை எண்ணி கண்ணீருகுக்கின்றார்கள் அன்ஸார்கள் என செவியுற்ற ஏந்தல் பெருமான் (ஸல்) அவர்கள், நடக்க முடியாத அளவு நோயின் பலஹீனம் தங்களை வருத்திய நிலையிலும் இரு தோழர்களைத் தங்களின் இருபுறமும் அணைத்துத் தாங்கியவர்களாகப் பள்ளிக்கு விரைந்தார்கள். மேடையிலமர்ந்து அன்ஸார்களுக்கும் மற்றவர்களுக்கும் தேறுதல் மொழிகள் சொன்ன தூதர் பெருமான் (ஸல்) அவர்கள், ''முஹாஜிர்களே! உங்களுக்கு உதவி புரிந்த அன்ஸார்களுக்கு நீங்கள் நன்மையானதையே செய்யுங்கள். அவர்கள் உங்களுக்காகத் தங்குமிடங்களையும் மார்க்கத்தை

தையும் சித்தப்படுத்தியவர்கள். எனவே அவர்களிடம் நேர்மையாக நடந்து கொள்ளுங்கள். தங்களுக்குக் கிடைத்த லாபத்தை அவர்கள் உங்களோடு சமமாகப் பங்கிட்டுக் கொண்டவர்கள். தங்களின் வீடுகளில் அவர்கள் உங்களுக்கு இடம் ஒதுக்கித் தந்தவர்கள். அவர்கள் வறுமையிலேயே வாடிய போதும் தங்களைவிட உங்களை அதிகம் பரிபாலித்தவர்கள். மனிதர்களின் தொகை அதிகமாகும். அதே சமயம் இந்த அன்ஸார்களின் தொகை படிப்படியாகக் குறைந்துக் கொண்டே வரும். உணவில் உப்பானது இருப்பதே போல் இறுதியில் இவர்கள் மனிதர்களிடையே குறைந்தும் மறைந்தும் காணப்படுவார்கள். நான் புகலிடம் தேடிய என்னுடைய உற்றார்கள் இவர்களே. நான் விட்டுச் செல்லும் என் சம்பத்துகள் இவர்களே. அவர்களின் உதவிகளுக்கு நன்றி செலுத்துங்கள். அவர்களின் குறைகளைக் காணின் பொறுத்துக் கொள்ளுங்கள். நான் சென்றபின் அவர்களில் என்னைக் காணுங்கள். இறைவன் மீதாணையாக நான் உங்கள் மீது அன்புடையவனாக இருக்கின்றேன். அவர்கள் தங்கள் கடமையை செய்து விட்டனர். இனி உங்களின் கடமையே எஞ்சியுள்ளது'' என்றெல்லாம் அன்ஸார்களைப் போற்றிப் புகழ்ந்தார்கள்.

பெருமான் நபி (ஸல்) அவர்களின் பிரிவுக்குப்பின் கிலாஃபத்தை நிறுவச் செய்யவும் பூரணமாக ஒத்துழைத்து, தங்களின் போற்றத் தகுந்த முன்னுதாரணத்தை மீண்டும் ஒரு முறை உலகுக்கு வழங்கினார்கள் மதீனாவின் அன்ஸார்கள்.

தூதர் நாயகம் (ஸல்) அவர்களுக்குத் துணை சேர்த்த அவர்களின் ஆரம்ப காலத் துணிவையும் வேத மார்க்கத்தை வேரூன்றச் செய்ய கடந்த பதினோராண்டு காலத்தில் தாங்கள் செய்த தியாகங்களையும் முன் வைத்து, கிலாஃபத்தின் தலைமை தங்களுக்கே உரிமையென தர்க்கித்த அந்த மண்ணின் மைந்தர்கள் ஆரம்பத்தில் மதீனாவை

மட்டுமே தங்களின் கருத்தில் கொண்டிருந்தார்கள். ஆனால்,

'தலைமை குரைஷிகளுடையதே' என்ற அண்ணலார் (ஸல்) அவர்களின் அருளுரை நினைவூட்டப்பட்டு, குரைஷிகளைத் தவிர்த்த மற்றவர்களின் தலைமையை ஏற்க மாட்டார்களென பிற அரபினத்தவர்களின் மன நிலை சுட்டிக் காட்டப்பட்டு, பரந்த இஸ்லாமியப் பேருலகையே அவர்களின் தொலை நோக்கில் நிழலாடச் செய்யப்பட்டபோது, மறுக்கப்படமுடியாத உண்மையாக விளங்கிய தங்களின்—கிலாஃபத்—உரிமையை திறந்த மனதுடன் முஹாஜிர்களின் கரங்களில் அர்ப்பணித்த அன்ஸார்களின் முன்னுதாரணம் குழப்பங்களுக்கும் குரோதங்களுக்கும் பலியாகிச் சீரழிந்து கொண்டிருக்கும் இன்றைய இஸ்லாமிய உலகம் கூர்ந்து நோக்க வேண்டிய பாடமாகும்.

தலைமையின் மீதுள்ள தங்களின் உரிமையை இழந்திடில் கிலாஃபத்தே மதீனாவை விட்டும் வெளிச் சென்றிடுமே என்ற அச்சமும் அன்ஸார்களுக்கு இருந்திருக்கக் கூடும். அதனைத் தகர்த்தது அன்றைய முஹாஜிர்களில் மேலாளராக விளங்கிய ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் விளக்கம். தலைவர்கள் முஹாஜிர்கள், அன்ஸார்கள் அமைச்சர்கள் என அன்னார் வகுத்த வழிமுறையைத் தகைமையுடன் ஏற்ற அன்ஸார்கள், நாயகத்தின் கலீஃபாக்களுக்கும் துணைவர்களாக இணைந்து வாழ்ந்து, அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் முன்னறிவித்ததே போல் உணவுக்குச் சுவை கூட்டும் உப்பினுக்கொப்ப வாழ்வினுக்கழகூட்டும் மாண்பாளர்களாக மறைந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்—வரலாற்றில்.



# 1. ஹழ்லரத் அபூ அய்யூப் அன்ஸாரி (ரலி)

மக்க மாநகரைத் துறந்து வந்து கொண்டிருந்த முஹாஜிர்கள் மதீனாவாசிகள் பலரின் விருந்தினர்களாக பரவலாகத் தங்கி, தங்கள் மாநபி(ஸல்) அவர்களின் வரவை எதிர் நோக்கிக் காத்திருந்தார்கள். மக்காவில் இஸ்லாத்தை ஏற்றவர்களில் குரைஷிகளிடத்தில் கைதாகிச் சிக்கியிருந்தவர்கள், பயணம் செய்ய முடியாத நோயாளிகள், ஹிஜ்ரத் செய்ய வசதியற்ற வறியவர்கள் தவிர, ஏறத்தாழ மற்ற எல்லோருமே மதினா வந்தாகி விட்டது. இனி அண்ணல் எம்பெருமான் முஹம்மத் (ஸல்) அவர்களும், ஹழ்லரத் அபூ பக்கர், அலீ (ரலி) ஆகியோர் மட்டுமே வர வேண்டியதாயிருந்தது.

ரபீஉல் அவ்வல் மாதம் பிறந்தது. வசந்தம் கூடும் தென்றலோடு சேர்ந்தே சுகந்தம் மணக்கும் செய்தியொன்றும் மதீனாவாசிகளின் செவிகளை எட்டியது! அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களையும் அவர்களின் தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களையும் தேடி மக்கத்துக் குரைஷிகள் பட்ட அலைக்கழிப்புகள், அவ்விருவரின் தலைகளுக்கும் குரைஷிகள் நிர்ணயித்த விலைகள் பற்றியெல்லாம் பாலைவனப் பயணிகள் வந்து பேசிக் கொண்ட போது மக்காவை விட்டும் மாநபிகளார் (ஸல்) தம் தோழரோடு புறப்பட்டு விட்டார்களென்பதை மதீனாவாசிகள் புரிந்து கொண்டனர். ஒளி வீச வரும் அந்த மணிவிளக்கை வரவேற்க முன்னேற்பாடுகள் துவங்கி விட்டன. வீதிகளையும் தத்தம் வீடுகளையும் அலங்கரித்து உதயமாகப் போகும் ஒவ்வொரு விடியலுக்காகவும் விழித்திருப்பதை

வாஸாயபாக்களாயினர் அன்ஸார்களும் அவர்களின் விருந்தினர்களாய்த் தங்கியிருந்த முஹாஜிர்களும்.

மண்டலங்களை வெளிச்சம் பெறச் செய்ய வந்த மெய்யொளிப் பரிதி 'குபா'வில் சில நாட்கள் தங்கி ஒரு வெள்ளிக்கிழமை காலை தன் பயணத்தை மீண்டும் துவக்கியது. உச்சிப் பகல் நேரத்தில் யத்ஸிரிபின் எல்லையை எட்டிய பெருமானார் திருநபி (ஸல்) அவர்கள் தங்களின் ஒட்டகையிலிருந்தும் இறங்கி அங்கு கூடியிருந்த மக்களிடையே பேருரையாற்றினார்கள்; பின்னர் தொழுகை நடத்தினார்கள். அதுவே மதீனாவில் அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் நடத்திய முதல் 'ஜும்ஆ'. 'மதீனா' என்ற சொல் ஒலிக்கத் துவங்கிய நாள் அருவே! யத்ஸிரிபென்னும் அப்பட்டணம் ஒளி பெறத் துவங்கிய நாள் அதுவே!!

மக்களின் உள்ளங்கள் அன்று கொண்ட புளகாங்கிதத்தை என்னென்பேம்! என்னென்பேம்!! மதீனா அன்று பெற்றிருந்த அலங்காரத்தை எச்சொல் கொண்டு விவரித்துரைப்பாம்? கோலாகலங் கொண்ட குதூகலத்தால் அன்று விண்ணின் பொறாமைக்கே ஆளாகி விட்டிருந்த அந்த மண்ணின் மைந்தர்கள் ஆயுதங்களனைத்தையும் எடுத்தணிந்து தங்களை அலங்கரித்துக் கொண்டவர்களாக, தங்களின் வாழ்வைத் துலங்க வைக்க வரும் அந்தப் பேரொளியை வரவேற்க விரைந்து கொண்டிருந்தார்கள். விளையாட்டை மறந்து வீதிகளெங்கும் திரும்பி ஓடிக் கொண்டிருந்த சிறுவர்கள் எழுப்பிய 'ஜாஅ ரஸூலுல்லாஹ், ஜாஅ ரஸூலுல்லாஹ் — அல்லாஹ்வின் தூதர் (ஸல்) வருகிறார்கள், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) வருகிறார்கள்' என்ற குரல்களின் ஒலி கேட்டு வீடுகளிலிருந்த பெண்களெல்லாம் மறைத்துத் தொங்கிய திரைகளை விலக்கி, சாளரங்களின் வழியாகத் தங்களின் கயல்விழிப் பார்வைகளை வீசினர். அவர்களின் மதி வதனங்களில் தான் எத்துணை மகிழ்ச்சி! எந்துணை மகிழ்ச்சி!!

(பயணஞ் செல்வோர்) விடை பெற்றுப் பிரியும் அவ்விளிம்பிலிருந்து பூரண நிலவானது எங்கள் மீது உதித்து விட்டது.

பிரார்த்திக்கக் கரமேந்தும் காலமெல்லாம் இறைவனுக்கு நன்றி செலுத்த நாங்கள் கடமைப்பட்டு விட்டோம்.

தூதேந்தி எங்கள் பால் வந்துள்ள தூயவரே தங் களுக்கு வழிப்பட நாங்கள் கடன்பட்டுள்ளோம்.

—என்ற பொருள்பட இசைக்கப்பட்ட

طَلَعَ الْبَدْرُ عَلَيْنَا مِنْ ثَنِيَّاتِ الْوَدَاعِ
وَجَبَ الشُّكْرُ عَلَيْنَا مَا دَعَا لِلّٰهِ دَاعٍ
أَيُّهَا الْمَبْعُوثُ فِينَا جِئْتَ بِالْأَمْرِ الْمُطَاعِ

பண்ணொலி செவிகளில் தேனாய்ப் பாய்ந்து கொண் டிருந்தது.

அவர்கள் யாவருக்கும் தங்களின் பொன்னொளித் திருமுகம் காட்டி எங்களின் மன்னவர் பெருமான் முஹம் மத் (ஸல்) அவர்கள் தங்களின் நாயனை ஏற்றித் துதித் தவர்களாய் அமர்ந்திருந்த 'அல் கஸ்வா'—அவர்களின் ஒட்ட கம்—நடந்து கொண்டிருந்தது. ஈருலக நாயகரின் பாத கமலங்கள் முதன் முதலாகத் தங்களின் இல்லத்திலேயே பட வேண்டுமென்ற ஆவலால் உந்தப் பெற்று அண்ணலவர் களை அழைக்க ஒவ்வோர் அன்ஸாரியும்தான் முந்திக் கொண்டிருந்தார். முதலில் ஸாலிம் குடும்பத்தைச் சார்ந்த உத்பான் இப்னு மாலிக், அப்பாஸ் இப்னு உபாதா (ரலி), அடுத்து பயாழ்லாக்களைச் சார்ந்த ஜ்ஸியாத் இப்னு லுபைத், ஃபர்வா இப்னு அம்ரு (ரலி), பின்னர் ஸாஇதாக் களின் ஸஅது இப்னு உபாதா, முன்திர் இப்னு அம்ரு (ரலி) என மாறி மாறி முன் சென்று 'அல் கஸ்வா'வின் கயிற்றைப் பற்றியவர்களாக அண்ணலார் (ஸல்) அவர்

களைத் தங்களின் இல்லங்களுக்கேக அழைத்துக் கொண் டிருந்தனர்.

خَلُّوْ سَبِيْلَهَا فَاِنَّهَا مَامُـوْرَةٌ

''அதன் போக்கில் விட்டு விடுங்கள். அது (தன் இரட்சகனால்) கட்டளையிடப் பட்டுள்ளது'' என பெருமானார் (ஸல்) அவர்கள் ஒவ்வொருவரிடமும் கூறிக் கொண்டிருந் தார்கள். அவர்களும் தாங்கள் பற்றிய கயிற்றை விட்டு விலகி நின்றனர். ஒட்டகை தன் போக்கில் நடந்து கொண் டிருந்தது. ஒவ்வொரு வீட்டுக்குடையவரும் தம் வாயிலி லேயே நின்று, ஒட்டகை அவர் முன்னேயே வந்து அமர்ந்து விடாதா என்று ஏங்குபவராகவும், அது தம் இல்லத்தைக் கடந்து செல்லக் கண்டு ஏமாற்றமடைபவராகவுமே இருந் தார். என்றாலும் ஒவ்வொருவரும் அவ்வொட்டகையைப் பின் தொடர்ந்து செல்பவராகவே இருந்தார். தாம் பெறாத அப்பேற்றினை அடையப் போகும் பேறாளர் யார் என் பதை அறிவதற்காக. இறுதியாக அப்பெரும் பேற்றினை அடைந்த நற்பேறாளர் ஸய்யிதினா ஹழ்லரத் அபூ அய்யூப் அன்ஸாரி (ரலி) அவர்களேயாவர்.

அன்னவரின் இல்லத்தின் முன்னே 'அல் கஸ்வா' அமர்ந் தது. உடனே நபி பெருமான் (ஸல்) அவர்கள் இறங்கிட வில்லை; பற்றியிருந்த--அதன் கயிற்றை மட்டுமே சற்றுத் தளரவிட்டார்கள். எழுந்து சற்று தூரம் நடந்து சென்ற அவ்வொட்டகை மீண்டும் திரும்பி வந்து அங்கேயே அமர்ந்து கொண்டபோது ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் அடைந்த ஆனந்தத்துக்கோர் அளவே இல்லை. அண்ணலாரவர்களின் சின்னஞ்சிறு உடைமைகளல்ல—அகி லத்தின் கருவூலங்களே தம் இல்லத்தின் முன் வந்திறங்கு வதைப் போன்ற உணர்வு கொண்டு உவகையுடன் ஓடிப் பறந்து வரவேற்றார்கள் அல்லாஹ்வின் அந்தத் தூதரை.

மதீனாவின் கஸ்ரஜ் கோத்திரத்தில் நஜ்ஜார் குடும்பத்தின் தலைவர்களாக விளங்கியவர்களில் ஒருவரான ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் இயற் பெயர் காலித் இப்னு ஜ்ஸைத்இப்னு கலீப் என்பதாகும். எனினும் அவ்வியற் பெயரை அன்றைய மதீனாவாசிகள் பலரேகூட அறிந்திருக்கவில்லை. பிந்திய காலத்தில் கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்கள் பள்ளியில் தொழுகை நடத்தவும் செல்லமுடியாதவாறு அவர்களின் இல்லம் துரோகிகளால் முற்றுகையிடப்பட்டிருந்த சமயத்தில் ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களைத் தொழுகை நடத்துமாறு சில தோழர்கள் அழைத்தனர் என்றும், அலீ (ரலி) அவர்கள் அவ்வழைப்பை ஏற்க மறுத்து "காலித் இப்னு ஜஸைதைச் சென்றழையுங்கள், அவர் தொழுகை நடத்துவார்" என அத்தோழர்களிடம் கூறியதாகவும், காலித் இப்னு ஜ்ஸைத் எனப்படுபவர் யார் என தெரியாது அத்தோழர்கள் திகைத்ததாகவும் அபூ அய்யூப் அன்ஸாரியின் இயற் பெயரே அது என ஹழ்லரத் அலீ (ரலி) அவர்கள் கூறியதாகவும் வரலாற்றாசிரியர் இப்னு அஃஸீம் குறிப்பிடுகின்றார். அந்த அளவுக்கே ஹழ்லரத் அபூ அய்யூப் அன்ஸாரி (ரலி) அவர்களின் இயற்பெயர் மனிதர்களிடையே அறியப்பட்டிருந்தது.

ஹிஜ்ரத்துக்கு முப்பத்தோராண்டுகளுக்கு முன் பிறந்த ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் ஏறத்தாழ தங்களின் முப்பதாம் வயதில், மதீனா வந்திருந்த நாயகத் தோழர் ஹழ்லரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களின் கரம் பிடித்தே இஸ்லாத்தை ஏற்றிருந்தார்கள். மறு ஆண்டில் ஹஜ்ஜின் போது அக்கபா பள்ளத்தாக்கில் அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களைச் சந்தித்துப் பிரயாணம் செய்தளித்த எழுபத்து நான்கு பேரோடு அவர்களும் ஒருவராக இணைந்திருந்தனர். எனினும் மதீனாவில் புகலிடம் பெற்றுப் புகுந்த பெருமானார் திருநபி (ஸல்) அவர்கள் தம் பாத வடிகள் பட முதலிடமாக அவர்களின் இல்லம் அமைந்த

காரணத்தாலேயே ஹழ்ரத் அபூ அய்யூப் அன்ஸாரி (ரலி) அவர்களுக்கு மக்களிடையே தனியொரு கண்ணியமும் வரலாற்றில் சிறப்பிடமும் கிடைத்து விட்டதெனலாம். இஃதன்றி ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் பாரம்பரிய சிறப்பையும் ஒரு வரலாற்றுச் செய்தி கூறுகிறது:

யமன் நாட்டிலிருந்து இரண்டாம் முறையாக யத்ஸ்ரிபுக்கு வந்த துப்பஉ * மன்னருடன் வந்திருந்த, வேதங் கற்ற நானூறு அறிஞர் பெருமக்களும் தங்கள் வேத நூலின் மூலம் முன்னறிவிக்கப்பட்டிருந்த இறுதி நபியைத் தரிசிக்கும் எண்ணங் கொண்டு யத்ஸ்ரிபிலேயே தங்கிக் கொண்டனர். மன்னர் துப்பஉவும் அவ்விதமே ஆவல் கொண்டு நீண்ட காலம் யத்ஸ்ரிபிலேயே தங்கிக் காத்திருந்தாராயினும் இறுதியில் தம் நாட்டுக்குப் புறப்படுகையில் அந்நானூறு அறிஞர் பெருமக்களும் தங்கி வாழ தனித் தனி இல்லங்கள் அமைத்துத் தந்து, அவர்களுக்கு ஏராளமான செல்வங்களுமீந்து, அத்துடனன்றி பிந்திய காலத்தில் புகலிடம் பெற்று வரப்போகும் இறுதி நபிகளார் தங்கி வாழவும் ஓர் இல்லம் எழுப்பி வைத்து விடை பெற்றார்.

இறுதித் திருநபி பெருமான் (ஸல்) அவர்களைக் காணக் காத்திருந்து, பிரியா விடைபெற்ற மன்னர் துப்பஉ அத்திருநபியவர்களின் பால் தாம் கொண்டு விட்டிருந்த விசுவாசமிக்க உள்ளன்பை, ''அஹ்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடமிருந்து வந்த தூதர் என நான் சாட்சியம் கூறுகிறேன். அவர்கள் வரும் காலம்வரை என் ஆயுள் நீட்டிக்கப் பெறுவேனாகில் அவர்களின் அமைச்சனாகவும் சகோதரனாகவும் என்னை ஆக்கிக் கொள்வேன்'' என்ற பொருள் கொண்ட

شَهِدْتُ عَلَى أَحْمَدَ أَنَّهُ رَسُولٌ مِنَ اللهِ بَارِي النَّسَمِ
فَلَوْ مُدَّ عُمْرِي إِلَى عُمْرِهِ لَكُنْتُ وَزِيرًا لَهُ وَابْنَ عَمِّ

---

* பக்கம்—18 பார்க்க

என்னும் கவிதா வரிகளை ஓர் ஏட்டில் வடித்து அதனை முத்திரையிட்டு யூதரப்பிகளில் தலைமையானவரிடம் தந்து, யத்ஸ்ரிபில் தங்கி வாழப்போகும் அவர் இறுதித் திருநபி (ஸல்) அவர்களைச் சந்திக்கப் பெறுவாராகில் அவர்களுக்குத் தம் ஸலாமைத் தெரிவித்து அவ்வேட்டினையும் அவர்களிடம் சமர்ப்பித்திட வேண்டுமெனவும், ஒருக்கால் அதற்கு முன் அவரை மரணம் அண்மி விடுமாகில் அவர் தம் வழிவாறிடம் அதனை ஒப்படைத்து தாம் கோரியபடியே சேர்ப்பிக்கச் செய்ய வேண்டுமெனவும் கட்டளையிட்டுப் பிரிந்தார். வேத நூல்கள் சாற்றிய அத்தூதர்களின் நாதரைக் காண வேணவா கொண்டு அந்தப் பேரறிஞர்கள் காலமெல்லாம் காத்திருந்தனர். மரண காலம் அவர்களை அண்மி வந்த போது அவர்கள் தங்கள் மக்களிடம் தாங்களறிந்த வேதச் செய்திகளையறிவித்து அவர்களாகிலும் அத்தூதர் நாயகத்தைச் சந்திக்கப் பெறுவார்களாகில் அவர்களை விசுவாசித்து அவர்களின் வழியேற்க வேண்டும் என கூறிப் பிரிந்தனர். அந்த மக்களும் வாழ்ந்து தங்களின் இறுதி நேரத்தை எத்திய போது அவர்களின் மக்களிடம் அவ்வாறே கூறிப் பிரிந்தனர். இவ்வாறாகப் பல தலைமுறைகள் கழிந்தன. இறுதியாகப் பெருமானார் திருநபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத் செய்து ஹழ்லரத் அபூ அய்யூப் அன்ஸாரி (ரலி) அவர்களின் இல்லத்தில் குடிபுகுந்தபோது, மன்னர் துப்பஉவினால் பொறுப்பளிக்கப்பட்ட தலைமை ரப்பியின் வழிவாறாக ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களே விளங்கினர் என்றும், துப்பஉ மன்னர் தந்துச் சென்றிருந்த அமானிதப் பட்டையம் அவர்களிடமே இருந்ததெனவும், அதனை அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களிடம் சமர்ப்பித்து, தம் மூதாதையர்களின் வழிவழியாகத் தாம் செவியுற்றிருந்த—துப்பஉ மன்னரின்—செய்தியையும் எத்தி வைத்தார்களென்றும் ஒரு செய்தி அறியக் கிடைக்கிறது.

  

ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் இல்லம் ஈரடுக்குடையதாயிருந்தது. அண்ணலார் (ஸல்) அவர்களை மேல் வீட்டிலேயே தங்கச் செய்வதற்கான ஏற்பாடுகளை அத்தோழர் செய்தார்கள். எனினும் அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்களைச் சந்திக்க வரும் அன்ஸார்களுக்குச் சிரமம் ஏற்படாதிருக்க தாங்கள் கீழ்வீட்டிலேயே தங்க விருப்பம் தெரிவித்து அவ்வாறே தங்கினார்கள். அன்றைய பொழுதெல்லாம் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களுக்கு அண்ணலரின் பணிவிடையிலேயே கழிந்தது. இரவானதும் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களும் அவர்களின் துணைவியரும் படுக்க மேல் வீட்டில் ஏறிய பொழுது அவர்களின் உள்ளங்களை ஒரு திடுக்கம் ஆட்கொண்டது. தங்களின் நடமாட்டத்தால மேற் கூரையின் தூசுகள் அண்ணலார் (ஸல்) அவர்கள் மீது விழுமே என அஞ்சி அவர்கள் இருவரும் ஒதுங்கி ஒதுங்கிப் புழங்கலாயினர். மிகுந்த எச்சரிக்கையுடனிருந்தும் பதட்டத்திலேயே அவர்களின் பாதம் மோதுண்டு தண்ணீர்ப் பானை உருண்டு விட்டது. அதில் நிரம்பி இருந்த நீர் சிந்தியோட, எங்கே அது ஒழுகி அண்ணலார் (ஸல்) அவர்கள் மீது வழிந்து அவர்களின் உறக்கத்தைக் கெடுத்து விடுமோ என அஞ்சிய அத் தம்பதியர் போர்த்துக் கொள்ள தாங்கள் வைத்திருந்த ஒரே போர்வையை அந்நீரில் தோய்த்து அதனை உறிஞ்சச் செய்து, தாங்கள் அமர்ந்திருந்தவாறே அவ்விரவை நடுக்கும் குளிரிடையே கழித்தனர்.

மறுநாள் இரவும் அவ்விருவரையும் உறக்கம் ஆட்கொள்ளவே இல்லை. அண்ணலார் (ஸல்) அவர்கள் தாங்களாகவே கீழ் வீட்டில் தங்க முடிவு செய்து தங்கிக் கொண்டார்களாயினும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) தாழே தங்கியிருக்க, அவர்களின் தலைக்குமேல் தாங்கள் நடமாடுவதா என்ற மனப்புழுக்கம் அவ்விருவரையும் வருத்தியது. ஆண்டவனின் வேதனையை விலை பேசும் சோதனையோ இது? அழிவு காலத்தை அழைக்கும் அவலச் சுழியோ இது?

என கவலையடைந்த அத்தம்பதியர் அன்றைய இரவையும் ஓர் ஓரத்தில் அமர்ந்திருந்தே கழித்தனர். மறுநாள் காலை அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைச் சந்தித்த ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் தங்களின் அமைதியின்மையையும் இரண்டு நாட்களாக உறக்கமின்றி இரவுகளைத் தாங்கள் கழித்த அவல நிலையையும் எடுத்துரைத்து விழைந்ததன் பேரில், அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் இருப்பிடத்தை மேல் வீட்டிற்கு மாற்றிக் கொண்டார்கள்.

ஏறத்தாழ ஏழு மாத காலம் நபி பெருமான் (ஸல்) அவர்கள் அங்கு தங்கியிருந்தார்கள். மதீனாவின் புனிதப் பள்ளி எழுப்பப்பட்டு அதனையொட்டியே அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களின் புனித குடும்பத்தார் உறைவதற்கான இடங்கள் அமைக்கப்பட்ட நாள் வரை ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் இல்லமே அண்ணலார் (ஸல்) அவர்களின் உறைவிடமாக விளங்கியது. அண்ணலார் (ஸல்) அவர்களின் அன்னை ஆமினா அம்மையாரும் மதீனாவின் னஜ்ஜார் குடும்பத்தையே சார்ந்தவர்களாக இருந்தமையால் அண்ணலார் (ஸல்) அவர்களோடு தூரத்து உறவும் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களுக்கு இருந்தது.

ஹழ்லரத் அபூ அய்யூப்(ரலி)அவர்கள், காலையும் மாலையும் உணவு சமைக்கச் செய்து அண்ணலார் (ஸல்) அவர்களிடம் சமர்ப்பித்திடுவர். சில நாட்களில் மற்ற அன்ஸாரிகளின் இல்லங்களிலிருந்தும் முறை வைத்து உணவு வந்து சேர்வதுண்டு. அண்ணலார் (ஸல்) அவர்கள் தாங்கள் உண்டு மிஞ்சுவதை ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களிடம் தந்து விடுவார்கள். அதனை எடுத்துச் சென்று அண்ணலார் (ஸல்) அவர்களின் விரல்கள் அவ்வுணவில் எங்கே பட்டிருக்கின்றவோ என கவனித்து அங்கேயிருந்தே அபூ அய்யூப் (ரலி) தம்பதிகள் தாங்களும் உண்டு பசி தீர்வர்.

ஒரு நாள் எடுத்துச் சென்ற உணவில் அண்ணலார் (ஸல்) அவர்களின் விரல்கள் பட்ட அடையாளமே காணப் படாது ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் திடுக்கிட்ட னர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏன் உண்ணவே இல்லை; என்ன தவறு நேர்ந்ததோ தங்களால் என ஹழ்ல ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் சென்று விசாரித்தார்கள். அன்றைய உணவில் பூண்டும் வெங்காயமும் சேர்க்கப்பட் டிருந்தது. அதனை உண்டபின் தங்களிடம் நெருங்கி உரை யாட வருபவர்களுக்கு அவற்றின் நெடி சங்கடமளிக்குமென் பதால் தாம் அதனை உண்ணவில்லை என்று விளக்கிய அண்ணலார் (ஸல்) அவர்கள், அவை தடை செய்யப்பட்ட வையல்ல ஆதலால் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) குடும்பத் தினர் அதனை உண்ணலாம் என கூறினார்கள். ஆனாலும் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள், அண்ணலார் (ஸல்) அவர்கள் ஒதுக்கி விட்ட அவற்றைத் தாமும் விரும்ப வில்லை என கூறி தாமும் வாழ்நாளின் இறுதிவரை பூண்டையும், வெங்காயத்தையும் உண்பதை ஒதுக்கி விட்டனர். •

---

• பூமிகளின் அமைப்புகளுக்கேற்ப விளை பொருள் களின் குணங்களிலும் மணங்களிலும் வேறுபாடுகள் காணப் படுகின்றன. அக்கால அராபிய வேனல் பூமியில் விளைந்த அப்பொருள்களின் நெடி, சமைத்து உண்டபின்னும் வீசும் அளவுக்குக் கடுமையானதாக இருந்திருக்க வேண்டும். அதனாலேயே அண்ணலார் [ஸல்] அவர்கள் பிறருக்குச் சங்கடந்தராமலிருக்க அவற்றை ஒதுக்கி விட்டார்கள் போலும். ஆனால் அவற்றை உண்ணாமல் அண்ணலார் [ஸல்] அவர்கள் ஹழ்லரத் அபூ அய்யூப் [ரலி] அவர்களை யும் தடுத்திடவில்லை. மேலும் இன்றைய சமையல் முறை யில் பட்டை, இலவங்கம் போன்ற வாசனைப் பொருள் களின் சேர்க்கையால் அவற்றின் நெடி மாற்றப்பட்டு விடு கிறது. எனவே, பூண்டு, வெங்காயம் ஆகியவை உண்ணத் தடுக்கப்பட்டவையோ என ஐயுறத் தேவையில்லை.

முஹாஜிர்களோடு அன்ஸார்களுக்கு ஏற்படுத்தப்பட்ட சகோதரப் பிணைப்பில் ஹழ்ரத் அபூ அய்யூப் [ரலி] அவர்கள் ஹழ்ரத் முஸ்அப் இப்னு உமைர் [ரலி] அவர்களின் உடன்பிறப்பாகப் பிணைக்கப் பெற்றிருந்தார்கள். அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களின் காலத்தில் நடைபெற்ற அத்தனைப் போர்களிலும் பயணங்களிலும் உடன்பாடுகளிலும் பங்கேற்றுப் பண்பட்ட இவர்கள் அண்ணலார் [ஸல்] அவர்கள் பாலும் அவர்களின் குடும்பத்தினர் பாலும் கொண்டிருந்த பற்றும் பாசமும் அளவிடற்கரியதாகும். அண்ணலவர்களின் மறைவுக்குப் பின்னும் ஹழ்ரத் அலீ [ரலி] அவர்களையே கிலாஃபத்துக்குரியவர்களாக எண்ணிய இவர்கள் ஹழ்ரத் அபூபக்கர் [ரலி] அவர்களின் கரத்தில் பிரமாணம் செய்வதிலும் சிறிது காலம் தாமதித்தனர். ஆயினும் ஹழ்ரத் அலீ (ரலி) அவர்களே ஹழ்ரத் அபூபக்கர் [ரலி] அவர்களின் கரத்தில் பிரமாணம் செய்தளித்த பின்னர் அவர்களையே தொடர ஹழ்ரத் அபூ அய்யூப் [ரலி] அவர்களுக்கு எந்தத் தயக்கமுமேற்படவில்லை.

ஆரம்ப கலீஃபாக்களின் காலப் போர் வரலாறுகளில் இவர்களின் ஈடுபாடுகள் விரிவாகக் காணப்படாவிடினும் பைஸான் போர்க் களத்திலும், எகிப்தின் வெற்றிக்குப் பின் ஆப்பிரிக்காவின் வடபுறம் நடைபெற்ற படையெடுப்புகளிலும் இவர்கள் பங்கேற்ற குறிப்புகள் கிடைக்கவே செய்கின்றன. மார்க்கப் போர் புரிவதையே மேலான நற்செயலாகக் கருதிய இவர்கள் தங்களின் முதுமையிலும் ஓய்ந்தமராத வரலாற்றைத் தந்துள்ளனர். கலீஃபா அலீ [ரலி] அவர்களின் காலத்தில் காரிஜீக்களுக்கு எதிராக நஹ்ரவான் போர்க்களத்தில் இவர்களே முன்னணிப் படையின் தலைமையேற்றிருந்தார்கள். ஹழ்ரத் அலீ (ரலி) அவர்களின் புகழ் பெற்ற வெள்ளைக் கொடி இவர்களின் கரத்திலேயே இருந்தது.

துரோகியொருவனின் கரத்தினால் தாக்குண்டதன் விளைவான ஹழ்ரத் அலீ (ரலி) அவர்களின் பிரிவு இவர்களைத் துயருற்றுச் சற்று சோர்வடையச் செய்ததானாலும் போர் ஆர்வத்தால் அவர்களின் நரம்புகள் புடைத்த வண்ணமே இருந்தன. ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்களின் காலத்தில் யஸீதின் தலைமையில் ஒரு படை கான்ஸ்டான்டிநோபிலை நோக்கிச் சென்ற சமயம் ஏறத்தாழ எண்பது வயதுகளை அடைந்திருந்த ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் தங்களின் முதுமையைப் பற்றிய கவலையே கொள்ளாது அப்படையில் கலந்து சென்றார்கள். மதீனாவிலிருந்து ஸிரியாவையும் கடந்து வந்த நீண்ட பாலைவனப் பயணத்தை முடித்து முஸ்லிம்கள் கடல் மார்க்கமாகவும் தரை மார்க்கமாகவும் கான்ஸ்டாண்டிநோபிலை எத்திப் போர் நடத்தினர். ஆனால் ஐரோப்பிய தட்ப வெட்ப நிலை ஒத்துவராது பல முஸ்லிம் வீரர்கள் நோயுற்றனர். அவர்களுள் ஒருவரான ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் அம்முதுமையின் காரணமாகவும் அதிகம் நலிவுற்றார்கள். இனி நலமடையும் நம்பிக்கையை இழந்து விட்ட — மாநபியின்—அம்முது பெரும் தோழர் மரணத்தின் மடியில், தம்மைக் காண வந்த படைத் தலைவர் யஸீதிடம் இறுதியான தம் ஆவலை வெளியிடலானார்கள்:

''முஸ்லிம்களனைவருக்கும் என் ஸலாமை எத்தி வைக்க வேண்டும்.

''படைத்த இரட்சகனுக்கு எவரையும் இணையாக்காது உலகைப் பிரிந்து செல்லும் ஒருவருக்கு சுவனம் விதிக்கப் பட்டு விட்டதென்று அண்ணலெம் பெருமான் [ஸல்] அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன் என்பதை அவர்களுக்கு அறிவித்திட வேண்டும்.

''என் உயிர் பிரிந்து விட்டாலும் இந்த என் உடலை எதிரிகளின் இந்தப் பூமியில் எத்துணை தொலை வரை நீங்

கள் பயணம் செய்வீர்களோ அதுவரை எடுத்துச் சென்று அங்கேயே அடக்கம் செய்ய வேண்டும்'' என ஹழ்லரத் அபூ அய்யூப் [ரலி] அவர்கள் தம்முடைய வேணவாக்கள் மூன்றினை வெளியிட்டு உலகைப் பிரிந்தார்கள். முஸ்லிம்கள் அவர்களின் பிரிவால் மிகச் சோகமடைந்தார்கள்; அவர் களின் புனித உடலை அவர்கள் கோரியபடி தங்களோ டேயே சுமந்துச் சென்று கான்ஸ்டாண்டிநோபிலின் கோட்டையின் தலைவாசலில் அடக்கம் செய்தார்கள்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் மதீனாவில் குடி புகுந்த ஆரம்ப காலத்திலிருந்து அவர்கள் இவ்வுலக வாழ்வைப் பிரிந்த இறுதிச் சமயம் வரையிலான நீண்ட தோழமையில் திளைத்த பேற்றால் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் சிறந்த அறிவு ஞானத்தையும் குணச் சிறப்பையும் மார்க்கப் பற்றையும் பெற்று விளங்கினார்கள். அன்றியும் அவர்களின் இறுதிகாலம் வரையிலும் மாநபி (ஸல்) அவர்களின் தோழர்களாலும், புனித குடும்பத்தார் களாலும் மிகுந்த கண்ணியத்தோடும் அவர்கள் மதிக்கப் பெற்றார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ்நாளின் போதே திருமறையை முழுமையாக மனனம் செய்த மிக மேன்மை பெற்ற தோழர்களில் ஒருவராகத் திகழ்ந்த ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் நாயகத் திருமேனி (ஸல்) அவர் களின் ஒரு நூற்று ஐம்பத்து ஐந்து அருள் மொழிகளை உலகுக்கு அறிவித்துள்ளார்கள். ஹழ்லரத் அபூ உமாமா பாஹிலீ, பர்ராஅ இப்னு ஆஸிப், உர்வா இப்னு ஜ்ஸுபைர் (ரலி) போன்ற நபிமணித் தோழர்கள் மட்டுமின்றி ஹதீஃஸ் அறிவிப்பாளர்களில் முன்னிடம் பெற்ற அருள்ஞானக் கருவூ லங்களான ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு உமர், அனஸ் இப்னு மாலிக் [ரலி] போன்றோரும் கூட ஹழ்லரத் அபூ

அய்யூப் (ரலி) அவர்களிடம் அமர்ந்து பாடங் கேட்டுள்ளனர். இத்தனைக்கும் பின்னும் மிகப் பிந்திய காலத்திலும், தாம் கேட்டிராத ஏதேனும் ஹதீஸை எவரேனும் அறிவிப்பதாக ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் செவியுறுவார்களாயின் அதனை அவரின் வாயிலாக நேரடியாகக் கேட்டறிய எவ்விதச் சிரமத்தையும் பொருட்படுத்தாது அவர்கள் பயணம் செய்பவர்களாயிருந்தார்கள்.

ஹழ்லரத் முஆவியா [ரலி] அவர்களின் காலத்தில் எகிப்தின் ஆளுநராக இருந்த ஹழ்லரத் உக்பா இப்னு ஆமிர் (ரலி) அவர்கள் அறிவித்ததாக ஒரு ஹதீஸைச் செவியுற்ற ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் அதனை அவரிடமே நேரடியாகக் கேட்டுத் தெளிவதற்காக மதீனாவிலிருந்து எகிப்துக்குப் பயணம் செய்து, அவ்வருள் மொழியைத் தெளிவாகக் கேட்டறிந்து ஹழ்லரத் உக்பா இப்னு ஆமிர் (ரலி) அவர்களுக்கு நன்றி செலுத்தி மதீனா திரும்பி விட்டார்கள்.

நபிமொழியைக் கற்பிப்பதிலும், மேலும் கற்பதிலும் கருத்தாயிருந்ததோடன்றி நபி வழியைப் பேணுவதிலும் பேணச் செய்வதிலும் கூட அவர்கள் கவனமதிகம் செலுத்தினார்கள். நபிமணியின் வழிமுறைக்கு மாறான நடவடிக்கைகளை எங்கே எவரிடம் கண்டாலும் அதனைக் கண்டிக்க, திருத்த அவர்கள் தயங்கினதேயில்லை.

அவர்கள் அறியாத நபிமொழியை அவர்களுக்கு அறிவித்த அதே ஆளுநர் உக்பா இப்னு ஆமிர் (ரலி) ஒரு மாலை நேர (மக்ரிபு)த் தொழுகைக்கு வரத் தாமதமாகி விட்டது. தொழுகையை முடித்த அவரை அணுகி ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள், ''உக்பா! இது எந்த நேரத் தொழுகை என நான் கணிப்பது?'' என வினவினார்கள். முக்கிய அலுவல் காரணமாகத் தாம் வர சற்றுத் தாமதமாகி விட்டதாக ஹழ்லரத் உக்பா இப்னு ஆமிர்

(ரலி) அவர்கள் கூறக் கேட்ட ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள், ''நபி பெருமான் (ஸல்) அவர்களின் தோழமை கண்டவராவீர் நீர் என்பதை மறந்திட வேண்டாம். உம்மைக் காணுகின்றவர்கள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் இந்நேரத்தில் தொழுதிருப்பார்கள் என்றல்லவோ எண்ணுவர். அண்ணலார் [ஸல்] அவர்கள் மக்ரிபுத் தொழுகையைத் துரிதப்படுத்தினார்களன்றோ, அவர்களின் நடைமுறைக்கு மாறாகச் செயலாற்றுவது தோழமை கண்டவருக்கு அழகன்று'' என அறிவுரை பகர்ந்தார்கள்.

ஹழ்லரத் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களின் மகனார் அப்துர் ரஹ்மான் [ரலி] அவர்கள் நான்கு கைதிகளின் கை, கால்களைக் கட்டி வைத்து கொன்று விட்டார்கள் என்றறிந்தபோது அவர்களை அழைத்து, அண்ணலெம் பெருமான் [ஸல்] அவர்கள் இத்தகைய கொடுமைகளைத் தடுத்துள்ளார்கள் என கண்டித்த ஹழ்லரத் அபூ அய்யூப் [ரலி] அவர்கள் ஒரு கோழியையும் கூட அவ்விதம் கொல்வதைத் தாம் விரும்பவில்லை என எச்சரித்தார்கள்.

ரோமானியப் படையெடுப்பின்போது ஓர் அதிகாரியிடம் சிறைபட்டிருந்த ஒரு ரோமப் பெண்மணி அழுது புலம்பிய கோரம் இவர்களை வருத்தியது; அவளை அண்மி அவளின் துயரம் பற்றி விசாரித்தார்கள். தன் செல்வனை அவ்வதிகாரி பிரித்தெடுத்துச் சென்று விட்டார். அவனின் கதி என்னவாயிற்றென்றே தனக்குத் தெரியவில்லை என அப்பெண் முறையிட்டாள். அதனைக் கேட்டதுமே விரைந்து சென்ற ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் அச்செல்வனைத் தேடிப் பிடித்து அப்பெண்மணியிடம் சேர்ப்பித்து விட்டார்கள். அவர்களின் தலையீட்டைக் கண்டு வெறுப்புற்ற அவ்வதிகாரி படைத் தலைவரிடம் முறையிட்டார். படைத் தலைவர் அழைத்து விசாரித்தபோதும் ஹழ்லரத்

அபூ அய்யூப் (ரலி) அவர்கள் பெற்றவளை விட்டும் பாலக னைப் பிரிக்க பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு போதும் அனுமதித்ததேயில்லை என்று தர்க்கித்தார்கள்.

ஸிரியாவிலும் எகிப்திலும் பயணம் செய்த காலை மக்கள் கஅபாவின் திசையில் முகம் திருப்பி அமரத் தக்க வாறு மலக் கொல்லைகளை அமைத்திருந்ததைக் கண்டும் அவர்கள் அமைதி கொள்ளவில்லை. கிபுலாவின் புறம் முகம் திருப்பியோ புறம் திருப்பியோ அமர்ந்து மலம் கழிப்பதை அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் தடுத்துள் ளார்களே என மக்களுக்கு அறிவுறுத்தினார்கள்.

ஸாலிம் இப்னு அப்துல்லாஹ் அன்ஸாரி (ரலி) அவர் கள் விடுத்த வலீமா விருந்தேற்றுச் சென்ற ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள், வீட்டின் வாயிலில் தொங்க விடப்பட்டிருந்த திரைச் சீலையில் வரையப்பட்டிருந்த உருவப்படத்தைக் கண்டு வெகுண்டார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களால் தடுக்கப்பட்ட அதனை எடுத்துரைத்து அத்திரைச் சீலை அகற்றப்பட்ட பின்னரே விருந்துண்ண அவ்வீட்டினுள் நுழைந்தார்கள்.

மதீனாவின் ஆளுநராக வந்த மர்வான் பள்ளியின் முஅத்தின்களிடம் தாம் வந்து சேரும் வரை தொழுகை யைத் துவக்கிடாமல் எதிர்பார்த்திருக்கக் கட்டளையிட் டார் என்பதை அறிந்தபோது இவர்கள் எவ்வித அச்சமும் கொள்ளாது நேரடியாகச் சென்று அவரைக் கண்டித்தார் கள். ''ஆளுமை செலுத்த வந்துள்ள உமக்கு, அல்லாஹ் வைத் தொழுவதினின்றும் மக்களைத் தாமதிக்கச் செய்ய எந்த உரிமையுமில்லை. வணக்க வழிபாடுகளில் இறைவனின் தூதரின் வழிமுறைக்கு மாற்றமாக நீர் நடப்பீராயின் உமக்கு நாங்கள் வழிப்பட்டு நிற்க முடியாது'' என துணிந்து எச்சரித்தார்கள்.

ஹழ்லரத் அபூ அய்யூப் அன்ஸாரி (ரலி) அவர்கள் முழுக்கவும் ஹழ்லரத் அலீ [ரலி] அவர்களின் ஆதரவாளராகவே இருந்தார்கள் எனினும் அவர்களின் வாக்குகள் எல்லாத் தரப்பினராலும் மரியாதையுடன் பேணப்பட்டு வந்தன. அதற்கடிப்படையான காரணம் அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களுக்கு அவர்கள் ஆரம்ப நாளில் ஊழியம் புரியப் பெற்ற பேறே எல்லாம். அண்ணல் எம் பெருமான் [ஸல்] அவர்களை மட்டுமல்ல அவர்களின் குடும்பத்தவர்களனைவரையுமே அதிகமாக நேசித்து மகிழ்ந்த ஹழ்லரத் அபூ அய்யூப் [ரலி]—அவர்களை அண்ணலெம் பெருமானார் [ஸல்] அவர்கள் மட்டுமின்றி அவர்களின் குடும்பத்தவர்களும் கூடப் பெரிதும் நேசித்து மதித்தார்கள்.

ஆயிஷா நாயகியாரின் மீது அவதூறு பரப்பப்பட்ட சமயம் அபூ அய்யூப் [ரலி] அவர்களிடம் அவர்களின் துணைவியார் உம்மு அய்யூப் [ரலி] ''மக்கள் பேசிக் கொள்வதைத் தாங்கள் செவியுற்றீர்களா?'' என வினவினார்.

''ஆம் செவியுற்றேன். அத்தனையும் புரட்டுகளே'' என்ற ஹழ்லரத் அபூ அய்யூப் [ரலி] அவர்கள், ''பழிக்காளாக்கும் அத்தகைய செயலை நீ செய்வாயா?'' என தம் மனைவியாரையே கேட்டார்கள்.

''ஆண்டவன் மீதாணையாக ஒரு போதும் செய்ய மாட்டேன்'' என அவர் கூறக் கேட்டு, ''உன்னை விட மிக உயர்ந்த படித்தரம் பெற்ற உத்தமி ஆயிஷா நாயகியார்-அவர்கள் எப்படி அச்செயலின்பால் திரும்பியிருக்க முடியும்?'' என வினவினார்கள் மாநபியின் அத்தோழர்.

கலீஃபா உமர் (ரலி) அவர்களால் — பத்ருப் போரில் கலந்து கொண்ட தகுதியை வைத்து ஐயாயிரம் திர்ஹங்கள் ஊதியம் நிர்ணயிக்கப்பட்டிருந்த ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) —அவர்கள் பெற்றிருந்த மற்ற சிறப்புகளைக் கொண்டு

அவ்வூதியத்தை ஹழ்ரத் அலி (ரலி) அவர்கள் கிலாஃபத்தை ஏற்றபோது இருபதினாயிரம் திர்ஹங்களாக உயர்த்தினார்கள். கூஃபாவைத் தலைநகராக்கிக் கொண்டபோது ஹழ்ரத் அலி (ரலி) அவர்கள் மதீனாவின் ஆளுநராக ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களையே நியமனம் செய்தார்கள்.

அக்காலை பஸராவுக்கு ஒரு முறை ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் சென்றார்கள். அச்சமயம் பஸராவின் ஆளுநராக இருந்த ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களின் அம்முதுபெருந் தோழரை வரவேற்று மகிழ்ந்ததோடு, ''ஹிஜ்ரத் செய்து வந்த தூதர் நாயகம் (ஸல்) அவர்களைத் தாங்கள் உபசரித்ததே போன்று இன்று தங்களையும் நான் உபசரிப்பேன்'' என்றவர்களாக தங்களின் வீட்டையே பூரண உடைமைகளோடு ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களுக்கு அன்பளிப்பாக ஒதுக்கித் தந்து, தங்க வைத்து உபசரித்தார்கள்.

நபி பெருமான் (ஸல்) அவர்களின் நினைவு வருத்தும் சமயமெல்லாம் அவர்கள் மறைந்து வாழும் மண்ணறையின் அருகேயமர்ந்து மன ஆறுதல் பெறுவார்கள் ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி). ஒரு சமயம் உணர்வு மீக்குற்று அவர்கள் தம் முகத்தையே அண்ணலவர்களின் மண்ணறையின் மீது வைத்துப் புரட்டிப் புரட்டி முகரலாயினர். அச்சமயம் அவ்வழியே வந்து விட்ட ஆளுநர் மர்வான் வியப்புடன் அவர்களின் செய்கையைப் பார்வையிடலானார். அவரை ஏறிட்டு நோக்கிய ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் தாம் பெருமானார் (ஸல்) அவர்களின் பெருஞ்சன்னிதானத்தின் முன்னேயேயன்றி மண்ணறையின் முன் அமர்ந்துள்ளதாக உணர்வு கொள்ளவில்லை என்றுரைத்தார்கள். அவர்களை விட அதிகமாகத் தாம் நெறிமுறைகளைக் கற்றவரல்லர் என்ற அச்சம் மர்வானுக்கும் இருந்ததால் அவர் அமைதியுடன் விலகிச் சென்றார். —மஸ்னதே இப்னு ஹம்பல்

மார்க்க நெறிமுறைகளில் ஐயங்கள் தோன்றும்போது நபிமணித் தோழர்கள் ஹழ்லரத் அபூ அய்யூப் [ரலி] அவர்களிடம் விளக்கம் கேட்பதுண்டு. இஹ்ரம் அணிந்த நிலையிலால் துடக்கேற்பட்டு, குளிக்கக் கடமைப்பட்டு விட்டால் தலையைத் தேய்க்கலாமா கூடாதா என்ற ஐயமேற்பட்ட ஒரு சமயம் ஹழ்லரத் முஸவ்விர் இப்னு மக்ரமா [ரலி] அவர்கள் தலையைத் தேய்த்துக் குளிக்கலாகாதென்றார்கள்; ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் [ரலி] அவர்கள் தேய்த்தே குளிக்கவேண்டுமென்றார்கள். தங்கள் கூற்றுகளில் எது சரியெனத் தெரிந்து கொள்ள அவ்விரு பெரியார்களும் அப்துல்லாஹ் இப்னு ஹுனைன் [ரலி] என்ற தோழரைச் சென்று ஹழ்லரத் அபூ அய்யூப் [ரலி] அவர்களிடம் கேட்டு வர அனுப்பினார்கள். அவர் சென்ற சமயம் ஹழ்லரத் அபூ அய்யூப் [ரலி] அவர்களும் குளியலறையிலேயே இருந்தார்கள். வந்தவர் வெளியில் நின்றவாறே உரத்து தம் ஐயத்தை வினவ தலையை மட்டும் வெளியில் நீட்டிய ஹழ்லரத் அபூ அய்யூப் [ரலி] அவர்கள், தங்களின் தலையைத் தேய்த்த வண்ணமே, ''அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களை இப்படித்தான் குளிக்க நான் கண்டேன்'' என்றுரைத்தார்கள்.

ஆஸிம் இப்னு ஸுஃப்யான் ஃஸக்கஃபீ என்பவர் ஒரு போருக்கெனப் புறப்பட்டார். இடைவழியிலேயே போர் முடிந்துவிட்ட செய்தி கிடைத்து மனம் மிகச் சோர்ந்த நிலையில் அவர் ஹழ்லரத் முஆவியா [ரலி] அவர்களின் அவைக்கு வந்தார். அச்சமயம் ஹழ்லரத் முஆவியா [ரலி] அவர்களுடன் எகிப்தின் அன்றைய ஆளுநர் உக்பா இப்னு ஆமிர் (ரலி) அவர்களும் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களும் அமர்ந்திருந்தனர். மூவருமே மாநபி (ஸல்) அவர்களின் தோழமை கண்ட பெரியார்களேயானாலும் ஆஸிம் இப்னு ஸுஃப்யான், மற்ற இருவரையும் பொருட்படுத்தாது தம் மனவிசாரத்தை ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி)

அவர்களிடயே தெரிவித்து விளக்கம் கேட்டார். அவர் கேட்ட விளக்கத்தை ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் விவரித்தார்களாயினும் ஆட்சிப் பொறுப்பிலுள்ள மற்ற இருவரையும் அவர் பொருட்படுத்தாததை அவர்கள் பொருந்தவில்லை. பெருந்தன்மையுடன் அவ்விருவர் புறமும் திரும்பி நாம் அவருக்களித்த விடை சரியேயல்லவா? என கேட்டு அவ்விருவரையும் கவுரவப்படுத்தினார்கள்.

பத்ருடைய களம் கண்ட நாயகத் தோழராக இருந்தும் ஹுதைபியாவில் பொருந்தப்பட்ட பிரமாணம் செய்த மேலான ஸஹாபியாக இருந்தும் ஒரு சாதாரண போர் வீரராகவே அவர்கள் கான்ஸ்டான்டிநோபில் படையெடுப்பில் கலந்து சென்றார்கள். என்றாலும் அவர்களே படைத் தலைவர் போல் படைத்தலைவர்களாலேயே கண்ணியப் படுத்தப்பட்டார்கள். ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்கள் அப்படையினருக்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளையும் பலப்பட செய்தே அனுப்பி வைத்தார்கள். படையினர் கடல் கடந்து ஐரோப்பாவில் கரையிறங்கியும் விட்டனர். ஆனால் அவர்கள் இன்னும் பாசறையமைத்துச் சித்தமாகு முன்னதாகவே ரோமானிய மன்னர் கான்ஸ்டன்டைன் அவர்கள் மீது தாக்குதலைத் துவக்கி விட்டார். முஸ்லிம் படையினரும் சமாளித்து வீராவேசத்தோடு போராடினார்கள். அலையலையாகப் பாய்ந்து வந்த எதிரிகளின் அணிகளைப் பிளந்து ஊடுருவிய அவர்களின் ஆக்ரோஷம் கடூரமாக இருந்தது. அப்துல் அஸீஜ் இப்னு ஜ்ஸுரார என்ற வீரர் தன்னந் தனியராகவே ரோமப் படையினரிடையே ஊடுருவி வெகு தொலைவுக்கு உட்சென்று விட்டார். உயிரைப் பற்றிய கவலையற்று உட்புகுந்த அவரை விமர்சித்து சிலர்,

وَلَا تُلْقُوا بِأَيْدِيكُمْ إِلَى التَّهْلُكَةِ

ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி)

''உங்களை நீங்களே ஆபத்திற்குள்ளாக்கிக் கொள்ளாதீர்கள்'' என்ற வேதக்கட்டளையை ஓதிக்காட்டினார்கள். அதனைச் செவியுற்ற ஹழ்ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள், ''அவ்வாறல்ல முஸ்லிம்களே! திருமறையின் திருவசனத்தைப் புரிந்து கொள்வதில் நீங்கள் தவறிழைத்துவிடாதீர்கள். இந்த வசனம் இறங்கிய காரண காரியத்தை நானறிவேன். மதீனாவின் அன்ஸார்களாகிய நாங்கள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் எதிரிகளோடு போரிடுகையில் எங்களின் மனைவி மக்களை மறந்தோம்; எங்களின் நில புலன்களை மறந்தோம்; வேளாண்மைகளை மறந்தோம். இறுதியாக நாங்கள் எதிரிகளை முறியடித்தோம். வெற்றியினால் நாங்கள் மிகைத்து நின்றபோது வளம் எங்களை அணைத்தது. இஸ்லாத்தின் புகழ் மணக்கத் துவங்கியது. நிம்மதிப் பெருமூச்சு கொண்ட நாங்கள் இனிப் போரிட அவசியமில்லை என நினைத்தோம்; பொருள்களை அல்லாஹ்வின் பாதையில் செலவழித்தது போதும். இனி சேமிப்போம் என எண்ணலானோம். அத்தருணத்தில்தான் அல்லாஹ் தன் தூதரின் வாயிலாக,

وَاَنْفِقُوْا فِيْ سَبِيْلِ اللّٰهِ وَلَا تُلْقُوْا بِاَيْدِيْكُمْ اِلَى التَّهْلُكَةِ ۛ وَاَحْسِنُوْا ۛ
اِنَّ اللّٰهَ يُحِبُّ الْمُحْسِنِيْنَ ۝

''நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் தாராளமாகச் செலவு செய்யுங்கள். தவிர, (யுத்தம் போன்ற சமயங்களில் செலவு செய்யாது) உங்களை நீங்களே ஆபத்திற்குள்ளாக்கிக் கொள்ளாதீர்கள். அன்றி, (பிறருக்கு உதவி) நன்மையும் செய்யுங்கள். நிச்சயமாக அல்லாஹ் (பிறருக்கு) நன்மை செய்வோரை நேசிக்கிறான்'' என்ற (2 : 195) திருவசனத்தை எங்கள் பால் அருளினான். எனவே நீங்கள் போரில் ஏற்படும் உயிரின் இழப்புகளை அழிவென்று எண்ணாதீர்கள். உண்மையில் நீங்கள் பின்னடைந்து ஒதுங்கினாலே பேரிழப்பைச் சந்திப்பீர்

கள்'' என விரித்துரைத்தார்கள். அதன் பலனாக உணர்ச்சி பெற்ற முஸ்லிம் படையினர் தங்களின் பயங்கரத் தாக்குதலால் ரோமானியப் பெரும்படையைப் பின்னடைந்து கோட்டையினுள் புகுந்து கதவுகளைத் தாழிட்டமர்ந்திடச் செய்தார்கள்.

ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் மறைவுக்குச் சில நாட்களுக்குப் பின் முஸ்லிம்கள் தங்கள் முற்றுகையை நீக்கித் திரும்பி விட்டார்கள். ஆனாலும் அவர்கள் ரோமர்களின் வல்லமையை முடமாக்கியே திரும்பினார்கள். பின்னர் ஹிஜ்ரி 857-ல் ஸுல்தான் முஹம்மது ஃபாத்திஹ் என்பவரால் கான்ஸ்டான்டிநோபில் வெற்றி கொள்ளப்பட்டது. அச்சமயம் தரையோடு தரையாக மறைந்து போயிருந்த ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் மண்ணறை ஆக்கா ஷம்ஸுத்தின் என்ற ஞான மகானுக்கு கனவின் மூலம் காட்டப்பட்டது. அதன் மீது ஓர் அலங்கார மண்டபத்தை எழுப்பிய ஸுல்தான் முஹம்மது அழகிய ஒரு பள்ளிவாயிலையும் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் பெயரால் நிர்மாணித்தார். பின்னர் அதில் தொழுகையும் நடத்தினார். அவரின் கரத்தில் ஒரு வாளை வழங்கி ஹழ்லரத் ஆக்கா ஷம்ஸுத்தீன் (ரஹ்) ஸுல்தானின் நலத்துக்கும் வளத்துக்கும் பிரார்த்தனை செய்தனர். அது முதல் துருக்கி ஸுல்தான்கள் ஒவ்வொருவரும் பட்டம் சூட்டிக் கொள்ளும் போதும் அப்பள்ளிவாயிலில் வந்து ஹழ்லரத் ஆக்கா ஷம்ஸுத்தீன் (ரலி) அவர்களித்த அவ்வாளை அணிந்து கொள்வதைச் சம்பிரதாயமாக்கிக் கொண்டனர். அங்குதான் அவர்கள் மக்களிடம் பிரமாணமும் பெறுவர். முஸ்தஃபா கமால் அதிபராகி துருக்கியின் முடியாட்சி முடிக்கப்பட்ட போதே இச்சம்பிரதாயம் நிறுத்தப்பட்டுப் போனது.

ரோமர்கள் ஒருக்கால் மண்ணறையைச் சிதைக்க நேரிட்டு விடக் கூடாதென்ற எண்ணங் கொண்டு ஹழ்ல

ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் உடலை இரவோடிர வாகவே படையினர் அடக்கம் செய்தார்களென கூறப்படு கிறது. ஆனால் எப்படியோ செய்தியறிந்து கொண்ட ரோமானிய மன்னர் கான்ஸ்டன்டைன் ''நீங்கள் இங்கிருந்து திரும்பிய பின்னர் மண்ணறையைத் தோண்டி அதில் எலும்புகளே கிடைத்தாலும் எடுத்தெறிவோம்'' என சொல்லியனுப்பினார். அவ்வாணவச் சொல்லைக் கேட்ட யஸீத், ''அப்படி நீங்கள் செய்திடுவீர்களானால் ஸிரியப் பூமியில் உள்ள உங்களின் தவமடங்கள் அத்தனை யும் தகர்த்தெறியப்படும்; கல்லறைகள் சிதைத்தொழிக்கப் பட்டுப் போகும்'' என பதிலுக்குச் சொல்லியனுப்பினார். அதனைக் கேட்டு கான்ஸ்டன்டைன், ''வேண்டாம் கன்னித் தாய் மர்யத்தின் மீதாணையாக நாங்கள் உங்கள் நாயகத் தோழரின் மண்ணறையைத் தொடவும் மாட்டோம்'' என உடன்பாடு செய்துக் கொண்டாராயினும் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் மண்ணறையை நெருங்கவே முடி யாதபடி ரோமர்களின் இதயங்களை ஒருவிதத் திடுக்கம் ஆட்டிப் படைத்தது.

—என்ற செய்தியை எழுதும் வரலாற்றாய்வாளர்கள் அதற்குக் காரணமான அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் ஓர் அருள்வாக்கையும் குறிப்பிடுகிறார்கள்: ஹிஜ்ரத்தையடுத்த ஆரம்ப காலத்தில் யூதர்களோடு சேர்ந்து மதீனாவின் நயவஞ்சகர்களும் முஸ்லிம்களுக் கெதிரான சதிகளைச் சூழலானபோது அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களை எவருடைய திடீர்த் தாக்குதலுக்கும் பலியாகி விடாதிருக்க இரவு படுக்கும் போதும் ஆயுதமணிந்தே உறங்கும்படியாகவும், மற்றவர் உறங்குகையில் எவரேனும் சிலர் விழித்துக் காவல் மேற்கொள்ளும் படியாகவும் எச்சரித்திருந்தார்கள். அவ் வாறே முறை வைத்துக் காவல் மேற்கொண்டபோது ஓர் இரவு அண்ணலார் (ஸல்) அவர்களின் இல்லத்தை ஹழ்ல

ரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் காத்து நின்றனர். விடிந்ததும் அவர்களைக் கண்ட அண்ணலார் (ஸல்) அவர்கள், ''அபா அய்யூப்! அல்லாஹ், தன் நபியைப் பாதுகாத்த உம்மை அவனுடைய பாதுகாவலில் நிலை பெறச் செய்வானாக'' என வாழ்த்தினார்கள். அதன் பிரதிபலமே ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் மரணமடைந்த பின்னும் அவர்களின் புனித உடல் எதிரிகள் எவரும் நெருங்கா வண்ணம் பாதுகாக்கப்பட்டது—என்றெழுதப்படுகிறது.

பஞ்சகாலத்தில் ரோமர்கள் மழை வேண்டி அம்மண்ணறையின் மருங்கில் நின்று வேண்டுதல் புரிவர் என்றும் இறைவனும் தன் தூதரின் தோழரின் மகத்துவம் விளங்க, அவர்களின் வேண்டுதலை ஏற்று மழை பொழிவித்தான் என்றும் வரலாற்றாசிரியர் இப்னு ஸஅத் குறிப்பிடுகின்றார்.

ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்கள் வாழ்க்கையில் இரண்டு பெண்களை மணமுடித்திருந்தார்கள். முந்தின மனைவி உம்மு ஹஸன் இப்னு ஸைத் இப்னு ஃஸாபித்—இவரின் வயிற்றில் அப்துர் ரஹ்மான் என்ற மகன் பிறந்து இளமையிலேயே மரணித்து விட்டார். இரண்டாம் மனைவியார் உம்மு அய்யூப்என்றழைக்கப்பட்டார். இவரே தம் கணவரோடிணைந்து அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை உபசரிக்கப் பேறு பெற்றவர். இவர் மூலம் அண்ணலார் (ஸல்) அவர்களின் சில அருள் மொழிகளும் அறியக்கிடைத்துள்ளன. இவரின் வயிற்றில் அய்யூப், காலித், முஹம்மத் என்றழைக்கப் பெற்ற மூன்று ஆண் மக்களும் உமரஹ் என்ற ஒரு பெண் மகளும் பிறந்து அவர்களனைவர் மூலமும் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் வழிவாறுகள் பெருகினர். ஹராத்தில் வாழ்ந்து ஹிஜ்ரி 481-ல் மரணமடைந்த ஞான மகான் காஜா அப்துல்லாஹ் அன்ஸாரி (ரஹ்) அவர்கள் ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் வழிவாறேயாவர். இன்றைக்கும் அவர்களின் வழிவாறுகள் ஆப்கானிய மண்

ணில் வாழ்ந்து கொண்டுள்ளனர். அவ்வழிவாற்றைச் சார்ந்த ஹழ்ரத் யூஸுஃப் அன்ஸாரி, அலாவுத்தீன் அன்ஸாரி (ரஹ்) என்ற இரு பெரியார்கள் இந்தியாவுக்கும் வந்தனர். இந்தியாவிலும் பாக்கிஸ்தானிலும் இன்றும் வாழ்ந்து கொண்டுள்ள அன்ஸாரியப் பாரம்பரியத்தினரின் மூலப் பிதாக்கள் அவ்விருவரேயாவர்.



# 2. ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி)

இஸ்லாத்தின் தூதர் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு, 'அகபா' பள்ளத்தாக்கில் நம்பிக்கை நட்சத்திரங்களாகத் திகழ்ந்த அருபெரும் அன்சார்களில் மூத்தவராக, வரலாற்றாசிரியர் இப்னு ஸஅத் (ரஹ்) அவர்களால் சுட்டிக் காட்டப்படுபவர் ஹழ்ரத் அபூ உமாமா அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி). ஆனால், மிக இளைஞரான ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி) அவர்கள் அதற்கும் பல நாட்கள் முன்னதாகவே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைச் சந்தித்து இஸ்லாத்தை ஏற்று விட்டிருந்தவர் என அல்லாமா இப்னு அதீர் (ரஹ்) அவர்கள் தம் 'உஸ்துல் காபா'வில் குறிப்பிடுகின்றனர்.

இஸ்லாத்துக்கு முந்தைய காலத்திலேயே 'யத்ரிபி'ல், அத்தகைய வாய்ப்புடைய வெகுசொற்பமானவர்களில் தோன்றிய ஒருசிலரில் ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி) அவர்களும் ஒருவர். அப்போது தாம் மேற்கொண்டிருந்த இறை வணக்க முறையில் மனம் லயிக்காது, மிக ஒரு வணக்க முறையைப் பற்றிய சிந்தனை வயப்பட்டிருந்த அவர் யூதர்களோடு கொண்டிருந்த பழக்க உரையாடல்களில், பிந்திய காலத்தில் தோன்றவிருக்க இறுதி பெருந்தூதரைப் பற்றிய வேதச் செய்திகளை அடிக்கடி கேட்டு வந்தார். ஆயினும், மக்காவில் நிகழ்ந்த அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் தோற்றம் பற்றியோ, ஆண்டவனின் தூதரென அண்ணலார் (ஸல்) அவர்கள் தம்மைப் பற்றி செய்திருந்த பிரகடனம் பற்றியோ, பல ஆண்டுகள் வரையும் எந்தச் செய்தியையும் அவர் கேள்விப் பட்டிருக்கவில்லை. மதீனாவாசிகளிடையே நடைபெற்றுக் கொண்டிருந்த நீண்ட கால உட்போர்கள் வெளி உலகின் நடப்புகளைத் தெரிந்து

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைச் சந்திக்க—வினவித் தெரிந்து கொண்ட இடம் நோக்கி—விரைந்தன. அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்திக்கப் பெற்ற ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி), அண்ணலார் (ஸல்) அவர்களின் திருக்கரம் பற்றி அன்றே முஸ்லிமாயினர். ஹழ்ரத் தக்வான் இப்னு அப்து கைஸ் (ரலி) அவர்களும் அன்றே இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதாகவே தெரிகிறது. எவ்வாறாயினும் பெருமானார் திருநபி (ஸல்) அவர்களுக்குத் துணைக்கரம் நீட்டத் துணிந்த அன்ஸார்களில் முதன்மையானவராக ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்களே காணப்படுகின்றனர். மினாவில் தம்மோடிருந்த, தம்மினும் முதியவர்களை சுயமே முடிவுக்கு வரவிட்டு அவர்கள் ஆரம்பத்தில் அமைதி காத்திருக்லாம். •

நாயகத் திருமேனி (ஸல்) அவர்களின் கரம் பிடித்துப் பிரிந்த நல்லோர் ஐவரோடு மதீனா வந்தடைந்த ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்கள் உள்ளத்தில் தாம் ஏந்தி வந்த புதிய உண்மைகளை மற்ற நண்பர்களோடும் பரிமாறிக் கொண்டனர். பல குடும்பங்களுக்கு இஸ்லாத்தின் செய்தி தெரிந்தது. அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு வாக்களித்தபடி மறு ஆண்டில் ஹஜ்ஜுக்காக வந்த அவர்கள் தம்மோடு மேலும் எழுவரைப் புதிதாக அழைத்து வந்து அண்ணலவர்களுக்குத் துணை சேரச் செய்தனர். அதன்பின் மதீனா திரும்பிய இவர்கள் திருநபியின் தூதராக மதீனாவுக்கு வந்த ஹழ்ரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களைத் தம் விருந்தினராகத் தங்க வைத்து உபசரித்தனர்; வீடுகளெங்கும் தம் விருந்தினரை அழைத்துச் சென்று வீதிகளெங்கும் இஸ்லாத்தைப் பற்றிய சர்ச்சைகள் பரவச் செய்தனர். கஸ்ரஜ்களிடையே மட்டுமின்றி அவ்ஸ்களிடையேயும் இஸ்லாத்தின் செய்தி பரவ இவர்களே துணை நின்றனர்.

• பக்கம்—39 பார்க்க

குடும்பம் குடும்பமாக மக்கள் இஸ்லாத்தை ஏற்று மறுஆண்டில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் கரம்பற்ற அக்கபாவில் திரண்டு நின்ற எழுபத்து ஐந்து பேர்களிலும் "ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி) அவர்களே முதன்மை வகித்தனர்" என ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளதாக இப்னு இஸ்ஹாக் (ரஹ்) எழுதுகின்றனர். இவ்வாறாக ஹிஜ்ரத்துக்கு முன்னதாகவே அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் கரங்களை நான்கு முறை பற்றிடப் பேறு பெற்ற மதீனாவாசியாக ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி) அவர்கள் காணப்படுகின்றனர்.

பெருமானார் (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத் செய்து வந்து மதீனாவுக்கு மூன்று கல் தொலை முன்னதாகவுள்ள 'குபா'வில் இடைத் தங்கினார்கள். குபாவில் வாழ்ந்து கொண்டிருந்த ஹழ்லரத் குல்ஸூம் இப்னு ஹதம் (ரலி) என்ற பெரியாரின் விருந்தினராகவே அவர்கள் தங்கியிருந்தார்கள். அவ்ஸ்களைச் சார்ந்தவரான அவரின் இல்லத்திலேயே கஸ்ரஜ்களைச் சார்ந்த பல முதியவர்களும் வந்து அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்தித்துச் சென்றனர். ஆனால் இளைஞர்கள் எவருடைய நடமாட்டமும் காணப்படவில்லை. அச்சமயம் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களால் குறிப்பாக நினைவு கூரப் பெற்றவர், அதுவரை அவர்களை அதிகமாகச் சந்தித்திருந்த ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி) அவர்களே. 'கஸ்ரஜ்'களைச் சார்ந்த அவர் 'அவ்ஸ்'களான தங்களைச் சார்ந்த ஓர் இளைஞரை 'புஆத்ஸ்' போரில் கொன்று விட்டிருப்பதால் பழிக்கு அஞ்சி தங்களிருப்பிடத்துக்கு வரமாட்டார் என ஹழ்லரத் ஸஅத் இப்னு குத்லைமா, ரிஃபாஆ இப்னு அப்துல் முன்த்ஸிர், முபஷ்ஷிர் இப்னு அப்துல் முன்த்ஸிர் (ரலி) ஆகியோர் தெரிவித்தனர்.

பெருமானார் (ஸல்) அவர்களின் வருகை பற்றியறிந்த மறு கணமே மதீனாவை விட்டும் புறப்பட்டு விட்ட ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்களை பழியானது தடுத்து நிறுத்தினாலும் பரிவு தவிக்கச் செய்து கொண்டிருந்தது. குபாவின் வெளியேயே பகலெல்லாம் மறைந்திருந்த அவ்விளம் தோழர் இருட்டியதும் மேலாடையால் தம் தலையைப் போர்த்து மறைந்து வந்து மாநபி (ஸல்) அவர்களைச் சந்தித்தே விட்டனர். தாமதத்துக்குக் காரணமாகத் தமக்கிருந்த தங்கடத்தையும் அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தனர். இரவோடிரவாகவே உரையாடி அத்தோழர் விடைபெற்றுச் சென்ற மறு நாள் காலை அண்ணலார் (ஸல்) அவ்ஸ்களான மூன்று தோழர்களையும் அழைத்து அருளுரை வழங்கினார்கள்; அஸ்அந் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்களுக்கு அவர்களையே பாதுகாப்பு வழங்கக் கோரினார்கள். மாநபி பெருமான் (ஸல்) அவர்களின் அந்த முதற் கட்டளையைத் தங்களின் சிரமீதேற்ற அம்மூவரும் கணப் பொழுதும் தாமதியாது விரைந்து சென்று ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்களைச் சந்தித்து, தங்களின் நெஞ்சங்களோடணைத்து அழைத்து வந்து அண்ணலார் (ஸல்) அவர்களின் முன் நிறுத்தினர். அதுவே மற்றெல்லா அவ்ஸ்—கஸ்ரஜ்களிடையேயும் பகைமையழித்து பந்தம் வளர்க்க முன்னுதாரணமாயமைந்தது.

மதீனாவில் அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்களை உபசரிப்பதில் அனைவரையும் மிஞ்சியவராய் ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்களிருந்தனர். அண்ணலார் (ஸல்) அவர்களை விருந்தினராய் ஏற்கும் ஆரம்ப வாய்ப்பு இறைவனின் நாட்டப்படி ஹழ்லரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களுக்குக் கிடைத்ததென்றாலும் அண்ணலார் (ஸல்) அவர்கள் பயணித்து வந்த ஒட்டகையாகிலும் தம்மிடத்தில் தங்கட்டும் என ஹழ்லரத் அஸ்அத்

இப்னு ஜுராரா (ரலி) அவர்கள் அவ்வொட்டகையைத் தாமே பராமரித்தனர்.

பொழுதுகளை முழுமையாகவே பெருமானார் (ஸல்) அவர்களின் திருச்சமுகத்தில் கழிக்கலான அவ்விளம் தோழருக்கு அவ்வாறு வாய்ப்புமிகச் சில மாதங்களுக்கேயுடையதாகி விட்டதே துர்ப்பேறாகும். தேடாமலே கிடைத்த திருக்கரம் பற்ற எவ்விதம் அவர்கள் விரைந்து முந்திக் கொண்டார்களோ அவ்விதமாகவே மதீனாவின் மண்ணறை வாழ்வை ஏற்கவும் முந்திக் கொண்டனர். அண்ணலார் (ஸல்) அவர்கள் மதீனா வந்தடைந்த அதே ஆண்டில் ஷவ்வால் மாதத்தில் நோய்வாய்ப்பட்ட ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி) நலம் பெறாமலே உலகைப் பிரிந்து சென்றனர். மதீனாவில் மரணத்தை அணைத்த முதல் அன்ஸார் ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி) அவர்களே. பத்ருப் போர் முடிந்தபின் மரணமடைந்த ஹழ்ரத் உஸ்மான் இப்னு மள்ஊன் (ரலி) அவர்களின் உடலே 'ஜன்னத்துல் ப(க்)கீ' இல் முதன் முதலாக அடக்கப் பட்டதாக வரலாற்றாசிரியர் இப்னு ஸஅத் (ரஹ்) குறிப்பிடுவதால் ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜுராரா (ரலி) அவர்களின் உடல் அதற்கு முந்திய வழக்கப்படி வேறெங்கும் அடக்கப்பட்டிருக்கலாம்.

மரணம் அவ்வரும் நேசரை துரிதமாகப் பிரித்து விட்டாலும் மக்களின் உள்ளங்கள் தலைமுறை மாறிய பின்னரும் அவரை நினைவு கூர்ந்த சம்பவத்தை மாநபித் தோழர் ஹழ்ரத் கஅப் இப்னு மாலிக் (ரலி) அவர்களின் திருமகனார் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

"முதுமையடைந்து பார்வையிழந்து விட்டிருந்த என் தந்தையை வெள்ளிக்கிழமைகளில் ஜும்ஆ தொழுகைக்காக நான் அழைத்துச் செல்பவனாயிருந்தேன். தொழுகை

யின் அழைப்பொலி கேட்குந்தோரெல்லாம் என் தந்தை யார், ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்களின் பிழை பொறுக்கத் தேடிப் பிரார்த்திப்பவர்களாயிருந்தார்கள். வெள்ளிக்கிழமை தோறும் அவ்வாறு பிரார்த்திக்க அவர்கள் வழக்கமாக்கிக் கொண்டிருப்பதேன்? என என் தந்தையை நான் கேட்டேன். ''மகனே! அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தருளு முன் பாகவே எங்களையெல்லாம் ஒன்று சேர்த்து ஜும்ஆவை நடத்திய முதல் மனிதர் அவர்'' என்றனர் என் தந்தை. ''அப்படியானால் அவர் நடத்திய முதல் ஜும்ஆவின்போது நீங்கள் எத்தனை பேர் கூடியிருந்தீர்கள்?'' என நான் வினவினேன். என் தந்தையார் ''நாற்பது பேர்'' என அறிவித்தார்கள்.

—இது ஜும்ஆவைப் பற்றிய கட்டளையே இறங்குவதற்கு முந்திய சம்பவம். பெருமானார் (ஸல்) அவர்கள் மக்காவில் இருந்தார்கள். அக்கபாவின் இரண்டாம் சந்திப்பு முடிந்து மாநபி (ஸல்) அவர்களின் தோழர் ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்கள் மதீனா சென்று அன்ஸார்களுக்கு மார்க்கத்தையும் மறை ஞானத்தையும் போதித்துக் கொண்டிருந்தார்கள். அன்ஸார்களின் எண்ணிக்கை அப்போது நாற்பதையே எட்டியிருக்கக்கூடும்!

வெள்ளிக் கிழமையன்றுதான் மதீனாவில் சந்தை கூடுவது வழக்கம். அதனாலேயே மதீனாவாசிகள் வெள்ளிக் கிழமையை 'யவ்முல் அருபா—சந்தை நாள்' என அழைத்து வந்தனர். சனிக்கிழமையன்று யூதர்கள் கூடி மகிழ்வதைக் கண்ட ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்களுக்கு தாங்களும் அவ்வாறு செய்ய வேண்டும் என்ற ஆசை பிறந்தபோது, அண்டைவாழ் மக்களெல்லாம் மதீனாவில் வந்து கூடிய ஒரு வெள்ளிக்கிழமையன்று அவர்கள், அதுவரை முஸ்லிம்களாகியிருந்த தங்களின் தோழர்களையெல்லாம் ஒன்று கூட்டி தொழுகை நடத்தினர். தொழு

கைக்கு முன்னால் கூடியிருந்தவர்களிடையே ஹழ்லரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களைக் கொண்டு ஓர் உரையாற்றவும் செய்தனர். அன்ஸார்களிடையே நடைபெற்ற அந்த நிகழ்ச்சி இறைவனுக்கு உவப்பானதாகி விட்டது. மக்காவிலிருந்த அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு ஜும்ஆவைப் பற்றிய வேதக் கட்டளை இறங்கியது. ஆனால் அக்காலை மக்காவின் சூழ்நிலை மக்களைக் கூட்டி தொழுகை நடத்த இயலக் கூடியதாக இருக்கவில்லை. ஆயினும் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஜும்ஆவைப் பற்றிய இறைவனின் கட்டளையை எழுதி ஒரு தூதர் மூலம் ஹழ்லரத் முஸ்அப் (ரலி) அவர்களுக்கு எத்தச் செய்தார்கள். மதீனாவின் அன்றைய அன்ஸார்கள் மறு வெள்ளிக்கிழமையிலிருந்து ஜும்ஆ தொழலானார்கள். மறுமை நாள் வரையிலும் முஸ்லிம்களுக்கு வாரந்தோறும் ஒரு திருநாளாகியது ஜும்ஆ.



# 3. ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி)

அன்ஸார்களில் நஜ்ஜார் குடும்பத்தையடுத்து மிக மேலான குடும்பமாக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களால் புகழப் பெற்றவர்கள் 'பனீ அப்துல் அஷ்ஹல்' கள். அந்த அப்துல் அஷ்ஹல் குடும்பத்தவரிடையே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு அடுத்தபடியாக அதிகமாக மதிக்கப்பெற்றவர்கள் ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத், உஸைத் இப்னு ஹுழைர், உப்பாத் இப்னு பிஷ்ர் (ரலி) ஆகியோரே என அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

'அவ்ஸ்' கோத்திரத்துடையவே தலைவராக விளங்கிய—ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்களின் தந்தை மஆத், இஸ்லாத்தின் தோற்றத்துக்கு முன்னதாகவே மரணமடைந்து விட்டார். ஆனால் ஸஅத் (ரலி) அவர்களின் அன்னை—ஹழ்லரத் அபூ ஸஈதினில் குத்ரீ (ரலி) அவர்களின் சிறிய தந்தையின் மகளார்—கப்ஷா பின்த்து ராபிஉ (ரலி) அம்மையார் தம் புதல்வரைத் தொடர்ந்து இஸ்லாத்தை ஏற்று அவரின் இறப்புக்குப் பின்னரும் நெடுநாட்கள் வாழ்ந்து மறைந்தார்.

'அக்கபா'வில் அண்ணல் எம்பெருமான் (ஸல்] அவர்களின் கரத்தில் முதன் முதலாகப் பிரமாணம் செய்த ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜுஸுராரா [ரலி] ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் தாயின் உடன்பிறந்த சகோதரியின் மகனே. அதற்கும் முன்னதாக குரைஷிகளின் உதவி தேடி மக்கா வந்திருந்த யத்ஸ்ரிபின் தூதுக் குழுவில் அண்ணலார் (ஸல்) அவர்களின் சொல்லேற்றுத் திரும்பிய

அயாஸ் இப்னு மஆத் * (ரலி) ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் உடன்பிறந்தவரே. எனினும் மதீனாவில் புதிதாகப் பேசப்பட்ட—மக்காவில் தோற்றமெடுத்துள்ள—அந்த புதிய மார்க்கத்தைப் பற்றிச் செவியுற்ற ஆரம்பத்தில் அதன் பால் வெறுப்பே அடைந்திருந்தவர் ஸஅத் இப்னு மஆத். நடைபெற்று முடிந்து, சமூகத்தைச் சீரழித்து விட்டிருந்த சச்சரவுகள் புதிய எந்தக் கொள்கையையும் வரவேற்க விடாத சோர்வை ஒரு சில மேலாளவர்களுக்கு ஏற்படுத்தி விட்டிருந்ததில் வியப்பில்லை! அந்த நிலையில்,

'அக்கபா' உடன்பாட்டையடுத்து மதீனாவுக்கு வந்து புதிய மார்க்கத்தை மக்களுக்கு விளக்கிக் கொண்டிருந்த பெருமானாரின் தோழர் ஹழ்லரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களை 'அவ்ஸ்'கள் வாழ்ந்த பகுதியில் ஓர் இல்லத்துக்கு அழைத்து வந்திருந்தனர் ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி). அவ்வீடு ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் தோட்டத்தை ஒட்டியே இருந்தது. தம் ஒன்று விட்ட இளவலோடு வந்த மக்காவின் பயணி அவ்வீட்டார் சிலரோடு அமர்ந்து உரையாடிக் கொண்டிருப்பதைத் தொலைவிலிருந்தே கண்டு விட்டன ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் கண்கள். புதிய கோட்பாடுகள் தம் கூட்டத்திலாரிடையே நுழைவதை அவர்களின் மனம் விரும்பவில்லை. அங்கேயிருந்த தம் ஒன்றுவிட்ட இளவல் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்களுடன் பிரச்னையை வளர்த்தவும் அவர்கள் பிரியப்படவில்லை. எனவே தம் தந்தையுடன் பிறந்த சகோதரரின் மகன் உஸைத் இப்னு ஹுளைரை அழைத்தனர் ஸஅத்; ''உஸைத்! அதோ பார். அங்கே வந்துள்ள மக்காவின் அந்தப் பயணி நம்மில் பலஹீனர்களை மடையர்களாக்கிக் கொண்டுள்ளார். அவரோடு அஸ்அதும் இருப்பதாலேயே நான் நேரடியாகச் செல்லாமல் உன்னிடம் சொல்கின்றேன். நீ போய்

* பக்கம்-24 பார்க்க

அவர்களை உடனடியாக அங்கிருந்து வெளியேற்றிவிடு. இனி நம் பகுதிக்கு அவர்களை வர வேண்டாம் என்றும் கூறி விடு'' என கட்டளையிட்டார்.

அதன்படியே தம் கையில் ஓர் ஈட்டியை ஏந்திய வண்ணம் சென்றார் உஸைத். அவரின் வருகையைத் தொலைவிலேயே கண்டு விட்ட ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி), 'சிந்தனைத் திறன் படைத்த இந்த நல்லறிவாளரின் இதயம் இஸ்லாத்தின் புறம் திரும்பி விடுமானால் யத்ரிபின் ஒரு பெருங்குடும்பமே இஸ்லாத்திலாகி விடும்' என ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்களிடம் சொல்லி வைத்தனர். அதற்குள் அவர்களை நெருங்கி விட்ட உஸைத் மிகக் கடுமையாகவே பேசினார். ''நீங்கள் இருவரும் இங்கு வந்த நோக்கமென்ன? எங்களில் பலஹீனர்களை மடையர்களாக்கவா வந்துள்ளீர்கள்? உங்களின் உயிர்கள் உங்களுக்கு அருமையானவையாயிருப்பின் உடனடியாக இதனை விட்டும் வெளியேறி விடுங்கள். இனி எங்களின் பகுதிக்கு நீங்கள் வரத் தேவையில்லை'' என்ற உஸைதிடம் ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்கள் ஏதும் பேசிக்கொள்ளவில்லை; ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்களே பேசினார்: அன்பரே! நீர் சொல்கின்றபடியே நாங்கள் வெளியேறி விடுவோம். ஆனால், அதற்கு முன் சற்று அமர்ந்து என்னதான் நான் சொல்கிறேன் என்பதை நீரும் கேட்கலாமல்லவா? அவை நன்மை விளைவிப்பனவாயிருப்பின் சரி. அப்படியல்லாவிடில் இதனை விட்டும் வெளியேற எங்களுக்கு எந்தத் தாமதமும் ஏற்படாது என்ற ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்களின் வாக்கின் நயம் உஸைத் அவர்களைக் கவர்ந்தது; அவர்களின் தோற்றப் பொலிவும்தான்!

'நீர் சொல்வதும் மிகச் சரியே' என்றவராக, தம் ஈட்டியைத் தரையில் நட்டு அதன் அருகே அமர்ந்து கொண்டனர் உஸைத். ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்கள் இஸ்லாத்தைப் பற்றி எடுத்துரைத்து திருக்குர்ஆனின் சில வசனங்

களை ஓதலாயினார். அதனைச் செவியுற்றதுமே, 'என்ன இனிமையான வசனங்கள்' என்ற உஸைதின் முகம் மலர்ந்தது. எழுந்து நின்ற அவர், ''மக்காவின் விருந்ினரே! உம் வழியை ஏற்பதற்கு நான் என்ன செய்ய வேண்டும்'' என வினவினார். ''முதலில் நீர் நீராடித் தூய்மை பெறுவீராக. பின்னர் 'வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வை ஒருவனே என்றும் அண்ணல் முஹம்மத் (ஸல்) அவனின் தூதர்' என்றும் சாட்சியம் கூறி ஏற்பீராக'' என்றனர் ஹழ்லரத் முஸ்அப் (ரலி). அதன்படியே, அங்கிருந்த கிணற்றடியிலேயே நீராடித் தூய்மை பெற்ற ஹழ்லரத் உஸைத் (ரலி) ஏகத்துவத் திருமந்திரத்தை ஒலித்து இஸ்லாத்தை ஏற்றதோடன்றி, ''நான் சென்று மற்றொருவரை இங்கே அனுப்புகிறேன். அவரும் இதனை ஏற்றுவிடுவாராகில் எங்களில் ஒருவர் கூட இதனை விட்டும் பிரிந்திருக்கமாட்டார்'' என்று கூறி விடை பெற்றனர்.

''நாம் எண்ணியதைப் போல் ஏதும் இல்லை. அங்கு நடைபெறும் விவகாரம் வேறாக உள்ளது'' என ஹழ்லரத் உஸைத் (ரலி) அவர்கள் வந்து சொல்லக் கேட்டு ஸஅத் இப்னு மஆத் அவர்களுக்குச் சினமே மிகுந்தது. ''உன்னை நான் அனுப்பியதே வீணாயிற்று. உன்னுடைய இந்த முகம் ஆண்டவனின் மீதாணையாக நீ இங்கிருந்து சென்ற போதிருந்த முகமேயல்ல. ஆனால் நான் இதனை ஒருக்காலும் அனுமதிக்கவே முடியாது'' என்றவராக ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் தாமே புறப்பட்டனர் அவர்களை விரட்ட!

கோபக்கனல் பறக்க வந்த தம் சகோதரரை ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) அவர்கள் வரவேற்றனர். அந்த வரவேற்பை சற்றும் பொருட்படுத்தாமல் பேசினர் ஹழ்லரத் ஸஅத். ''என்ன காரியமிது அஸ்அத்! நம் உறவின் முறை குறுக்கேயில்லாவிடில் நான் இப்போது வார்த்தைகளால் பேசி நீர் பொறுத்துக் கொண்டிருக்க

மாட்டோர். எதற்காக நீர் இந்த மனிதரை எங்களின் பகுதிகளில் அழைத்து வருகிறீர்?'' என்ற பொறி பறந்த வார்த்தைகளைச் செவியுற்றும் ஹழ்ரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா (ரலி) தம் பேச்சில் மென்மையைக் கைவிடவில்லை; ''சகோதரரே! நீர் சந்தேகிப்பதுபோல் இங்கே எந்தத் தவறும் நடைபெறவில்லை. நீர் சற்று அமர்ந்து அவர் என்ன கூறுகிறார் என்பதைச் செவிமடுப்பிராக! அது நமக்குப் பொருத்தமுடையதாயிருப்பின் சரி. அப்படியன்றி நீர் எங்களில் குற்றம் காணின் அவரை நான் அழைத்துச் சென்று விடுகிறேன். மறுபடியும் அவரை நான் ஒரு நாளும் இங்கு அழைத்து வரமாட்டேன்'' என மென்மையுடன் கூறினார். அதனைக் கேட்டு ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத் அவர்களின் கோபமும் தணிந்தது. ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்களின் புறம் நோக்கிய ஸஅத் ''சரி நீர் கூறுவதைக் கூறும் கேட்போம்'' என்றவர்களாக அமர்ந்துக் கொண்டனர்.

ஹழ்ரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்கள் திருமறை வசனங்களை ஓதலானார்கள்:

حٰمٓ ۞ وَالْكِتٰبِ الْمُبِيْنِ ۞ اِنَّا جَعَلْنٰهُ قُرْءٰنًا عَرَبِيًّا لَّعَلَّكُمْ تَعْقِلُوْنَ ۞ وَاِنَّهٗ فِيْۤ اُمِّ الْكِتٰبِ لَدَيْنَا لَعَلِيٌّ حَكِيْمٌ ۞ اَفَنَضْرِبُ عَنْكُمُ الذِّكْرَ صَفْحًا اَنْ كُنْتُمْ قَوْمًا مُّسْرِفِيْنَ ۞

''ஹாமீம்! தெளிவான இந்த வேதத்தின் மீது சத்தியமாக, நீங்கள் (எளிதில்) அறிந்து கொள்ளும் பொருட்டே இந்தக் குர்ஆனை (நீங்கள் பேசும் உங்களுடைய) அரபி மொழியில் அமைத்தோம். நிச்சயமாக இது நம்மிடத்தில் உள்ள ('லவ்ஹுல் மஹ்ஃபூள்' எனப்படும்) தாய் நூலில் (பதிவு செய்யப்பட்டு) இருக்கிறது. (இது வேதங்களில்) மிக்க மேலானதும், ஞானம் நிறைந்ததுமாகும்.

''நீங்கள் வரம்பு மீறிய ஜனங்களாகி விட்டீர்கள் என்பதற்காக (உங்களுக்கு நல்லுபதேசம் செய்யும் வேதத்தின்) நினைவுறுத்தலை உங்களை விட்டும் நாம் முற்றிலும் புறக்கணித்து விடுவோமா?

وَكَمْ أَرْسَلْنَا مِن نَّبِيٍّ فِي الْأَوَّلِينَ ۝ وَمَا يَأْتِيهِم مِّن نَّبِيٍّ إِلَّا كَانُوا بِهِ
يَسْتَهْزِئُونَ ۝ فَأَهْلَكْنَا أَشَدَّ مِنْهُم بَطْشًا وَمَضَىٰ مَثَلُ الْأَوَّلِينَ ۝

''(உங்களைப் போன்று வரம்பு மீறிச் சென்று போன உங்கள்) முன்னோர்களிலும் நாம் எத்தனையோ நபிமார்களை அனுப்பி இருக்கிறோம்.

''எனினும் அவர்களிடம் எந்த நபி வந்த போதிலும், அவர்கள் அவரைப் பரிகாசம் செய்யாது இருக்கவில்லை.

''இவர்களை விட மிக்க பலசாலிகளான அவர்களையெல்லாம் (அவர்களின் பாவத்தின் காரணமாக) நாம் அழித்து விட்டோம். (இதற்கு) முன் சென்றோர்களின் (இத்தகைய) உதாரணம் (முன்னர்) சென்று விட்டது.

--இந்த (43 : 1 to 8) வசனங்கள் ஓதப்படுவதைக் கேட்கக் கேட்க ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் உள்ளம் அடைந்து கொண்டிருந்த மாறுதலை அவ்வப்போது அவர்களின் முகம் வெளிச்சமிட்டுக் காட்டிக் கொண்டிருந்தது. எழுந்து கொண்ட அவர்கள் அங்கேயே கலிமாவை மொழிந்திடவில்லை. ஆயினும் ஏதோ ஓர் உறுதி மிக்க முடிவோடேயே அன்னவர் நடந்து செல்வதை அவர்களின் தோரணை வெளிப்படுத்தியது. தம் இல்லத்தை வந்தடைந்த ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் தம் குடும்பத்தினர் அனைவரையும் கூட்டினார். இஸ்லாத்தைப் பற்றி அவர்களுக்கெல்லாம் எடுத்துரைத்தனர். 'இதைவிடச் சிறந்த

ஒன்றை உங்களில் எவரும் அறிந்திருப்பின் கூறுங்கள் நானும் தெரிந்து கொள்கிறேன்' என வினவினர். ''ஆண்டவன் மீதாணையாக இந்த மார்க்கம் உயிர்களைப் பகடையாக்கி யும் பாதுகாக்கப்படும். பல தலைகளை காணிக்கையாக வழங்கியும் இது நிலைநிறுத்தப் பெறும்'' என்றெல்லாம் புகழ்ந்து பேசிய ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) தாம் இஸ்லாத்தை ஏற்றதோடு தம் குடும்பத்தினரையும் இஸ்லாத்திலாக்கியே தீரவும் உறுதி கொண்டு விட்டனர்; அவர்களனைவரையும் நோக்கி ''என்னைப் பற்றி உங்களின் எண்ணம் என்ன?'' என வினவினர். ''தாங்கள் எங்களில் மேலானவர், தாங்களே எங்களின் தலைவர்'' என அவர்கள் அனைவரும் ஒருமித்துக் கூறினர். ''இன்று மாலைக்குள் உங்களில் இஸ்லாத்தை ஏற்காத எவரும் என்னுடன் உரை யாடவே தகாது—ஆண்களாயினும் சரி, பெண்களாயினும் சரியே'' என அவர்கள் கூறக் கேட்டுத் திகைத்தனர் குடும் பத்தினர். அங்கிருந்தோர் அனைவரும் அவர்களின் கரம் பிடித்து அக்கணமே இஸ்லாத்தை ஏற்றனர். வெளியில் பிரிந்திருந்தோரும் செய்தி கேட்டு ஒருவரையடுத்து ஒரு வராய் வர, வர அன்று மாலைக்குள் 'அப்துல் அஷ்ஹல்' குடும்பத்தினர் அத்தனை பேரும் முஸ்லிம்களாயினர்—ஒரே யொருவரைத் தவிர்த்து*

அதற்குப் பின் ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் நடவடிக்கைகள் மாறுதலடைந்தன. திருநபி யின் எந்தத் தோழரைத் தம் எல்லைக்குள் நுழையவே கூடாதென விரட்ட அன்று விரைந்தனரோ ஹழ்லரத்

---

* ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர் களின் உடன் பிறந்த சகோதரியின் மகனான அம்ரு இப்னு த்ஸாபித் எனப்பட்ட அவ்வொருவரும் உஹதுப் போர்க் களத்தில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தை ஏற்று உடனேயே போரிலும் பங் கேற்று வீர மரணமடைந்தார்.

ஸஅத் (ரலி), அதே ஹழ்ரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களை மறுநாள் தம் இல்லத்துக்கே விருந்தினராக அழைத்து வந்து அங்கேயே தங்க வைத்துக் கொண்டனர். தம் குடும்பத்தையே ஒட்டு மொத்தமாக ஒரே நாளில் முஸ் லிம்களாகச் செய்து விட்ட அந்தப் புனிதத் தலைவரின் முன் மாதிரி கண்டு அவ்ஸ் கோத்திரத்தவர்களும் இஸ்லாத் தின் பறம் விரையலாயினர்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் மதீனா வந்த பின்னரோ அவர்களை அண்மி வாழும் பேற்றினை ஐந்தாண் டுகளுக்கும் குறைவாகவே ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் பெற்றிருந்தனர். ஆயினும் அவ்வைந்தாண் டுகளுக் கிடைப்பட்ட வாழ்விலும் தாம் பெற்றிருந்த ஈமா னிய வலிமையினாலும் தியாக உணர்வினாலும் பெருமா னார் (ஸல்) அவர்களின் பேரன்புக்கும் அருளாசிக்கும் தம்மை உரித்தாக்கிக் கொண்டனர்.

ஆரம்பத்தில் இஸ்லாத்தை ஏந்தி வந்த தூதர் நாயகம் (ஸல்) அவர்களின் தோழரை விரட்ட அவர்களைத் தூண் டிய விரக்தி உணர்வு இஸ்லாத்துக்குப் பிந்திய மிகக் குறைந்த கால வாழ்விலும் பரிசுத்தமான விவேகத்துடன் கூடிய வீர உணர்வாக அவர்களிடம் பரிணமித்தது.

அல்லாஹ்வின் தூதரென தாங்கள் கரம் பிடித்து உள மாற சாட்சியம் கூறிய பெருமானார் திருநபி (ஸல்) அவர் களின் சொல்லுக்கு மாறான சொல்லே இல்லை என்ற அவர் களின் மன உறுதியை பத்ருப் போர் பற்றிய கருத்தரங்கத் தில் வெளிச்சமிட்டுக் காட்டிய அவர்கள்* வாழ்நாள் முழு வதும் கொண்டிருந்த இறையச்சத்தினாலும் பக்திப் பேணு தலினாலும் பெருமானார் (ஸல்) அவர்களின் பேரன்பைப் பெற்றுச் சிறந்தார்கள்.

---

* பக்கம்—70 பார்க்க

முஹாஜிர்களிடையே ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் பெற்றிருந்ததே போன்ற சங்கையையும் கண்ணியத்தையும் அன்ஸார்களிடையே ஹழ்ரத் ஸஃஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் பெற்று விளங்கினார்கள்.

பத்ருப் போரில் அன்ஸார்களின் கொடியை ஏந்திச் சென்றவர்கள் ஹழ்ரத் ஸஃஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களே. பத்ரில் தோல்வி கண்ட குரைஷிகள் மறுவருடம் மூவாயிரம் பேர்களாகத் திரண்டு வந்தபோது எண்ணிக்கையில் குறைந்தவர்களாயிருந்த முஸ்லிம்கள் அச்சமயம் மதீனாவில் தங்கியிருந்தே எதிர்க்கலாம் என்றே பெருமானார் (ஸல்) அவர்களின் எண்ணமாயிருந்தது. நயவஞ்சகர்களின் தலைவனான— அதற்கு முன் எந்த யோசனையும் கூறியிராத —அப்துல்லாஹ் இப்னு உபையும் கூட, ''மதீனா ஒரு கன்னிப் பெண்ணைப் போன்றது, எதிரிகள் எவரும் இதனை வெற்றி கொண்டதில்லை, நாங்கள் உள்ளிருந்து நடத்திய போர்களிலெல்லாம் நாங்களே வெற்றி கொண்டோம். எங்களில் ஆண்கள் வெளியில் வந்து போர் புரிவோம். பெண்கள் மதில்களில் ஏறி நின்று கற்களை வீசி எதிரிகளை விரட்டுவார்கள்'' என்றெல்லாம் யோசனை கூறினான்.

ஆனால் பத்ருப் போரில் பங்கேற்க வாய்ப்பற்றுப் போய் இப்போது வாய்ப்பளிக்கப் பெற்றிருந்த இளம் நெஞ்சங்கள்— தியாகத் தீயில் தங்களைப் புடம் போடக் காத்திருந்த வீரசிங்கங்கள் அடர்ந்து வெளியேறிப் போர் புரியத் துடித்தன. ஹழ்ரத் ஹம்ஸா (ரலி) அவர்களோ, ''மதீனாவுக்கு வெளியிலேயே என் வாளால் அவர்களைக் கருவறுக்காதவரை நான் உணவுண்ணப் போவதில்லை'' என சத்தியமே செய்தார்கள். இறை செய்தி ஏதும் அது பற்றி தங்களைக் கட்டுப்படுத்தாத நிலையில் அண்ணலார் (ஸல்) அவர்கள் பெரும்பாலான தோழர்களின் உணர்வுகளை மதித்து, அனைவரையும் ஆயத்தமாகும்படி பணித்து தாங்

களும் ஆயத்தமாவதற்காக தங்களின் இல்லத்தினுள் சென்றார்கள். அச்சமயத்திலும் ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் தோழர்களிடையே எழுந்து நின்று, ''அவர்களோ அல்லாஹ்வின் தூதர். விண்ணிலிருந்து அவர் களுக்கு செய்திகள் வருகின்றன. அவ்வாறிருக்க அவர்களின் எண்ணத்துக்கு மாற்றமாக மதீனாவை விட்டும் வெளிச் சென்று போராட அவர்களை நிர்ப்பந்தப்படுத்தி விட்டீர் களே?'' என வருந்தினார்கள். அதனைக் கேட்டு மற்ற தோழர்களெல்லாம் தங்களின் தவறுகளை உணர்ந்தார்கள். அதற்குள் நபிபெருமான் (ஸல்) அவர்களும் பூரணமாக ஆயத்தமாகி வெளி வந்தார்கள். எல்லாத் தோழர்களும் ஒன்று பட்டு அண்ணலார் [ஸல்] அவர்களின் எண்ணப்படி மதீனாவில் தங்கியே போர் நடத்துவோம் என இப்போது கூறினார்களாயினும் பெருமானார் [ஸல்] அவர்கள், ''ஒரு நபியானவர் தம் சமுதாயத்துக்காக ஆயுதங்களணிந்தபின் அல்லாஹ் அவர்களுக்கான தன் முடிவை வெளிப்படுத்தாத வரை அவர் ஆயுதங்களைக் களைவதில்லை' என்றவர் களாக உஹதின் புறம் படை நடத்திச் சென்றார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்களைக் கண்ட ஆரம்பத்தி லேயே அவர்களை ஒரு தெய்வீகத் தூதராக ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் மனம் கொண்டு விட்ட உறுதியைப் பலப்படுத்திக் காட்டுகிறது பத்ருப் போருக்கு முன்னரே நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி! ஹிஜ்ரத் தையடுத்த ஆண்டிலேயே மக்க மாநகருக்குச் சென்று வர ஒரு வாய்ப்பு ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் [ரலி] அவர் களுக்குக் கிட்டியது. அச்சமயம் அவர்கள் மக்காவின் சீமான் உமையா இப்னு கலஃபின் விருந்தினராகத் தங்கி யிருந்தனர். ஒரு நாள் உமையாவுடன் சேர்ந்தே அவர்கள் கஃபாவைத் தவாஃபு செய்துக் கொண்டிருந்தபோது அபூ ஜஹலின் சந்திப்பும் அவர்களுக்குக் கிடைத்தது. அவர்களை, 'எவர்?' என வினவிய அபூ ஜஹலுக்கு 'அவ்ஸ்களின் தலை

வர் ஸஅத் இப்னு மஆத்' என உமையா அறிமுகப்படுத்தி னான். அதனைக் கேட்டதும் அபூஜஹலின் வாய் துடுக் கடைந்தது. 'ஓஹோ! எங்களின் வழி கேடர்களுக்கு உங்கள் பூமியில் இடமளித்து அவர்களின் ஆதரவாளர்களாகி விட்ட பின்பும் வெகு நிம்மதியாக நீர் எங்கள் பூமியில் உலா வருகின்றீரா? உமையா இப்போது இல்லாவிடில் நீர் எப்படி மதீனா திரும்புகிறீர் என்பதையும் நான் பார்ப்பேன்'' என்றானவன். ஹழ்ரத் ஸஅத் [ரலி] அவர் கள் அவன் வார்த்தைகளை மதித்ததாகவே தெரியவில்லை. 'இப்போதென்ன முழுகிப் போய் விட்டது! நீ வேண்டு மானால் என் பாதையைத் தடுத்துப் பார். அதன் பிறகு நானும் மதீனாவின் வழியாக நீ பயணம் செய்வதைப் பார்ப் பேன்'' என கடுமையாகவே பதிலுரைத்தார்கள். நிலைமை மாறுவதைக் கவனித்து உமையா குறுக்கிட்டு ''ஸஅத்! அவர் மக்காவின் தலைவர் அபூ ஜஹல். அவரிடம் சற்று மென்மையாகவே உரையாடும்'' என எச்சரித்தான். ''அதைப் பற்றி நான் கவலைப் படவில்லை. ஏனெனில் உங்களையெல்லாம் முஸ்லிம்கள் கொல்வார்கள் என அந்தத் தூதர் நாயகம் [ஸல்] அவர்கள் எங்களுக்கு அறிவித்துள் ளார்கள்'' என ஹழ்ரத் ஸஅத் [ரலி] அவர்கள் உமை யாவுக்கு பதிலுரைத்தார்கள். அதனைக் கேட்டு உமையா வின் விழிகள் விரிந்தன. ''என்ன மக்காவில் வந்தா?'' என விழித்த உமையாவுக்கு, ''அது பற்றி எங்களுக்கு அறிவிக்கப் படவில்லை'' என ஹழ்ரத் ஸஅத் [ரலி] அவர்கள் விடை யளித்தார்கள்.

காலம் அதனை மெய்ப்படுத்தியது. களவுலகில் களி நடனமாடிய குறைஷித் தலைவர்களையெல்லாம் பிணமாகி விழச் செய்த பத்ரின் காட்சி முஸ்லிம்களை மன வளம் பெறச் செய்தது. சத்தியமே தாங்கள் கொண்டுள்ளது என கண்கூடாக அறிந்து இனி தங்களின் வாழ்வும் வளமும் அல் லாஹ்வுக்கும் அவனின் தூதருக்குமே என வரையறுத்து விட்ட ஒரு தொண்டராக ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத் [ரலி] வாழ்ந்து மறைந்தார்கள்.

ஹிஜ்ரி 5-ம் ஆண்டில் நடைபெற்ற அகழ்ப் போரில் பட்ட ஒரு காயமே ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களுக்கு மரணத்தின் அழைப்போலையாக அமைந்து விட்டது. அளவில் சிறியதான ஒரு கவசத்தை அவசரமாக அணிந்து அவர்கள் வெளிவந்ததே காரணமாகி விட்டது. அச்சமயம் அவர்களின் அன்னை கஷ்பா பின்த் ராஃபி உடன் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்த ஆயிஷா [ரலி] அவர்களும் அதனைக் கண்டு, 'சற்று நீண்ட கவசம் அவரிடம் இல்லையா, அவரின் கரம் வெளித் தெரிகிறதே' என்று சுட்டிக் காட்டத்தான் செய்தார்கள். ஆனால், விதியின் நிர்ணயத்தைப் புரட்ட வல்லவர் யார்? உவகைக் கடலில் மிதந்து சென்ற ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்களின் குரல் இனிமையாகக் கேட்டது:

''இன்னும் சிறிது நேரமே பொறுத்திரு! அமளிக் களத்தினை என் வாகனம் அடையும் வரையுமே காத்திரு! மரணத்தின் வரவு நெருங்கி விடும்போது..... ஆகா! எத்துணை அழகாகத் தோன்றுகிறது மரணம்'' என காற்றோடு கலந்து வந்த ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் குரலைத்தான் அவரின் அன்னையார் செவியுற்றாரேயன்றி ஆயிஷா நாயகியாரின் எச்சரிக்கையை அவர் கவனிக்கவில்லை. ''மகனே! விரைந்து செல், நீ மிகவும் தாமதித்தே விட்டாய்'' என தம் மகனுக்கு விடை கொடுத்தார் அவ்வீரத் தாய்.

குரைஷியரோடே வந்திருந்த இப்னு அரக்காவென அறியப்பட்ட ஹப்பான் இப்னு அப்து மனாஃபின் கண்களுக்கு விருந்தாயிற்று ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் மேனியின் திறந்த பாகம். குறி வைத்து அவன் எய்த அம்பு ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் எதிர்பார்த்திராத நிலையில் அவர்களின் புயத்தில் பாய்ந்தது. ஆழமாக ஊடுருவிய அது அவர்களின் கரத்

தின் பிரதான நரம்பையே துண்டித்து விட்டது. இரத்தம் பிரவாகமெடுக்க, மயங்கிச் சாய்ந்தவர் ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி). சுமந்து வரப்பட்ட அத்தோழரை அவரின் இல்லத்துக்கு எடுத்துச் செல்ல வேண்டாமென தடுத்து, அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்களின் பள்ளியி லேயே ஒரு புறம் குடிலமைத்து அதில் தங்கச் செய்தார்கள். ஏறத்தாழ ஒரு மாத காலம் நீடித்தது மருத்துவம். அண்ண லார் (ஸல்) அவர்கள் ஒவ்வொரு நாளும் நேரடியாக வந்து கவனித்தார்கள் அத்தோழரை: அவரின் மனதுக்கு ஆறுதலும் உற்சாகமும் ஏற்படும்படியாக உரை யாடினார்கள். இரத்தப் பிரவாகமெடுத்த காயத்தைப் பெரு மானார் (ஸல்) அவர்கள் தங்கள் திருக்கரத்தால் தொட்டுத் தடவிய(பாக்கத்)தால் இரத்தக் கசிவு நின்று விட்டதானா லும், அதனைச் சுற்றிலும் ஏற்பட்டிருந்த வீக்கம் அப்படியே இருந்தது. ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்கள் பூரணமாக நலம் பெறவே இல்லை. வேதனை அவர்களின் உடலை நலி யவே செய்துக் கொண்டிருந்தது. ஆனால் அவர்களின் மன வலிமையில் மட்டும் எந்தக் குறைபாடும் காணப்படவில்லை!

மதீனா எதிரிகளால் சூழப்பட்டிருந்தது. மக்காவின் குறைஷிகள், கத்ஃபான் கோத்திர அரபிகள் நாலாயிரம் பேர் களையும் தங்களுடன் சேர்த்துக் கொண்டு பதினாயிரம் பேர் களாகக் கூடி நகரை முற்றுகையிட்டிருந்தனர். முஸ்லிம் களோ மூவாயிரம் பேர். நகரைச் சூழவும் முப்புறமும் தோண் டப்பட்டிருந்த ஆழமான அகழே இரு படையினரையும் பிரித்திருந்தது. அகழ்ப் போரின் பெயர்க் காரணம் அதுவே.

காலம் கடுங்குளிரைக் கொண்டதாயிருந்தது. போதிய வசதிகளற்றிருந்த முஸ்லிம்கள் பசியினாலும் உறக்கமின்மை யினாலும் பயங்கரக் குளிரினாலும் கடும் பாதிப்புகளுக் காளாகியிருந்தனர். நயவஞ்சகர்களெல்லாம் திறந்தபடியே தாங்கள் விட்டு வந்து விட்டதாக தங்களின் வீடுகளையே

காரணம் காட்டி படைக்களத்தை விட்டும் நழுவி விட்டிருந்தனர். பெருமானார் (ஸல்) அவர்களோடு உடன்பாடு கொண்டு மதீனாவின் ஒரு புறமே வாழ்ந்து வந்து பனூ குறைழ்லா யூதர்களும் துரோகமிழைத்து எதிரிகளுக்குத் துணை புரியத் துணிந்து விட்டிருந்தனர். உறுதிபடக் கால் களையூன்றி களத்திலேயே தரிபட்டிருந்த உண்மை முஸ்லிம் களுடையவும் பரிதாபகரமான மன நிலையை,

إِذْ جَآءُوكُم مِّن فَوْقِكُمْ وَمِنْ أَسْفَلَ مِنكُمْ وَإِذْ زَاغَتِ الْأَبْصَارُ وَبَلَغَتِ الْقُلُوبُ الْحَنَاجِرَ وَتَظُنُّونَ بِاللَّهِ الظُّنُونَا ۝ هُنَالِكَ ابْتُلِيَ الْمُؤْمِنُونَ وَزُلْزِلُوا زِلْزَالًا شَدِيدًا ۝

''உங்களுக்கு மேற்புறமிருந்தும் கீழ்ப்புறமிருந்தும் (உங்களைச் சூழ்ந்து கொண்டு) அவர்கள் வந்த சமயத்தில் (உங்களுடைய) திறந்த கண்கள் திறந்தவாறே இருந்து, (உங்களுடைய) இருதயங்கள் உங்கள் தொண்டைக் குழிகளை அடைத்து (நீங்கள் திக்குமுக்காடி) அல்லாஹ்வைப் பற்றி நீங்கள் பலவாறு எண்ணிய சமயத்தை நினைத்துப் பாருங்கள். அந்த இடத்தில் விசுவாசிகள் (பெரும்) சோதனைக்குள்ளாக்கப்பட்டதுடன் பலமாகவும் அசைக்கப்பட்டனர்'' என்று அனுதாபத்துடன் விளக்குகிறது அருள்மறை குர்ஆன்.
—(33 : 10, 11)

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் தங்களின் தோழர்களின் நிலை கண்டு அனுதாபங் கொண்டனர். மேலும் பலஹீனமடைந்து விடாமல் அவர்களைக் காக்க எதிரிகளையே பலஹீனப் படுத்த எண்ணிய பெருமானார் (ஸல்) அவர்கள் குரைஷிகளை விட்டும் கத்ஃபானியர்களைப் பிரிக்கத் திட்டமிட்டார்கள்; முற்றுகையிலிருந்து விலகித் திரும்பி விடுவார்களாகில் கத்ஃபானியர்களுக்கு மதீனாவின் பேரீத்தம்பழ விளைச்சலில் மூன்றிலொரு பங்கைத் தரச்

செய்வதாக ஒரு தூதர் மூலம் சொல்லியனுப்பினார்கள். கத்ஃபானியர்களின் ஒரு தலைவர் வந்துசரிபாதிப்பங்குகேட்டு பெருமானார் (ஸல்) அவர்களிடம் பேரம் பேசினார். இதற்கிடையில் அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்களின் நடவடிக்கை பற்றி கருத்தறிய அவ்ஸ், கஸ்ரஜ்களின் தலைவர்களான ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத், ஸஅத் இப்னு உபாதா (ரலி) ஆகிய இருவரையும் அழைத்து வரச் செய்தார்கள். ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் தங்கள் கையில் பட்டிருந்த காயத்துக்கு மருந்திட்டு துணியால் சுற்றிக் கட்டப்பட்டிருந்த நிலையிலேயே வந்தார்கள். ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களும் வந்திருந்தார்கள். ''பெருமானே! தங்கள்பால் ஏவப்பட்டுள்ள அல்லாஹ்வின் கட்டளையா இது அல்லது எங்கள் சிரமத்தைக் குறைக்க தாங்களே அனுதாபங் கொண்டு செய்யும் முயற்சியா?'' என அவ்விருவருமே வினவினர்.

''அல்லாஹ்வின் கட்டளையல்ல இது. உங்களுக்குச் சற்று நிம்மதியை ஏற்படுத்த நாடி நானே மேற்கொள்ளும் முயற்சியே. ஏனெனில் எதிரிகள் உங்களைப் பழி தீர்க்க ஒன்று கூடி வில்லாய் வளைந்து நிற்கிறார்கள். அவர்களைப் பிளவு படுத்தவே இந்த நடவடிக்கையில் இறங்கினேன்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் விளக்கக் கேட்டு ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களே பேசினர் :

''தூதர் நாயகம் (ஸல்) அவர்களே! நாங்களும் எங்களின் மக்களும் அநேக கடவுள்களை நம்பியிருந்தோம். உருவங்களாக அவற்றைச் சமைத்து அல்லாஹ்வுக்கு இணையாக வைத்து வணங்கி வந்தோம். இணை கற்பிக்கப்படவே கூடாத ஏகப் பரம்பொருளென அல்லாஹ்வை நாங்கள் எண்ணியதே இல்லை. அவ்வாறான மவுட்டீக நிலையிலேயே பண்டமாற்றாகவோ அல்லது விருந்தாக உண்டோ அல்லாமல் ஒரேயொரு கனியையும் எங்களிடமிருந்து இவர்கள் பெற முடியாதிருந்தது. இன்றோ அல்லாஹ் தன் மார்க்கத்தை

எங்களுக்குக் காட்டி அருள் புரிந்துள்ளான். தங்களின் மூலம் நேர்வழியைக் காட்டி எங்களின் மனங்களை பலம் பெறச் செய்துள்ளான். இந்த நிலையில் எங்களின் விளைச்சல்களைப் பறித்துச் செல்ல இவர்களை நாங்கள் எங்ஙனம் விடுவோம்? இவர்கள் செய்கின்ற அட்டூழியங் களைச் செய்யட்டும். அவற்றிற்குரிய பதிலை நாங்கள் எங்க ளின் வாட்களாலேயே அளிப்போம்'' என ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் தங்களின் உடல் ஊனமுற்றி ருந்த நிலையிலும் மான உணர்வோடு பேசிய மனவலிமை கண்டு பெருமானார் (ஸல்) அவர்களும் தங்கள் முயற்சியைக் கைவிட்டார்கள்.

தூதர் பெருமான் (ஸல்) அவர்களோடு கொண்ட தோழமைக்கு ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் தம் வாழ்க்கையில் வகுத்திருந்த இலக்கணத்தை மரணத் தின் படியேறி நின்ற காலை அத்தோழர் புரிந்த ஒரு பிரார்த் தனை புலப்படுத்திக் காட்டுகிறது : ''இறைவா! உன் தூத ரைப் பொய்ப்பித்து, அவருக்குத் துன்பம் விளைவித்து, ஊரை விட்டே அவரை வெளியேறச் செய்த குறைஷி களைத் தவிர்த்து மற்ற எவரோடும் போரிடுவதில் என் உள் ளம் அதிகமாக இன்பங் கொள்ளவில்லை என்பதை நீ அறி வாய். குறைஷிகளின் வலிவை நீ இந்த அகழ்ப் போரோடு முறியடித்து விட்டாய் என்றே நான் எண்ணுகிறேன். ஒருக் கால் இன்னும் அவர்களோடு போராட வேண்டியிருந்தால் மட்டுமே நீ என்னை உயிர் வாழச் செய்தருள். இல்லை யெனில் இக்காயத்திலேயே உயிர் துறக்கும் பேற்றினை எனக்கருள் புரி. ஆனால் பனூ குறைழ்லாக்களைப் பற்றி என் கண்கள் குளிரு முன்பாக நான் மரித்து விடாதிருக்கச் செய்'' என அவர்கள் வைத்த இரு வேண்டுதல்களும் இறைவனால் ஏற்கப்பட்டன.

திடீரென ஓர் இரவு வீசிய புயற்காற்று எதிரிகள் தங்கியிருந்த கூடாரங்களையெல்லாம் முளைகளோடு பிய்த்

நொறிந்தது. உணவு சமைக்கப்பட்டிருந்த பெரும் பெரும் பாத்திரங்களெல்லாம் உயரே பறந்து அடுப்புகளின் மீதே கவிழ்ந்து புதைந்து போயின. முஸ்லிம்களின் புறம் இத்தகைய பாதிப்புகள் ஏதுமன்றி எதிரிகள் கதிகலங்கி தங்கள் மூட்டை முடிச்சுகளையும் துறந்து விரண்டோட நேர்ந்ததெல்லாம் முஸ்லிம்களுக்கு அவர்களறியாப் புறத்திலிருந்து கிடைத்த—அல்லாஹ்வின் பேரருள் என்கிறது இறைவனின் திருமறை,

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ ٱذْكُرُوا۟ نِعْمَةَ ٱللَّهِ عَلَيْكُمْ إِذْ جَآءَتْكُمْ جُنُودٌ فَأَرْسَلْنَا عَلَيْهِمْ رِيحًا وَجُنُودًا لَّمْ تَرَوْهَا ۚ وَكَانَ ٱللَّهُ بِمَا تَعْمَلُونَ بَصِيرًا

''விசுவாசிகளே! உங்கள் மீது அல்லாஹ் புரிந்திருக்கும் அருட்கொடைகளை நினைத்துப் பாருங்கள். உங்கள் மீது (விரோதிகளின்) படைகள் அணியணியாக வந்த சமயத்தில் (புயல்) காற்றையும், உங்கள் கண்ணுக்குப் புலப்படாத படைகளையும் அவர்கள் மீது நாம் ஏவினோம். அது சமயம் நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் உற்று நோக்கினவனாகவே இருந்தான்.'' (33 : 09)

குரைஷிகளை விரண்டோடச் செய்ததோடு அல்லாஹ் பனூ குறைழ்லாக்களையும் விட்டு வைக்கவில்லை. அகழின் வெளியைப் பிரிந்து தங்கள் தோழர்களுடன் பள்ளியை அடைந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் ஒரு நேரத் தொழுகையையே முடித்தமர்ந்தார்கள். அடுத்த கணமே வந்த விண்ணவர் கோன் ஜிப்ரஈல் (அலை) பனீ குறைழ்லாக்களின் புறம் படை நடத்திச் செல்ல அல்லாஹ் கட்டளையிட்டுள்ளதை அண்ணலார் (ஸல்) அவர்களிடம் எடுத்துரைத்தார்கள்.

ஹிஜ்ரத்தின் ஆரம்ப காலத்தில் முஹாஜிர்களையும் அன்ஸார்களையும் இணைத்து புதியதொரு சமுதாய

வாழ்வை மதீனாவில் வகுத்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், மதீனாவிலேயே வாழ்ந்து கொண்டிருந்த யூதர்களோடும் சுமூகமான ஓர் அரசியல் உடன்பாட்டைச் செய்திருந்தார்கள். அதன்படி வேதங்கள் அருளப் பெற்றிருந்த அவ்விரு சமூகத்தினரில் எந்த ஒருவரையும் தாக்க வரும் எதிரிகளை முறியடிக்க முஸ்லிம்களும் யூதர்களும் ஒருவருக்கொருவர் துணை நிற்பர் என ஏற்கப்பட்டிருந்தது. ஆனால் பத்ரு, உஹதுப் போர்களில் முஸ்லிம்கள் பெற்ற வெற்றிகளையும், தொடர்ந்து முன்னேற்றப் பாதையில் அவர்கள் கண்ட வெற்றிகளையும் கண்டு புழுங்கிப் போன யூதர்கள் வாலாயமான தங்களின் துரோகச் செயலை மீண்டும் துவக்கலாயினர். பனீ நுழ்ளைர்களான அவர்களில் ஒரு பிரிவினர் ஒரு சமயத்தில் தங்களிடம் உரையாட வந்த அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை அவர்களின் தோழர்களோடு தங்களின் கோட்டை மதிலோரம் அமர்த்தி மதிலின் மேலிருந்து பாறாங்கல்லை உருட்டி விட்டுக் கொல்லவே சதி சூழ்ந்தனர். பெருமானார் [ஸல்] அவர்கள், ஹழ்லரத் ஜிப்ராயீல் (அலை) அவர்களால் எச்சரிக்கப்பட்டு அச்சூழ்ச்சியிலிருந்து தப்பினார்கள். துரோகத்தனமிழைத்த யூதர்களின் மீது முஸ்லிம்களால் அதன்பின் போர்ப் பிரகடனம் செய்யப்பட்டது. ஒருவார கால முற்றுகைக்குப் பின் பனீ நுழ்ளைர்களோ கேட்டுக் கொண்டபடி அவர்கள் மீது கருணை காட்டப்பட்டு அவர்களனைவரும் நாடு கடத்தப்பட்டார்கள். அவர்களின் தலைவனான ஹுயை என்பவனே அகழ்ப் போர்த் தருணத்தில் எதிரிகளின் படைகளுக்குத் துணையாக பனூ குறைழ்லா யூதர்களை மாறச் செய்து விட்டான்.

உடன்பாட்டை முறித்து, துரோகமிழைக்கத் துணிந்து விட்டார்கள் யூதர்கள் என்ற செய்தி கேட்டு விபரமறிந்து வர பெருமானார் (ஸல்) அவர்கள் அன்ஸாரித் தோழர்களான ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத், ஸஅத் இப்னு உபாதா (ரலி) ஆகிய இருவரையே அனுப்பி வைத்தார்கள். அவ்விருவரிடமும் பனூ குறைழ்லாக்கள் ''எந்த உடன்பாட்

டையும் நாங்களறியோமே. முஹம்மத் யார் என்பதே எங்களுக்குத் தெரியாதே'' என்றளித்த பதில் காரணமா கவே ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் மனம் வெம்பி இறைவனிடம் வழுத்தினார்கள். அவர்களின் வேண் டுதல் ஏற்கப்பட்டது.

அகழினைப் பிரிந்து வந்த அதே மூவாயிரம் முஸ்லிம்கள் பனூ குறைழ்லாக்களின் கோட்டைகளைச் சூழ்ந்து கொண் டனர். பதினைந்து நாட்கள் வரை நீடித்த முற்றுகைக்குப் பின் பனூ குறைழ்லாக்கள் தங்கள் கோட்டைக் கதவுகளைத் திறந்து சரணடைந்தனர். இனி அவர்களைப் பற்றிய தீர்மா னம் யோசிக்கப்பட்டது. தாங்கள் கொல்லப்படுவோம் என் பதை உணர்ந்தேயிருந்த யூத 'குறைழ்லா'க்கள் பனூ நுழ்லைர்கள் மீது காட்டப்பட்டதே போன்ற கருணை தங் கள் மீதும் காட்டப்பட தங்களின் பூர்வீகத் தோழமையாளர் களான அவ்ஸ்களைக் கொண்டு பெருமானார் (ஸல்) அவர் களிடம் பரிந்துரைக்கச் செய்தனர். அவ்வாறாகப் பரிந்துரைத் தவர்களிடம் அண்ணலார் (ஸல்) அவர்கள், ''அவர்களைப் பற்றிய முடிவை (அவ்ஸ்களாகிய) உங்களிலிருந்தே ஒருவ ரைச் செய்ய நான் விட்டுவிடில் நீங்கள் திருப்தியடைவீர் களா?'' என வினவினார்கள். ''ஆகட்டும்'' என அவ்ஸ்களைச் சார்ந்த பரிவுரையாளர்கள் ஒப்பினார்கள். உடனேயே அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களை அழைத்து வரும்படியாக அவர்களிலேயே சிலரை அனுப்பி வைத்தார்கள்.

நோய்ப் படுக்கையிலிருந்த ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் ஒரு வாகனத்திலமர்த்தி அழைத்து வரப் பட்டனர். வழி நெடுகிலும் அவர்களை அழைத்துச் செல்ல வந்திருந்த தோழர்கள் ''நேச மனங் கொண்ட உம்மிட மிருந்து நன்மையையே தங்களுக்கு நம்பியிருக்கிறார்கள் நம் முடைய நேசர்கள். அதற்கேற்பவே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் தீர்ப்பை வழங்க உம்மை அழைத்திருக்

கிறார்கள்.'' என்றெல்லாம் போதித்த வண்ணமே வந்தார் கள். அவர்களுக்கெல்லாம் எந்த மறுமொழியும் கூறாமல் ஸஅத் (ரலி) மவுனமாகவே வந்து கொண்டிருந்தனர். மரணத் தின் தாலாட்டில் ஊஞ்சலாடிக் கொண்டிருந்த அவர்களின் மனக் கண் முன்னே மாநபி பெருமான் (ஸல்) அவர்களின் மாண்பும் மரியாதையுமே நிழலாடிக் கொண்டிருந்தன.

أَشِدَّاءُ عَلَى الْكُفَّارِ

--''நிராகரிப்போர் மீது மிகக் கடுமையானவர்கள்'' நபிபெருமான் (ஸல்) அவர்களின் தோழர்கள். ஃபுர்கானில் மட்டுமின்றி முந்தைய வேதங்களான 'தவ்ராத்'திலும் 'இஞ்சி'லிலும் கூட அவர்களின் இலக்கணங்கள் விளக்கப்பட் டுள்ளன. இவ்வகையில் முஹாஜிர்களில் ஹழ்லரத் உமர் அல் ஃபாருக் (ரலி) அவர்களின் மன நிலையை ஒத்ததாயி ருந்தது அன்ஸார்களில் ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் மனநிலை.

பத்ருப் போர் முடிந்து ஓய்வுடன் அமர்ந்திருந்த அண்ண லார் (ஸல்) அவர்களின் அருகே காவல் மேற்கொண்டிருந் தனர் ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி). அச்சமயம் சில அன்ஸார்கள் தாங்கள் சிறை பிடித்திருந்த கைதிக ளோடு அங்கு வந்தார்கள். அதனைக் கண்டு ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் முகம் அடைந்த மாறுதலைக் கண்டே பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார் கள்,''உம்முடைய தோழர்களின் நடவடிக்கை உம்மனதுக்குப் பொருத்தப்படவில்லை போல் தோன்றுகிறது'' என்று. ''ஆம்'' என்றனர் ஹழ்லரத் ஸஅத் (ரலி). தூதர் பெரு மான் (ஸல்) அவர்களை எதிர்த்துப் போரிட வந்தவர் களைத் துணித்துத் தொலைக்காமல் கைது செய்து அழைத்து வரத் தேவையென்ன? — இதே கருத்தையே ஹழ்லரத் உமர் அல் ஃபாருக் (ரலி) அவர்களும் கொண்டி

ருந்தார்கள். ஒருவாறாக அக்கைதிகள் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் கருணை குணத்தால் உயிர் தப்பி விடு தலை பெற்றுச் சென்றார்களானாலும் பின்னர் நடைபெற்ற உஹது, அகழ்ப் போர்களிலும் அவர்களில் பெரும்பாலார் மீண்டும் பங்கேற்கவே செய்தனர்.

பனூ நுழ்லைர்களுக்கு கருணை காட்டி உயிருடன் விட்டதன் பலன்தான் என்னவாயிற்று? அவர்களின் தலைவ னான ஹுயையய் எனப்பட்டவனே பனூ குறைழ்லாக்களை மனம் மாறச் செய்தவன். அப்போதே அவர்களைக் கொன்று தீர்த்திருந்தால் இன்று குறைஷிகளுக்குத் துணை யாக வந்திருக்கவு மாட்டார்கள். பனூ குறைழ்லாக்கள் துரோகமிழைக்கத் துணித்திருக்கவு மாட்டார்கள்.

இந்த முன்னுதாரணங்களனைத்துக்கும் மேலாக பனூ குறைழ்லாக்கள் தம் செவி கேட்க 'முஹம்மத் யாரென்பதே எங்களுக்குத் தெரியாதே' என்று சொன்ன படுபாதகப் பொய் ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் சிந்தனையை விட்டகல மறுத்தது.

அவர்களனைவரும் நபி பெருமான் [ஸல்] அவர்களின் சன்னிதானத்தை அடைந்தனர். ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் வாகனத்திலிருந்து இறக்கப்பட்ட சமயம் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள், 'கூமூலிஸய்யிது(க்)கும்—உங்களின் தலைவருக்காக எழுந்து நில்லுங்கள்' என தங்களோடிருந்த தோழர் களுக்குக் கட்டளையிட்டார்கள். அவ்வாறே அங்கிருந்த தோழர்களெல்லாம் எழுந்து நின்றார்கள்; தங்களின் அந்தத் தலைவரை மரியாதையுடன் வரவேற்றார்கள்; அண்ணலார் (ஸல்) அவர்கள் அந்தத் தலைவருக்குச் சேர்த்துள்ள பெரு மையையும் கடமையையும் சிலாகித்துப் பேசி பனூ குறைழ் லாக்களின் விஷயத்தில் கருணையுடன் கூடிய ஒரு தீர்ப்பை

வழங்கும்படி கோரினார்கள். ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களும் பேசத் துவங்கினார்கள் :

''அப்படியானால் அல்லாஹ்வின் மீதாணையாக நான் வழங்கும் தீர்ப்பை எந்த மாற்றமுமின்றி நீங்களும் ஏற்பீர்களா?'' என அவர்கள் வினவினார்கள்.

''ஆம்! ஏற்போம்'' என அனைவரும் பதிலுரைத்தனர்.

''இந்த வாக்குறுதி இங்குள்ளோர் அனைவரையும் கட்டுப்படுத்துமா?'' என ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்கள் மீண்டும் வினவினார்கள். அது சமயம் அவர்களின் பார்வை நபி பெருமான் (ஸல்) அவர்களையே குறித்து அவர்கள் மரியாதையுடன் கேட்பதாகத் தோன்றியது. பெருமானார் [ஸல்] அவர்களே ''அப்படியே'' என பதிலளித்தார்கள்.

''அப்படியானால் நான் என் தீர்ப்பை வழங்குகின்றேன்'' என மறுகணமே துவங்கிய ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் தொடர்ந்து ''அவர்களின் ஆண்கள் அனைவரும் கொல்லப்பட வேண்டும்; பெண்களும் சிறார்களும் சிறை பிடிக்கப்பட வேண்டும்; உடைமைகள் பறிமுதல் செய்யப்பட வேண்டும்'' என தீர்ப்பளித்து முடித்தார்கள்.

''ஏழு வானங்களுக்கப்பாலிருந்து இறைவனளித்த தீர்ப்பினையே நீரும் வழங்கினீர்'' என பெருமானார் (ஸல்) அவர்கள் தம் தோழரைப் பாராட்டினார்கள். ஏனெனில் 'தவ்ராத்'திலும் அவ்வாறே கூறப்பட்டிருந்தது. துரோகிகளுக்கு வழங்கப்பட வேண்டிய தண்டனையைப் பற்றி யூதர்களின் வாய்படவே ஓதத் தாம் கேட்டிருந்த வேதக் கட்டளையின்படியே தீர்ப்பினை ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) வழங்கினார்கள். அவர்களின் தீர்ப்பு நிறைவேற்றப்பட்டது.

ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் கொண்டிருந்த வேட்கைகள் இரண்டும் நிறைவேறி விட்டன. அகழ்ப்

போரிலிருந்து விரண்டு வெளியேறிய குரைஷிகளிடையே அப்போது அவர்களின் தானைத் தலைவர்களுள் ஒருவராய் விளங்கிய—பிந்திய காலத்தில் பெரு வெற்றிகளை இஸ்லாத் துக்கு ஈட்டித் தந்த—தோல்வியின் முகம் காணா மாவீரர்—ஹழ்லரத் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களே, ''முஹம் மத் (ஸல்) கூறுவதனைத்தும் உண்மைதான் என்பதை இப் போதாவது அறிவுடையோர் உணர்ந்து கொள்வார்கள்'' என்றார்கள். அதனைக் கேட்டு பதட்டமடைந்த குரைஷித் தலைவர் அபூஸுஃப்யான், ''நீரே இப்படிப் பேசலாமா? முஹம்மத் உம் தந்தையின் கண்ணியத்தையே குலைத்தவ ரல்லவா? உம் கோத்திரத் தலைவர் அபூ ஜஹலைக் கொன்று தொலைத்தவரல்லவா?'' என்று கேட்டு ஹழ்ல ரத் காலித் (ரலி) அவர்களை அமைதிப்படுத்த வேண்டி யிருந்தது. அந்த அளவுக்கு குரைஷிகள் நிலை குலைந்து விட்டிருந்தனர். வரலாற்றிலும் அதற்குப்பின் அவர்களுக் கும் முஸ்லிம்களுக்கும் எந்தப் போரும் நடைபெறக் காணப் படவில்லை. பனூ குறைழ்லாக்களும் ஒழிக்கப்பட்டு போயி னர். அதனையடுத்து ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்களின் உடல் நிலை மாறுதலடையத் துவங்கியது. ஆரம்பத்தில் இரத்தப் பெருக்கு நின்று காயத்தின் மீது ஏற்பட்டிருந்த வீக்கம் ஒருநாள் திடீரென உடைந்தது. மீண்டும் பிரவாக மெடுத்த இரத்தம் அவர்கள் தங்கியிருந்த குடிலிலிருந்து பள்ளியின் முற்றம் வரை ஓடியது. செய்தியறிந்து பெரு மானார் (ஸல்) அவர்கள் விரைந்து வந்தார்கள்; மயக்க நிலையடைந்திருந்த தோழரின் அருகே அமர்ந்தார்கள்; அவரின் தலையைத் தங்களின் மார்பில் சாய்த்துக் கொண்ட வர்களாக, ''இறைவா! நேர்வழி பற்றிய உன் அடியார் ஸஅத் உன் தூதரின்பால் பூரண நம்பிக்கை கொண்ட வராகவே விளங்கினார். தாம் ஆற்ற வேண்டிய கடமைகள் அத்தனையையும் அவர் நிரப்பமாகவே ஆற்றினார். உன் பொருத்தத்தைப் பெற்றவர்களின் ஆன்மாக்களை நீ எவ் வாறு கைப்பற்றுகின்றாயோ அவ்வாறான மிகத் திருப்தி

கரமான முறையிலேயே அவரின் ஆன்மாவையும் நீ கைப் பற்றிக் கொள்'' என்றிறைஞ்சினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் குரல் கேட்டு ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்களின் உணர்வும் திரும்பியது. மரணத்தின் மடியிலும் தம் மாநபியின் மரியாதையைப் பேணத் தவறாத அத்தோழர் தம் சிரசை மீண்டும் தலையணியிலேயே சாய்த்துக் கொண்டவர்களாக, ''அஸ்ஸலாமு அலைக்க யா ரஸூலல்லாஹ்! தங்களின் தூதை நிரப்பமாகவே எத்தி வைத்தீர்கள் என்று நான் சாட்சியம் கூறுகிறேன்.'' என மொழிந்தார்கள். அதுவே அவர்களின் இறுதிப் பேச்சு. மீண்டும் மயக்க நிலையடைந்த அத்தோழரை அவரின் இல்லத்தில் கொண்டு சேர்ப்பிக்கப் பணித்து நபி பெருமான் (ஸல்) அவர்கள் இல்லம் மீண்டார்கள். சற்று நேரத்தில் ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்களின் ஆன்மா பிரிந்த செய்தி ஹழ்லரத் ஜிப்ரயீல் (அலை) அவர்களாலேயே பெருமானார் (ஸல்) அவர்களுக்கு எத்தி வைக்கப்பட்டது.

முப்பத்தேழே வயதுகளடைந்திருந்த அந்நபிமணித் தோழர் சற்றுப் பருத்த உடலுடனேயே விளங்கினர். எனினும் அவர்களின் உடலைச் சுமந்து சென்ற தோழர்கள் அது பலுவற்றிருப்பதைக் கூறி வியப்படைந்த போது, ''விண்ணவர்கள் அதனைச் சுமந்து செல்கிறார்கள், அதனாலேயே அது உங்களுக்கு பலுவற்றிருக்கிறது'' என நபி பெருமான் (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் வரவுக்காக விண்ணின் வாசல்களெல்லாம் திறக்கப்பட்டு அல்லாஹ்வின் அர்ஷும் மகிழ்வுற்றுத் துளும்பி நிற்கும் செய்தியை விண்ணவர் ஜிப்ரயீல் (அலை) வந்தறிவித்ததாகக் கூறிய பெருமானார் (ஸல்) அவர்கள் எழுபதினாயிரம் வானவர்கள், ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்



களின் மரண ஊர்வலத்தில் கலந்து கொள்வதாகவும் அறிவித்தார்கள்.

மதீனாத் திருநகரின் ஆண்கள், பெண்கள் அனைவருமே பெருமான் நபி (ஸல்) அவர்களின் பின்னே நின்று இறைஞ்சினர். ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களின் உடலை அடக்கம் செய்ய தோண்டப்பட்ட மண்ணறையி லிருந்து கஸ்தூரியின் மணம் வீசியதாக ஹழ்ரத் முஹம்மத் இப்னு ஷரஹ்பீல் இப்னு ஹஸனா (ரலி) குறிப்பிடுகிறார்கள்.

மண்ணறையில் அத்தோழரின் உடல் இறக்கப்படுவதை யும் மண் தள்ளி மறைக்கப்படுவதையும் பார்த்த வண்ண மிருந்த நபி பெருமான் (ஸல்) திடீரென 'ஸுப்ஹானல் லாஹ்-அல்லாஹ் மிகத் தூய்மையானவன்' என மும்முறை துதி செய்தார்கள். குழுமியிருந்த மற்ற தோழர்களும் அவ்வாறே உரத்து 'தஸ்பீஹ்' செய்தார்கள். பின்னர் பெருமானார் (ஸல்) அவர்கள் ('அல்லாஹு அக்பர் — அல் லாஹ் மிகப் பெரியவன்' என) தக்பீர் கூறினார்கள். மற்ற தோழர்களும் அவ்வாறே முழங்கினார்கள். பின்னர் அதற் கான காரணம் வினவப்பட்டபோது "ஸஅதின் உடலை மண் ணறை நெருக்கியது. அதனைக் கண்டே நான் தஸ்பீஹ் செய்தேன். அல்லாஹ் தன் பேரருளினால் அந்நெருக்கு தலைத் தடுத்து விசாலப்படுத்தியது கண்டு நான் தக்பீர் கூறினேன்" என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறியதாக ஹழ்ரத் ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

"எம்பெருமானார் (ஸல்) அவர்களின் திருவாயால் நான் செவியுறும் செய்திகள் ஒவ்வொன்றையும் இறைவனின் புற மிருந்து வருவனவாகவே நான் நம்புகிறேன். தொழுகையின் போது நான் என் எண்ணங்களை எப்புறமும் சிதற விடுவ தில்லை. மரண ஊர்வலத்தோடு செல்கையில் மண்ணறை யின் கேள்வி கணக்குகள் பற்றிய சிந்தனையிலேயே நான்

மூழ்கி விடுகிறேன்—என்று தங்களின் குண இயல்புகளைப் பற்றி ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்களே குறிப்பிட்டுள்ளதைப் பற்றி கேட்ட ஹழ்லரத் ஸஈத் இப்னு முஸையிப் (ரஹ்) அவர்கள் இவை நபிமார்களுக்கேயுரிய குணங்களன்றோ என வியந்தார்கள்!

'மண்ணறையின் நெருக்குதலிலிருந்து தப்பித்த ஒரே மனிதர் ஸஅத் இப்னு மஆத் [ரலி]' என அண்ணல் எம் பெருமானார் [ஸல்] அவர்கள் தம் உரையினூடே நினைவு கூர்வார்கள். ஒரு சமயம் ஒரு மெல்லிய ஆடையை வியப்பு டன் பார்வையிட்டுக் கொண்டிருந்த தோழர்களிடையே வந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''சுவனத்தில் ஸஅத் இப்னு மஆத் அணிந்துள்ள மேலாடை இதனினும் மென்மை யானது'' என்றார்கள்.

அம்ரு, அப்துல்லாஹ் என்ற இரு ஆண் மக்களை ஹழ் லரத் ஸஅத் இப்னு மஆத் [ரலி] அவர்கள் தம் வழிவாறு களாக விட்டுச் சென்றார்கள். அவ்விருவரும் கூட நபி பெருமான் [ஸல்] அவர்களின் தோழமையில் தொடர்ந்து. ஹுதைபியா உடன்பாட்டிலும் பங்கேற்றுள்ளனர்.



# 4. ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி)

'அக்கபா'வில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களோடு சந்திப்பும், அவர்களின் திருக்கரங்களில் 'அன்ஸார்' களில் எழுபத்து ஐந்து பேர்களவர்கள் செய்தளித்த உடன்பாடும் மிக இரகசியமாகவே நடந்தேறின. ஆயினும் அந்த உடன்பாடு செய்யப்பட்டு முடிந்த மறுகணமே, அந்த இடத்திலேயே, "ஓ குரைஷிகளே! உங்களை எதிர்க்க வழிகேடர்களின் ஒரு கூட்டம் இதோ முஹம்மதுடன் தயாராகி விட்டது" என்ற குரல் இருட்டினிடையே ஒலித்தது!

மனித உருவேற்று உலவிய ஒரு 'ஷைத்தானி'ன் குரல் ஒலிக்கக் கேட்டதுமே நபி பெருமான் (ஸல்) அவர்கள், தங்களின் அந்தப் புதிய நேசர்களை அவரவர்களின் கூடாரங்களுக்குச் சென்று சேரப் பணித்து விரைந்து விடை கொடுத்தார்கள். அப்போதே வாளையுருவி, அண்ணலார் (ஸல்) அவர்களின் அனுமதியை வேண்டி நின்றார் அடலேறு ஒருவர். ஆனால், "அதற்கான கட்டளை இன்னும் வரவில்லை" என கூறி ஆண்டவனின் தூதர் (ஸல்) அவர்கள் அனைவரையும் அமைதிப்படுத்தி அனுப்பி வைத்தார்கள்.

பொழுது புலர்வதற்குள் செய்தி எப்படியோ மக்காவின் குரைஷிகளுக்கு எட்டி, அவர்கள் விரைந்தோடி வந்தனர்; மினாவில் தங்கியிருந்த மதீனாவின் பயணிகளைத் துருவித் துருவி விசாரித்தனர். "இல்லவே இல்லை" என ஒவ்வொரு பயணியும் சத்தியமிட்டே கூறினார். 'கஸ்ரஜ்' களில் மரியாதை பெற்ற தலைவனாக விளங்கிய அப்துல்லாஹ் இப்னு உபையும் கூறினான், "ஒருக்காலும் இருக்காது. அப்படியிருந்தால் என்னிடம் சொல்லாமலா இருப்பார்கள் என் மக்கள்" என்று. இரவெல்லாம் உறக்கத்தி

லாழ்ந்து கிடந்து விழித்தெழுந்திருந்தவர்களின் வாக்குறுதிகளையெல்லாம் கேட்டு, திரும்பி விட்டார்கள் குரைஷிகள்.

சத்தியத்தின் புறம் திரும்பி விட்டிருந்த 'அன்ஸார்'கள் சூழ்நிலையை அனுமானித்து ஒருவர் இருவராக தத்தம் குழுவினருடன் பயணம் புறப்பட்டார்கள் மதீனாவை நோக்கி. மக்காவைச் சென்றடைந்த குரைஷிகளோ மீண்டும் தூண்டப்பட்டார்கள். இரவு நடைபெற்றதாக தாங்கள் செவியுற்ற நிகழ்ச்சி முழுமையும் உண்மையே என்பது உறுதியாயிற்று அவர்களுக்கு. சம்பந்தப்பட்டவர்களைப் பிடித்து விட தீவிரங்கொண்டு அவர்கள் வருவதற்குள் 'அன்ஸார்'களின் படை பறந்து விட்டிருந்தது 'மினா'வை விட்டும். அவர்களில் இரண்டே பேர் குரைஷிகளின் கரங்களில் சிக்கி விட்டனர். கயிறுகளால் பிணைத்து இழுத்து வரப்படுகையில் அவ்விருவரிலும்ஒருவர் எப்படியோ தப்பிவிட்டார். மற்றவரும் தப்பி விடாதவாறு அவரின் கரங்களைக் கழுத்துடன் பலமாகப் பிணைத்தனர் குறைஷிகள். ஒருவர் மாறி மொருவர் அவரின் முகத்தில் அறைவதும் விலாக்களில் குத்துவதுமாக தலையின் முடியைப் பிடித்துப் பறபறவென இழுத்து வந்தனர் மக்காவின் புறம். வழியில்,

''சிவந்த கம்பீரமான ஒரு மனிதர் வந்து கொண்டிருந்தார்.* ஒரு சுமுகமான அணுகுமுறை இந்த மனிதரைக் கொண்டே கிடைக்கலாம் என நான் எண்ணினேன். ஆனால் அருகே வந்ததும் அவர் ஓங்கித் தந்த ஒரே அறையில் என் முகம் திரும்பிக் கொண்டது. மொத்தத்தில் இவர்களனைவருமே இருண்டுபோன வன்னெஞ்சர்கள் என்ற முடிவுக்கு வந்தேன். அச்சமயத்தில் வந்து சேர்ந்த

* மக்கமா நகரம் வெற்றி கொள்ளப்பட்ட பின் இஸ்லாத்தை ஏற்ற ஹழ்லரத் ஸுஹைல் இப்னு அம்ரு (ரலி) அவர்களே அவர்.

(அபுல் பக்த்தரீ இப்னு ஹிஷாம் எனப்பட்ட) மற்றொருவர் என்னை நெருங்கி ''சகோதரரே! எவ்வளவு நேரத்துக்குத் தான் இந்த வதைகளைத் தாங்கிக் கொண்டிருப்பாய். மக்காவில் உன்னைத் தெரிந்தவர் எவருமே இல்லையா?'' என வினவினார். நான் சற்று ஆறுதலடைந்தேன். ''இருக்கிறார்கள். ஹாரிஸ் இப்னு உமையா (இப்னு அப்துஷ் ஷம்ஸ் இப்னு அப்து மனாஃப்), ஜுபைர் இப்னு முத்இம் ஆகியோரை நான் அறிவேன். அவ்விருவரும் வாணிபத்தின் பொருட்டு யத்ஸ்ரிபுக்கு வந்த பல சமயங்களில் அவர்களின் பயணக் கூட்டங்களை நான் பாதுகாத்திருக்கிறேன்'' என்றேன் நான். ''அப்படியானால் அவர்களின் பெயரைக் குறிப்பிட்டு பாதுகாப்புக்கு அழை. அவர்களோடு உனக்குள்ள பழக்க உறவை உரக்க அறிவி'' என கூறிவிட்டுச் சென்றாரவர். அவ்வாறே நான் செய்தேன்—பிடிபட்ட தாம் அடைய நேர்ந்த அவலத்தைப் பிந்திய நாட்களில் அந்த வாலிபர் விவரித்த செய்தி இது!

பிரிந்து சென்ற அபுல் பக்த்தரீ இரக்க சிந்தனையுடையவர். உடனேயே ஹாரிஸ் இப்னு உமையா, ஜுபைர் இப்னு முத்இம் ஆகிய இருவரையும் கஅபாவுக்கு அருகாமையிலேயே சந்தித்தாரவர். ''கஸ்ரஜ்களைச் சார்ந்த ஒரு மனிதர் 'அப்தஹ்'ஹில் மக்காவாசிகளின் கரங்களில் சிக்கி வதைபடுகிறார். உங்கள் இருவரோடும் பழக்கமுண்டெனக் கூறும் அவர் உங்களை பாதுகாப்புக்கெனக் கூவி அழைத்துக் கொண்டிருக்கிறார்'' என தெரிவித்தார். ''அவரின் பெயரைக் கேட்டீரா?'' என வினவினர் அவ்விருவரும். ''ஸஅத் இப்னு உபாதா'' என அபுல் பக்த்தரீ கூறக் கேட்டதும் ''அந்தோ! கஸ்ரஜ்களின் சீமானல்லவா அவர்'' என துடித்தெழுந்து ஓடி வந்தனர் அவ்விருவரும்; தங்களைப் பற்றி அவர் கூறியதனைத்தும் உண்மையே, ''எப்போதும் அவர் எங்களுக்குப் பாதுகாப்பு தந்திருப்பதோடேயல்ல, யத்ஸ்ரிபில் எவரும் எவருக்கும் அநீதம் விளைவிக்க விட

மாட்டாரவர்'' என்றெல்லாம் புகழ்ந்துரைத்து ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களை மக்காவாசிகளின் பிடியிலிருந்து விடுவித்தனர்.

மதீனாவின் அன்ஸார்களில் தலைமைத்தனம் பெற்ற இரண்டு ஸஅத்கள் இருந்தனர். அவ்ஸ் கோத்திரத்தவரிடையே ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத் [ரலி] அவர்கள் விளங்கியதே போல் 'கஸ்ரஜ்' களிடையே செல்வாக்குடைய ஒரு தலைவராக ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்கள் விளங்கினர். பணபலம் மட்டுமின்றி மனவளமும் கொண்டிருந்த இவர்களின் பாட்டனார் 'துலைம்' உடைய காலத்தில் உணவு வேளைகளில் அவரின் கோட்டையின் மதில்மேல் ஒருவர் ஏறி நின்று 'நல்ல உணவும், இறைச்சியும், வெண்ணையும் விரும்புவோர் உள்ளே வாருங்கள்' என்று தவறாது அழைப்பது வழக்கம். அந்தப் பொது அழைப்பை ஏற்று, பயணிகளாக வெளியிலிருந்து வந்திருப்போர் மட்டுமின்றி ஊரில் நிரந்தரமாகத் தங்கி வாழ்வோரும் அன்றாட விருந்தில் கலந்து கொள்வர். அத்தகைய வள்ளன்மை பாட்டனார் துலைமையடுத்து தந்தை உபாதாவிடமும், தொடர்ந்து ஹழ்ரத் ஸஅத் [ரலி] அவர்களிடமும் குடிகொண்டிருந்ததால், பொதுவாக மதீனாவிலும் சிறப்பாக கஸ்ரஜ்களிடையிலும் அவ்வீட்டாரின் பெருமை கொடி கட்டிப் பறந்தது! கல்வியறிவிலும் சிறப்புற்றிருந்தனர் ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி). அக்காலத்தில் எழுதப் படிக்கத் தெரிந்த மிகச் சில யத்ஸ்ரிப் வாசிகளில் அவர்களும் ஒருவர். வில்வித்தையிலும் அவர்களின் வீரம் சுடர் வீசியது. 'ஸய்யிதுல் கஸ்ரஜ்—கஸ்ரஜ்களின் தலைவர்' என மக்களால் அழைக்கப் பெற்ற அவர்கள், 'அபூ கைஸ்', 'அபூ ஃஸாபித்' ஆகிய புனை பெயர்களாலும் அறியப்பட்டிருந்தனர். அவர்களின் அன்னை உம்ராவும் பின்த் மஸ்ஊதும் இஸ்லாத்தை ஏற்றிடப் பேறு பெற்றிருந்தார். மக்காவில் தோன்றியுள்ளதாக மதீனாவின் வீதிகளில்

பேசப்பட்ட புதிய மார்க்கத்தை ஆரம்ப நாட்களிலேயே ஏற்க எந்தத் தயக்கமும் அடையாத ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களை அக்கபாவின் இரவில் வரவேற்று, அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அச் சமயம் தெரிந்தெடுக்கப்பட்ட தம் பன்னிரு 'நக்கீப்' களில் கஸ்ரஜ்களைச் சார்ந்த ஒன்பதின்மரில் அவரையும் ஒருவராகக் கண்டார்கள்.

மதீனா வாழ்வில் அண்ணலார் (ஸல்) அவர்கள் மேற்கொண்ட நடவடிக்கைகளனைத்திலும் மிகச் சிறந்த துணைவர்களாகவும் முக்கிய ஆலோசகர்களாகவும் அவ்ஸ், கஸ்ரஜ்களின் தலைவர்களான இரு ஸஅத் [ரலி] களுமே இருந்தார்கள். வைரிகளின் விஷயத்தில் வைர நெஞ்சம் படைத்தவர்களாக அவ்ஸ்களின் தலைவரான ஹழ்லரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் விளங்கிய அதே சமயம் கஸ்ரஜ்களின் தலைவரான ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள் வஞ்சகர்களின் விஷயத்தில் விவேகமான—சமயோசிதமான யோசனைகளை நபி பெருமான் (ஸல்) அவர்களுக்குக் கூறி வந்தார்கள். நயவஞ்சகர்களின் தலைவனான அப்துல்லாஹ் இப்னு உபை தன் மரணத்துக்கு முன்பே முஸ்லிம்களின் வாட்களுக்குப் பலியாகி விடத் தக்க பல தருணங்களை வாய்க்கப் பெற்றும் பெருமானார் [ஸல்] அவர்களின் கருணையைப் பெற்றுத் தப்பிக்க ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களின் பரிந்துரையே காரணமெனலாம். ஆரம்ப நாளிலேயே அவனின் கடுசொற்களால் வருத்தமுற்ற ஒரு சமயம்* பெருமானார் [ஸல்] அவர்கள் அடுத்து தாங்கள் சந்தித்த ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களிடம் நடைபெற்ற சம்பவத்தை விவரித்தார்கள். ஏனெனில் அப்துல்லாஹ் இப்னு உபை கஸ்ரஜ்களைச் சார்ந்தவனே. நபி பெருமான் [ஸல்] அவர்கள் கூறிய விவரங்களைக் கேட்ட ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்கள்,

---

* 67-பக்கம் பார்க்க.

''ஆண்டவனின் தூதரவர்களே! அவருக்கு நாங்கள் முடி சூட்டக் காத்திருந்தோம். அதற்கென மணி முடியும் தயாரித்திருந்தோம். ஆயினும் தங்களின் வரவால் எங்களுக்கு அவரின் தலைமை தேவையற்றுப் போய்விட்டது. அதனாலேயே தங்கள்பால் காழ்ப்பு கொண்டுள்ள அவரைத் தாங்கள் பொருட்படுத்த வேண்டாம்'' என ஆறுதல் கூறினார்கள்.

முஹாஜிர்களையும் அன்ஸார்களையும் பேதப்படுத்தி கலகம் விளைவிக்க முயன்ற ஒரு சமயம் ஹழ்லரத் உமர் [ரலி] அவர்கள் அப்துல்லாஹ் இப்னு உபையைக் கொல்லவே துணிந்து விட்டனர். ஆனால் பெருமானார் (ஸல்) அவர்களோ, 'முஹம்மத் தம் தோழர்களையே கொல்கிறார்' என யூதர்கள் பழிதூற்றுவார்களே என கவலையுற்றார்கள். ஏனெனில் இப்னு உபையும் அவனின் கூட்டாளிகளும் பெருமானார் [ஸல்] அவர்களின் தோழர்களோடேயே கலந்திருந்து தங்களையும் தோழர்களாகவே காட்டிக் கொண்டிருந்தார்கள். அச்சமயத்திலும் ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்கள், ''தூதர் பெருமான் அவர்களே! தாங்கள் விரும்பினால் அவரை விரட்டி விடலாம். எங்களிடையே அவர் தம் செல்வாக்கை இழந்து இழிவடைந்து விட்டார். எனினும் அவரைத் தக்கபடி பயன் படுத்திக் கொள்வதே நல்லது'' என பரிந்துரைத்தார்கள்.

ஹுனைன் போரின் பின் நடைபெற்ற பொருள் பங்கீட்டில் மன அயர்வு கொண்டு அன்ஸார்கள் தர்க்கித்த செய்தியைக் கணப்பொழுதும் தாமதியாது பெருமானார் [ஸல்] அவர்களுக்கு எத்தி வைத்து, அவர்களை அழைத்து வந்து அன்ஸார்களை மனம் தெளியச் செய்தவர்கள் ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களே. (பக்கம்-77)

மதீனாவை விட்டும் வெளிச் செல்ல நேர்ந்த தருணங்களிலெல்லாம் நகரின் நிர்வாகப் பொறுப்பை நெருக்கமான ஒரு தோழரிடம் ஒப்படைத்துச் செல்வதை வாலாயமாகக்

கொண்டிருந்த நபி பெருமான் [ஸல்] அவர்கள் முதன் முதலாக அப்பெருமையை ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களுக்கேயளித்தார்கள். ஹிஜ்ராவின் பதினோராம் மாதத்தில் அண்ணலார் [ஸல்] அவர்கள் மதீனாவை விட்டும் வெளிச் செல்ல நேர்ந்த போது அவர்களின் பிரதிநிதியாக மதீனாவில் ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களே இருந்தனர்.

விவேகமான யோசனைகளைக் கூறிய இத்தோழர் வீரப் போராற்றவும் தவறியதில்லை. முதன் முதலாக நடைபெற்ற பத்ருப் போரில் மட்டும் இவர்கள் கலந்து கொள்ள முடியாதவாறு உடல் நலம் பாதிக்கப்பட்டுப் போயினர். எனினும் போரில் பங்கேற்பதற்கான எல்லா ஆயத்தங்களையும் அவர்கள் முன்னதாகச் செய்த வண்ணமிருந்தார்கள். அந்த எண்ணத்தைக் கொண்டே அவர்களின் ஆர்வத்தைக் கணித்து அண்ணலார் (ஸல்) அவர்கள் பத்ருப் போர் வெற்றிப் பொருள்களில் அவர்களுக்கும் ஒரு பங்கு தந்தருளினார்கள்.

மக்க மாநகர வெற்றிப் பிரவேசத்தின் போது பல்வேறு கோத்திர அரபுகளும்ஒன்றுதிரண்ட பதினாயிரம் பேர்களைக் கொண்ட படையில் ஒவ்வொரு கோத்திரத்தவரும் அவரவர்களின் தலைவர்களின் கீழ் அணி வகுத்துச் சென்றனர். இறுதியாக அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்களைச் சூழ வந்த முஹாஜிர்களையும் அன்ஸார்களையும் மட்டுமே கொண்ட படையின் தலைமையை பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களையே ஏற்கச் செய்திருந்தார்கள். பெருமான் நபி (ஸல்) அவர்களின் கொடியைத் தம் கரம் பிடித்து ஆர்ப்பரித்துச் சென்ற அவர்களின் காம்பீரம் காண்பவர்களைக் களிப்படையச் செய்து கொண்டிருந்தது. வழியில் ஹழ்ரத் அப்பாஸ் (ரலி) அவர்களுடன் நின்று படைகளைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த குரைஷித் தலைவர் அபூ ஸுஃப்யான் அவர்

களைக் கண்டதும் ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்களின் உணர்ச்சி பொங்கலாயிற்று. "இன்று பழிதீர்க்கப்படும் நாளாகும். கஅபாவில் இன்று ரத்தம் சிந்துவது அனுமதிக்கப்பட்டு விட்டது. அல்லாஹ் இன்று குரைஷிகளை இழிவடையச் செய்வான்" என்ற பொருள்பட

اَلْيَوْمَ يَوْمُ الْمَلْحَمَةِ اَلْيَوْمَ تُسْتَحَلُّ الْحُرْمَةُ

என்ற வரிகளைப் பாடிய ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களின் தோரணை அபூ ஸுஃப்யான் அவர்களின் கண்களுக்கு முன்னே மக்க மாநகரையே இரத்தக் காடாகப் படம் பிடித்துக் காட்டியது. குரைஷிகளின் அத்தலைவர் கலங்கி நின்ற சமயம் அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களின் பவனியே அருகி வந்து விட்டது. நெருங்கிச் சென்று ஹழ்லரத் அபூ ஸுஃப்யான் [ரலி], "அல்லாஹ்வின் தூதரவர்களே! தாங்கள் தங்களின் கோத்திரத்தினரைக் கொல்லவா அனுமதித்து விட்டீர்கள். ஸஅத் இப்னு உபாதா இவ்வாறல்லவா பாடிச் செல்கிறார். மனிதர்களில் சிறந்த— கருணை நிறைந்த தங்களின் முன் தங்களின் சமூகத்தினருக்காக நான் அல்லாஹ்வையே பிணை நிறுத்துகிறேன்" என முறையிட்டு நின்றனர். அதே சமயம் சிலர் விரைந்து வந்து ஹழ்லரத் உமர் [ரலி] அவர்களின் உடன்பிறந்த ஹழ்லரத் ழ்லிறார் இப்னு கத்தாப் [ரலி] அவர்களின் ஒரு கடிதத்தை அண்ணலவர்களிடம் தந்தனர். அதிலும், "ஸஅத் இப்னு உபாதா (ரலி) இன்று மக்காவாசிகளின் முதுகெலும்புகளை முறித்து விட நாடுகிறார். பெருமானே! குரைஷிகளுக்கு அடைக்கலம் தர இன்று தங்களையன்றி எந்த நாதியுமில்லை. எல்லா வளமும் அவர்கள் பெற்றிருந்தும் பூமி இன்று அவர்களுக்கு மிகச் சுருக்கமடைந்து விட்டது. வானமும் அவர்களின் வைரியாகி விட்டது" என எழுதப் பட்டிருந்த கவிதா வரிகளைப் படிக்கக் கேட்டு அண்ணலார் [ஸல்] அவர்களின் கருணையுள்ளம் பொங்கியது. "இல்லை;

நிச்சயம் அவ்வாறில்லை. இன்று கருணை காட்டப்படும் நாளாகும், கஃபாவின் கண்ணியம் இன்று இரு மடங்காகப் பேணப்படும். குரைஷிகளின் கவுரவம் இன்று ஏற்றம் பெறும்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அருளினார்கள்.

அச்சமயம் அருகேயே இருந்த ஹழ்ரத் உஸ்மான், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ஆகியோரும் கூட, ''அல்லாஹ்வின் தூதரவர்களே! ஸஅதின் உணர்வுப் பிரவாகத்தைப் பார்க்கையில் திடுமென அவர் தம் வாளை உருவி விடுவார் போன்றே தோன்றுகிறது'' என்று தங்களின் அச்சத்தையும் தெரிவித்தார்கள். உடனேயே பெருமானார் [ஸல்] அவர்கள் தங்களின் மருகர் ஹழ்ரத் அலீ [ரலி] அவர்கள் மூலம் செய்தியனுப்பி ஹழ்ரத் ஸஅத் [ரலி] அவர்களின் கரத்திலிருந்த கொடியை அவர்களின் மகனேயான ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத் [ரலி] அவர்களிடம் ஒப்படைக்கச் செய்து ஹழ்ரத் ஸஅத் [ரலி] அவர்களைத் தம் அருகே அழைத்துக் கொண்டார்கள். ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத் [ரலி] பொறுமையே உருக் கொண்ட இளைஞர். அண்ணலார் [ஸல்] அவர்கள் மேற்கொண்ட அந்நடவடிக்கையால் முன்னர் அச்சங் கொண்ட இதயங்கள் அமைதியடைந்ததோடன்றி ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களின் கவுரவமும் உயர்ந்தது. தனையருக்களிக்கப்பட்ட கவுரவம் தந்தைக்கேயுரியதல்லவா?

பாட்டனார் துலைமிடமும் தந்தை உபாதாவிடமும் இருந்த மனவளம் சற்றும் குறைவு படாமல் ஹழ்ரத் ஸஅத் [ரலி] அவர்களிடமும் இருந்தது. போர்க் காலங்களிலும் தேவையான மற்ற தருணங்களிலும் மற்ற தோழர்களே போன்று ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களும் தாராள மனதுடன் பொருளாதார உபகாரங்களைப் புரியத் தயங்கியதில்லை.

அண்ணல் எம்பெருமானார் [ஸல்] அவர்களின் அருகி லிருந்து அறிவையும் ஞானத்தையும் கற்பதேயன்றி வேறு சிந்தனையேயற்றவர்களாய்ப் பள்ளியிலேயே தங்கி வாழ்ந்த 'அஸ்ஹாபுஸ் ஸுஃப்ஃபா'க்கள் எனப்பட்ட திண்ணைத் தோழர்களில் ஒரிருவரையாவது நபியணித் தோழர்கள் ஒரிருவர் அவ்வப்போது பசி தீர்க்க அழைத்துச் செல்வர். ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்களோ, அத் தோழர்களில் எண்பது பேர்களின் அன்றாட உணவுப் பொறுப்பை நிரந்தரமாகவே ஏற்றிருந்தனர்.

ஹிஜ்ரி 5-ம் ஆண்டில் அவர்களின் அன்னை உமரா பின்த் மஸ்ஊத் [ரலி] அவர்கள் மரணமடைந்தபோது தம் அன்னையின் பெயரால் அறம் வழங்க விரும்பிய இவர்கள் அண்ணலார் [ஸல்] அவர்கள் நாடியபடி மதீனாவில் ஒரு குடிநீர்த் தேக்கத்தையே நிறுவினர்.

ஹிஜ்ரி 8-ம் ஆண்டில் ஹழ்லரத் அபூ உபைதா [ரலி] அவர்களின் தலைமையில் சென்ற முன்னூறு பேர்களைக் கொண்ட ஒரு படைப்பிரிவில் இவர்களின் மகனார் ஹழ் லரத் கைஸ் இப்னு ஸஅத் [ரலி] அவர்களும் கலந்து சென் றனர். எதிரிகளைத் தேடிய வண்ணமே வெகு தூரம் கடந்து கடற்கரையோரம் வரை சென்று விட்ட அப்படையினர் கொண்டு சென்ற உணவுப் பொருள்களெல்லாம் தீர்ந்த பின் ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் ஒட்ட கைகளுடன் வந்திருந்தவர்களிடம் மும்மூன்று ஒட்டகைக ளாகக் கடன் வாங்கி மூன்று நாட்கள் தொடர்ந்து படையினரனைவருக்கும் விருந்து படைத்தனர். அந்த நிலை தொடர்ந்தால் பயணம் திரும்பவும் ஒட்டகைகள் இல் லாமல் ஆகிவிடுமோ என அஞ்சிய உமர் [ரலி] அவர்கள் படைத்தலைவர் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களி டம் ''இவரை தடை செய்யாமல் இவரின் போக்கிலேயே விட்டீர்களானால் தம் தந்தையின் உடைமைகளையெல்லாம் விருந்தளித்தே தீர்த்து விடுவார்'' என முறையிட்டு, தடுத்து

நிறுத்திவிட்டார்கள். அதற்குப் பின் படையினர் இலை களையும் தழைகளையும் காய்ந்த சருகுகளையும் உண்ண நேர்ந்து, உடல் நிலை சீர்கேடடைந்த அவலத்தை மதீனா திரும்பியபின் பேசப்படக் கேட்ட ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள், தம் மகனார் ஒட்டகைகளைக் கடனாகப் பெற்று மூன்று நாட்கள் தொடர்ச்சியாக உண வளித்தபின் தடுக்கப்பட்ட செய்தியைச் செவியுற்று மிக வேதனையடைந்தார்கள். பள்ளிக்கு விரைந்து வந்து பெருமா னார் (ஸல்) அவர்களிடம், ''அல்லாஹ்வின் தூதரவர்களே! கத்தாபின் திருமகன் என் மகனைக் கருமியாக்கவா எண்ணு கிறார்'' என ஹழ்ரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர் கள் கேட்டபோது அங்கேயே அண்ணலவர்களோடு உரை யாடிக் கொண்டிருந்த ஹழ்ரத் உமர் (ரலி) அவர்களுக்கும் பெரும் சங்கடமாகி விட்டது. அச்சமயம் அண்ணலார் (ஸல்) அவர்கள் ''வள்ளன்மை அந்த குடும்பத்தின் பாரம் பரியச் சொத்தல்லவா'' என புகழ்ந்ததாகவும் வரலாற்றாசி ரியர் இப்னு அஃஸீர் (ரஹ்) குறிப்பிடுகின்றார்.

பெருமானார் (ஸல்) அவர்களிடத்தில் அளவற்ற வாஞ்சையும் பக்தியும் பூண்ட இவர்கள், அவர்களின் திரு வாய்மொழிகளையெல்லாம் எழுதியே வைத்திருந்தார்கள். அல்லாஹ்வின் திருவசனங்களே அப்போதைக்கப்போது இறங்கியவுடன் பதிவு செய்யப்பட்டு பாதுகாக்கப்பட்டு வந்த நிலையில், அண்ணலவர்களின் திருவாய் மொழிகளையும் பதிவு செய்து பாதுகாத்த ஒரு சில தோழர்களில் ஹழ்ல ரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களும் ஒருவர். இவர்களிடம் இவர்களின் திருமகனார் ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத், அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ், உமாமா இப்னு ஸஹல், ஸஈத் இப்னு முஸய்யிப் (ரலி) போன்றோர் ஹதீஃஸ் பாடங்களைக் கற்றுள்ளார்கள்.

உஹதுப் போர் அமளியின் போது மதீனாவின் ஒவ் வொரு வீடும் அதனதன் உரிமைக்காரரால் பாதுகாக்கப்

பட்டது. அச்சமயம் ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள் தங்கள் வீட்டைப் பற்றிய கவலையற்றவர்களாய் அண்ணலவர்களின் இருப்பிடத்தையே காத்து நின்றார்கள்.

உளப்பூர்வமான அர்ப்பண உணர்வுகளை வெளிப்படுத்தி அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அன்புக்கும், அருளாசிக்கும் தங்களை உரித்தாக்கிக் கொண்ட அன்ஸார்களில் முதலிடம் பெற்றவர்களில் ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களும் ஒருவர். அண்ணலார் (ஸல்) அவர்களுக்கும் ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களின்பால் பேரன்பிருந்தது. அவர்களுக்காகவும் அவர்களின் வழிவாறுகளுக்காகவும் அல்லாஹ்வின் நல்லருளையும் கிருபையையும் நாடி பெருமானார் (ஸல்) அவர்கள் பல சமயங்களில் பிரத்தியேகமாக யாசித்திருக்கிறார்கள். ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களைச் சந்தித்தளாவ அண்ணலவர்களே வீடு தேடி வந்திடும் சமயங்களில் ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்கள் பெறும் இன்பமே அலாதி!

ஒரு சமயம் அண்ணலார் (ஸல்) அவர்களே ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களின் வீட்டிற்கு வந்தார்கள்; வீட்டின் முன் நின்று முகமன் கூறினார்கள். அவ்வாறு முகமன் கூறி பதிலாக வீட்டாரின் அனுமதியைப் பெற்ற பின்னரே பெருமானார் [ஸல்] அவர்கள் எந்த வீட்டிலும் நுழைவது வழக்கம். அவ்வழக்கப்படியே அன்று நபி பெருமான் [ஸல்] அவர்கள் தம் வீட்டின் முன் நின்று உரைத்த ஸலாமுக்கு ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்கள் வீட்டின் உள்ளிருந்தபடியே மெதுவாகவே பதில் கூறினர். பெருமானார் [ஸல்] அவர்கள் அதனை செவியேற்காததால் மீண்டும் ஸலாமுரைத்தார்கள். அப்போதும் ஹழ்லரத் ஸஅத் [ரலி] அவர்கள் உள்ளிருந்தபடியே மெதுவாகவே பதில் கூறினார்கள். இப்போதும் அது தங்கள் செவிகளுக்கு எட்டாததால் நபி பெருமான் [ஸல்] அவர்கள் மூன்றாம்

முறையாகவும் ஸலாமுரைத்தார்கள். மூன்று முறை ஸலா முரைத்தும் பதில் கிடைக்காவிடில் அவ்வீட்டார் ஏதோ அலுவலில் ஈடுபட்டிருக்கிறார்கள்என்பதைப்புரிந்து கொண்டு அவர்களுக்கு மேலும் தங்கடம் தராமல் திரும்பிவிடுவது அண்ணலார் [ஸல்] அவர்களின் வழக்கம். நபி பெருமான் (ஸல்) அவர்களின் வழி முறையை அறிந்தேயிருந்த ஹழ்ரத் ஸஅத் [ரலி] அவர்கள் பெருமானார் [ஸல்] அவர்கள் மூன்றாம் முறையாக ஸலாமுரைக்கக் கேட்டு உரக்க பதில் கூறியவாறே வெளியில் விரைந்து வந் தார்கள்; அண்ணலரின் கரம் பிடித்து முத்தி முகர்ந்து உபசரித்து உள்ளே அழைத்துச் சென்றார்கள். உரையா டத் துவங்கிய அச்சமயம் ''அல்லாஹ்வின் தூதரவர்களே! என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம்! தாங்கள் முதல் முறையாகக் கூறிய முகமனையே நான் செவியுற்றேன். அப்படிச் செவியுறாத நிலையில் தாங்கள் மூன்று முறை மீண்டும் மீண்டும் முகமன் கூறுவீர்களல்லவா? தங்களின் நல்லாசி மேலும் மேலும் என் குடும்பத்தார்க்குக் கிடைக் கட்டும் என்ற ஆவல் கொண்டே நான் முதலிரு முறை களும் மெதுவாகப் பதிலளித்தேன்'' என அத்தோழர் கூறக் கேட்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் முறுவலித்து மகிழ்ந் தார்கள்.

பின்னர் பெருமானார் [ஸல்] அவர்களை உள் வீட்டுக்கு அழைத்துச் சென்று அவர்கள் நீராடுவதற்கான ஏற்பாடு களை ஹழ்ரத் ஸஅத் [ரலி] அவர்கள் செய்தார்கள்; நீராடி முடித்தபின் அல்லாஹ்வின் தூதர் [ஸல்] அவர்களுக்கு மணம் பூசப்பட்ட ஒரு மேலாடையை அன்பளிப்பாக வழங் கினார்கள். மகிழ்வுடன் அதனைப் பெற்று, போர்த்துக் கொண்ட மாநபி [ஸல்] அவர்கள்,

اَللّٰهُمَّ اجْعَلْ صَلٰوتَكَ وَرَحْمَتَكَ عَلٰٓى اٰلِ سَعْدٍ

''இறைவா! ஏஅருடைய குடும்பத்தார் மீது உன் கருணை யையும் கிருபையையும்பொழிந்தருள்'' எனவாழ்த்தினார்கள். பின்னர் பெருமானார் [ஸல்] அவர்கள் உணவருந்தினார் கள். அவர்கள் விடை பெற விரும்பியபோது ஹழ்லரத் ஸஅத் [ரலி] அவர்கள் தங்கள் வாகனத்தையே கொணரச் செய்து, அதன் மீது போர்வை விரித்து பெருமானார் [ஸல்] அவர்களை அமரச் செய்து, அண்ணலவர்களோடு தம் மகனார் கைஸ் [ரலி] அவர்களையும் துணையாக வழி யனுப்பி வைத்தார்கள்.

மற்றொரு சமயம் அண்ணலார் [ஸல்] அவர்கள் ஹழ்ல ரத் ஸஅத் (ரலி) அவர்களின் அழைப்பேற்று அவர்களின் இல்லம் சென்றார்கள். அவர்களின் முன்னே ஹழ்லரத் ஸஅத் (ரலி) அவர்கள் ரொட்டியையும் ஈத்தங்கனிகளையும் கொணர்ந்து விருந்து படைத்தார்கள். அவற்றை உண்டு மகிழ்ந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் முன்னே பாலையும் கொணர்ந்தளித்தார்கள் அத்தோழர். அதனை பருகியபின் பெருமானார் (ஸல்) அவர்கள்,

أَكَلَ طَعَامَكُمُ الْأَبْرَارُ وَأَفْطَرَ عِنْدَكُمُ الصَّائِمُونَ
وَصَلَّتْ عَلَيْكُمُ الْمَلَائِكَةُ

''உம்முடைய உணவை நல்லோர் அருந்தட்டும், நோன்பாளி கள் உம்மிடத்தில் தம் பசி தீரட்டும், விண்ணவர்கள் உம் மீது நல்வாழ்த்துகளைப் பொழியட்டும்'' என வாழ்த்திப் பிரிந்தார்கள்—என்று ஹழ்லரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

''ஒரு சமயம் பெரிய குவளையொன்றில் மூளைகளின் குழம்பை நிரப்பி அண்ணலவர்களின் முன் சமர்ப்பித்தேன். 'அபா ஃஸாபித்! இஃதென்ன?' என அண்ணலார் (ஸல்)

அவர்கள் வினவினார்கள். ''சத்தியத்துடன் தங்களை அனுப்பி வைத்த அந்த ஒருவனின் மீதாணையாக, இன்று நாற்பது கொழுத்த ஒட்டகைகளை நான் பலியிட்டேன். அதன் மூளைகளுள் இருந்த குழம்பைத் தங்களை அருந்தச் செய்ய நான் ஆவல் கொண்டேன்'' என்றேன் நான். அதனை அருந்திய என் ஏந்தலர் (ஸல்) என்னை வாழ்த்தினார்கள்—என ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களே அறிவித்துள்ளதாக இப்னு அஸாக்கிர் குறிப்பிடுகின்றார்.

இவ்வுலக வாழ்வுக்கு விடை கூறி அண்ணலார் (ஸல்) அவர்களின் பொன்னுடல் ஓய்வு கொள்ளத் துவங்கிய மறுகணமே ஒரு கலீஃபாவைத் தெரிந்தெடுக்க அன்ஸார்கள் ஸக்கீஃபா அல் பனீ ஸாஇதாவில் கூடினர். ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களின் இல்லமே அது. சமுதாயத்தை ஒரு கணப்பொழுதும் தலைமையற்று காணப் பொறுக்காத அந்நல்லோர்களிடையே ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள் உரையாற்றினர். கிலாஃபத்தில் அன்ஸார்களுக்குள்ள உரிமையை அவர்கள் தம் உரையால் விளக்கினர். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு அன்ஸார்கள் உதவத் துணிந்த மிகச் சிரமமான கால கட்டத்தையும், அன்ஸார்களின் துணிவையும், அல்லாஹ்வின் திருமார்க்கத்தை நிலைபெறச் செய்ய அந்நல்லோர் செய்திருந்த மேலான தியாகத்தையும் நினைவு கூர்ந்து அந்நாயகத் தோழர் கிலாஃபத்தின் மீது தங்களுக்கிருந்த உரிமையை வலியுறுத்தியதை ஒரு குறையாகக் கொள்ளத் தேவையில்லை. நாயகத் தோழர்கள் ஒவ்வொருவரின் நடவடிக்கைகளிலும் நல்லெண்ணத்தையே தேடிக் காண நம்பிக்கையாளர்களின் நெஞ்சங்கள் கடமைப்பட்டுள்ளன. அல்லாஹ்வின் திருவேதம் கற்றுத்தரும் ஒழுங்கும் அதுவே. அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அருள் வாக்கும் அப்படியே. அத்தகைய கண்ணோட்டத்தில்

ஓர் உண்மை பளிச்சிடுகிறது. முஹாஜிர்கள் ஒருக்கால் தலைமை ஏற்பார்களானால் கிலாஃபத்தின் பீடமே மதீனாவை விட்டும் மக்காவுக்குச் சென்று விடும் என ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள் கொண்டிருக்கக் கூடிய உள்ளச்சமே அது!

ஆனால்,

'தலைமை குரைஷிகளுடையதே' என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் முன்னறிவித்துள்ளதை நினைவூட்டி ஸித்தீக்குல் அக்பர் ஸையிதினா அபூ பக்கர் (ரலி) அவர்கள், குரைஷிகளைத் தவிர்த்த பிறரின் தலைமையை ஏற்கச் சகிக்காத மற்ற அரபுக் கோத்திரத்தவர்களின் யதார்த்தமான மன நிலையை விளக்கியபோது இஸ்லாமிய உலகின் ஒற்றுமையையே பெரிதாகப் பேணிய அன்ஸார்கள் தங்களின் உரிமையைத் தகைமையுடன் அர்ப்பணித்தனர். ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களும் எந்த மறுப்பும் தெரிவிக்கவில்லை. ஸித்தீக்குல் அக்பர் (ரலி) அவர்களின் கரங்களில் சமுதாயத்தவர் பைஅத் செய்ததைத் தொடர்ந்து ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களும் பைஅத் செய்தனர் என்றே வரலாற்றாசிரியர் 'தபரீ' எழுதுகின்றார்.

ஹழ்லரத் அபூ பக்கர் (ரலி) அவர்களின் கிலாஃபத் காலம் வரை மதீனாவிலேயே வாழ்ந்த ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள் பின்னர் ஸிரியா சென்று தங்கி வாழ்ந்து ஹிஜ்ரி 15-ம் ஆண்டில் மரணமடைந்தார்கள். அன்னார் தம் தந்தையுடன் பிறந்த சகோதரரின் மகளையே திருமணம் செய்திருந்தார்கள். பக்கீஹா [ரலி] எனப்பட்ட அவ்வம்மையாரும் கணவரோடேயே இஸ்லாத்தை ஏற்றிருந்தார். கைஸ், ஸஈத், இஸ்ஹாக் என்ற மூன்று ஆண் மக்களை ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) தமக்குப் பின் விட்டுச் சென்றார்கள்.



# 5. ஹழ்ரத் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி)

**அண்ணல்** எம்பெருமான் (ஸல்) அவர்கள் உஹுதுப் போருக்கான ஆயத்தங்களில் ஈடுபட்டிருந்தார்கள். அச்சமயம் ஸலமா குடும்பத்தைச் சார்ந்த நான்கு வாலிபர்கள் ஒரு முறையீட்டுடன் வந்து நின்றார்கள். வயது முதிர்ந்த அவர்களின் தந்தை--குடும்பத் தலைவர்--ஒரு காலில் ஊனம் மேற்பட்டு, சரியாக நடக்கவும் முடியாத நிலையிலும் உஹுதுப் போரில் கலந்து கொள்ள முடிவு செய்தார். மக்களும் மனைவியும் எவ்வளவோ தடுத்தும் பயனேற்படவில்லை. இறுதியாக அந்த நான்கு மக்களும் அண்ணலாரிடமே வந்து முறையிட்டு நின்றார்கள், ''அல்லாஹ்வின் தூதரவர்களே! எங்களின் எந்த உபதேசத்தையும் அவர் ஏற்கத் தயாராயில்லை. தம் பிடிவாதத்திலேயே நிலைத்து நிற்கிறார்'' என்று.

அண்ணலார் (ஸல்) அவர்கள் அவரைத் தம்மிடம் அழைத்து வரக் கட்டளையிட்டார்கள். வீடு சென்ற வாலிபர்கள் நால்வரும் சற்று நேரத்தில் பழுத்து நரைத்த முடிகளுடன் கூடிய முதியவரான—தங்களின் தந்தையுடன் திரும்ப வந்து நின்றார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு அந்த முதியவர் மிகுந்த மரியாதையுடனும் அடக்கத்துடனும் ஸலாமுரைத்து, ''அல்லாஹ்வின் தூதரவர்களே! என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம். இந்த எளியவனுக்குத் தாங்கள் இடும் கட்டளையை அறிய வந்துள்ளேன்'' என கூறி நின்றார்.

பெருமானார் (ஸல்) அவர்கள் முறுவலித்த வண்ணம் அவரிடம் பேசினார்கள் : ''சகோதரரே! எங்களோடு சேர்ந்து நீரும் போருக்குப் புறப்பட்டு வரப் போவதாகச்

செவியுற்றேன். உம்முடைய இந்த தியாக உணர்வும் உளப் பரிசுத்தமும் இறைவனுக்கு மிக உவப்பானவையே. எனினும் இப்போது நீர் போரிடும் வயதைக் கடந்து விட்டீர். அன்றியும் உம் காலும் ஊனமடைந்துள்ளது. எனவே இப் போது போரில் பங்கேற்பது உம்மீது கடமையல்ல. ஆயி னும் உம் எண்ணத்தைக் கொண்டே போரில் பங்கேற்ற தற்கான பிரதிபலனை இறைவன் உமக்கருளப் போதுமான வன்'' என்று.

அண்ணலார் (ஸல்) அவர்களின் உரை கேட்டு அம்முதி யவர் மிகவும் உணர்ச்சி வசப்பட்டவராகப் பேசினார். ''அல் லாஹ்வின் தூதரவர்களே! போர்க்களத்துக்குப் புறப்பட விடாது இந்த மக்களும் கூட என்னைத் தடுத்துரைத்துக் கொண்டே இருக்கிறார்கள். ஆனால் சத்தியப் பாதையில் நான் கொல்லப்பட்டே போனாலும் சரியே, இந்த ஊனக் காலை இழுத்துக் கொண்டே சுவனத்தை எட்டி விடுவேன் என்ற நம்பிக்கை ஆண்டவனின் மீதாணையாக எனக்கு மிக உறுதிப்படுகிறது. எனவே அல்லாஹ்வுக்காக, தங்களோடு இணைந்துவர எனக்கு அனுமதியருளுங்கள்'' என வேண்டி நின்ற அவரின் உணர்வுகளைக் கவனித்த அண்ணலார் (ஸல்) அவர்கள், ''தியாகத் திருவாழ்வு இவருக்கு எழுதப்பட்டே யிருக்கலாம். இவரைத் தடுக்காதீர்கள்'' என அவரின் மக்க ளுக்கு அறிவுரை கூறி அனுப்பி விட்டார்கள்.

அதனையடுத்து, போரில் பங்கேற்று, தம் உயிரை விலையாக்கி, புவனத் திருவாழ்வைப் பெற்றுக் கொண்ட அப்பெரியவர் ஹழ்லரத் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி) அவர்களாவர்.

மதீனாவில் ஸலமா குடும்பத்தைச் சார்ந்த ஒரு செல் வந்தர் ஹழ்லரத் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி). சிலை

வணக்கம் தழைத்தோங்கியிருந்த அக்காலத்தில் பல நூறு சிலைகள் பொதுவானவையாக இருந்தாலும் செல்வம் படைத்தவர்கள் தங்களுக்கென ஒரு சிலையைத் தங்களின் வீட்டிலேயே வைத்துக் கொள்வர். அவ்வழக்கப்படியே ஹழ்லரத் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி) அவர்களும் மரத்தினாலேயே ஒரு சிலையைச் செதுக்கி அதற்கு 'மனாத்' என பெயரிட்டு, அதனை அலங்கரித்து தம் இல்லத்தில் வைத்து வணங்கி வந்தார்.

அல்லும் பகலும் அதன் வணக்கத்திலேயே பித்தராகி முதுமையை அவர் எத்தி விட்டிருந்த சமயத்திலேயே பாரானின் வெளியில் புதிய நபித்துவச் சூரியன் ஒளி வீசலாயிற்று. மாநபித் தோழர் ஹழ்லரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்கள் மதீனாவில் செய்த பிரச்சாரங்களைச் செவியேற்று ஹழ்லரத் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி) அவர்களின் மனைவி ஹிந்தும், மக்களான மஆத், மஊத், கல்லாத் ஆகிய மூவரும் கூட இஸ்லாத்தை ஏற்று விட்டிருந்தனர். அக்கபாவில் நடைபெற்ற இரண்டாம் உடன்பாட்டில் பங்கேற்ற புனிதவான்கள் எழுபத்து ஐந்து பேர்களில் ஒருவராகவே கலந்து ஹழ்லரத் மஆத் (ரலி) அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் கரம் பற்றியும் திரும்பியிருந்தார். எனினும் 'மனாத்'திடம் தாம் கொண்டிருந்த மாறாத பக்தியை விடத் துணியாத அம்ரு இப்னு ஜம்மூஹ் எனப்பட்ட அறுபது வயதுடைய அம்முதியவருக்கு தம் குடும்ப நிலைமை மறைக்கப்பட்டிருந்தது.

நகரின் பெரும்பாலான வீடுகளில் இஸ்லாம் ஒளி வீசிக் கொண்டிருக்க தம் கணவர் மட்டும் மவுட்டீகத்தின் போர்வையை இறுகப் போர்த்திக் கொண்டிருப்பது மனைவி ஹிந்தாவைக் கவலையுறச் செய்தது. மரணம் எங்கே விரைந்து வந்து அவரைப் பாழ் நரகில் தள்ளி விடுகிறதோ என அவரின் உள்ளம் உறுத்திக் கொண்டிருந்தது.

அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி) அவர்களும் கூட மன நிம்மதியுடன் இருக்கவில்லை. வேதமொழிகள் என்ற பெயரால் ஏதோ சில சுலோகங்களை ஓதிக் காட்டி மக்களைத் தம் வசப்படுத்திக் கொண்டிருந்த மக்காவின் பயணி—முஸ்அபின் முன்னே மயங்கி விட்ட மதீனாவின் சில 'மனப் பலஹீனர்'களைப் போல் எங்கே தம் மக்களும் மயங்கி விடுவார்களோ? என்று அஞ்சிய வண்ணமேயிருந்தாரவர். ஒரு நாள் தம் மனைவியிடமும், ''முஸ்அபின் கூட்டங்களுக்கு உன் மக்களும் சென்று விடாமல் எச்சரிக்கையுடன் கவனித்துக் கொள்'' என்று சொல்லி வைத்தார். அப்போதுதான் அவரின் மனைவியும் 'முஸ்அபைப் பற்றி உங்கள் மகன் மஆத் கூறுவதைக் கேளுங்கள்' என்று துணிந்து கூறி விட்டார்.

''அவன் நாசமாய்ப் போகட்டும். முன்னோர்களின் மார்க்கத்துக்கு அவன் துரோகியாகி விட்டானா?'' என இரைந்தார் அம்ரு.

தந்திரமாகவே தம் கணவரைத் திசை திருப்ப வேண்டும் என்றெண்ணிய ஹிந்த் (ரலி) ''ஒருக்காலும் இல்லை. முஸ்அபின் கூட்டங்களுக்கு அடிக்கடி செல்லும் அவன் அவரின் சுலோகங்கள் சிலவற்றை பாடமிட்டு ஓதிக் காட்டுகிறான். அதைத்தான் கேட்கச் சொன்னேன்'' என்று மட்டும் கூறி வைத்தார். அதைக் கேட்டு அமைதி கொள்ளவில்லை அம்ரு இப்னு ஜம்மூஹ் அவர்களுக்கு. தம் மகனையே அழைத்து ''என்னத்தைப் பாடமிட்டுத் தொலைத்துள்ளாய்'' என விசாரித்தாரவர். ஹழ்லரத் மஆத் இப்னு அம்ரு (ரலி) தாம் பாடமிட்டிருந்த 'தோற்றுவாய்' என்ற ஆரம்ப அத்தியாயத்தை ஓதிக் காட்டலாயினர். ''இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்த்தகீம் — நேரிய வழியை காட்டியருள் எங்களுக்கு'' என்பது வரைதான் அவர்கள் ஓதியிருந்தனர். அதற்குள் ''என்ன அருமையான சொற்கள்'' என வியப்படைந்த அம்ரு இப்னு ஜம்மூஹ், ''முஸ்அப் கூறுவதெல்

லாம் இத்தகையனவாய்தான் உள்ளனவோ?'' என வினவி னார்.

''இதைவிட மேலான வசனங்களையெல்லாம் ஓதுகி றார் முஸ்அப் (ரலி). அதனால்தான் மதீனத்து மக்கள் அவரிடம் திரண்டு சென்று கேட்கிறார்கள். தந்தையே! தாங்களும் அவர்களோடு இணைந்து கொள்ளலாமே?'' என நயமாக வினவினார் தனையர்.

''இல்லை. என் தெய்வத்தைக் கலந்து கொள்ளாமல் நான் எந்த முடிவும் செய்யமாட்டேன்'' என முகந்திருப்பிக் கொண்ட அந்த முரட்டுப் பிடிவாதக்காரர் நேராகத் தாம் வணங்கி வந்த மரச் சிலையின் முன் சென்று நின்று, ''ஓ மனாத்! மக்காவிலிருந்து வந்து இங்கு தங்கியுள்ள இந்த விருந்தினருக்கு இன்று உன்னைத் தவிர விரோதிகள் எவரும் இல்லை. அவர் ஓதும் வசனங்கள் என்னை ஈர்க்கின்றன. என்றாலும் உன் அனுமதியின்றி நான் எதையும் செய்ய மாட்டேன். நீயே எனக்கு வழி காட்டு'' என்று இறைஞ்சி நின்றார்.

மரச் சிலை சிலையாகவே நின்றது. அதன் மவுனத்தைக் கண்ட அம்ரு இப்னு ஜம்மூஹ், ''ஓஹோ! உனக்கு அது சம்மதமில்லை போல் தோன்றுகிறது. அப்படியானால் உனக்குப் பிரியமற்றதை நான் ஒரு போதும் செய்யமாட் டேன்'' என்று கூறி இருந்து விட்டார்.

தந்தையின் முற்றிப் போன மவுட்டீகத்தை முறியடிக்க வழியென்னவென மக்கள் மூவரும் கலந்தாலோசித்தனர். அக்காலை அவர்களைப் போன்றே இஸ்லாத்தை ஏற்று விட் டிருந்த அவர்களின் தாயாதிக் குடும்ப இளைஞரான ஹழ்ல லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) தாம்காணும் சிலைகளையெல் லாம் உடனுக்குடன் உடைத்து நொறுக்கி எறிந்து கொண் டிருந்தார். ஸலமா குடும்பத்தினரின் வீடுகள் கூட ஹழ்லரத்

மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களின் கவனத்திலிருந்து தப்ப வில்லை. பகிரங்கமாகவோ மறைவாகவோ அந்த குடும்பத் தார் வைத்துப் பேணி வந்த தொழு உருவங்களையும் ஹழ் லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களின் புரட்சிகரத் தழுவலுக்குத் தப்பவில்லை. அவர்களையும் தங்களின் ஆலோசனையில் கூட்டாக்கிக் கொண்டனர் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி) அவர்களின் மக்கள். தந்தையின் மனதை அதிகம் புண்படுத்தாமலும் அவரின் சினத்துக்குத் தங்களைப் பலியாக்கிக் கொள்ளாமலும் அவரைத் திருத்த ஒரு திட் டத்தை வகுத்தனர் அனைவரும். அதன்படியே அன்று இரவு அனைவரும் கண்ணுறங்கியபின் எவரும் அறியா வண்ணம் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி) அவர்களின் பூஜை அறைக் குள் நுழைந்த வாலிப மக்கள், தந்தை பூசித்து வந்த மரச் சிலையை எடுத்துச் சென்று ஒரு குப்பைமேட்டில் எறிந்து விட்டுத் திரும்பினர்.

மறு நாள் காலை பூஜைக்காக வந்த அம்ரு தம் தெய் வத்தைக் காணாது திகைத்தார். 'என் தெய்வத்துக்குக் கொடுமை இழைத்தவன் யார்?' என அலறினார். எவருமே அவருக்குப் பதிலுரைக்கவில்லை. இறுதியாகத் தாமே தேடிப் புறப்பட்ட அவர் கடைசியாக குப்பை மேட்டில் கிடந்த தெய் வத்தைக் கண்டெடுத்தார்; வெம்பினார்; வெகுண்டார்; கழுவித் தூய்மைப் படுத்தி அதன் இருப்பிடத்தில் மீண்டும் கொண்டு வந்து வைத்து, வணங்கி, ''உனக்கு இந்தக் கதியை உண்டாக்கியவனைக் கண்டு பிடித்து கடுமையாகத் தண்டிப் பேன்'' என வாக்குறுதியும் அளித்தார்.

ஆனால், ஓரிரு நாட்கள் இடைவிட்டு தொடர்படியாக அதே காரியம் நடைபெறுவது வாலாயமாகி விட்டது. அவ் வாறு செய்பவர் எவர் என்பதை மட்டும் முதியவர் அம்ரு வால் கண்டு பிடிக்க முடியவில்லை. இறுதியாக மனம் சளைத்த அவர் ஒரு வாளைக் கொணர்ந்து தம் தெய்வத்தின் புயத்தில் சாற்றி; ''ஓ மனாத்! என் பிடியில் சிக்க மறுக்கும்

உன் விரோதி எவனாயிருப்பினும் சரியே, இந்த வாளினால் நீயே அவனைத் தொலைத்து விடு'' என்று கூறி விட்டுப் படுக்கைக்குச் சென்றார்.

மறுநாள் காலை வந்து பார்த்தபோது தெய்வத்தையும் காணவில்லை, தெய்வத்துக்கு அவர் தந்துதவிய வாளையும் காணவில்லை அங்கு. முந்தின இரவே அங்கு வந்த அவரின் மக்களுக்கு அவர்கள் கண்ட காட்சி சிரிப்பையே உண்டாக்கியது. வாளை அவர்கள் எடுத்துக் கொண்டனர்; மரச் சிலையை எடுத்துக் கொண்டு தெருவிதிக்கு வந்தனர். இருட்டில் செத்துக் கிடந்த நாயொன்று அவர்களின் கால்களில் இடறியது; அந்த நாயின் பிணமான உடலோடு சேர்த்தே மரச்சிலையையும் கட்டினர்; மலச்சட்டிகளைக் கொண்டு கொட்டும் நரகல் குழியில் தலை கீழாக வீசி விட்டுச் சென்று விட்டனர்.

தெய்வத்தைத் தேடி அலைந்த அம்ரு ஒரு வழியாக அதனைக் கண்டு பிடித்தே விட்டார்; நாயோடு சேர்த்துக் கட்டப்பட்டு நரகல் குழியில் தலை குப்புறக் கிடந்த அதனைப் பரிதாபத்தோடு பார்த்தார். அதனைத் தொட்டுத் தூக்கவும் அவருக்கு மனம் வரவில்லை. அருவருப்பு விரட்டியது அவரை. அவருடைய உள்மனமும் திறந்து கொண்டது. ''உன்னைக் காத்துக் கொள்ளவே வக்கற்ற நீ உண்மையில் ஒரு தெய்வமா? அப்படியானால் செத்த நாயோடு ஒட்டிக் கொண்டு இப்படிக் கிடப்பாயா?'' என்று உள்ளுக்குள்ளேயே கேட்டுக் கொண்டு வீடு திரும்பினார். மண்ணறையின் இருட்டுக்குள் புதையுண்டு போகுமுன்பாகவே வெளிச்சமளித்துத் தம்மைக் காத்த இறைவனை துதித்து புகழ்ந்து கொண்டிருந்தது அவரின் நா.

மக்கள் ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்களின் அவையில் அந்த முதியவரைக் காண ஆரம்பித்தார்கள். ஒரு சில நாட்களில் நிகழ்வுற்ற நாயகத் திருமேனி (ஸல்) அவர்களின் வர

வுக்குப் பின்னரோ ஹழ்லரத் அம்ரு இப்னு ஐம்முஹ் (ரலி) அவர்களின் நாளங்கள் இஸ்லாமிய உணர்வுகளால் புடைத்து நின்றன. ஒரு கால் ஊனமுற்ற தமக்கு போரில் பங்கேற்பது கடமையல்ல என செவியுற்று அவர் பத்ருப் போரில் பங் கேற்காமல் தங்கி விட்டாராயினும், உஹதுப் போரில் தம் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த அவரால் முடியவில்லை. தம் மைந்த் தடுத்த மக்களிடம்' நீங்கள் வீரப் போராடி சுவர்க்கத் தில் நுழைவீர்கள், நான் மட்டும் வீட்டிலேயே முடங்கிக் கிடக்க வேண்டுமா?' என தர்க்கித்தாரவர். அதே சமயம் அவரின் மனைவியார் ஹிந்த் (ரலி) 'தாங்கள் களத்திலிருந்து விரண்டோடி வருவதுபோல் நான் கனவு கண்டேன்' என நகைச்சுவையாகக் கூறிவிட்டார். மறுகணமே ரோஷம் பற்றிக் கொண்டது ஹழ்லரத் அம்ரு இப்னு ஐம்முஹ் (ரலி) அவர்களை. விண்ணளாவில் தம் கரங்களை ஏந்தி, ''என் இறைவா! இப்போரில் வீர மரணம் அடையும் பேற் றினை எனக்களி. எக்காரணத்தாலும் என் குடும்பத்தாரின் புறம் திரும்பி வர என்னை அனுமதிக்காதே'' என இறைஞ் சினர்.

அவரின் அந்தப் பிரார்த்தனை முழுமையாகவே அங்கீகா ரம் பெற்றது. தம் மைந்தர் கல்லாத் (ரலி) அவர்களுடன் இணைந்து வீரப்போர் புரிந்து தந்தையும் மகனுமே வீர மரணமடைந்தனர். தம் கணவரும், மகனும், தம் உடன்பிறந் தவரான ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஹராம் (ரலி)யும் வீர மரணம் அடைந்தது பற்றிச் செவி யுற்று போர்க்களத்துக்கு வந்த ஹிந்த் (ரலி) கணவருடைய வும் மைந்தருடையவும் உடல்களை ஒட்டகையிலேற்றி மதீ னாவுக்குக் கொண்டு வர முயற்சித்தபோது அவ்வொட் டகை உஹதின் புறம் ஓடியதே தவிர மதீனாவின் புறம் அடி யெடுத்து வைக்கவே மறுத்து விட்டது. பெருத்த முயற்சிகளுக் குப் பின்னரும் அதனை மதீனாவின் புறம் நடத்தாட்ட முடியவே இல்லை. பின்னர் மேற்கொண்ட விசாரணையில்

ஹழ்ரத் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி) அவர்கள் போருக்குப் புறப்படுமுன் செய்த பிரார்த்தனையைப் பற்றிச் செவியுற்ற அண்ணலாரவர்கள் 'அவரின் அந்த வேண்டுதல் இறைவனின் திருமுன் அங்கீகாரம் பெற்றதன் அடையாளமாகவே ஒட்டகை மதீனாவின் புறம் திரும்ப மறுக்கிறது. இனி அதனை நிர்ப்பந்தம் செய்ய வேண்டாம்' என தடுத்து விட்டார்கள். பின்னர் ஹழ்ரத் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி) அவர்களின் புனித உடல் அதே போரில் வீரமரண மடைந்த அவரின் மைத்துனர் ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஹராம் (ரலி) அவர்களின் உடலோடு சேர்த்து ஒரே மண்ணறையில் அடக்கம் செய்யப்பட்டது.

ஹழ்ரத் அம்ரு இப்னு ஜம்மூஹ் (ரலி) அவர்கள் முதுமைக் காலத்தில் முஸ்லிமாகி மூன்றே ஆண்டுகள் வாழ்ந்த போதிலும் தாம் கொண்டிருந்த மன உறுதியினாலும் தாராளத் தன்மையினாலும் மேலான நாயகத் தோழர்களின் வரிசையில் இடம் பெற்றுக் கொண்டனர். இஸ்லாத்தை ஏற்ற பின்னர் அண்ணலார் (ஸல்) அவர்கள் அவரையே பனீ ஸலமாக்களின் தலைவராகவும் நியமித்தனர்.



# 6. ஹழ்லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி)

திருநபியின் பள்ளியில் தொழுகை நடைபெற்றுக் கொண்டிருந்தது. பெருமானார் (ஸல்) அவர்களின் பின்னே அணிவகுத்திருந்தார்கள் தோழர்கள். ஏதோ அலுவலின் காரணமாகச் சற்று தாமதித்து வந்தார் ஒரு தோழர். அதற்குள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் மற்ற தோழர்களும் தொழுகையின் ஒரு பகுதியை முடித்து இடைநிலை இருப்பில் அமர்ந்திருந்தனர். வந்த தோழரும் அப்படியே அமர்ந்து அவர்களுடன் இணைந்துக் கொண்டார். பெருமானார் (ஸல்) அவர்கள் தொழுகையை நிறைவு படுத்தி ஸலாம் உரைத்தார்கள். அவர்களைத் தொடர்ந்தே மற்ற தோழர்களும் ஸலாமுரைத்தனர். ஆனால், அந்த ஒருவர் அப்படிச் செய்யவில்லை. ஸலாமுரைக்காமலே எழுந்து நின்று, தமக்கு விடுபட்டுப்போன முந்திய பகுதியைத் தொழலானார். அனைவரின் பார்வைகளும் வியப்புடன் அவர் பால் உயர்ந்தன!

அதற்கு முன் எவரும் அவ்வாறு செய்ததில்லை. தாமதப்பட்டுப் பள்ளிக்கு வர நேருபவர்கள் கூட்டுத் தொழுகை நடைபெற்றுக் கொண்டிருக்குமாயின், எந்த அளவுக்குத் தொழுகை முடிந்து விட்டுள்ளது என்பதை, தொழுது கொண்டிருப்பவர்களிடமிருந்து சாடையாலேயே அறிந்து கொள்வார்கள். அந்த அளவுக்கு விரைவாகத் தொழுது முடித்து அணியினரோடு இணைந்துக் கொள்வார்கள்; ஒன்றாகவே சேர்ந்து தொழுகையை நிறைவு படுத்துவார்கள்.* வழக்கத்துக்கு மாற்றமாக அன்று அவர்

* இன்றைக்கும் ரமழ்லான் மாத இரவுகளில் தராவீஹ் தொழுகைகளில் பங்கேற்க தாமதமாக வர நேருபவர்கள் பெரும்பாலும் இதே முறையைக் கடைபிடிப்பதைக் காணலாம்.

தொழுத முறையை, அவர் தம் தொழுகையை நிறைவுபடுத்திக் கொண்டபின் வினவித் தெரிந்து கொண்ட அண்ணலார் (ஸல்) அவர்களின் முகம் மலர்ந்தது. "மஆத் இன்று ஒரு சிறந்த நடைமுறையை உங்களுக்குக் காட்டித் தந்திருக்கிறார். அதனைப் பற்றிக் கொள்ளுங்கள்" என அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் தோழர்களுக்குக் கூறினார்கள். அது முதல் அவ் வழிமுறையே கூட்டுத் தொழுகைக்குத் தாமதப்பட்டு வர நேர்ந்திடுபவர்களால் இன்றளவும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

கஸ்ரஜ் கோத்திரத்தில் ஸஅத் இப்னு அலீ என்பவருக்கு இரு மக்கள் பிறந்தனர். அவர்களில் ஒருவரான ஸலமா எனப் பட்டவரின் பாரம்பரியத்தில் ஹழ்லரத் அபூ கத்தாதா, கஅப் இப்னு மாலிக், அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னுல் ஹராம், ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) போன்ற பலரும் நபிமணி (ஸல்) அவர்களின் தோழமையை ஏற்றிருந்தனர். ஆனால் ஸலமாவின் உடன் பிறந்தவரான 'உத்தை' எனப் பட்டவரின் வழிவாறுகளில் நபித்துவத் தோழமையைச் சுகிக்கும் பேற்றினைப் பெற்றவர்கள் ஹழ்லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களும் அவர்களின் மகனார் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களுமேயாவர்.

பதினெட்டு வயதுகளும் கூட நிரம்பப் பெறாத இளமையிலேயே ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள் சிறந்த அறிவும் ஒழுக்கப் பண்பும் அமையப் பெற்றவராக விளங்கினர். மறை ஞானக் குரல் மதீனாவில் ஒலிக்கத் துவங்கிய ஆரம்பத்திலேயே அதனால் ஈர்க்கப்பட்டனர் ஹழ்லரத் மஆத் [ரலி]. ஹழ்லரத் முஸ்அப் இப்னு உமைர் [ரலி] அவர்களின் கரம் பற்றியே இஸ்லாத்தை ஏற்று விட்ட ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள், 'அக்கபா'விலேயே அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களைச் சந்தித்தனர். நபித்துவத் தோற்றப் பொலிவைக் கண்டபின் ஏற்பட்ட மன உறுதி ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்

களை ஒரு புரட்சிகரமான தொண்டராகவே மாற்றி விட்டது. இறைவனின் திருமார்க்கத்தை நிலை பெறச் செய்வதே அவர்களின் கனவாகி விட்டது. மனிதர்களை மடையர்களாக்கியிருந்த மவுட்டிகத்தை ஒழிப்பதே அவர்களின் தினவாகி விட்டது. ஸலமா குடும்பத்தினர் மறைவாகவோ பகிரங்கமாகவோ வைத்துப் பூசித்து வந்த உருவச் சிலைகளெல்லாம் ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்களின் கரங்களில் சிக்கி, நொறுங்கித் தவிடு பொடியாகிக் கொண்டிருந்தன. மாறாத மனங் கொண்டிருந்த ஹழ்லரத் அம்ரு இப்னு ஜம்முஹ் [ரலி] போன்றவர்களும் இஸ்லாத்தின் புறம் திரும்ப ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்களும் காரணமாயிருந்தனர்.

'அக்கபா'வில் தோன்றிய அத்திருமுகம் ஹிஜ்ரத்துக்குப் பின் மதீனாவிலேயே உலவத் துவங்கிய போது அதன் நிழலையே தம்குடிலாக்கிக் கொண்டனர் ஹழ்லரத் மஆத்(ரலி). அந்த இளைஞரின் மதிநுட்பத்தையும் மார்க்கப் பற்றையும் ஆன்மீகத் தேட்டத்தையும் கண்டு சிலாகித்த அண்ணலார் (ஸல்) அவர்களும் தம் அருகே அவருக்கு நெருக்கமான ஓர் இடம் தந்து ஞானக் கல்வியையும் சட்ட விளக்கத்தையும் போதித்தார்கள். வெகு விரைவிலேயே, 'இமாமுல் ஃபு(க்)கஹா—சட்ட ஞானிகளின் தலைவர்', 'கன்ஸுல் உலமா—அறிஞர்களின் கருவூலம்', 'ஆலிமுர் ரப்பானீ—இறைஞானப் பேரறிஞர்' என்றெல்லாம் சிறப்பிக்கப்பட்ட ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்கள், நபிமணித் தோழர்களிடையே அச்சத்துடனும் கண்ணியத்துடனும் மதிக்கப் பெற்றார்கள்; திருமறையை மனனம் செய்த ஹாஃபிழ்ஆகவும், திருத்தமுடன் அதனை ஓதத் தெரிந்த காரியாகவும், தெளிவுடன் சட்ட வரம்புகளை விளக்கக் கூடிய ஃப[க்]கீஹாகவும் விளங்கினார்கள்.

மக்காவை ஹிஜ்ரத் செய்து வந்த அருள் ஞானக் கருவூலம் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களை ஆரம்பத்தில் இவர்களே தம் விருந்தினராக வர

வேற்று, தம் இல்லத்திலேயே தங்க வைத்துக் கொண்டார்கள். ஹிஜ்ரத்துக்குப் பின் முஹாஜிர் அன்ஸார்களிடையே ஏற்படுத்தப்பட்ட பிணைப்பின் போதும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் இந்த இருவரையே உடன் பிறந்தவர்களாக்கினார்கள். அல்லாஹ்வின் தூதரின் தேர்வு, ஞானத்தின் இரு ஊற்றுகளின் சங்கமமாகவே விளங்கியது.

அறிவிலும் ஞானத்திலும் மேதையாய்ச் சிறந்ததே போன்று ஹழ்லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்கள் ஆண்மையிலும் மேலோங்கி நின்றனர். இருபத்தோரு வயது இளைஞராக பத்ருப் போர்க்களத்தில் அடியெடுத்து வைத்த அவர்கள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் வாழ் நாளில் நடைபெற்ற அத்தனைப் போர்களிலும் பங்கேற்றுள்ளனர். ஹுனைனின் புறம் படை நடத்திச் சென்ற அண்ணலார் [ஸல்] அவர்கள் ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களையே மக்காவின் ஆளுநர்ப் பொறுப்பில் அமர்த்திச் சென்றார்கள். அதன் காரணமாக ஹழ்லரத் மஆத் (ரலி) ஹுனைன் போர்க் களத்தில் காணப்படாவிடினும் கூட, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கட்டளையின் பேரிலேயே அவர்கள் மக்காவின் ஆளுநர் பொறுப்பை ஏற்றதும் போர் நடவடிக்கையே யாதலில் ஹுனைன் போரின் இம்மை மறுமைப் பேறுகளில் அவர்கள் பங்கிழந்து விடவில்லை.

அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ்நாளில் இறுதியாக நடைபெற்ற தபூக் படையெடுப்பிலும் அவர்கள் கலந்து கொண்டதற்கடையாளமான ஒரு சம்பவத்தை ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களே விளம்பியுள்ளதை இமாம் அஹ்மது இப்னு ஹம்பல் (ரஹ்) அவர்கள் தங்கள் மஸ்னதில் குறிப்பிட்டுள்ளார்கள் :

"அண்ணலார் (ஸல்) அவர்கள் மக்களை அழைத்துக் கொண்டு 'தபூக்'கின் புறம் புறப்பட்டார்கள். பயணத்தில்

ஓர் இரவு கழிந்து விடியலின்போது பெருமானார் (ஸல்) அவர்கள் மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். தொழு கையை முடித்து மக்கள் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தார் கள். கதிரவனும் தன் பயணத்தைத் தொடர, பொழுது நன்கு புலர்ந்தது. இரவெல்லாம் விழித்துப் பயணம் செய்த தன் பலனாக அனைவரையும் உறக்கம் தழுவியிருந்தது. நான் என் வாகனத்தை பெருமானார் (ஸல்) அவர்களின் வாகனத்தைத் தொடர்ந்தபடியே நடத்திக் கொண்டிருந் தேன். மற்றவர்களின் வாகனங்கள் மேய்ந்து கொண்டே நடந்து அங்கொன்றும் இங்கொன்றுமாய்ப் பிரிந்திருந்தன. அதே சமயம் பெருமானார் (ஸல்) அவர்களின் வாகனத் தைத் தொடர்ந்தே மேய்ந்த வண்ணம் வந்து கொண்டிருந்த என் வாகனம் திடீரென எதன் மீதோ மோதுண்டு மிரண் டது. அதன் கடிவாளத்தை இழுத்து, கட்டுப்படுத்த நான் முயன்றும் பலனற்று மிரண்ட அது, அண்ணலார் (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்த வாகனத்தின் மீது மோதி அதனை யும் மிரளச் செய்தது. பெருமானார் (ஸல்) அவர்கள் தங் களின் மீதிருந்த போர்வையை விலக்கிப் பார்த்தார்கள். அவர்களுக்குச் சமீபமாக என்னைத் தவிர படையினர் எவரும் இருக்கவில்லை.

''மஆதே!'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அழைத் தார்கள்.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! இதோ இருக் கின்றேன்'' என பதிலுரைத்தேன்.

''அருகில் வருவீராக'' என என் ஏந்தலர் [ஸல்] அழைத்தார்கள். நான் அவர்களை நெருங்கிச் சென்றேன். பெருமானார் [ஸல்] அவர்கள், ''மக்கள் என்னை விட்டும் இப்படித் தொலைவிலாகி விடுவார்கள் என்று நான் நினைக்க வில்லை'' என்றார்கள்.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! அவர்களை உறக்கம் தழுவிக் கொண்ட நிலையில் அவர்களின் வாகனங்கள்



மேய்ந்த வண்ணம் பலபுறம் பிரிந்து விட்டுள்ளன' என நான் கூறினேன்.

''ஆம். நானும்தான் உறக்கத்திலாழ்ந்திருந்தேன்'' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியபொழுது வெளிப்பட்ட அவர்களின் மனமலர்ந்த நிலையையும் அருகே எவருமற்ற தனிமையையும் பயன்படுத்திக் கொள்ள என் மனம் என்னைத் தூண்டியது.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! கவலையினாலேயே என்னை நோயுறச் செய்து விட்ட ஒரு விஷயத்தைப் பற்றி வினவித் தெரிந்து கொள்ள என்னை அனுமதிப்பீர்களா?'' என நான் வினவினேன்.

''நீர் நாடுவதைத் தயக்கமின்றி வினவுவீராக'' என என் ஏந்தலர் (ஸல்) அவர்கள் அருளினார்கள்.

''ஆண்டவனின் தூதரவர்களே! சுவனத்தின்பால் என்னை அழைத்துச் செல்லக் கூடிய ஒரு நற்செயலை எனக்குக் காட்டித் தாருங்கள்'' என நான் வினவினேன்.

''அந்தோ! மிகப் பெரும் விஷயத்தையல்லவா நீர் கேட்டு விட்டீர்'' என மீண்டும் மீண்டும் மும்முறை சொன்ன அண்ணலார் (ஸல்) அவர்கள், ''எனினும் என்ன? அல்லாஹ் எவருக்கு நன்மையை நாடி விட்டானோ அவருக்கு அதனை அடைவது ஒரு சிரமமான காரியமல்ல'' என்றார்கள்.

''நான் மனனமிட்டுக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே என் ஏந்தலர் (ஸல்) அவர்கள் எந்தச் செய்தியையும் என்னிடம் மூன்று முறை மீட்டுக் கூறுவார்கள். தொடர்ந்து, ''அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொள்ளும். தொழுகையைப் பேணிக் கொள்ளும். வணக்கத்தில் அவனுக்கு எவரையும் இணைப்படுத்தாதீர் —

மரணம் உம்மை வந்தணைக்கும் வரையும்'' என்றுரைத்த நபிபெருமான் (ஸல்) அவர்கள், 'மார்க்கத்தின் மிக உயர்ந்த செயல்பாடுகளை உமக்கு அறிவிக்கட்டுமா?' என வினவினார்கள்.

''என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம். அறிவியுங்கள் நாயகமே!'' என்றேன் நான்.

''அல்லாஹ் ஒருவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் எவனுமில்லை. அவன் தனித்தவன்; இணை துணையற்றவன். முஹம்மத் (ஸல்) அவனின் அடியாரும் தூதருமாவார்' என விசுவாசங் கொள்வது இந்த மார்க்கத்தின் அடித்தளமாகும். அதன் மேல் கட்டுமானத்தை வலுப்பெறச் செய்யக்கூடிய நற்செயல்கள் தொழுகையும் ஜக்காத்துமே. முயற்சிகளில் மேலானது அல்லாஹ்வின் பாதையில் போர் புரிவதாகும். இவற்றை நிலை நாட்டும் வரையும் போர் புரிய நான் ஏவப்பட்டிருக்கிறேன். முஹம்மதின் ஆன்மாவைத் தன்வசம் கொண்டுள்ள அந்த வல்லமையின் மீதாணையாக சுவனத்தின் படித்தரத்தைக் குறிக்கோளாகக் கொண்டு உழைத்தவரின் முகம் ஒரு போதும் பேதலித்துப் போகாது; அவரின் கால்கள் ஒருபோதும் புழுதியில் புரண்டு விடாது. கடமையாக்கப்பட்ட தொழுகையையடுத்து அல்லாஹ்வின் பாதையில் போராடுவதை விட கனத்த நன்மையைத் தரக் கூடிய செயல் மற்றெதுவுமில்லை. ஒருவரின் வாகனம் போரில் கொல்லப்பட்டுப் போயினும் சரியே அல்லது மற்றொருவருக்கு அது கொடுத்துதவப்பட்ட போதினும் சரியே'' என பெருமானார் (ஸல்) அவர்கள் அருளினார்கள்.

பயணங்களின் போதும் மற்ற சமயங்களிலும் கிடைத்த இத்தகைய தனிமைகளைப் பயன்படுத்திக் கொள்ள ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள் ஒருபோதும் தவறியதில்லை. மற்றவர்கள் அதுவரை அறிந்திராத ஞான மணிகளை தங்களின் மாநபி (ஸல்) அவர்களிடமிருந்து சேமித்துக் கொள்

வதிலேயே அத்தகைய தருணங்களில் அவர்கள் கருத்தாயிருப்பர். ஒரு சமயம் ''மஆதே!'' என அவர்களை மும்முறை அருகே அழைத்த அண்ணலார் (ஸல்) அவர்கள், ''உளம் வாக்கொன்றி ஒரு முறை ஏகத்துவத் திருமந்திரத்தை ஒலித்தவனை நரகம் தீண்டுவது ஹராமா—கத் தடு-க்கப் பட்டுள்ளது'' என அருளினார்கள். ''பெருமானே! இந்த நன்மாராயத்தை நான் மக்களுக்கு அறிவிக்கின்றேன்'' என உவகையுடன் வினவினர் ஹழ்ரத் மஆத் (ரலி) ''வேண்டாம், அவர்கள் செயல்படத் தவறி விடுவார்கள்'' என பெருமானார் (ஸல்) அவர்கள் தம் தோழரைத் தடுத்து விட்டார்கள்.

அந்தத் தோழரிடத்தில் கொண்டிருந்த அன்பின் பிரதிபலிப்பாக அண்ணலார் (ஸல்) அவர்கள், தனிமைப் பயணங்களில் அவர் மவுனித்திருந்தாலும் தாங்களாகவே அறிவு விளக்கங்கள் தருவதும் உண்டு.

ஒருமுறை தம்முடன் ஒரு கோவேறு கழுதையின் மீதமர்ந்து பயணித்துக் கொண்டிருந்த ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்களின் முதுகில் தம் சாட்டையால் தட்டிய நாயகப் பெருமான் [ஸல்] அவர்கள், ''மஆதே! இறைவன் மீது அடியார்களுக்குள்ள கடமைகளை நீர் அறிவீரா?'' என கேட்டார்கள்.

''அல்லாஹ்வும் அவனின் தூதருமே மிக அறிந்தவர்கள்'' என்றனர் ஹழ்லரத் மஆத் [ரலி].

''அடியார்கள் அவனை வணங்க வேண்டும். அவனுக்கு எவரையும் இணை வைக்கலாகாது'' என்றருளிய நபி பெருமான் (ஸல்) அவர்கள் சில அடிகள் கடந்து ''மஆதே! அடியார்கள் மீது இறைவனுக்குள்ள கடமையை நீர் அறிவீரா?'' என கேட்டார்கள்.

''அல்லாஹ்வும் அவனின் தூதருமே மிக அறிந்தவர்கள்'' என்றனர் ஹழ்லரத் மஆத் (ரலி).

''சுவனத்துள் அவர்களை நுழையச் செய்வது''என எம் பெருமானார் [ஸல்] அவர்கள் அருளினார்கள்.

''மஆதே! சுவனத்தின் ஒரு கதவை நான் உமக்குக் காட்டித் தரட்டுமா?'' என கேட்ட நாயக மாமணி [ஸல்] அவர்கள், ''லா ஹவ்ல வலா குவ்வ(த்)த இல்லா பில்லா ஹில் அலிய்யில் அளீம் * என வழமையாக ஓதி வருவீராக'' என தங்களின் தோழருக்குக் கற்பித்தார்கள்.

''இறைவனுக்கு இணை வைக்காதீர். அவனையே வணங்கி வாரும். தொழுகையைப் பேணி வாரும். 'ஜக்காத்' எனப்படும் ஏழைகளின் வரியைச் செலுத்தி வாரும். ரமழ்லானின் நோன்புகளை நிறைவு படுத்தும். ஹஜ்ஜுூம் செய்யும்'' என ஒரு பயணத்தில் அருளுரை பகன்ற நபிபெருமான் [ஸல்] அவர்கள், ''நன்மையின் சில வாசல்களே உமக்கு நான் காட்டித் தந்தவை'' என்றவர்களாக, ''நோன்பு ஒரு கேடயத்தைப் போன்றது. தர்மம் பாவத் தீயை அணைக்கும் நீராகும்'' என குறிப்பிட்டார்கள். அடுத்து,

تَتَجَافَىٰ جُنُوبُهُمْ عَنِ الْمَضَاجِعِ يَدْعُونَ رَبَّهُمْ خَوْفًا وَطَمَعًا وَمِمَّا رَزَقْنَاهُمْ
يُنفِقُونَ ○ فَلَا تَعْلَمُ نَفْسٌ مَّا أُخْفِيَ لَهُم مِّن قُرَّةِ أَعْيُنٍ جَزَاءً
بِمَا كَانُوا يَعْمَلُونَ ○

''அவர்கள் [இரவில்] படுக்கையிலிருந்து தங்களின் விலாக்களை உயர்த்தி [எழுந்து அப்புறப்பட்டு] தங்கள் இறைவனிடம் நம்பிக்கை வைத்தும் பயந்தும் [அவ

---

நன்மையின்பால் ஆக்க வல்லவனும் தீமையிலிருந்து தடுத்துக் காக்க வல்லவனும் மிக மேலானவனும் கண்ணியமிக்கவனுமான அல்லாஹ்வேயன்றி மற்றெவனுமில்லை.

னைப்] பிரார்த்திப்பார்கள். நாம் அவர்களுக்குக் கொடுத்தவற்றிலிருந்து அவர்கள் [தானமாகச்] செலவு செய்வார்கள். அவர்கள் செய்த நற்காரியங்களுக்குக் கூலியாக அவர்களுக்காக[ச் சித்தப்படுத்தி] மறைத்து வைக்கப் பட்டிருக்கும் கண்குளிரக் கூடிய [சன்மானத்தை] எவருமே அறிந்து கொள்ள முடியாது. [அவ்வளவு மேலான சன்மானங்கள் அவர்களுக்காகச் சித்தப் படுத்தப்பட்டுள்ளன]'' என்ற [32 : 16, 17] திருவசனங்களை ஓதிய நபி பெருமான் [ஸல்] அவர்கள், ''மஆதே! தொழுகை மார்க்கத்தின் தூணாகும். மார்க்கப் போர் மணி மண்டபத்தின் உப்பரிகையாகும்.'' என உபதேசித்தார்கள். தொடர்ந்து, ''இவை யாவற்றுக்கும் மேலாக மூலாதார மான ஒன்றுண்டு, அதுவே இது'' என தங்களின் நாவைத் தொட்டுக் காட்டிய தூதர் நாயகம் [ஸல்] அவர்கள், ''இதனைப் பேணிக் கொள்வீராக'' என எச்சரித்தார்கள்.

''பெருமானே! நாம் பேசுவதைக் கொண்டுமா விசாரணை செய்யப்படுவோம்'' என வியப்புடன் வினவினார்கள் ஹழ்லரத் மஆத் (ரலி).

ثَكِلَتْكَ أُمُّكَ

''உம் தாய் உமக்காக அழட்டும்'' என கனிவுடன் தம் தோழரை நோக்கிய கருணையரசர் (ஸல்) அவர்கள், ''அதிகமான பேர் இதன் காரணமாகவே நரகம் செல்வர்'' என விளம்பிடக் கேட்டு வியர்த்தனர் அத்தோழர்!

பத்து கட்டளைகளை ஒரு சமயம் நபிபெருமான் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்களுக்கு ஏவியிருந்தார்கள் :

1. இறைவனுக்கு இணை வைக்க வேண்டாம் — நீர் கொல்லப்பட்டோ அல்லது எரிக்கப்பட்டோ போயினும் சரியே.

2. பெற்றோர்களுக்கு வருத்த முண்டாக்க வேண்டாம்—அவர்கள் உம் மனைவி மக்களை விட்டும், உம் உடைமைகளை விட்டும் உம்மைப் பிரித்து விட்ட போதிலும் சரியே.

3. கடமையாக்கப்பட்ட தொழுகைகளை நீர் வேண்டுமென்றே தவிர்க்க வேண்டாம்—வேண்டுமென்றே தொழுகையைத் தவிர்ப்பவனை விட்டும் இறைவனின் பொறுப்பு நீங்கி விடுகிறது.

4. மது அருந்த வேண்டாம். அது எல்லா மானக்கேடுகளுக்கும் மூலாதாரமானதாகும்.

5. பாவத்தில் மூழ்க வேண்டாம். பாவத்தில் மூழ்குபவனை இறைவனின் கோபம் சூழ்ந்து கொள்கிறது.

6. போரில் புறங்காட்ட வேண்டாம்—படையினர் முழுவதும் குருதிச் சேற்றினில் உருண்டுவிட்ட போதினும் சரியே.

7. மரணம் விதிக்கப்பட்ட ஒன்று. எனவே நோயுற்று விடும்போது உறுதியுடன் இருப்பீராக.

8. உம் மக்களிடத்தில் நன்முறையில் பழகுவீராக.

9. அவர்களுக்கு ஒழுக்கத்தைக் கற்பிப்பீராக;

10. இறையச்சத்தை ஊட்டுவீராக.

ஐந்து பேர்களின் பொறுப்பை இறைவன் ஏற்றுக் கொள்வதாக ஒரு சமயம் நபி பெருமான் [ஸல்] அவர்கள் ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்களுக்கு அறிவித்தார்கள்:

1. நோயாளியைக் காணச் செல்பவன்.

2. மரண ஊர்வலத்தில் கலந்து செல்பவன்.

3. போருக்காகச் செல்பவன்.

4. தன் அதிகாரிக்குக் கட்டுப்பட்டு அவனைக் கவுரவிக்கச் செல்பவன்.

5. உலகத்தாரிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ளவும், தன்னைக் கொண்டு உலகம் அமைதி பெறவும் நாடி, தன் வீட்டினுள்ளேயே தங்கிக் கொண்டவன்.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! ஈமான் என்னும் இறை நம்பிக்கையின் மிக மேலான தன்மை யாது?'' என ஹழ்ரத் மஆத் [ரலி] அவர்கள் வினவிய ஒரு சமயம் அண்ணலார் (ஸல்) அவர்கள், ''அல்லாஹ்வுக்காகவே நேசிப்பதும் அல்லாஹ்வுக்காகவே பகைப்பதும் எக்காலமும் இறைவனின் நினைப்பைத் தவற விடாதிருப்பதுமாகும்'' என அறிவித்தார்கள்.

''செயல்முறைகளில் சிறந்தது எது?'' என அவர்கள் வினவிய ஒரு சமயம் ''உமக்காக நீர் எதை உவந்து கொள்வீரோ அதையே பிறருக்காகவும் உவந்து கொள்வதும் உமக்காக நீர் எதை வெறுக்கின்றீரோ அதை பிறருக்காகவும் நீர் வெறுப்பதுமாகும்'' என அண்ணலார் [ஸல்] அருளினார்கள்.

''மஆதே! உம்மைக் கொண்டு ஒரு தீமை விளைந்து விடுமாயின் உடனேயே ஒரு நன்மையைச் செய்து விடுவீராக. நன்மை அத்தீமையை அழித்து விடும். உம்முடைய நற்குணங்களை மக்களுக்கு முன்னே வெளிப்படுத்துவீராக'' என்றும் ஒரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் ஏவினார்கள்.

இத்தகைய பயிற்சி பெற்ற நற்றோழரை சமுதாயத்தின் ஓர் அங்கமாகவல்ல, நிறைவு பெற்ற முழுச் சமுதாயமாகவே ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் வர்ணித்தார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் காலத்திலேயே ஹழ்ரத் மஆத் (ரலி) அவர்கள் ஸலமா குடும்பத்தினர் வாழ்ந்த

பகுதியில் இருந்த தனிப் பள்ளியில் தொழுகையை முன்னின்று நடத்தும் இமாமாக இருந்தார்கள். ''உங்களில் திருக்குர்ஆனை அதிகம் கற்றவர்கள் இமாமாக இருங்கள். அதில் ஒன்றுக்கு மேற்பட்டவர் சம நிலையிலிருந்தீர்களானால் என் வழிமுறையை அதிகம் அறிந்தவர்கள் இமாமாக இருங்கள். அதிலும் சம நிலைப்பட்டவர்களாக இருந்தீர்களானால் ஹிஜ்ரத்தில் முந்தியவர் இமாமாகட்டும். அதிலும் சம நிலைப்பட்டவர் பலர் காணப்படின் வயதில் முதிர்ந்தவர் இமாமாகட்டும்'' என்ற நபிமொழியை 'முஸ்லிம்' (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களை விட வயதில் முதிர்ந்தவர்கள் ஸலமா குடும்பத்தாரிடையே காணப்படுகிறார்கள். அவர்கள் ஒரு முஹாஜிரு மல்லர். இந்நிலையில் அவர்கள் இமாமாக்கப்படக் காரணம் மற்றவர்களைவிட அவர்கள் குர்ஆனை அதிகம் அறிந்திருந்ததாலும் ஸுன்னத்தென்னும் வழி முறையைத் தெரிந்திருந்ததாலுமேயாகும்.

''அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத், அபீ ஹுதைஃபாவின் வளர்ப்பு மகனார் ஸாலிம், உபை இப்னு கஅப், மஆத் இப்னு ஜபல் (ரலி) ஆகிய நால்வரிடமிருந்து நீங்கள் திருக்குர்ஆனைக் கற்றுக் கொள்ளுங்கள்'' என 'புஹாரீ'யில் காணப்படும் அண்ணலார் (ஸல்) அவர்களின் அருளுரையும் ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களின் மறை ஞான அறிவுக்குச் சான்று பகர்கிறது. ''மார்க்கத்தில் விதிக்கப்பட்டதையும் விலக்கப்பட்டதையும் தெரிந்து கொள்ள விழைபவர்கள் மஆத் இப்னு ஜபலிடம் தெரிந்து கொள்ளுங்கள்'', ''மறுமை நாளில் மஆத் நல்லறிஞர்களின் தலைவராகப் பரிணமிப்பார்'' என்றெல்லாம் பெருமானார் (ஸல்) அவர்கள் வாழ்த்தியுள்ளார்கள்.

ஒரு சமயம் இரவுகால — இஷா—தொழுகையின் போது ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்கள் மிக நீளமான [பக்கரா] அத்தியாயத்தை ஓதித் தொழுவித்தார்கள். நீண்ட நேரம்

நிற்கமாட்டாமல் பல பேர் பிரிந்து தனியே தங்கள் தொழுகையை முடித்துக் கொண்டார்கள். அது ஒரு சர்ச்சையாகி அண்ணலார் [ஸல்] அவர்களின் செவிக்கு எட்டியது. தங்களின் தோழரையழைத்த பெருமானார் [ஸல்] அவர்கள், ''சமுதாயத்தினரிடையே சர்ச்சைகள் தோன்ற இடமளித்து விடாதீர். உம் பின்னே முதியவர்களும், பலஹீனர்களும், தங்களின் அலுவல்களுக்காக விரைந்து செல்லத் தேவைப்பட்டவர்களும் வந்திருப்பர். அவர்களைப் பற்றிய கவனத்தையும் கருத்தில் கொள்விராக'' என போதித்தார்கள்.

ஹிஜ்ரி 9-ம் ஆண்டில் யமன் நாடு தன் இருட்போர்வையைவிலக்கிஇஸ்லாத்தின்புறம் வந்தது. நேரிய வழியையும் ஒளியையும் ஏந்தி ஆண்டவனின் தூதராக வந்த அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் யமன் நாட்டவருக்கு ஒளி வீசி வழி காட்ட தம் தூதராக ஹழ்ரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களை அனுப்பி வைத்தார்கள். இதற்கிடையே ஹழ்ரத் மஆத் (ரலி) அவர்கள் தம் ஈகைக் குணத்தாலும் தாராள மனதாலும் பெரும் கடன் சுமைக்காளாகி விட்டிருந்தார்கள். குறையிரந்து வந்தவர்கள் ஹழ்ரத் மஆத் (ரலி) அவர்களிடமிருந்து வெறுங் கையினராகப் பிரிந்து செல்ல நேர்ந்ததேயில்லை. அத்தகைய அவ்விளம் பெருவள்ளல் தம் உடமைகளனைத்தையும் விற்று கடன்களை அடைக்க முயற்சித்தும் போதாமையால் தம் வீட்டை விட்டு வெளியில் வரவும் நாணி அமர நேர்ந்து விட்டது.

ஒரு சமயம் அத்தோழரைக் கவலை சூழ்ந்தவராகப் பள்ளியில் அமர்ந்திருக்கக் கண்டு அழைத்து விசாரித்த அண்ணலார் (ஸல்) அவர்கள்,

اَللّٰهُمَّ اَعِنِّيْ عَلٰى ذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ

''இறைவா! உன்னைத் துதிக்கவும் உனக்கு நன்றி செலுத்தவும் அழகுற உன்னை வணங்கவும் நீ எனக்கு துணை புரிவாயாக'' என வழமையாக ஓதி வர தம் தோழருக்குக் கற்பித்தார்கள். எந்நிலையிலும் அல்லாஹ் வின் அருளைப் பற்றிய நம்பிக்கையை இழந்து விட வேண் டாம் என தம் தோழரை ஆறுதல் படுத்திய நபிபெருமான் [ஸல்] அவர்கள் இச்சந்தர்ப்பத்தில் யமன் நாட்டின் எல்லா அதிகாரங்களையும் அவர்களுக்கு வழங்கி அனுப்பி வைத் தார்கள்.

யமன் நாடு ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, நான்கு பிரிவுகளுக்கு ஹழ்லரத் காலித் இப்னு ஸஈத், முஹாஜிர் இப்னு அபீ உமையா, ஜ்ஸியாத் இப்னு லுபைத், அபூ மூஸா அஷ்அரீ (ரலி) ஆகியோர் அதிகாரி களாக அனுப்பப்பட்டிருந்தனர். ஐந்தாம் பிரிவுக்கு அண்ண லார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களை அதிகாரியாக்கி மற்ற நால்வரின் மீதும் மேலதி காரமும் தந்து அனுப்பி வைத்தார்கள்.

நாட்டின் நிர்வாகப் பொறுப்புகள் அனைத்தையும் அவர்களுக்கு விளக்கி வேதக்காரர்களாகிய யூத, கிருஸ்து வர்களுக்கு இறுதி மார்க்கத்தைப் பற்றி எடுத்துரைக்கும் முறைகளையும் கற்பித்த நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள், மென்மையையும் நேர்மையையும் கடைபிடிக்க வேண்டியது பற்றியும் வெகுவாக எடுத்துரைத்தார்கள்.

''முந்தின மதங்களின் மீதிருப்பவர்களைச் சந்திக்கப் பெறும் நீர் முதலில் இறைவனின் ஏகத்துவத்தைப் பற்றியும் இறுதித் தூதுத்துவம் பற்றியும் அவர்களுக்கு எடுத்துரைத்து இஸ்லாத்தின் பால் அவர்களை அழைப்பீராக. அதனை அவர்கள் ஏற்றிடில், அல்லாஹ் அவர்கள் மீது ஐங்காலத் தொழுகையைக் கடமையாக்கியிருப்பதைப் பற்றி சொல் வீராக. அதனையும் அவர்கள் ஏற்றபின், அவர்களில் சீமான்

களிடமிருந்து பெறப்பட்டு சாமானியர்களிடையே பங்கிட விதிக்கப்பட்டுள்ள ஜக்காத் பற்றி அவர்களுக்கு அறிவிப்பீராக. அதற்கவர்கள் இணங்கி விடுவார்களாயின் அவர்களின் உடைமைகளில் மேலானவையாகத் தேர்ந்து நீர் அவர்களிடம் பறிக்கவேண்டாம். அவர்களிடம் கடுமையைப் பிரயோகிக்க வேண்டாம். இறைவனின் அருளைப் பற்றிய நன்மாராயங்களையே அவர்களிடம் அதிகம் எடுத்துரைப்பீராக. அவனின் தண்டனைகளையே அதிகமாக விவரித்து அவர்களைக் கவலையில் மூழ்கச் செய்து விடாதீர்.

''இரக்கம் நிறைந்த மக்களிடம் நான் உம்மை அனுப்புகிறேன். மஆதே! பழக்கத்தில் நீர் அவர்களிடம் மென்மையைக் கடைபிடிப்பீராக. அவர்களோடு கலந்திருப்பீராக. ஆடம்பரத்தையும் சுகபோகத்தை விட்டும் விலகி வாழ்விராக. அல்லாஹ்வின் நல்லடியார்கள் ஆடம்பரத்தையும் சுகபோகத்தையும் விரும்புவதில்லை. அதிகாரத்தைக் கையிலேந்திச் செல்லும் நீர் அக்கிரமத்துக்கு ஆளாக்கப்பட்டு விடுவோரின் சாபத்தைக் கொண்டு அஞ்சுவீராக. அவர்களுக்கும் ஆண்டவனுக்குமிடையே எந்தத் திரையுமே இல்லை.'' என்றெல்லாம் அருளுரை பகர்ந்த அண்ணலார் (ஸல்) அவர்கள், ''மஆதே! உம்மிடம் வரும் வழக்குகளை எவ்விதம் தீர்த்து வைப்பீர்?'' என வினவினார்கள்.

''அல்லாஹ்வின் திருவேதத்தைக் கொண்டு தீர்த்து வைப்பேன்'' என்றனர் ஹழ்ரத் மஆத் (ரலி).

''அல்லாஹ்வின் திருவேதத்தில் உமக்கு ஆதாரம் கிடைக்காவிடில் என்ன செய்வீர்?'' என பெருமானார் (ஸல்) அவர்கள் வினவினார்கள்.

''என் பெருமானின் நெறிமுறையில் தேடுவேன்'' என்றனர் ஹழ்ரத் மஆத் (ரலி).

''அதிலும் நீர் ஆதாரத்தைக் காணாவிடில் என்ன செய்வீர்?'' என பெருமானார் (ஸல்) அவர்கள் வினவினார்கள்.

''அவ்விரண்டினையும் அடித்தளமாகக் கொண்டு சுயமாகவே சிந்தித்துத்தீர்ப்புவழங்குவேன்'' என்றனர் ஹழ்லரத் மஆத் (ரலி). அந்த பதில் கேட்டு அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்கள் புளகாங்கித மடைந்தார்கள். தம் தோழரின் நெஞ்சத்தைத் தம் கரங்களால் தடவிய பெருமானார் [ஸல்] அவர்கள்,

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ وَفَّقَ رَسُوْلَ رَسُوْلِهٖ بِمَا يَرْضَى اللّٰهُ وَرَسُوْلُهٗ

''தனக்கும் தன் தூதருக்கும் பிரியமானதை தூதரின் தூதருக்கு வெளிச்சப்படுத்திய அல்லாஹ்வுக்கே புகழனைத்தும்'' என புகழ்ந்தார்கள்.

முத்தான தங்களின் போதனைகளனைத்துக்கும் முத்திரையாக, முக்காலமும் உணர்ந்த அம்மூதறிஞர் பெருமான் [ஸல்] அவர்கள், ''மஆதே! இன்று விடைபெற்றுச் செல்லும் நீர் இதற்குப் பின் என்னைச் சந்திக்கமாட்டீர். மதீனாவின் இந்தப் பள்ளிக்கு மீண்டும் வரும் நீர் என் மண்ணறையைக் கடந்து செல்வீர்'' என கூறக் கேட்டு இடியுண்ட நெஞ்சத்தினராயினர் ஹழ்லரத் மஆத் [ரலி].

முகத்திலறைந்துக் கொண்டு துடித்தழுத அத்தோழரின் கரம் பிடித்து அண்ணலார் (ஸல்) அவர்கள், ''இப்படிச் செய்யாதீர். இது உமக்கு அனுமதிக்கப்பட்டதல்ல'' என கூறக் கேட்டு அமைதியடைந்தார்கள் ஹழ்லரத் மஆத் (ரலி).

ஆறுதல் மொழிகள் கூறி அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களுக்கிருந்த கடன் சுமைகளை

நினைவூட்டினார்கள்; மக்களில் எவரும் வழங்கும் அன்பளிப்புகளை ஏற்க அனுமதி வழங்கினார்கள்.

புறப்பட வேண்டிய நேரம் வந்தது. நபிபெருமான் (ஸல்) அவர்கள் யமன்வாசிகளுக்கு தங்களின் தோழர்களில் மிகச் சிறந்தவரை அவர்கள் பால் அனுப்பியிருப்பதாகவும், அவருக்கு வழிப்பட்டு நடக்கும்படியாகவும் கடிதமும் எழுதித் தந்தார்கள். புரவி மீது தம் தோழரை அமர்த்தி தாம் நடந்தே வந்த புரவலர் பெருமான் (ஸல்) அவர்கள், "மஆதே! ஒரேயோர் இணை வைப்பவரையும் உம் முயற்சியால் இஸ்லாத்தை ஏற்றிடச் செய்திடுவீராகில் அது இவ்வுலகப் பொருட்கள் அனைத்தினும் உமக்கு மேலானது" என்று வாழ்த்தி வழியனுப்பி வைத்தார்கள்.

நபி பெருமான் (ஸல்) அவர்களிடம் ஹழ்ரத் மஆத் (ரலி) அவர்கள் பெற்ற இறுதிச் சந்திப்பு அதுவே. பெருமையும் செறுக்குமற்று எளிமையின் கோலம் பூண்டு யமன் நாடு வந்த அம்மாநபித்தோழர் அதிகாரத்தை ஏந்தி அறபோதமும் புரிந்தார்கள்; நெறிநீதியும் செலுத்தினார்கள். அரசியல் காரியங்களும் நடைபெற்றன, அவர்களைக் கொண்டு மக்களுக்கு ஆன்மீக விளக்கங்களும் கிடைத்தன.

யமன் நாட்டின் மக்களில் சிலர் தங்களின் தலைவர்களுக்கு மண்டியிட்டு மரியாதை செலுத்துவதைக் கண்ட ஹழ்ரத் மஆத் [ரலி] அவர்கள் தங்களின் மாநபியையும் அவர்களின் தோழர்கள் மண்டியிட்டுக் கண்ணியப்படுத்தலாமன்றோவென எழுதிக் கேட்டார்கள். அதற்கு பதிலாக அண்ணலார் [ஸல்] அவர்கள், "அல்லாஹ் ஒருவனையே தவிர, மனிதர்கள் ஒருவருக்கு மற்றவர் மண்டியிடுவது அனுமதிக்கப்பட்டிருக்குமாயின் பெண்களை அவர்களின் கணவர்களுக்கு முன் மண்டியிட ஏவியிருப்பேன்" என எழுதினார்கள்.

ஹவ்லான் கோத்திரத்து ஒரு மூதாட்டி பருவமடைந்த பன்னிரு ஆண் மக்களோடு வந்து ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்களைச் சந்தித்தார். அவரின் இரு மக்கள் இருபுறமும் அணைத்தவாறு அவரை அழைத்து வந்திருந்தனர். சட்ட விளக்கம் தேடி, திரு நபியின் தூதரை நாடி வந்த அம் மூதாட்டி, 'ஒரு கணவன் மீது மனைவிக்குள்ள கடமைகள் என்ன?'வென்று கேட்டபோது, ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்கள், 'இறைவனுக்கு அஞ்சுவதோடு கணவனுக்கு வழிப் படுவதும், அவருக்குப் பணி விடை செய்வதுமாகும்' என கூறினார்கள்.

''திருநபியின் தோழரே! என் மக்களின் தந்தை முது மையடைந்து விட்டார். அவருக்கு என் கடமையைப் பூரண மாக நிறைவு படுத்த முறை கற்றுத் தாருங்கள்'' என அம்மூதாட்டி வினவினார். ''அவருக்கு உம் கடமையைப் பூரணமாக நிறைவு படுத்த உம்மால் முடியாது. தொழு நோயால் அவரின் சதைகள் சிதில் சிதில்களாகப் பிளந்து அதில் வழியும் சீழை உம் நாவால் நீர் துடைத்து முடித்த போதினும் சரியே, உம் கடன் தீராது'' என பெருமான் நபி [ஸல்] அவர்களின் தோழர் பதிலளித்தார்கள்.

ஏறத்தாழ இரண்டாண்டு காலம் யமன் நாட்டின் எல்லா மாநிலங்களையும் மேற்பார்வை செய்த ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்கள் ஹிஜ்ரி 11-ல் அண்ணலார் [ஸல்] அவர்கள் இவ்வுலகைப் பிரிந்த செய்தியைச் செவியுற்று மனம் சோர்ந்தனர். அதன் பின் யமனிலேயே தொடர்ந்து இருக்க அவர்களின் மனம் ஒப்பவில்லை. பொறுப்பிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு மதீனா திரும்பி விட்டார்கள்.

யமனிலிருந்த சமயம் ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள் தனியே வாணிபமும் செய்தார்கள். அதற்கான முதலீடு 'பைத்துல் மால்' எனப்படும் மக்களின் பணத்திலிருந்து கடனாகப் பெறப்பட்டதாயிருந்தது. அத்துடனன்றி அவர்

களுக்கு ஏராளமான அன்பளிப்புகளும் சேர்ந்தன. இவை யாவும் கூடி பெரும் பொருளோடு அவர்களை மதீனாவில் நுழையச் செய்தன. அன்பளிப்புகளாயினும் அவர்கள் ஆளுநராக இருந்த அந்தஸ்தைக் கொண்டு வந்தவையல்லவா அவை!

ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் கிலாஃபத் காலமது. கலீஃபா அவர்களின் அமைச்சரைப் போன்றிருந்த ஹழ்லரத் உமர் [ரலி] அவர்களின் பார்வையில் அவ்வுடைமை யனைத்தும்அரசுடமையாக்கப்படவேண்டியவையாயிருந்தன. ஆனால், கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களோ அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களால் அனுப்பப்பட்ட ஆளுநரிட மிருந்து அவற்றைத் தாம் கேட்டுப் பெற மறுத்து விட்டார் கள்; ''அவராகக் கொணர்ந்து சேர்ப்பித்தால் நான் பெற்றுக் கொள்வேனேயன்றி நாளாகக் கேட்டுப் பெற மாட்டேன்'' என கூறிவிட்டார்கள். எனினும் ஹழ்லரத் உமர் (ரலி) அவர்கள் நேரடியாகவே ஹழ்லரத் மஆத் (ரலி) அவர் களைச் சந்தித்து தம் கருத்தைக் கூறினார்கள். ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களோ நபி பெருமான் [ஸல்] அவர்கள் தம்முடைய ஏழ்மையைக் கருதி அவற்றை அடைய தமக்கு அனுமதி வழங்கியிருப்பதால் தாம் அவற்றைத் தரத் தேவை யில்லை என கூறிவிட்டனர்.

ஹழ்லரத் உமர் [ரலி] அவர்களின் கருத்தைப் புறக் கணித்து விட்டபோதினும் இறையருள் எச்சரிக்கையை ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்களால் புறக்கணிக்க எவ்விதம் முடியும்? தாம் ஒரு நீர்த் தடாகத்தில் மூழ்கிக் கொண்டி ருப்பது போலவும், உமர் (ரலி) அவர்கள் தம்மைக் கரம் பிடித்து வெளியில் தூக்குவது போலவும் கனவொன்று கண்ட ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள், கலீஃபா அபூபக் கர் (ரலி) அவர்களிடம் தம் கனவைக் கூறி, தம் உடைமை களனைத்தையும் ஒப்படைக்கச் சித்தமானார்கள். கலீஃபா அவர்களோ அவற்றை இப்போது தாம் அவர்களுக்கே

அன்பளிப்புச் செய்து விட்டதாகக் கூறிவிட்டார்கள். இப்போது அவை அன்பளிப்பாகி விட்டதால், அவற்றை ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்கள் தாமே வைத்துக் கொள்வதில் தவறில்லை என ஹழ்லரத் உமர் [ரலி] அவர்களும் கூறிவிட்டார்கள்.

ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்களின் அறிவின் திறனையும் சிந்தனைத் தெளிவையும் அறிந்திருந்த கலீஃபா அபூபக்கர் [ரலி] அவர்கள் தங்களின் ஆலோசகர்களில் ஒருவராக அவர்களை அமர்த்திக் கொண்டனர். அபூபக்கர் [ரலி] அவர்களை யடுத்து கிலாஃபத்தை ஏற்ற ஹழ்லரத் உமர் [ரலி] அவர்களும் அவ்விளந்தோழரின் தகுதிக்கு உயர் மதிப்பளித்தார்கள். இறைவன் ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களுக்கு அருளியிருந்த இயற்கையான மதிநுட்பத்தைக் கண்ட கலீஃபா உமர் (ரலி) அவர்கள், ''மஆதைப் போன்ற ஒரு மகனைப் பெற பெண்கள் தவமிருப்பர்'' என்றே ஒருமுறை புகழ்ந்துரைத்தார்கள்,

கலீஃபா உமர் [ரலி] அவர்களுக்கு முன் ஒரு வழக்கு நடைபெற்றது. கருவுற்றிருந்த ஒரு பெண்மணியின் கணவர் இரண்டாண்டு காலங்கள் வெளியூர் சென்றிருந்ததால் ஐயத்திற்காட்பட்ட அப்பெண்மணியை கல்லெறிந்து கொல்லும் படியாக கலீஃபா உமர் [ரலி] அவர்கள் கட்டளை பிறப்பித்தார்கள். அச்சமயம் ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்கள், ''அமீரல் முஉமினீன்! பெண்மணியைக் கொல்வதுடன் கருவிலிருக்கும் குழவியையும் கொல்ல என்ன காரணம்'' என வினவினார்கள். கலீஃபா அவர்கள் பிரசவகாலம் வரை அப்பெண்ணின் தண்டனையைத் தாமதிக்கும்படி கட்டளையிட்டார்கள். பிரசவத்திற்குப் பின் அக்குழந்தை முற்ற முற்ற தன் தந்தையின் சாயலிலேயே இருந்தது. ஊர் திரும்பிய அப்பெண்ணின் கணவரோ குழந்தையைக் கண்டு அது தமக்கே சொந்தமானது என்று சத்தியம் செய்து விவா



தித்தார். வழக்கைத் தள்ளுபடி செய்து அப்பெண்ணை விடு விக்க கட்டளையிட்ட கலீஃபா அவர்கள், ''மஆத் இல்லா திருந்தால் உமர் நாசமடைந்திருப்பேன்'' என நன்றி கூர்ந் தார்கள்.

கிலாப் கோத்திரத்தவரில் செல்வந்தர்களிடம் தர்மப் பொருள்களை வசூலித்து ஏழைகளிடையே பங்கிட்டளிக்க கலீஃபா உமர் (ரலி) அவர்கள் ஹழ்லரத் மஆத் [ரலி] அவர்களை அனுப்பி வைத்தார்கள். தங்கள் பணி முடித்து வீடு திரும்பிய ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களிடம், ''வீட் டுக்காக நீங்கள் ஏதும் கொண்டு வரவில்லையா? மற்ற அதிகாரிகளெல்லாம் அவரவர்களின் வீட்டாருக்காக எவ் வளவோ கொண்டு வந்துள்ளார்களே'' என அவர்களின் மனைவியார் வினவினார்.

''எனக்குக் காவலாய் வந்தவன் கண்காணித்துக் கொண் டேயிருந்ததால் நான் ஏதும் கொண்டுவர முடியவில்லை'' என ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள் கூறினார்கள். அத னைக் கேட்டதும் மிகுந்த மனவேதனையடைந்தார் அவர்க ளின் மனைவியார். ''அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர் களின் காலத்திலும் கலீஃபா அபூ பக்கர் (ரலி) அவர்களின் காலத்திலும் தாங்கள்நேர்மையாளராக இருந்தீர்கள். தங்கள் மீது காவலதிகாரியை நியமிக்க அவர்களுக்கு அவசியப்பட வில்லை. அவ்வாறிருக்க கலீஃபா உமர் (ரலி) அவர்களுக்கு மட்டும் தங்களின் நேர்மையில் ஐயம் ஏற்பட்டு ஒரு மேலதி காரியைக் காவலுக்கு அனுப்பினார்களோ'' என உள்ளம் புழுங்கிய அவ்வம்மையார், மற்ற பெண்களுக்கிடையிலெல் லாம் கலீஃபா உமர் (ரலி) அவர்கள் தம் கணவரை மற்ற வர்களின் பார்வையில் தாழ்வடையச் செய்து விட்டார்க ளென குறை பேசத் துவங்கி விட்டார்.

கலீஃபா உமர் [ரலி] அவர்களின் செவிகளை அச் செய்தி எட்டியது. திடுக்கிட்ட கலீஃபா அவர்கள் ஹழ்லரத்

மஆத் [ரலி] அவர்களை ரவழைத்து, ''உம்மைக் கண் காணிக்க ஒரு காவலனை நான் எப்போது அனுப்பினேன்'' என கேட்டார்கள்.

''அமீரல் முஉமினீன்! என் வீட்டாரிடமிருந்து தப்பிக்க வேறு வார்த்தைகள் எனக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் ஒரு காவலன் [அல்லாஹ்] என்னைக் கண்காணித்துக் கொண்டேதான் இருந்தான்'' என ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள் கூறக் கேட்டு கலீஃபா அவர்கள் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்கள். தம் தோழரின் நேர்மையுணர்வை யும், ஊகத்தையும் கண்டு மகிழ்ந்த கலீஃபா அவர்கள், தனியாக ஒரு தொகையை அனுப்பி வைத்து அதனைக் கொண்டு அவரின் வீட்டாரைத் திருத்திப்படுத்தும்படி கூறினார்கள்.

ஸிரியாவில் முஸ்லிம்களின் தொகை நாளுக்கு நாள் கூடிய வண்ணம் இருந்தது. அப்போது அவர்களுக்கு மார்க்க அறிவையும் மறை ஞானத்தையும் போதிக்க திறன் படைத் தோரை அனுப்பியுதவுமாறு ஸிரியாவின் ஆளுநராக அப் போதிருந்த ஹழ்லரத் யஜ்ஸீத் இப்னு அபூஸுஃப்யான் (ரலி) அவர்கள் எழுதியிருந்தனர். அக்கடிதம் கண்டு கலீஃபா உமர் (ரலி) அவர்கள் ஹிம்ஸிலும், டமாஸ்கஸிலும், பாலஸ்தீனத்திலும் தங்கிப் பணிபுரியுமாறு ஹழ்லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களையும், உபாதா இப்னு ஸாமித், அபுத்தர்தா (ரலி) ஆகியோரையும் அனுப்பி வைத் தார்கள். ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள் தம் குடும்பத் தோடு ஸிரியாவில் குடியேறி, அங்கு வாழ்ந்த மக்களுக்கு மறை ஞானத்தையும், மாநபியின் உரை கோர்வையையும் எடுத்தோதி வந்தனர். மார்க்கத்தின் நெறிமுறைகளெல்லாம் இவர்கள் மூலம் மக்களின் உள்ளங்களில் ஒளி வீசலாயின. அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் ஒரு நூற்று ஐம்பத்தேழு அறவுரைகளை ஹழ்லரத் மஆத் (ரலி) அவர் களின் திருவாயால் மக்கள் செவியேற்றனர்.

அகத் தெளிவோடன்றி முகப் பொலிவும் பெற்றிருந்த அப்பேரெழில் தோழரைச் சூழ்ந்து மக்கள் கூட்டங் கூட்டமாக அறிவொளி பெற்றனர். ''திமஷ்க்கில் பள்ளியில் மக்கள் குழாத்திடையே ஒரு பேரழகர் அமர்ந்திருக்கக் கண்டேன். அவர்களிடையே தோன்றிய ஐயப்பாடுகளுக்கு பொருத்தமான விளக்கங்களை அவர் கூறிக் கொண்டிருக்கக் கண்டு அவர் யார் என நான் கேட்டபோது, மாநபியின் தோழர் மஆத் இப்னு ஜபல் என மக்கள் கூறினார்கள்—என ஹழ்லரத் அபூ இத்ரீஸ் கூலானீ [ரஹ்] அவர்கள் அறிவித்தனர்.

''ஹிம்மஸின் பள்ளியில் முதுமையடைந்த 32 நபிமணித் தோழர்களுக்கு நடுவே ஒரு வாலிபரைக் கண்டேன். அம்முதியோர்களிடையே கருத்துக்கள் வேறுபடும்போது அவ்வாலிபர் அதனைத் தீர்த்து வைத்த வண்ணமிருந்தார். அவர் யார் என கேட்டு, நபிமணித் தோழர் ஹழ்லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) என்று அறிந்தேன்—என புகழ் பெற்ற தாபஈ பெரியாரான ஹழ்லரத் அபூ முஸ்லிம் கூலானீ (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

''கருத்த சுருள் சுருளான முடிகளுடன் கூடிய அப்பேரழகர் ஹிம்மஸின் பள்ளிவாசலில் உரையாடிக் கொண்டிருக்கையில் பேச்சினூடே அவரின் வாயிலிருந்து ஓர் ஒளி வெளியாவதைக் கண்டேன்—என ஹழ்லரத் அபூ பஹ்ரியா [ரலி] அவர்கள் வர்ணிக்கிறார்கள்.

''அவர்கள் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கையில் அவர்கள் வாயிலிருந்து சொற்கள், மணிகள் உதிர்வதைப் போன்று உதிர்ந்த வண்ணமிருந்தன—என்று ஹழ்லரத் யஜீத் இப்னு குத்தைப் (ரஹ்) அவர்கள் புகழ்ந்தார்கள்.

நபியின் தோழர்கள் வெறும் மார்க்க ஞானம் புரிவோராக இருக்கவில்லை. மறுமையின் விளைநிலமான இம்மையைப் பண்படுத்த அரசியல் கடமைகளையும் அவர்கள் புறக்

கணித்திடவில்லை. தங்களின் போதனைகளால் பள்ளிகளின் மேடைகளை அலங்காரம் பெறச் செய்த பெருமானாரின் தோழர்கள் களங்களில் வாளேந்தி வீரப்போர்களையும் நடத்தினார்கள்.

ஸிரியாவில் நாற்புறமும் பல படைப் பிரிவுகளைத் தம் கீழ் வைத்து ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் ரோமர்களை எதிர்த்துப் போராடிக் கொண்டிருந்த காலமது. ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களின் கவனத்தையும் அப்போர்கள் ஈர்த்தன. அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் காலத்தில் நடைபெற்ற ஒரு போரையும் தவறவிடாத வீரர்—'அல்லாஹ்வின் பாதையில் போர் புரிவதை விட துலாக் கோலை கனக்கச் செய்யும் நன்மையான செயல் பிறிதொன்றும் இல்லை' என தம் ஆசான் மொழியச் செவியேற்றிருந்த சீடர்—முப்பத்து இரண்டே வயதுகளடைந்து வாலிபம் துளிர்த்த நிலையில் அமைதி கொண்டு தம் இல்லத்திநுள் எவ்விதம் அமர்ந்திருப்பார்.

'அஜ்னாதை'னையும் 'டமாஸ்க'ஸையும் வென்று 'ஃபிஹ்லி'ல் பாசறை அமைத்திருந்தனர் முஸ்லிம்கள். அதன் எதிர்ப்புறமே பைஸானில் திரண்டிருந்த ரோமர்கள் இடையேயிருந்த அணைகளையெல்லாம் உடைத்து நிலப்பரப்பை வெள்ளக்காடாக்கி, அதனால் மனஞ்சோர்ந்து முஸ்லிம்கள் சென்று விடுவார்கள் என கனவு கண்டனர். ஆனால் இஸ்லாமிய வீரர்களின் புரவிகள் நிலத்தில் பாய்ந்து சென்ற வேகத்துக்குச் சற்றும் குறையாமல் நீரிலும் நீந்தக் கண்ட ரோமர்கள் மனஞ் சளைத்து உடன்பாட்டுக்கு விழைந்தனர். தங்களிடம் பேச ஒரு தூதரை அனுப்பி வைக்குமாறு ரோமர்கள் எழுதக் கண்ட தளநாயகர் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் அப்பணிக்குத் தகுதியுடையவராக ஹழ்ல

ரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களையே தெரிந்தெடுத்து அனுப்பி வைத்தார்கள்.

முஸ்லிம் தூதர் கண்டு திகைக்க வேண்டுமென்பதற்காக ரோமர்கள் வெகு ஆடம்பரமாகத் தங்களின் அவையை அலங்கரித்திருந்தார்கள். ஜரிகை வேலைப் பாடுகளுடன் கூடிய பட்டாலான விரிப்பு விரிக்கப்பட்டிருந்தது. ஆனால் ஓர் அலட்சியப் பார்வையோடு அருவருப்பையே தங்களின் முகத்தில் வெளிப்படுத்திய—பெருமானாரின் திருத்தோழர் புரவி விட்டிறங்கி ஓர் அடியும் கூட விரிப்பின் மேல் வைக்காமல் அதன் ஓரத்திலேயே நின்று விட்டனர். ஓடோடி வந்த ஒரு கிருஸ்துவர் புரவியைத் தாம் பிடித்துக் கொள்வதாகவும் அவர்களை அவையில் சென்று அமரும்படியாகவும் வேண்டிக் கொண்டார். ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களோ, ''ஏழைகளின் உடைமைகளைப் பறித்து உருவாக்கப்படும் இத்தகைய டாம்பீகத்துக்கும் எங்களுக்கும் எந்த உறவுமில்லை'' என்றவர்களாக மண் தரையிலேயே அமர்ந்து கொண்டார்கள்.

''அலங்கரிக்கப்பட்ட அவையில் சென்றமர்வதே தங்களின் கம்பீரத்துக்கும் மரியாதைக்கும் உவந்ததென்றெண்ணியே நாங்கள் இதையெல்லாம் அமைத்திருந்தும் தாங்கள் ஓர் அடிமையைப் போன்றல்லவா மண்தரையில் அமர்ந்து விட்டீர்கள்'' என ரோமர்கள் வருந்தினர். ஆனால் ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள் அதைப் பொருட்படுத்தவே இல்லை.

''இவையெல்லாம் உலகின் அலங்காரப் பொருள்கள். இத்தகைய படாடோபத்தையும் வீண் விரையத்தையும் விட்டு நாங்கள் தடுக்கப்பட்டிருக்கிறோம். மண்ணில் அமர்வதே அடிமைகளின் அடையாளமென்றால் ஆண்டவனின் அடிமையாகிய நான் மிகச் சரியான இடத்திலேயே அமர்ந்திருக்கிறேன்'' என்ற அவர்களின் விளக்கத் தோரணையைக் கண்ட ரோமர்கள், ''முஸ்லிம்களில் மிக மேலான



படித்தரம் பெற்றவராகத் தாங்கள் தெரிகிறீர்கள்'' என புகழ்ந்தார்கள்.

''அவர்களில் மிகக் கீழான படித்தரத்தை எட்டிவிடா திருப்பதே எனக்குப் போதுமானதாகும்'' என்றனர் ஹழ்ல ரத் மஆத் (ரலி).

அடுத்து அவர்களின் பேச்சு அரசியலுக்குத் திரும் பியது: ''நீங்கள் எங்களின் இந்தப் பூமியின் புறம் ஏன் வந்தீர்கள்? உங்களுக்கு அருகாமையில் அபிஸீனியா இருக் கிறது; பாரஸீக மன்னர் இறந்து ஈரானின் ஆட்சி ஒரு பெண்ணின் அதிகாரத்திலிருக்கிறது. அவற்றையெல்லாம் திரும்பியும் பாராது எங்களின் நாட்டின் புறம் நீங்கள் வந்த காரணம் என்ன? விண்ணின் தாரகைகளைப் போன்று, மண் ணின் துகள்களைப் போன்று பெருகிக் கிடக்கும் படை களைக் கொண்டுள்ள எங்கள் மன்னரைத் தோற்கடித்து விட முடியும் என நீங்கள், ஓரிரு கோட்டைகளைக் கைப்பற்றி விட்டதைக் கொண்டே தீர்மானித்து விட்டீர்களா? எங்க ளின் நபியையும் எங்களின் வேதத்தையும் நம்புவதாகக் கூறும் நீங்கள் எங்களோடு போரிட வந்ததன் மர்மம் என்ன?'' என்றெல்லாம் தங்களின் சுய பெருமையைப் படம் பிடித்துக் காட்டினார்கள் ரோமர்கள். அவற்றைக் கேட்டு முடித்து ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள் பேசலானார்கள்:

''அனைத்துக்கும் முதலாக நான் உங்களை இஸ்லாத் தின்பால் அழைக்கின்றேன். அதனை ஏற்று நீங்கள் எங்க ளோடு ஒன்றுபட்டு வணங்க வாருங்கள். மதுவருந்துவதை விட்டு விடுங்கள். பன்றியின் இறைச்சியை உண்பதை விட்டும் விலகி விடுங்கள். தூதர் நாயகம் (ஸல்) அவர்களின் வழியை ஏற்று எங்களின் சகோதரர்களாகி விடுங்கள். இதற்கு நீங்கள் உடன்படாவிடில் 'ஜிஸ்யா' செலுத்துங்கள். அதற்கும் நீங்கள் முரண்படில் எங்களுக்கும் உங்களுக்குமிடையே தீர்ப் பளிக்க வாட்கள் காத்திருக்கின்றன. விண்ணின் தாரகை

களுடையவும் மண்ணின் துகள்களுடையவும் எண்ணிக்கை யளவுக்குள்ள உங்கள் படைப் பெருக்கத்தைப் பற்றி நாங்கள் கவலையுறவில்லை. ஏனெனில் எங்களின் நம்பிக்கை படைகளின் எண்ணிக்கையின் மீதோ எங்களின் புஜபலத்தின் மீதோ அல்ல, அல்லாஹ்வின் உதவியின் மீதேயாகும்'' என்றுரைத்த ஹழ்ரத் மஆத் (ரலி) அவர்கள்,

كَمْ مِّنْ فِئَةٍ قَلِيلَةٍ غَلَبَتْ فِئَةً كَثِيرَةً بِإِذْنِ اللَّهِ

''(எவ்வளவோ) பெருங்கூட்டத்தினரை எத்தனையோ சிறு கூட்டத்தினர் அல்லாஹ்வின் உதவியைக் கொண்டு வென்றிருக்கிறார்கள்'' என்ற (2 : 249) திருவசனத் தொடரை அவர்களுக்கு ஓதிக் காட்டினார்கள்.

''உங்களின் மாமன்னர் உங்களின் உடைமைகளுக்கும் உயிர்களுக்கும் அதிபதியாக இருக்கலாம். ஆனால் எங்களின் தலைமையை ஏற்றிருப்பவர் எங்களைப் போன்ற ஒரு மனிதரே. அவர் எங்களின் வேத நூலையும் தூதர் நாயகம் (ஸல்) அவர்களின் வழியையும் பின்பற்றிச் சென்றால் நாங்களும் அவரின் பின்னே செல்வோம். அவர் தம் வழியை மாற்றிக் கொள்வாராகில் நாங்கள் அவரை விலக்கி விடுவோம்; அவர் களவாடினாராகில் அவரின் கரத்தையும் நாங்கள் வெட்டி விடுவோம்; விபச்சாரம் செய்தாராகில் அவரையும் நாங்கள் சவுக்காலடிப்போம்; காரணமின்றி பிறருக்கு அவர் தீங்கிழைப்பாராயின் அதன் பிரதிபலனை அவரும் ஏற்கவே நேரிடும். அவர் எங்களை விட்டும் மறைந்திருப்பதில்லை; எங்களை விட தம்மை உயர்வாய் எண்ணுவதுமில்லை. பங்கீட்டிலும் அவர் எங்களை விட அதிகமாகப் பெறுவதில்லை. உங்களின் நபியை நாங்கள் எந்தவித சந்தேகமுமின்றி ஏற்கவே செய்கிறோம். ஆனால் உங்களைப் போல் நாங்கள் அவரை ஆண்டவனின் மகன் என கூறமாட்டோம். அவர் அல்லாஹ்வின் தூதர்தாம். உங்களின் தகுதியற்ற பழி

களைவிட்டும் இறைவன் பரிசுத்தமானவன். அவனை எவரும் பெற்றெடுக்கவுமில்லை. அவனும் எவரையும் பெற்றெடுக்கவு மில்லை—என்ற ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களின் விளக் கங்களைக் கேட்டு முடித்தபின் ரோமர்கள் பேரம் பேச லாயினர். முடிவாக அவர்களோடு முஸ்லிம்கள் போரிட வே நேர்ந்தது. அப்போரில் ஹழ்லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்கள் முஸ்லிம்களின் வலதுசாரிப்படைத் தலைவராக இருந்து பெரும் வெற்றி ஈட்டினார்கள்.

யர்மூக் போர்க்களத்திலும் வலதுசாரிப் படையின் ஒரு பகுதிக்குப் பொறுப்பேற்றிருந்த ஹழ்லரத் மஆத் (ரலி) எதிரிகளின் தாக்குதல் தாளாது முஸ்லிம் படையினர் திண றிப் பின்னடைந்த ஒரு சமயம் தம் புரவி விட்டிறங்கி நான் தரையில் நின்று போராட விரும்புகிறேன், என் புரவி யின் கடனைத் தீர்ப்பவர் யார்? என அறைகூவினார்கள். 'நான்' என முந்தினார் அவர்களின் திருமகனார் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி). புரவிப் போரில் அற்புதப் பயிற்சி பெற்றிருந்த அவர் புரவி மீதேறிக் கொள்ள, தரையிலி றங்கிய ஹழ்லரத் மஆத் (ரலி) வீரப் போராற்றி, தந்தை யும் மகனுமாகப் படை நடத்தி ரோமர்களின் படையைப் பின்னடையச் செய்தார்கள்.

இத்தகைய அடல்சேர் மறவரை—முப்பத்தாறு வயது களே அடையப் பெற்ற இறை ஞான மேதையை—அம்வா ஸில் பரவிய காலரா கொள்ளை நோய் தன் நெஞ்சத்தில் கொண்டணைத்துச் சென்று விட்டது. அக்காலை ஸிரியா வின் தள நாயகராயிருந்த ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்களையும் காலரா நோய் கொள்ளை கொண்டது. மரணப் படுக்கையில் ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) தம் அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாயிருந்த ஹழ்லரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களிடமே தம் பொறுப்பு கள் அனைத்தையும் ஒப்புவித்துப் பிரிந்தார்கள். தொடர்ந்து

தள நாயகராகப் பொறுப்பேற்ற ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களும் நீண்ட நாட்கள் வாழவில்லை.

''ஸிரியாவில் முஸ்லிம்கள் குடியேறுவர். அவர்களின் வெற்றிக் கொடி அங்கு பறக்கும். அப்போது ஒரு நோய் பரவும். அது சிறு புண்களாக உடலைப் பற்றிப் பரவும். அதில் மரிப்பவன் தியாகப் பேற்றினைப் பெறுவான். அவனுடைய பாவங்கள் கழுவப்பட்டு அவனின் பதிவேடு பரிசுத்தமடையும்'' என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் முன்னறிவிக்கக் கேட்டிருந்த அவர்கள் ஒரு நாள் அதையே வீரர்களுக்குமுன் தாங்கள் ஆற்றிய உரையில் நினைவூட்டினார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களின் வாக்கினை எந்நாளும் உண்மைப் படுத்தி நின்ற அத்தோழர், தங்கள் வீரர்களுக்குமுன் அவ்வுரையின் முடிவில், ''என் இறைவா! உன் தூதர் பெருமான் (ஸல்) அவர்களிடத்தில் நான் கேட்ட இந்தத் திருவாக்கு உண்மையெனில் அந்த உன் அருளை என் வீட்டாரின் புறமும் அனுப்பு; அதில் பெரும் பங்கேற்கும் வாய்ப்பை எங்களுக்கு அருள் புரி'' என இறைஞ்சியவர்களாக தங்களின் குடிலுக்குத் திரும்பினார்கள். அங்கே அவர்களின் திருமகனார் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) நோயுற்றுப் படுத்திருந்தார். அவரின் சோர்வை விலக்க எண்ணி ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள்,

اَلْحَقُّ مِنْ رَّبِّكَ فَلَا تَكُوْنَنَّ مِنَ الْمُمْتَرِيْنَ ○

''இந்த உண்மை உம் இறைவனிடத்திலிருந்தே (வந்துள்ளது.) ஆதலால் சந்தேகிப்போரில் ஒருவராக நீர் ஆகிவிட வேண்டாம்'' என்ற (2 : 147) திருவசனத்தை ஓதினார்கள். ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களும் தந்தையைப் போன்றே நபித்துவத் தோழமையை ஏற்றவரல்லவா? தம் தந்தையாருக்கு விடையளிக்குமுகமாக,

سَتَجِدُنِيٓ إِن شَآءَ ٱللَّهُ مِنَ ٱلصَّٰبِرِينَ ○

''அல்லாஹ் நாடினால் [அதனைச் சகித்துக் கொண்டு] உறுதியாயிருப்பவனாகவே தாங்கள் என்னைக் காண்பீர்கள்'' என (37 : 103) திருவசனத் தொடரை ஓதிக் காட்டினார்கள்.

ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களை மரணம் தழுவியது. ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களின் இரு மனைவியரும் கூட மரணித்து விட்டிருந்தனர். ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்களே குடும்பத்தில் எஞ்சியிருந்நார்கள். அவர்களுக்கும் அழைப்பு வந்துற்றது. ஒருநாள் சுட்டு விரலின் முனையில் தோன்றிய சிறு புண்ணைக் கண்டு ஹழ்லரத் மஆத் (ரலி) அவர்கள் புன்முறுவல் பூத்தார்கள். பூமியின் செல்வங்களெல்லாம் அச்சமயம் அவர்களுக்கு வெகு அற்பமாய்த் தோன்றின. நோயின் கடுமை அவர்களை வருத்தியது. எனினும் அவர்கள் கவலையுறவில்லை. அடிக்கடி மயக்கமுறுவதும் தெளிவதுமாகவே இருந்தார்கள். தெளிவடையும் சமயங்களிலெல்லாம் இறைவனின் அருள் நேசத்தில் தம்மை நெருங்கச் செய்யுமாறு பிரார்த்திப்பவர்களாகவே இருந்தார்கள்.

''ஒரு சமயம் மயக்கம் தெளிந்த அவர்கள் அருகே அழுது கொண்டு அமர்ந்திருந்த எங்களின் அழுகைக்குக் காரணம் வினவினர். 'தங்களின் பிரிவோடு மறைந்து விடக்கூடிய ஞானத்தை எண்ணி நாங்கள் அழுகின்றோம்' என்றோம். 'இல்லை. ஒருக்காலும் இல்லை. ஞானம் ஒரு போதும் அழியாது. மறுமைநாள் வரை நிலைத்திருக்கக் கூடிய அதனை தேடுபவர் நிச்சயம் பெற்றுக் கொள்வார். எனக்குப் பின் நீங்கள் ஞானத்தை ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத், அபுத்தர்தா, ஸல்மான் ஃபார்ஸீ, அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) ஆகிய நால்வரிடம் தேடுங்

கள்; பெறுவீர்கள்'' என்று அந்த எங்களின் ஞானாசிரியர் எங்களுக்குக் கூறினார்கள் — என அவர்களின் பிரதம சீடர் களான அம்ரு இப்னு மைமூன், யஜீத் இப்னு உமைரா (ரஹ்) ஆகிய இருவரும் அறிவித்துள்ளனர்.

'மரணத்தின் மடியில்' கிடந்த அம் மாநபியின் தோழர், ''இறைவா! உனக்கு எவ்வாறு அஞ்சி வாழ்ந்தேன் என்பதை நீ நன்கு அறிவாய். இன்று நான் உன் அருளில் பெரும் நம்பிக்கை கொண்டுள்ளேன். மரங்களை நட்டு, கால்வாய் களை வெட்டி, தோட்டந் துரவுகளை உண்டு பண்ணு வதற்காக நான் இந்த உலகையும் நீண்ட ஆயுளையும் விரும்பியிருக்கவில்லை. ஆடம்பரங்களையும், சுக போகங் களையும் ஒழித்து உன் கருணையையும் அருளையும் அடை யப் பெறுவதற்காகவே நான் உலகில் வாழ்ந்தேன். மரணத் தைக் கண்டு நான் இன்று அஞ்சி அழவில்லை. உன் தண்ட னைகளையும் தீர்ப்பையும் எண்ணியே கலங்குகிறேன்'' என் றுரைத்தார்கள்.

மரணமடைந்ததற்கு முந்திய இரவெல்லாம் பொழுது புலர்ந்து விட்டதா என அடிக்கடி வினவிய வண்ணமே இருந்தவர் ஹழ்ரத் மஆத் (ரலி). 'இன்னும் இல்லை' 'இன்னும் இல்லை' என அருகிலிருந்தோர் கூறிக் கொண் டிருந்தனர். கடைசியாக பொழுது புலர்ந்து விட்டது என அவர்களிடத்தில் கூறப்பட்டது. அவர்களின் முகம் மலர்ந் தது. ''மரணமே விரைந்து வா. பிரிந்த தன் நேசரின் தரி சனங் காண பசியுடன் காத்திருக்கும் தோழனுக்கு உன் வரவு நல்வரவாகட்டும்'' என்றுரைத்தவர்களாக தங்களின் இமைகளை மூடிக் கொண்டனர். அத்துடன் அவர்களின் ஆவி பிரிந்தது.

பைத்துல் முகத்தலுக்கும் தமாஸ்கஸுக்குமிடையே நஹ்ரவானுக்கருகில் உள்ள பைஸான் என்ற தலத்திலேயே அவர்களின் ஆவி பிரிந்தது. அண்ணல் ஈஸா (அலை)

அவர்கள் விண்ணகம் ஏகிய புண்ணியதலம் அருகாமையி லேயே இருந்தது. அதுலே அவர்களின் அடக்கத்துக்குப் பொருத்தமான தலமென முடிவு செய்யப்பட்டு அவர்களின் புனித உடல் அங்கு அடக்கம் செய்யப்பட்டது.

ஒரு ஞான பிம்பம் அன்று சாய்ந்து விட்டது! ஹழ்ல ரத் மஆத் இப்னு ஜபல் [ரலி] அவர்கள் அடைந்திருந்த ஆன்மீகப் படித்தரத்தை விளக்க அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் வாழ்நாளில் நடைபெற்ற ஒரு சம்ப வத்தை ஹழ்லரத் அனஸ் இப்னு மாலிக் [ரலி] அவர்கள் குறிப்பிடுகிறார்கள்:

ஒரு நாள் அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் முன் வந்தமர்ந்த அத்தோழரிடம், ''மஆத் இன்று காலை எவ் விதம் கழிந்தது உமக்கு'' என வினவினார்கள்.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! காலை எனக்கு ஈமா னுடனேயே கழிந்தது'' என்றனர் ஹழ்லரத் மஆத் (ரலி).

''ஒவ்வொரு சொல்லுக்கும் ஓர் அடிப்படை உண்டு. உம்முடைய அக்கூற்றுக்கு அடிப்படை என்ன?'' என அண் ணலார் (ஸல்) அவர்கள் வினவினார்கள்.

''பெருமானே! இன்று மாலையை நான் சந்திக்கப் போவதே இல்லை என்ற எண்ணமின்றி எந்த காலையும் எனக்குக் கழிந்ததேயில்லை. மாலையாகி விடுமானால் மறு நாள் காலையை நான் சந்திக்கப் போவதே இல்லை என்ற எண்ணத்துடனல்லாமல் எந்த மாலையும் எனக்குக் கழிந்த தேயில்லை. ஒவ்வோர் அடியையும் நான் மறு அடியெடுத்து வைக்கமாட்டேன் என்ற எண்ணத்தோடேயே எடுத்து வைக் கிறேன். விசாரணைக்காக தாங்கள் அழைக்கப்படுவதை எதிர் நோக்கி முழந்தாளிட்டவர்களாக எல்லா சமுதாயத் தாரையும் நான் காண்கிறேன். அவர்களோடு அவர்களை வழி நடத்திய நபிமார்களும் உள்ளனர். சிலைகளை வைத்து

வணங்கி வந்தவர்களோடு அச்சிலைகளும் உள்ளன. அல்லாஹ்வின் தூதரவர்களே! நான் சுவனவாதிகளுக்குச் சித்தப் படுத்தப்பட்டுள்ள நன்மைகளையும் காண்கிறேன்'' என்றனர் ஹழ்ரத் மஆத் (ரலி).

''ஆன்மீகத்தின் மிக உயர்ந்த — மஅரிஃபாவென்னும்— படித்தரத்தை நீர் எத்தி விட்டீர் மஆத்! அதனை நிலைப் படுத்திக் கொள்ளும்'' என அண்ணலார் (ஸல்) அருளினார்கள்.

ஒரு சமயம் தம் மகனார் தொழுது கொண்டிருக்கக் கண்ட ஹழ்ரத் மஆத் (ரலி) அவர்கள் தொழுகை முடிந்ததும் அவரை அழைத்து, ''மகனே! இறைவனின் முன்னே தொழ நிற்கும் நீ இத்துடன் இவ்வுலக வாழ்விலிருந்து விடை பெற்றுக் கொள்வதாக முடிவு செய்துக் கொள். மறுபடியும் இங்கே நீ வரப் போவதேயில்லை என்ற உறுதியுடன் நில்'' என உபதேசித்தார்கள்.

மற்றொரு சமயம், ''மகனே! இரண்டு நற்செயல்களுக்கிடையே மனிதன் மரணிக்கின்றான். ஒன்று அவன் முன்னதாகவே செய்து விட்டது. மற்றொன்று அவன் (ஸதகத்துல் ஜாரியாவாக) தனக்காகப் பிற்படுத்திக் கொண்டது'' என உபதேசித்தார்கள்.

''சமுதாயத்தின் மூளை'' என ஹழ்ரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களை ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் வர்ணித்தார்கள்.

கலீஃபா உமர் (ரலி) அவர்கள் தம் அந்திம காலத்தில் ''இன்று மஆத் இப்னு ஜபல் (ரலி) உயிருடன் இருந்திருப்பின் அவரிடமே கிலாஃபத்தை ஒப்படைத்திருப்பேனே'' என கவலையுற்றார்கள்.

மரணத்தின் படிபேறிவிட்ட இறுதித் தருணத்திலும் தம் கடனைத் தீர்க்க மறக்கவில்லை மாநபியின் அத்தோழர். தங்களின் அருகேயிருந்தவர்களிடம் ''திரையை விலக்குங்கள். என் ஏந்தலர் (ஸல்) அவர்கள் சொல்லக் கேட்டு இதுவரை மனதில் மறைத்திருந்த ஒரு செய்தியை மக்களுக்குச் சொல்லி விடுகிறேன்'' என கூறிய அவர்கள் ஒரு தலையணையில் சாய்ந்தமர்ந்துக் கொண்டு, ''ஒரு சமயம் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைத் தேடிச் சென்ற நான், ஓரிடத்தில் அவர்கள் தொழுது கொண்டிருக்கக் கண்டு நானும் அவர்களின் பின் நின்று தொழுதேன். நீண்ட நேரம் தொழுதிறைஞ்சிய பெருமானார் (ஸல்) அவர்கள் என் புறம் திரும்பி, ''மஆதே! மூன்று விருப்பங்களைக் கொண்டு நான் என் இறைவனை வேண்டினேன். அவற்றுள் இரண்டினை இறைவன் ஏற்றுக் கொண்டான்; ஒன்று மறுக்கப் பட்டுவிட்டது. ஒட்டு மொத்தமான பேரழிவிலிருந்து என் சமுதாயத்தவரைக் காத்தருளுமாறு வேண்டினேன். என் இறைவன் ஏற்றான். அடுத்து பிற சமுதாயத்தார் என் சமுதாயத்தவரை மிகைத்து விடாமலிருக்க வேண்டினேன். அதுவும் ஏற்கப்பட்டது. மூன்றாவதாக என் சமுதாயத்தினருள் பிளவுகள் ஏற்படாமல் காத்தருள் புரிய வேண்டினேன். அது மறுக்கப்பட்டு விட்டது'' என்று கூறினார்கள் — என அறிவித்தார்கள்.



# 7. ஹழ்ரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி)

மதீனாத் திருநகருக்கு வருகை தந்த மாநபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு நல்வரவு கூற மக்கள் ஒன்று திரண்டிருந்தனர். அவர்களிடையே எழுந்து நின்று அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கும் அவர்களின் தோழருக்கும் முகமன் கூறி உரையாற்றினார் ஒருவர். கணீரென ஒலித்த அவரின் குரல் தன் வெண்கலத் தொனியில் வினாவொன்றை விடுத்தது, ''அல்லாஹ்வின் தூதரவர்களே! தங்களை நாங்கள் எங்களின் மனைவி மக்களையும் உயிர்களையும் எவ்வாறு காத்து நிற்கின்றோமோ அவ்வாறே காத்து நிற்போம். அதற்குப் பகரமாக எங்களுக்குக் கிடைக்கக் கூடிய சன்மானம் என்ன?'' என்று.

பெருமானார் (ஸல்) அவர்கள் 'சுவனம்' என விடையளித்தபோது அன்ஸார்களிடையேயிருந்து மனத்திருப்தியும் மகிழ்ச்சியும் நிறைந்த ஆரவாரம் எதிரொலித்தது.

அண்ணலார் (ஸல்) அவர்களால் அக்கபாவில் முன்னரே அளிக்கப்பட்டிருந்த அந்த நன்மாராயத்தை மீண்டும் நகர மக்களிடையே பகிரங்கப் படுத்திக் கொண்ட அந்த நாவலர் ஹழ்ரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்களாவர். 'கஸ்ரஜ்'களைச் சார்ந்த அன்னவர் அன்ஸார்களில் சிறந்த அறிவாற்றலும் பிறரை மிகைக்கும் சொல்லாற்றலும் பெற்று விளங்கினர். குரல் வளமும் சோபிதம் சேர்த்த அவரின் இதயத்தை ஆரம்பத்திலேயே ஈர்த்து விட்டன மதீனாவின் வீதிகளில் ஹழ்ரத் முஸ்அப் (ரலி) அவர்களின் இனிய குரலால் ஓதப்பட்ட இறைமறை வசனங்கள். இஸ்லாத்தை ஏற்ற ஹழ்ரத் ஃஸாபித் (ரலி) அவர்கள் அக்கபாவின் இரண்டாம் உடன்பாட்டில் அண்ணல் எம்பெரு

மான் (ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். ஹிஜ்ரத்துக்குப் பின் ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்களுக்கு அமையப் பெற்றிருந்த ஆற்றல்களைக் கவனித்து, நபிபெரு மான் (ஸல்) அவர்கள் அவரைத் தம்மின் 'விரிவுரையாளர்' என்ற தகுதியளித்துச் சிறப்பித்தார்கள். நபிபெருமான் [ஸல்] அவர்கள் கூறுபவற்றை ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் [ரலி] திரளான மக்கள் முன் தங்களின் பெருங்குர லில் மீட்டுக் கூறுவார்கள். மந்திரத்தில் கட்டுண்டவர் களைப் போல் மக்கள் அமைதியுடன் அச்சொற்பெருக்கைச் செவியுறுவார்கள்.

மதீனாவுக்கு வரும் வெளிப் பயணிகள் சொல்லாற்றல் கொண்டு தங்களின் பெருமைகளை விளக்கும்போது அவர் களுக்கு விடை கூற பெருமானார் [ஸல்] அவர்கள் ஹழ்ல ரத் ஃஸாபித் இப்னு கைஸ் [ரலி] அவர்களையே பணிப் பார்கள். மாநபியின் அத்தோழர் தம் சொல்லாற்றலால் எவரையும் மிகைத்தே நிற்பார்கள்.

**ஹி**ஜ்ரி 9-ம் ஆண்டில் தமீம் கோத்திரத்தைச் சார்ந்த எழுபது அல்லது எண்பது பேர்களைக் கொண்ட ஒரு தூதுக்குழு மதீனாவுக்கு வந்தது. நாவன்மையும் பாவன் மையும் மிகுந்தவர்கள் அதில் கலந்திருந்தனர். அக்காலத்தில் பாலைவன அரபிகள் ஒருவரையொருவர் தங்களின் நாவளத் தாலும் பாவளத்தாலும் மிகைத்து தங்களின் பெருமையை நிலை நாட்டிக் கொள்பவர்களாயிருந்தனர். அவ்வாறான எண்ணங் கொண்டே தருக்குடன்ஆரவாரித்து மதீனாவினுள் நுழைந்த பனூ தமீம்கள் பெருமானார் (ஸல்) அவர்களின் திருவாசலுக்கு முன் நின்று ''ஓ முஹம்மதே! வெளியில் வாரும்'' என கூவினர். அகம்பாவமான அச்செயல் அண் ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு வெறுப்பையே அளித்த போதிலும் அவர்கள் வெளியில் வந்து பொறுமை யுடன் அத்தூதுக் குழுவினருடன் உரையாடலானார்கள்.

பெருமானார் [ஸல்] அவர்களோடு தர்க்கவாதம் புரிய நாடி தாங்கள் வந்திருப்பதாக தூதுக் குழுவின் தலைவர் அக்ரஅ இப்னு ஜாலிஸ் என்பவர் கூறினார். ''தர்க்க வாதம் புரி வதற்கோ கவிதை பாடி மிகைப்பதற்கோ கட்டளையிடப் பட்டில்லை நான். எனினும் உங்களின் நாட்டம் அதுவே யெனில் எங்களுக்கும் தயக்கமில்லை'' என அண்ணலார் [ஸல்] அவர்கள் பதில் கூறினார்கள்.

தர்க்கம் துவங்கியது. அவர்களில் சொல்லாற்றலில் வல்லவரான அத்தாரூ இப்னு ஹாஜிப் என்பவர் எழுந்தார். மேற்றிசையில் வாழும் தங்களின் பெருமையை, சமூகங்களி டையே தாங்கள் பெற்றிருந்த கண்ணியத்தை, தங்களின் பொருளாதாரவளத்தை, தாராளத்தன்மையைப் பற்றியெல் லாம் சாங்கோபாங்கமாகப் பறை சாற்றி, ''உங்களில் எமக் கீடானவர் எவர்?'' என வினா வெழுப்பிய அவர் அமர்ந்த போது நபிபெருமான் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்களை அவருக்கு விடை தரப் பணித்தார்கள்.

கட்டளையேற்று எழுந்த ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்கள் தங்களின் உரையின் துவக்கமாக, விண்ணையும் மண்ணையும் படைத்து தன் ஆதிக்கத்தை நிலைநாட்டியுள்ள எல்லாம் வல்ல அல்லாஹ்வின் புகழை விவரித்தார்கள்; அவனின் ஆற்றலுக்கோர் அத்தாட்சியாக அனுப்பப்பட்டுள்ள தூதர் நாயகம் [ஸல்] அவர்களின் பாரம் பரியச் சிறப்பையும் குணநலப் பெருமையையும் அவர்களின் மூலமாக அருளப்பட்டுள்ள வான்மறையின் மேன்மையையும் எடுத்துரைத்தார்கள். ''படைப்பினங்கள் அனைத்திலும் அவர்களே சங்கை பெற்றவர்கள். பாருலகம் முழுமைக்கும் வழி காட்டும் ஒளிச்சுடர் அவர்கள். அவர்களின் கரம் பற்ற முந்திய முஹாஜிர்கள் மேன்மையில் முதலிடம் பெற்றவர் கள். அவர்களையடுத்து அரபுகளனைவரினும் நாங்களே

முதலாவதாக அப்பெருமானாரின் அழைப்பை ஏற்றோம். அன்ஸார்களாகிய எங்களுக்குரிய ஒரே பெருமை நாங்கள் அல்லாஹ்வுக்கும் அவனின் தூதருக்கும் உதவியாளர்களாக— அமைச்சர்களாக இருப்பதே. வணக்கத்திற்குரியவனாக அல் லாஹ்வையும் அவனின் தூதராக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களையும் ஏற்க எவர் மறுப்பாரோ அவரோடு இறுதி வரைப் போரிடுவதே எங்கள் கடன். கடனை நிறை வேற்றுவதில் எந்தச் சிரமத்தையும் நாங்கள் பொருட்படுத்த மாட்டோம்'' என ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் [ரலி] அவர்கள் விடையளித்து முடித்தனர்.

அடுத்து அத்தூதுக் குழுவினரிடையே ஜ்ஸபர்கான் இப்னு பத்ர் எனப்பட்டவர் எழுந்து தம் கவிதைத் திற னைப் பறை சாற்றினார். அண்ணலார் (ஸல்) அவர்களின் கட்டளையேற்று ஹழ்லரத் ஹஸ்ஸான் இப்னு ஃஸாபித் (ரலி) அவர்கள் எழுந்து தம் புலமையினாலேயே அவருக்குப் பதிலளித்தார்கள்.

தூதுக் குழுவினரின் தலைமையை ஏற்று வந்த அக்ரஅ இப்னு ஜாலிஸ் எனப்பட்டவர் விவாதங்களை கூர்மையுடன் கவனித்து வந்தார். அவரும் நாவன்மையில் சிறந்தவரா கவே இருந்தார். ஹழ்வரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்களின் வாதத் தோரணை வெகுவாகக் கவர்ந்தது அவரை. ''அவர்களின் நாவலரே நம்முடைய நாவலரினும் மிகைத்து நிற்கிறார். பாவன்மையிலும் அவர்களே நம்மி னும் மிகைத்து நிற்கின்றனர்'' என அவர் தீர்ப்பு கூற அவருடன் வந்த அனைவரும் அதனை ஏற்றனர். அக்கணமே அவர்களனைவரும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டனர்.

சில நாட்களுக்குப் பின் தங்களின் உறைவிடத்துக்குத் திரும்ப நாடிய அத்தூதுக் குழுவினர் விடைபெற்றுக் கொள்ள வந்தனர்; தங்களில் ஒருவரைத் தங்களுக்குத் தலைவராக நியமித்துவிட பெருமானார் (ஸல்) அவர்களை

வினவினர். அச்சமயம் அங்கிருந்த ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் அத்தூதுக் குழுவினரிலிருந்த கஅகாஅ இப்னு மஅபத் எனப்பட்டவரைத் தலைவராக்கிவிடக் கூறினார்கள். உடனே ஹழ்ரத் உமர் [ரலி] அவர்கள், அக்ரஅ இப்னு ஜாலிஸ் எனப்பட்டவரையே தலைவராக நியமித்திடக் கூறினார்கள். அதனைக் கேட்டு ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள், ''என் கூற்றுக்கு மாற்று கூறவேண்டுமென்பதே உம் நோக்கமாகத் தெரிகிறது'' என்றார்கள். ''அவ்வாறல்ல அம்மக்களுக்கு நன்மையைச் செய்ய வேண்டுமென்பதே என் நோக்கம்'' என ஹழ்ரத் உமர் (ரலி) அவர்கள் மறுத்துரைத்தார்கள். இவ்வாறாக இவ்விருவரின் தர்க்கம் வளர்ந்தது; குரலும் உயர்ந்தது; அவ்வாறான செயல் இறைவனுக்குப் பொருத்தப்படவில்லை. மறைகணமே பெருமானார் (ஸல்) அவர்களுக்கு வேத வெளிப்பாடுகள் தோன்றலாயின.

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا تُقَدِّمُوا بَيْنَ يَدَيِ اللَّهِ وَرَسُولِهِ وَاتَّقُوا اللَّهَ إِنَّ اللَّهَ سَمِيعٌ عَلِيمٌ

''விசுவாசிகளே! அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் முன்பாக(ப் பேசுவதற்கு) நீங்கள் முந்திக் கொள்ளாதீர்கள். அல்லாஹ்வுக்குப் பயந்து நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் (யாவையும்) செவியுறுவோனும் நன்கறிந்தோனுமாயிருக்கிறான்.''

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا تَرْفَعُوا أَصْوَاتَكُمْ فَوْقَ صَوْتِ النَّبِيِّ وَلَا تَجْهَرُوا لَهُ بِالْقَوْلِ كَجَهْرِ بَعْضِكُمْ لِبَعْضٍ أَنْ تَحْبَطَ أَعْمَالُكُمْ وَأَنْتُمْ لَا تَشْعُرُونَ

''விசுவாசிகளே! (நபி பேசும் பொழுது) நபியுடைய சப்தத்துக்கு மேல் உங்களுடைய சப்தத்தை

உயர்த்தாதீர்கள். அன்றி உங்களுக்குள் ஒருவர் மற்றொருவருடன் உரக்கப் பேசுவதைப்போல் அவரிடம் (சப்தத்தை உயர்த்தி) உரக்கப் பேசாதீர்கள். ஏனெனில் [அதனால்] உங்களுடைய (நன்மையான) செயல்களெல்லாம் பயனற்று விடக்கூடும். [அதனை] நீங்கள் உணர்ந்து கொள்ளவும் முடியாது.—(49 : 1,2) என இறங்கிய இவ்விரு வசனங்களும் நாயகத் தோழர்களில் முதன்மையானவர்களான ஹழ்லரத் அபூபக்கர், உமர் (ரலி) ஆகிய இருவரின் அன்றைய நடவடிக்கையைக் குறித்தேயிறங்கினவாயினும் அச்சமயம் அங்கேயே இருந்த ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் [ரலி] அவர்களின் நெஞ்சத்தையே திகிலடையச் செய்தது இரண்டாம் வசனம். ஏனெனில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் தொனியை விட உயர்ந்த தொனியிலேயே ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்கள் எந்நாளும் பேசி வந்தனர்.

இயல்பிலேயே தமக்கமையப் பெற்றிருந்த முரட்டுத் தொனியிலேயே காலமெல்லாம் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் முன் குரலுயர்த்திப் பேசி நன்மைகளை அழியச் செய்து விட்ட தாம் நரகவாதியே என புலம்பிக் கண்ணீர் வடித்த வண்ணம் தம் வீட்டினுள்ளேயே முடங்கிக் கிடந்தனர் ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி); எவரோடும் பேசுவதுமில்லை; உண்ணுவதுமில்லை; உறக்கங் கொள்வதுமில்லை. பல நாட்கள் இவ்வாறாகக் கழிந்தன.

ஒரு நாள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் தம் முன்னே பல நாட்களாக அத்தோழர் காணப்படாதது பற்றி நினைவு கூர்ந்தார்கள். அவரின் நிலையறிந்து வந்து ஒரு தோழர் கூறிய செய்தி கேட்டு பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் ஃஸாபித் (ரலி) அவர்களை அழைத்து வரச்

செய்தார்கள். அண்ணலவர்களின் திருமுன் வந்ததுமே ''பெருமானே! என் நன்மைகள் அழிந்து போயின. நான் நரகவாதியாகி விட்டேன்'' என கதறியழுதனர் ஹழ்ரத் ஃஸாபித் (ரலி). அத்தோழரை அமைதிப்படுத்தி அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள், ''உம் நாவண்ணம் கொண்டு இறைவனின் புகழொலித்துக் கொண்டிருப்பதில் நீர் சோபிதங் காணவில்லையா?'' என வினவினார்கள்.

''போரில் கொல்லப்பட்டு தியாகப்பேற்றினை அடைய உமக்கு ஆவல் இல்லையா? மறுமையில் சுவனப்பெருவாழ்வை அடைய நீர் விருப்பம் கொள்ளவில்லையா?'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அடுத்தடுத்துக் கேட்க, ஹழ்ரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்களின் மனத்துயரம் அகன்று வதனம் மலர்ந்தது. தம் தோழரைப் பரிவோடணைத்து பெருமானார் (ஸல்) அவர்கள்,

تَعِيشُ حَمِيدًا وَتُقْتَلُ شَهِيدًا وَتَدْخُلُ الْجَنَّةَ سَعِيدًا

''புகழுடன் நீர் வாழப் பெறுவீர்; போரிடை கொல்லப்பட்டு தியாக மரணம் பெறுவீர்; நலமுடன் சுவனம் புகுவீர்'' என நன்மாராயம் மொழிந்தார்கள். அதனைக் கேட்டு ஆறுதலுற்றனர் ஹழ்ரத் ஃஸாபித் (ரலி). அதே சமயம், இறைவனின் புறமிருந்தும் அவர்களுக்குத் தேறுதலாகச் செய்தி வந்தது,

إِنَّ الَّذِينَ يَغُضُّونَ أَصْوَاتَهُمْ عِنْدَ رَسُولِ اللَّهِ أُولَٰئِكَ الَّذِينَ
امْتَحَنَ اللَّهُ قُلُوبَهُمْ لِلتَّقْوَىٰ لَهُمْ مَغْفِرَةٌ وَأَجْرٌ عَظِيمٌ ۝

''நிச்சயமாக எவர்கள் அல்லாஹ்வுடைய தூதரின் முன்பாக [மரியாதைக்காக] தங்களுடைய குரலைத் தாழ்த்

திக் கொள்கிறார்களோ அத்தகையோர்களுடைய இரு தயங்களைப் பரிசுத்தத் தன்மைக்காக அல்லாஹ் சோதனை செய்தான். அவர்களுக்கு மன்னிப்பும் உண்டு. மகத்தான கூலியும் உண்டு'' என்ற (49 : 03) வேதச் செய்தியால் மகிழ்ந்த ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்களின் செவிகளில் அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களின் நன்மாராயம் ரீங்காரமிட்ட வண்ணமே இருந்தது.

பத்ருப் போர் தவிர மற்றெல்லாப் போர்களிலும் ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்கள் பங்கேற்றேயிருந்தார்கள். ஆயினும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் திருவாயால் செவியேற்ற அந்த நன்மாராயத்துக்குப்பின் அவர்களின் தாகம் போர்க்களைங்களைத் தேடலாயிற்று. எனினும் அந்தத் தியாக வாய்ப்பை அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களுக்குப் பின் கிலாஃபத்தை ஏற்ற ஹழ்ரத் அபூபக்கர் [ரலி] அவர்களின் காலத்தில் நடைபெற்ற யமாமா போரிலேயே பெற்றார்கள்.

ஹழ்லரத் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களின் தலைமையில் யமாமாவில் போர் நடத்திய முஸ்லிம்கள், பொய்யன் முஸைலமாவின் பெரும் படையின் பயங்கரத் தாக்குதலால் ஒரு சமயம் பின்னடைய நேர்ந்தது. படைத் தலைவர் ஹழ்லரத் காலித் [ரலி] அவர்களின் கூடாரத்தையும் எதிரிகள் நெருங்கி விட்டனர். தடுமாறிப் போன முஸ்லிம்களில் நகரவாசிகள் காட்டரபிகளின் கோழைத்தனத்தைச் சாடினர். காட்டரபிகளோ நகரவாசிகள் போர் முறையை அறியாதவர்கள் என தூற்றலாயினர். ஒருவரையொருவர் குற்றஞ் சாட்டிக் கொண்டிருந்த நிலை கண்டு ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்கள் வேதனையடைந்தனர். அச்சமயம் அன்ஸார்களின் தலைமை ஏற்றிருந்த அவர்கள் விருட்டென தங்களின் கூடாரத்துள் சென்றனர்; வெள்ளாடை எடுத்துடுத்தி மணம் பூசி வெளி வந்தனர். அணி

யினரின் பார்வை அவர்களின் புறம் திரும்பியது. ஹழ்ரத் ஃஸாபித் [ரலி] அவர்களின் குரல் கணீரென ஒலிக்கலாயிற்று: ''முஸ்லிம்களே!ஒருவரையொருவர் நீங்களே தூற்றிக் கொள்ளாதீர். எதிரிகள் உங்கள் மீது அடர்ந்தேறத் துணிவதும் அவர்களின் முன்னே நீங்களே உங்களை ஈனப்படுத்திக் கொள்வதுமான இது எத்துணைப் பெருங் கொடுமை! அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் காலத்தில் இவ்வாறான முறையை நாங்கள் மேற்கொண்டதில்லை'' என வீர உரையாற்றிய அவர்கள் விண்ணின்பால் தங்கள் பார்வையை உயர்த்தினார்கள், ''இறைவா! இணை வைக்கும் உன் வைரிகளை நான் வெறுக்கின்றேன். தங்களுக்குள்ளேயே சாடிக் கொள்ளும் முஸ்லிம்களின் இந்தச் செயல் முறையில் நான் சம்பந்தப்பட்டவனல்லன்'' என்றவர்களாக வாளேந்தி வைரிகளை நோக்கிப் பாய்ந்தனர்.

அவர்களின் அந்தச் செயல் மற்ற முஸ்லிம்களையும் உணர்வு பெறச் செய்தது. தங்கள் பேதங்களை மறந்து புத்துணர்வுடன் அவர்களும் பின் தொடர்ந்துப் பாய்ந்தனர். பயங்கரத் தாக்குதலுக்குப்பின் பொய்யன் முஸைலமா கொல்லப்பட்டு அவன் படையும் சிதறடிக்கப் பட்டது. முஸ்லிம்கள் வாகை மாலை சூடினராயினும் ஹழ்ரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்களின் பொன்னுடல் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் முன்னறிவிப் பின்படி தியாகத் திருமணம் புரிந்து குருதிக் குளத்தில் நீராடிக் கொண்டிருந்தது.

மரணத்துக்குப் பின்னரும் அவர்களின் புகழ் மணக்கும் ஒரு செய்தியை மாநபித் தோழர் ஹழ்ரத் அனஸ் இப்னு மாலிக் [ரலி] அவர்கள் அறிவிக்கிறார்கள்:

பொய்யன் முஸைலமாவைக் கொன்று முஸ்லிம்கள் வெற்றியை ஈட்டினராயினும் அவ்வெற்றிக்காக தங்களில்

அனேகரை அவர்கள் பலி தரவும் நேர்ந்தது. மிகுதமான பேர் படுகாயமுமுற்றனர். அவர்கள் நலம் பெறுவதற்காகவே ஒருமாத காலம் வரை போர் முடிந்த பின்னும் அங்கேயே தங்கியிருக்க நேர்ந்தது. அவ்வாறு தங்கியிருந்த சமயத்தில் ஓர் இரவு நபிமணித் தோழர் ஒருவரின் கனவில் ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் [ரலி] அவர்கள் தோன்றினர்; தம் உடலருகே வந்த ஒரு வீரர் தாம் அணிந்திருந்த விலை யுயர்ந்த கவசத்தைக் கழற்றிச் சென்று விட்டதாகவும், அதனைக் கொண்டுபோய் அவரின் கூடாரத்திலேயே குதிரை கட்டப்பட்டுள்ள இடத்தில் வைத்து ஒரு பெரிய பாத்திரத் தால் மூடி அதனை மறைத்திருப்பதாகவும் இதனை ஒரு கனவாகவே நினைத்து அலட்சியமாக இருந்து விடாமல் படைத் தலைவர் ஹழ்லரத் காலித் ஸைஃபுல்லாஹ் [ரலி] அவர்களிடத்தில் சொல்லி அதனைக் கைப்பற்றி கலீஃபா அபூபக்கர் [ரலி] அவர்களிடத்தில் சேர்ப்பிக்கச் செய்யும்படி யாகவும், அதனை விற்றே தம்முடைய கடனை அடைக்க வும் தம்முடைய அடிமைகளை உரிமை விட்டிடவும் கலீஃபா அபூபக்கர் [ரலி] அவர்களுக்குத் தெரிவிக்கும்படியும் கூறி மறைந்தனர். விழித்தெழுந்த அந்நபிமணித் தோழர் ஹழ்ல ரத் காலித் ஸைஃபுல்லாஹ் [ரலி] அவர்களிடம் சென்று தம் கனவை விவரித்துக் கூறினர். கனவில் குறிப்பிடப்பட்ட இடத்தில் சென்று பார்க்கையில் அறிவிக்கப்பட்டபடியே ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் [ரலி] அவர்களின் கவசம் கிடைத்தது. அதனை எடுத்துச் சென்று கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களிடத்தில் ஒப்படைக்கப்பட்டு கனவைப் பற்றிய செய்தியும் எடுத்துரைக்கப்பட்டது. அதன்படியே கலீஃபா அவர்கள் கவசத்தை விற்று ஹழ்லரத் ஃஸாபித் இப்னு கைஸ் [ரலி] அவர்களின் கடனைத் தீர்த்ததோடு அவர்கள் குறிப் பிட்டிருந்த அடிமைகளுக்கும் உரிமை வழங்கினார்கள். கன வில் கூறப்பட்ட வாக்கு மூலம் நிறைவேற்றப்பட்ட அது போன்ற ஒரு பேற்றை அதற்கு முன்னும் பின்னும் எந்த

நபிமணித் தோழரும் பெறவில்லை என ஹழ்ரத் அனஸ் இப்னு மாலிக் [ரலி] அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்கள் ஹழ்ரத் ஃஸாபித் இப்னு கைஸ் [ரலி] அவர்களிடத்தில் கொண்டிருந்த அன்பிற்கடையாளமான ஒரு சம்பவமும் காணக்கிடைக்கிறது. பனூ குறைழ்லா யூதர்களனைவரும் கொல்லப்பட்ட போது அவர்களிடையே ஸாபிர் இப்னு பா[த்]தா எனப் பட்ட ஒரு முதியவரும் இருந்தார். பெருமானார் (ஸல்) அவர்களை ஏளனப்படுத்திப் பாடிக் கொண்டும் இஸ்லாத்துக்கு எதிராகப் பிறரைத் தூண்டுவதையே வழக்கமாகவே கொண்டும் இருந்தவர் அவர். எனினும் ஹிஜ்ரத்துக்கு முன் மதீனாவில் நடைபெற்ற உள்நாட்டுப் போர்களில் ஒன்றின் போது ஹழ்ரத் ஃஸாபித் [ரலி] அவர்களுக்கு அவர் அடைக்கலம் தந்து காத்தார் என்பதற்காகவே பெருமானார் [ஸல்] அவர்கள், ''ஃஸாபித்! இதோ இவருக்குள்ள உம் நன்றிக் கடன் தீர்க்கப் பெறுவதற்காக'' என்று கூறி ஹழ்ரத் ஃஸாபித் இப்னு கைஸ் [ரலி] அவர்களிடம் அவரை உயிருடன் ஒப்படைத்து விட்டார்கள்; அந்த முதியவர் ''மனைவி மக்களின்றி நான் மட்டும் தனித்திருந்து என்ன செய்ய?'' என்று வினவக் கேட்டு அவரின் மனைவி மக்களையும் ஒப்படைத்தார்கள்; ''உறைவிடமும் செல்வமும் இன்றி நான் எப்படி வாழ்க்கை நடத்துவது?'' என அவர் புலம்பக் கேட்டு, போர்த் தளவாடங்களைத் தவிர அவரின் மற்ற உடைமைகளனைத்தையும் ஈந்து விட்டார்கள். அதற்குப் பின்வரும் அம்முதியவர் தம் சமூகத்தார் அனைவரையும் இழந்து தாம் மட்டும் உயிர் வாழ மன சஞ்சலப்பட்டு, ''ஃஸாபித்! உம்மீது எனக்குள்ள உரிமையைக் கொண்டு நான் கேட்கிறேன்—என் சமூகத்தாரோடு என்னைச் சேர்த்து விடும்'' என வேண்டிக் கொண்டதன் பேரில் இறுதியாகக் கொல்லப்பட்டுப் போனார்.

பெருமான் நபி (ஸல்) அவர்கள் இவ்வுலகைப் பிரிந்த அன்று 'ஸக்கீஃபா அல் பனீ ஸாஇதா'வில் நடைபெற்ற கிலாஃபத் பற்றிய சர்ச்சையிலும் ஹழ்ரத் ஃஸாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்கள் காணப்பட்டனர். அன்ஸார்களுக்குச் சார்பாகச் சிறந்த உரையாற்றிய அவர்கள் ''அல்லாஹ்வுக்கு உதவியாளர்களாகவும், இஸ்லாத்தில் பெரும் படையாகவும் நாம் இருந்தும் எண்ணிக்கையில் நம்மையடுத்தேயுள்ள நம்முடைய முஹாஜிர் சகோதரர்கள் கிலாஃபத்தை விட்டும் நம்மை நிராசையடையச் செய்வது எனக்கு வியப்பையே தருகிறது'' என நயம்பட உரைத்தார்களாயினும்,

கிலாஃபத்தின் விஷயத்தில் முஹாஜிர்களுக்கு முன்னுரிமை வழங்கி அண்ணலெம் பெருமான் [ஸல்] அளித்த திருவாக்கையும் இஸ்லாமிய அரபுலக ஒற்றுமையும் நினைவுறுத்தப்படக் கேட்டு ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களைக் கலீஃபாவாகத் தெரிந்தெடுக்க மற்றவர்களோடு ஒன்றுபட அவர்கள் பின்னடையவில்லை. கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களின் கரம் பிடித்துப் பிரமாணம் செய்த அவர்கள் மதமாற்றக் கலகங்களையும் கொள்கைத் தடுமாற்றங்களையும் ஒழிக்க கலீஃபா அவர்கள் மேற்கொண்ட நடவடிக்கைகள் அனைத்துக்கும் தொடர்ந்து உறுதுணை புரிந்தபடியே யமாமாவில் தங்களின் இன்னுயிரையும் வழங்கினார்கள்.



# 8. ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி)

**ஸை**யிதினா உமர் அல் ஃபாரூக் (ரலி) அவர்களின் கிலாஃபத்தின்போது ஒரு நாள் —

மதாயின் நகரின் நுழைவாயிலில் ஊர்ப் பிரமுகர்கள் பலர் கூடிக் காத்திருந்தனர். பாரஸீக சாம்ராஜ்யத்தின் பேரரசன் கிஸ்ரா தன் தலைமைப் பீடமாக அமர்ந்தாண்ட வெள்ளை மாளிகையைத் தன்னகத்தே கொண்ட மதாயின் நகரம் — அதன் பாரம்பரியக் கண்ணியத்தைப் புலப்படுத்தும் பளபளப்பான ஆடைகளை உடுத்தி கனவான்கள் காத்திருந்தனர் — அன்றைய தினம் பதவியேற்க வந்து கொண்டிருக்கும், அந்நகரின் புதிய ஆளுநரை வரவேற்க!

மதீனாவின் புறமிருந்து வரும் அப்பாட்டையில் வந்த பயணிகள் பலரும் அவ்விடத்தைக் கடந்து மதாயினுள் சென்ற வண்ணமிருந்தனர். வெகு நேரமாகியும் அந்தப் புதிய ஆளுனர் மட்டும் வரவில்லை! நெருங்கி வந்து கொண்டிருப்பதற்கான எந்த அறிகுறியும் கூட காணப்படவில்லையே!!

பொறுமையிழந்து விட்ட அக்கனவான்கள், அடுத்து வந்த சில பயணிகளிடத்தில் வினவினர், மதீனாவிலிருந்து வரவேண்டிய அப்புதிய ஆளுநரைப் பற்றி. ''அவர் எப்போதோ எங்களைக் கடந்து வந்தாரே! இன்னேரம் அவர் தம் அதிகார மன்றத்தையும் அடைந்து விட்டிருப்பாரே!!'' என்றார் ஒருவர்.

ஊர்ப் பிரமுகர்களுக்கெல்லாம் ஒரே வியப்பு! அவரை வரவேற்கத்தானே காத்திருக்கிறோம். நம் கண்களில் படாமலா சென்று விட்டாரவர்! எப்படி?—ஒருவரையொருவர் பார்வையாலேயே வினவிக் கொண்டனர். பரபரப்போடு

திரும்பி அவர்களனைவரும் ஆளுநரின் அதிகார மன்றத்தை அடைந்தபோது மக்கள் அங்கே கூடியிருக்கக் கண்டனர். அவர்களிடையே நின்று ஒரு மனிதர் கலீஃபா உமர் (ரலி) அவர்களிடமிருந்து தாம் வந்திருப்பதாகக் கூறி ஒரு சுவடியைப் பிரித்து வாசித்துக் கொண்டிருந்தார்: என் பிரதிநிதியாக ஹுதைஃபத்துல் யமான் (ரலி) உங்கள் மீது தலைமையளிக்கப்பட்டு அனுப்பப்பட்டுள்ளார். அவர் ஏவுவதைச் செவிமடுங்கள். அவருக்கு வழிப்படுங்கள். அவரின் தேவைகளைச் சமர்ப்பியுங்கள் — இதுவே அவர் வாசித்தது. அவர் யார்? என பிரமுகர்கள் நோட்டமிட்டனர். மிகச் சாதாரண ஆடையுடன், ஒரு கழுதையின் முதுகின் மேல் விரிப்பும் கூட இல்லாமல் அமர்ந்து நம் பார்வையில்பட்டுதானே வந்தார்! இவர்தாமா புதிய ஆளுநர்? மிக்க சரி.

''தங்களின் தேவைகள் என்ன? கூறுங்கள் சமர்ப்பிக்கிறோம்'' என வினவின பல குரல்கள்.

''எனக்கும் என் வாகனத்துக்கு முண்டான அன்றாட உணவை நீங்கள் என்னிடத்தில் சேர்ப்பித்து விடுங்கள். மற்ற உங்களின் அலுவல்களை அவரவரும் கவனியுங்கள்'' என்று கட்டளையிட்டார் அந்நகரை நிர்வகிக்க வந்த ஆளுநர்.

பதவியேற்கும் ஆரம்ப கட்டத்தில் எளிமையின் இந்த ஜாலம் எல்லா காலங்களிலும் காணக் கிடைக்கும் சுவர்ச்சியே! ஆனால் நாட்கள் வாரங்களாகவும் மாதங்களாகவும் உருமாறிப் புரளப் புரள கோலம் மாறிப் போகிறபடி. எந்த ஆளுநரையும் அதிகாரியையும் விட்டனரில்லை கலீஃபா உமர் [ரலி] அவர்கள். தம் ஆட்சியின் எல்லைக்குட்பட்ட ஒவ்வொரு மூலை முடுக்கிலும் என்ன நடைபெறுகின்றது என்பதை அப்போதைக்கப்போதே தெரிந்து கொள்ளும் அற்புதத் திறன் அநாப் பெற்றிருந்த—நாயகத்தின்—அந்த கலீஃபா, மதீனாவை விட்டும் சற்றுத் தொலைவில் இருந்து

ஓர் ஈச்சஞ்சோலையில் அமர்ந்து எதையோ கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்கள் மதாயின் நகர ஆளுநராகப் பதவியேற்று இப்போது பல மாதங்கள் கழிந்து விட்டிருந்தன.

மதீனாவிலிருந்து இராக், ஈரானின் புறம் பிரிந்து செல்லும் பாதையின் திருப்பத்தில் அமைந்திருந்தது அவ்விச் சஞ்சோலை. அதனைக் கடந்து செல்லும் எவருடைய பார் வையிலும் உள்ளே இருப்பவர் படமாட்டார். ஆனால் உள்ளே இருப்பவர்களுக்கு இருபுறம் செல்லும் பாதைகளில் நெடுந்தொலைவரை கடந்து செல்லும் பயணிகளின் நட மாட்டங்களைக் கவனிக்கத் தோதான முறையில் அமைந் திருந்தது அவ்வீச்சஞ்சோலை. அதனுள்ளேயே கலீஃபா அவர்கள் தனியே அமர்ந்திருந்த தோரணை, அவர்கள் அந்த நெடுஞ்சாலையில் எவருடைய வரவையோ எதிர் பார்ப்பதைப் புலப்படுத்தியது. இரவு காலங்களில் தம் கோலத்தை மறைத்து நகரில் சுற்றி மக்களின் நிலைமை யைக் கண்ணோட்டமிடும் வழக்கம் கொண்டிருந்த அந்தக் கலீஃபா தங்களின் ஆளுநர்களை, அதிகாரிகளை, தூதர் களை — அவர்களையெல்லாம் கண்காணிக்க தாம் நியமிக் கும் ஒற்றர்களையும் கூட இப்படித்தான் மூலை முடுக்கு களிலும் மறைந்திருந்து கண்காணிப்பார்கள்.

இராக்கின் பாதையையே அடிக்கடி திரும்பிப் பார்த்த வண்ணமிருந்த கலீஃபா அவர்களின் கண்களுக்கு நெடுந் தொலைவில் புழுதி மூட்டம் தெரிந்தது. பார்வையை நிலைப்படுத்தினார்கள் கலீஃபா. ஒரு பயணி மதீனாவின் புறம் விரைந்து வந்து கொண்டிருப்பதும் தெரியலாயிற்று. கூர்ந்து கவனித்தார்கள் கலீஃபா. வருவது யார் என்பதும் புலனாயிற்று. பல மாதங்களுக்கு முன்பாக ஆளுநர் பதவி யேற்று மதாயின் நகருக்குச் சென்ற ஹழ்லரத் ஹுதை ஃபத்துல் யமான் (ரலி) அவர்களே! ''இந்த என் கடிதம் கிடைக்கும் சமயம் எந்த நிலையில் நீர் இருக்கிறீரோ அப்

படியே புறப்பட்டு வருவீராக'' என்ற கலீஃபா அவர்களின் கட்டளை கிடைக்கப் பெற்று மதாயினிலிருந்து புறப்பட்ட அதன் ஆளுநர் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களே வந்து கொண்டிருப்பது நன்றாகப் புலப்பட்டது.

பதவியேற்க மதீனாவிலிருந்து ஏறிச் சென்ற அதே கழுதை; புறப்பட்டபோது இருந்ததே போன்றல்லாமல் புதிதாக ஒரு விரிப்பும் கூட இல்லாமல் அதன் முதுகின் மேல் அமர்ந்து வரும் ஆளுநர் ஹுதைஃபா, அவர் இங்கிருந்து புறப்பட்டபோது உடுத்தியிருந்த அதே முரட்டு உடைகள்—கிழிசல்கள் தையலிடப்பட்டிருந்தன. மதீனாவைப் பிரியும் போது இருந்த அதே மெல்லிய உடல். ஆகா! அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் முன்னிலையில் நடமாடிய அதே ஹுதைஃபா—பதவியின் உரசுதலால் அழுக்கின் ஒரு புள்ளியையும் கூட உம்மேல் ஒட்டவிடாத புனித மணியே!—உணர்வுகள் புளகாங்கிதங்கொள்ள சோலையை விட்டும் வெளி வந்த கலீஃபா உமர் (ரலி) அவர்கள் நெருங்கி வந்து விட்ட ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களுக்கு முகமன் கூறி, வாகனத்திலிருந்து இறங்கச் செய்து 'என் உடன் பிறப்பே—உம் உடன் பிறந்தவனே நான்' என உபசார மழை பொழிந்து அணைத்துக் கொண்டார்கள்.

**'ஸா**ஹிபுஸ் ஸிர் அந்தரங்கத் தோழர்' என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் காலத்திலேயே மற்ற தோழர்களால் மதிக்கப் பெற்றவர்கள் ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி). பல ரகசியச் செய்திகளை பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களிடம் மட்டுமே தெரிவித்து வைத்திருந்ததைத் தோழர்களெல்லாம் அறிந்திருந்தனர். ரகசியங்களைப் பாதுகாப்பதில் அவர் கடினமானவராக நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு உறுதிபடப் புலப்பட்டிருந்ததால்

நயவஞ்சகர்களின் பட்டியலையே பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களிடத்தில் ஒப்படைத்து அவர்களைக் கண்காணிக்கும்படி கட்டளையிட்டிருந்தார்கள். ஆனால் ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்கள் எந்த ஒரு மனிதரையும், 'இவர் நயவஞ்சகர்' என தம் வாழ்நாளில் எவரிடமும் சுட்டிக் காட்டினதே இல்லை. இன்னும் இத்தனை நயவஞ்சகர்கள் எஞ்சியிருக்கிறார்கள் என்ற தகவலை மட்டும் அவ்வப்போது வெளியிடுவார்கள்.

மரணித்தவர்களின் உடல்கள் பள்ளிவாசல்களில் வைக்கப்பட்டிருக்கையில் தொழுகைக்காக அணிவகுத்து நிற்பவர்களிடையே ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களைத் தேடுவார்கள் கலீஃபா உமர் (ரலி). அன்னார் ஆங்கே காணப்படாவிடில் அவ்வுடலுக்குடையவர் நயவஞ்சகர் என்பதை கலீஃபா அவர்கள் மட்டும் புரிந்து கொள்வர். தம்மிடமும் ஏதேனும் தவறுகள் காணப்படுகின்றனவா என கலீஃபா அவர்களே ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் [ரலி] அவர்களிடம் வினயமாக விசாரித்துக் கொள்வதுண்டு. இத்தகைய சங்கைகள் அமையப் பெற்ற ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் [ரலி] அவர்கள் தம்மைச் சந்தித்த ஆரம்ப காலத்தில் பெருமானார் [ஸல்] அவர்கள், ''ஹுதைஃபா நீர் விரும்பினால் ஒரு முஹாஜிராகவும் இருக்கலாம் அல்லது ஓர் அன்ஸாராகவும் திகழலாம்'' என அனுமதியளித்தார்கள். ஹழ்லரத் ஹுதைஃபா [ரலி] அவர்கள் அண்ணலவர்களுக்குத் துணை சேர்க்கும் 'அன்ஸார்' என்ற பேற்றை ஏற்பதிலேயே தங்களுக்குப் பெருமை கண்டார்கள்.

கீத்பான் கோத்திரத்தைச் சார்ந்த 'அப்ஸ்' குடும்பத்தில் 'யமான்' என்பவருக்குப் பிறந்தவர்களே ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி). ஹுஸைல் என்ற இயற்பெயருக்குரியவரான அத்தந்தை யமனிலிருந்து வந்த ஒரு குடும்பத்தைச்

சார்ந்தவராதலால் யமான் என்று அழைக்கப்பட்டார். மக்காவில் தம் வைரி ஒருவனைக் கொன்று விட்ட அன்னவர், பழி தீர்க்கப்படுவோம் என அஞ்சி மக்காவை விட்டே வெளியேறி விட்டனர்; மதீனாவுக்கு வந்து 'அப்துல் அஷ்ஹல்' குடும்பத்தில் அடைக்கலம் பெற்று, அக்குடும்பத்தையே சார்ந்த ரபாப் பின்த் கஅப் என்ற பெண்மணியை மணந்து வாழலாயினர். அவ்விருவருக்கும் பிறந்தவர்களே ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி).

நாளடைவில் கொலைப்பழி மறக்கப்பட்டு போனபின் யமான் (ரலி) மக்காவுக்குப் போய் வரலானார். எனினும் மதீனாவே அவரின் நிரந்தரத் தங்குமிடமாகி விட்டது. இரு நகரங்களுக்கிடையிலும் வாணிபம் செய்து வந்தாரவர். இயல்பிலேயே சிறிய குணங்களமையப் பெற்றிருந்த அவரைப் போன்றே வளர்ந்தனர் அவர் பெற்ற ஹுதைஃபாவும். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் தோற்றம் பற்றியும் தொல்லைகளுக்கும் சள்ளைகளுக்கும் இடைப்பட்டும் அவர்களின் மார்க்கம் பெற்று வரும் ஏற்றம் பற்றியும் செவியுற்றனர் அவ்விருவரும். அறிவு பூர்வமான அப்புதிய தெய்விகக் கோட்பாடுகளை உண்மையானவையாகவே அவர்களின் உள்ளங்கள் உணர்ந்தன. அதனை ஏற்கத் தாமதிக்கும் தவற்றினால் தாம் மரணப் பாழ் குழியில் தள்ளப்பட்டு விடுவோம் என முதுமையடைந்திருந்த யமான் அஞ்சினார்.

அதே சமயம் அன்ஸார்களின் ஒரு பயணக்குழு மக்காவுக்குப் புறப்பட்டது. அதனோடிணைந்தே மக்கா வந்த அவ்விருவரும் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் கரம் பற்றி இஸ்லாத்தை ஏற்றனர். இவ்வாறாக ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் [ரலி] பாரம்பரியத்தினால் மக்காவாசியாகவும் பிறப்பினால் மதீனாவாசியாகவும் விளங்கிய காரணத்தாலேயே அண்ணலார் (ஸல்) அவர்கள் அவரை முஹாஜிராக வேண்டுமானாலும் இருக்கலாம் அல்லது அன்

ஸாராக வேண்டுமானாலும் விளங்கலாம் என சுயமே முடிவு செய்ய விட்டார்கள். ஆனால் அண்ணலார் (ஸல்) அவர்களுக்குத் துணைக்கரம் சேர்க்கும் தியாகப் பேற்றி னையே தமக்கெனத் தெரிந்தேற்றனர் அத்தோழர்.

பத்ருப் போர்ச் சமயத்திலும் மக்காவிலேயே இருந்த தனர் அவ்விருவரும். போர் ஆயத்தங்கள் மேற்கொள்ளப் படுவதறிந்து தங்களின் குடும்பத்தளவில் சென்று சேரப் புறப்பட்ட அவ்விருவரும் இடை வழியில் குரைஷிகளின் கரங்களில் சிக்கி விட்டனர். வாணிபத்தின் பொருட்டு மக்கா வந்த மதீனாவாசிகளாகிய தாங்கள் தங்கள் குடும் பத்தளவிலேயே திரும்புவதாக அவ்விருவரும் வாதிட்டனர். நீண்ட தர்க்கத்துக்குப் பின் 'உங்கள் குடும்பத்தளவில் செல்லவிடாமல் உங்களை நாங்கள் தடுக்கமாட்டோம். ஆனால் மதீனாவிலிருக்கும் முஹம்மத் (ஸல்) — அவருக்கும் அவரைச் சார்ந்தவர்களுக்கும் துணையாக வாளேந்த மாட் டீர்கள் என நீங்கள் வாக்களித்தால் மட்டுமே உங்களை நாங்கள் விடுவிப்போம்' என நிபந்தனை விதித்தனர் குரைஷி கள். அவ்வாறே வாக்களித்து விடுபட்டு மதீனா வந்தடைந் தனர் அவ்விருவரும். அங்கும் போர் ஆயத்தங்கள் மேற் கொள்ளப்பட்ட வண்ணமிருந்தன. பெருமானார் (ஸல்) அவர்களைச் சந்தித்த அவ்விருவரும் தங்களின் வழியில் நடை பெற்ற சம்பவங்களை எடுத்துரைத்தனர். அச்சமயம் ஒவ் வொருவருடைய தேவையும் முக்கியத்துவம் பெற்றதாகவே இருந்தது. அந்நிலையிலும், வாய்மையை வளம் பெறச் செய்ய வந்த 'அல் அமீன்' [ஸல்] அவர்கள், ''அல்லாஹ் வின் உதவியும் வெற்றியும் நமக்கு எந்த விதத்திலும் வந்து சேரும். நீங்கள் இருவரும் உங்களின் இல்லத்தில் தங்கி உங் கள் வாக்கைப் பேணுங்கள். இந்தப் போரில் நீங்கள் பங் கேற்க வேண்டாம்'' என உபதேசித்து அவர்களை வீட் டோடேயே தங்கச் செய்து விட்டார்கள்.

இந்தக் குறையை நிறைவு படுத்த தந்தையும் தனையரும் இணைந்தே உஹதுப் போர்க்களம் விரைந்தனர். அவர்களில் தனையர் ஹுதைஃபா (ரலி) மட்டுமே போர் முடிந்து விடு திரும்பினர். தந்தை யமான் (ரலி) கொல்லப்பட்டுப் போயினர்—முஸ்லிம்களின் வாட்களாலேயே!

அண்ணலார் (ஸல்) அவர்கள் முதுமையடைந்திருந்த ஹழ்லரத் யமான் (ரலி) அவர்களையும் ரிஃபாஆ (ரலி) எனப்பட்ட மற்றொரு முதிய தோழரையும் பெண்களும் சிறார்களும் தங்க வைக்கப்பட்டிருந்த பகுதிக்குக் காவலிருக்கச் செய்தார்கள். ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்கள் மட்டுமே களத்தில் கலந்து கொண்டனர். ஆனால் போர் உக்கிரம் பெற்றபோது முதியவர்கள் இருவராலும் தங்களின் உணர்வுகளை ஒடுக்கி அமர்ந்திருக்க முடியாது போயிற்று. ஒருவரையொருவர் முந்தினவராக வாட்களை உருவிக் கொண்டு களம் புகுந்த அவர்களில் ஹழ்லரத் ரிஃபாஆ (ரலி) எதிரிகளால் கொல்ல பட்டுப் போனார். ஆனால் ஹழ்லரத் யமான் (ரலி) அவர்களை எவரெனப் புரிந்து கொள்ளாமல் முஸ்லிம் வீரர்களே சூழ்ந்து கொண்டனர். அவர்களிடையே தம் தந்தை சிக்கித் தவிப்பதை அச்சமயம் திரும்பிக் கொண்டிருந்த ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி) அவர்களும் கண்டு விட்டனர். 'அவர் என் தந்தை. விட்டு விடுங்கள் அவரை' என பலமாக அவர்கள் பலமுறை கூச்சலிட்டும் பலனற்றுப் போயிற்று. களரியிடைப்பட்டு குழம்பியிருந்த முஸ்லிம் வீரர்களின் செவிகளை அக்குரல் எட்டவே இல்லை. அவர்கள் ஹழ்லரத் யமான் (ரலி) அவர்களைக் கொன்றே விட்டனர். மரணித்து விழுந்த தம் தந்தையின் உடலைக் கண்டு விக்கித்து நிற்பதைத் தவிர்த்து, குழப்பத்தில் அவ்விபத்தை விளைவித்து விட்ட முஸ்லிம் வீரர்களைப் பார்த்து எதுவுமே பேச ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி) அவர்களுக்குத் தோன்றவில்லை, "அல்லாஹ் உங்களின் பிழைகளைப் பொறுத்

தருள்வானாக. பிழை பொறுப்பதில் அவன் மிக மேலான வன்; பெருங்கருணையாளன்'' என்று மட்டும் கூறி அமைதியுடன் திரும்பினர் அத்தோழர். அழகிய அந்தப் பொறுமையைக் கண்டு அகம் பொருந்திய அண்ணலார் [ஸல்] அவர்கள் இழக்கப்பட்ட உயிருக்கான ஈட்டுப் பணத்தைத் தாங்களே அவருக்கு வழங்கினார்கள். அதையும் தம் தந்தையின் பிழைகள் பொறுக்கப்படுவதைத் தேடி முழுமையாகவே தர்மமாகப் பங்கிட்டளித்து விட்டனர் ஹழ்ரத் ஹுதைஃபா (ரலி). இந்தக் குணஅழகு அண்ணலவர்களின் மனதில் ஹழ்ரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களின்பால் அன்பைப் பெருகச் செய்தது.

பொறுமையும் சகிப்புத் தன்மையும் மட்டுமின்றி எந்த ஒரு சிக்கலையும் விடுவிக்கும் சிந்தனைத் தெளிவும் நுண்ணிய அறிவும் ஹழ்ரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களிடம் அமைந்திருந்தன. கட்டளைகளைப் பேணுவதில் சிறந்த பொறுப்புணர்வும் அறிவார்ந்த செயல் முறையும் அவர்களிடம் அமையப் பெற்றிருந்தன.

அகழ்ப் போரின்போது ஒருபுறம் பூரண ஆயத்தங்களோடு வந்து மதீனாவைச் சூழ்ந்திருந்த எதிரிகளுக்கும் மறுபுறம் மதீனாவின் உள்ளிருந்தே துரோகஞ் செய்து குழி பறிக்கத் துணிந்த யூத 'குறைழ்லா' களுக்குமிடையே சிக்கி விட்டிருந்த முஸ்லிம்கள் பெருஞ்சிரமங்களைச் சந்தித்திருந்தனர். முற்றுகையோ தளர்வதற்கான எந்த அடையாளமும் தெரியவில்லை. கவலையை மறந்து உறங்கவும் வழியில்லை. உணவுப் பொருள்களும் போதிய அளவில் இல்லை. பசியின் கொடுமையினாலும், தொடர்ந்த பல இரவுகளை உறக்கமின்றிக் கழித்திருந்தமையாலும், குளிரின் கடுமையினாலும் தாங்க முடியாத இடர்பாடுகள் போதாவென்று திடீரென மழையின் வாடையுடன் கூடிய குறைக் காற்றின் தாக்கம் முஸ்லிம் வீரர்களைக் கூனிக் குறுகிக் கிடக்கச் செய்திருந்தது.

ஒரு நாள் இரவு!

அவர்களின் விந்தைத் தலைவர் மட்டும் தொழுது கொண்டிருந்தார்கள்; தங்களின் தோழமையில் துவண்டு கொண்டிருக்கும் தொண்டர்களுக்கென அல்லாஹ்வின் அருள் நாடி வழுத்திக் கொண்டிருந்தார்கள். திடீரென அவர்களின் குரல் ஒலித்தது : எதிரிகளின் புறம் சென்று அவர்களின் நிலையறிந்து வந்து எனக்குச் சேதி சொல்பவர் உங்களில் எவர்? அவரை என் தோழமையில் சுவனத்தில் தங்கச் செய்ய என் இறைவனிடம் இப்போது நான் கேட்பேன்'' என்று.

பனியின் பயங்கரம், அடுத்தவர் முந்தட்டும் என்ற பரந்த மனப்பான்மை கொண்டு அனைவரையும் அமைதியுறச் செய்து விட்டிருந்தது. மாநபிகளார் (ஸல்) மீண்டும் மீண்டும் மும்முறை அழைத்தும் எவருடைய தலையும் உயரவில்லை. ஓரக் கண்களாலேயே ஒருவரை யொருவர் கவனித்த வண்ண மிருந்தனர் தோழர்கள்.

''என்நிலைமிகமோசமாக இருந்தது. ஒரு சிறு துணியைப் போர்த்தி என் கரங்களைக் கெட்டியாக நெஞ்சோடணைத்து நான் தரையில் படுத்துக் கிடந்தேன். என் கால்கள் திறந்து கிடந்தன. 'ஹுதைஃபாவா?' என்ற குரல் கேட்டு, 'பெரு மானே! என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம்' என்ற வனாக தலையை உயர்த்தினேன். ''எதிரிகளின் நிலையறிந்து எனக்குச் சேதி கூறும்'' என கட்டளையே பிறப்பித்தார் கள் என் ஏந்தலர் (ஸல்). உள்ளம் நடுங்கிப் போனேன். இந் தக் கும்மிருட்டுக்கும் கோரக் குளிருக்கும் இடைப்பட்டா? ஆம்! இத்தனை பேர் இருக்க, அல்லாஹ்வின் தூதர் [ஸல்] அவர்கள் என் பெயரைச் சுட்டி, கட்டளையிட்ட பின்னர் தயங்கவும் தாமதிக்கவும் துணிவா எனக்கு! நான் நடக்கத் துவங்கினேன். ''ஹுதைஃபாவின் முன்னும் பின்னும், வல

மும் இடமும், மேலும் கீழும்— என் இரட்சகனே! நீ ஹுதை ஃபாவை எல்லா புறமிருந்தும் காத்தருள்'' என என் ஏந்தல் பெருமான் (ஸல்) அவர்கள் இறைஞ்சுவது என் செவிகளுக்கும் கேட்டது. ஆண்டவன் மீதாணையாக கூறுகிறேன். அந்த கருணையரசர்தம் பிரார்த்தனை ஒலியைப் பூரணமாக நான் செவியேற்று முடிக்கு முன்பாகவே என்னிடமிருந்து அச்சமும் களைப்பும் பசியும் நடுக்கமும் விடை பெற்றுக் கொண்டன. வீறு நடை போடத் துவங்கினேன். ''ஹுதைஃபா! மீண்டும் நம்மைச் சந்தித்துச் சேதி கூறு முன்பாக எந்த நடவடிக்கையிலும் இறங்கிட வேண்டாம்'' என என் தலைவரின் எச்சரிக்கையும் கேட்டது. ''பெருமானே! தங்களின் ஆணை என் சிரமீது'' என ஏற்றவனாக விடை பெற்றேன்.

''இரவின் அந்தகாரத்தைக் கிழித்தெறிந்து நான் துணிவோடு வைரிகளின் வளையத்துள் புகுந்தேன். காற்றும் மழையும் ஆற்றியிருக்க முடியாத—கண்களுக்குப் புலப்படாத ஒரு மாற்றான வல்லமை ஆற்றியிருந்த அகோரத்தை அங்கே நான் கண்டேன். அவர்களின் கூடாரங்களெல்லாம் முளைகளுடன் பிய்த்தெறியப் பட்டிருந்தன. சமைக்கப் பட்டிருந்த பெரும் பெரும் உணவுப் பாத்திரங்களெல்லாம் உயரே பறந்து அவை வைக்கப்பட்டிருந்த அடுப்புகளின் மீதே கவிழ்ந்து கிடந்தன. குளிரில் விறைத்தவர்களாக அவர்கள் ஒவ்வொருவரும் கூனிக் குறுகிச் சுருண்டு கிடந்தார்கள். திடீரெனக் கேட்டது 'ஓ குரைஷிகளே!' என்ற குரல். அவர்களின் தலைவர் அபூஸுஃப்யானுடையது அது. ஏதோ விமோசனங் கூறப் போகிறாரவர் என உணர்ந்து எல்லோரும் சேர்ந்தமரலாயினர். அவர் ஏதோ பேசப் போகிறார் என்பது எனக்கும் புரிந்தது. விரைந்து சென்று நானும் அவர்களோடேயே அமர்ந்து கொண்டேன்.

''முக்கிய சேதியொன்று உங்களுக்கு நான் கூறுகிறேன். ஆனால் அச்செய்தி எவ்விதத்திலும் முஹம்மத் இப்னு அப்

துல்லாஹ்(ஸல்)வின் செவிகளுக்கு இப்போது எட்டி விடக் கூடாது. எனவே முதலில் நீங்கள் ஒவ்வொருவரும் உங்க ளுக்கருகில் இருப்பவரின் கையைப் பிடித்து அவர் நம்மைச் சார்ந்தவர்தானா? என கவனித்துக் கொள்ளுங்கள்'' என்று அபூஸுஃப்யான் கூறியதே தாமதம், சற்றும் தாமதிக்காமல் நான் என் அருகே இருந்தவனின் கரத்தினை இறுகப் பற்றி, 'நீ யார்?' என்று கேட்டேன். ''இன்னானின் மகன் இன்னான்'' என்று பதில் கூறிவிட்டு அவன் அமைதியாகப் பேச்சைக் கேட்கலானான், நான் தப்பித்தேன்.

''குரைஷிகளே! காலநிலை நம்முடைய நிம்மதியைப் பறித்து விட்டது. நம்முடைய கால்நடைகள் அழிந்து கொண்டுள்ளன. பனூ குறைழ்லாக்களும் நம்மை விட்டும் தங்களின் கைகளை உதறிக் கொண்டனர். புயலின் கொடு மையையோ நீங்கள் கண்கூடாகக் காணுகிறீர்கள். எனவே நீங்கள் உடனடியாக இங்கிருந்து புறப்பட்டு விடுங்கள். இதோ நானும் புறப்பட்டு விட்டேன்'' என்றவராக அபூ ஸுஃப்யான் தம் ஒட்டகையைக் கிளப்பலானார். மற்றவர் களும் ஆயத்தமானார்கள். தம்மைத் தாமே காத்துக் கொள்வதில் அவர்கள் ஒருவரையொருவர் முந்திக் கொண் டிருந்த பரிதாபகரமான நிலையில் அவர்களைக் கடந்த என் முன்னே ஒரு சமயத்தில் சரியாக வந்து நின்றது அபூ ஸுஃப்யானின் பிடறி. அப்போதே அவரின் கதையை முடித்து விட என்னிடத்திலிருந்த அம்புகளில் ஒன்றே போதும். ஆனால் என் ஏந்தலரின் கட்டளை என்னைத் தடுத்து விட்டது.

''அங்கிருந்து வெளியேறி 'கித்ஃபானியர்'கள் தாவள மிட்டிருந்த இடத்துக்குச் சென்றேன். அது வெறிச்சோடிக் கிடந்தது. அவர்கள் குரைஷிகளை முந்தி விட்டிருந்தனர். நான் நேரே பெருமானார் (ஸல்) அவர்களை வந்தடைந் தேன். அப்போதும் என் ஏந்தலர் தொழுது கொண்டு

தானிருந்தார்கள். தொழுகையை முடித்துத் திரும்பிய அவர்கள் என்னை அருகே அழைத்தார்கள். செய்திகளனைத்தையும் அவர்களுக்கு நான் எடுத்துரைத்தேன். அவற்றைக் கேட்டு, தங்கள் இரட்சகனுக்கு நன்றி நவின்ற நாயகப் பெருமான் (ஸல்) அவர்கள், 'இங்கேயே படுத்துக் கொள்ளும்' என தங்களின் காலடியைச் சுட்டிக் காட்டினார்கள். நான் படுத்துக் கொண்டேன். தாங்கள் போர்த்தியிருந்த பிடவையின் ஒரு முனையை என் மீது வீசி விட்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் மீண்டும் தொழத் துவங்கினார்கள். அதனையே என் மீது போர்த்துக் கொண்டு நான் இதமாக உறங்கலானேன் – என்பது ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களின் வாய்மொழி வரலாறாகும்.

அகழ்ப் போரையடுத்து ஹுதைபியா நடவடிக்கையிலும், கைபர் படையெடுப்பிலும், மக்காப் பிரவேசத்திலும் அதன் பின்னர் நடைபெற்ற மற்ற போர்களிலும்கூட அண்ணலார் (ஸல்) அவர்களை ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி) அவர்கள் தொடர்ந்துள்ளனர். போர்க்காலமல்லாத மற்றைய நாட்களிலும் பெருமானார் (ஸல்) அவர்களின் தோழமையே தஞ்சமென அவர்களின் நெஞ்சத்தை ஏற்கச் செய்திருந்தவர் அவர்களின் அன்னையாரே.

அன்ஸார்களில் 'அப்துல் அஷ்ஹல்' குடும்பத்தைச் சார்ந்த அம்மாதரசி மிகச்சிறந்த குணவதியாகத் திகழ்ந்தார். கணவரை இழந்த அவர், தம் தனையரின் குண நலத்தையும் மன வளத்தையும் சிறக்கச் செய்வதில் மேலான அக்கறை கொண்டிருந்தார். தந்தையின் மரணத்தையடுத்து ஒரு சில நாட்கள் ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி) மனஞ்சலித்து மறதியிலாழ்ந்து விட்ட போதும் அவர்களைக் கண்டித்தனர் அவ்வம்மையார். தாயின் அறிவுரையேற்று திருநபியின் வாசல் நாடி விரைந்தனர் அத்தனையர். அச்சமயம் பள்ளியில் மாலை நேர (மக்ரிபு) தொழுகை நடைபெற்றுக்

கொண்டிருந்தது. அணிகளோடு சேர்ந்து தொழுகையில் கலந்து கொண்டனர் ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி). தொழுகை முடிந்து மக்கள் பிரிகையில் தலை குனிந்தவாறே பெருமானார் (ஸல்) அவர்களைப் பின்தொடர்ந்தனர் ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி). ஒரு சில அடிகள் கடந்து ''யார் பின்னே?'' என பெருமானார் (ஸல்) அவர்கள் வினவினார்கள். ''தங்களின் ஊழியன் ஹுதைஃபா'' என விடையளித்தார் தோழர். ''அல்லாஹ் உம்முடையவும் உம் அன்னையாருடையவும் பிழை பொறுத்தருள்வானாக'' என அண்ணலார் [ஸல்] அவர்கள் வழுத்தக் கேட்டு உடல் சிலிர்த்தது அத்தோழருக்கு. அதற்குப்பின் அவர்களின் தோழமையில் தொய்வேற்படவே இல்லை. மறதி அவர்களை அண்மவே இல்லை.

எம்பெருமானார் (ஸல்) அவர்களுக்கு நீர் கொணர்ந்தளித்து அவர்கள் 'ஒழ்லு' செய்யும் முறையைக் கவனிப்பர் அத்தோழர். உடனிருந்து அண்ணலார் (ஸல்) அவர்களோடு உண்ணக் கிடைக்கும் வாய்ப்புகளின்போது, அவர்களின் கண்கள் அண்ணலார் (ஸல்) அவர்களின் இயக்கங்களையே கவனிக்கும். அல்லாஹ்வின் தூதரின் நடமாட்டங்கள், செயல்முறைகள் ஒவ்வொன்றையும் கூர்ந்து காணுவர்; அதன்படியே பேணுவர் ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி). நீண்ட நேரங்களுக்கு அப்பெருஞ் சன்னிதானத்தில் பிரியாது சார்ந்திருக்க சலிப்பே தட்டினதில்லை அவ்வூழியருக்கு. ஒரு சமயம் பகல் நேர (லுஹர்) தொழுகைக்காக வந்த ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி) இரவு நேர (இஷா) தொழுகை வரையிலும் பெருமானார் (ஸல்) அவர்களோடேயே இருந்தார்கள். ''இஷாவுக்குப் பின்னும் அவரைத் தம் இல்லத்துள் அழைத்துச் சென்ற பெருமானார் (ஸல்) அவர்கள் அங்கேயும் தொழ நின்று விட்டார்கள். ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி) அவர்களும் இணைந்து கொண்டனர். அந்தத் தொழுகையை அவர்கள் நிறைவு செய்யும்போது பிலால்

(ரலி) அவர்களின் பாங்கொலி கேட்டது. இல்லத்துள்ளிருந்து வெளிவந்த பெருமானார் (ஸல்) அவர்களின் பின்னேயே வந்த ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்கள் காலை நேர (ஸுப்ஹு) தொழுகையிலும் அவர்களின் பின்னேயே கலந்து கொண்டார்கள் என— இமாம் அஹ்மத் இப்னு ஹம்பல் (ரஹ்) அவர்கள் தங்களின் மஸ்னதில் குறிப்பிடுகிறார்கள்.

**ப**ன்னீராண்டு காலம் நீடித்த புனிதமிக்க அத்தோழமையின் பிரிவு ஹழ்ரத் ஹுதைஃபா (ரலி) அவர்களின் கண்களுக்குப் பூமியைப் பாழ்வெளியாகவே காட்டியது. மதீனாவையே பிரிந்து அவர்கள் இராக்கின் புறம் சென்று விட்டார்கள்; கூஃபா, நஸீபைன், மதாயின் ஆகிய நகரங்களில் மாறி மாறி அவர்கள் வாழ நேர்ந்தது. நஸீபைனில் வைத்தே அவர்களின் திருமணமும் நடந்தது.

கலீஃபா உமர் (ரலி) அவர்களின் கலீஃபாப்பில் ஹழ்ரத் ஹுதைஃபா (ரலி) அவர்களுக்கு பெரும் மதிப்பிருந்தது. இராக்கின் பகுதிகள் வெல்லப்பட்டபோது அவற்றை இரண்டாகப் பிரித்து கலீஃபா அவர்கள், புராத் நதியை ஒட்டிய பகுதிகளுக்கு ஹழ்ரத் உஃஸ்மான் இப்னு ஹுனைஃப் (ரலி) அவர்களையும் தஜ்லா நதியைச் சூழ்ந்த பகுதிகளுக்கு ஹழ்ரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களையும் அதிகாரிகளாக அனுப்பி வைத்தார்கள். தஜ்லாவைச் சூழ்ந்த பகுதிகளைச் சார்ந்தவர்கள் துடுக்கர்களாகவும் தொல்லைகளையே விளைவிப்பவர்களாகவும் விளங்கினர். எளிமையே உருக்கொண்டு உலவிய நாயகத் தோழரைத் தங்களின் நையாண்டிகளால் நகையாடவும் அவர்கள் பின்னடைந்தனரில்லை. அத்தகைய வீணர்களையும் ஹழ்ரத் ஹுதைஃபா (ரலி) அவர்கள் தங்களின் நுண்ணறிவாலும் சமயோசிதத்தாலும் திறன்படவே நிர்வகித்தார்கள்.

போர்க்களங்களிலும் தங்களின் முத்திரை பதிக்கத் தவற வில்லை அந்நாயகத் தோழர். ஹிஜ்ரி 18—ம் ஆண்டில் நிஹாவந்த் போரின் துவக்கத்தில் ஹழ்லரத் ஹுதைஃபத் துல் யமான் (ரலி) அவர்கள் கூஃபாவிலேயே இருந்தனர். அச்சமயம் ஹழ்லரத் நுஉமான் இப்னு முக்ரின் (ரலி) அவர் களைத் தளநாயகராக்கி நிஹாவந்தின் புறம் படையுடன் செல்லச் செய்த கலீஃபா உமர் (ரலி) அவர்களின் கட்டளை கூஃபாவிலிருந்த ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களுக்கும் வந்தது—துணைப் படையுடன் நிஹாவந்துக் குச் செல்லுமாறு. ஒருக்கால் ஹழ்லரத் நுஉமான் (ரலி) அவர்கள் உயிரிழக்க நேரிட்டால் ஹழ்லரத் ஹுதைஃபத் துல் யமான் (ரலி) அவர்களே படைத் தலைமையை ஏற்க வேண்டும் என கலீஃபா அவர்களின் முன்னெச்சரிக்கையும் இருந்தது. கலீஃபா அவர்களின் வூகத்தின்படியே ஹழ்லரத் நுஉமான் [ரலி] அவர்கள் ஷஹீதாக நேர்ந்தபோது, முப்பதி னாயிரம் வீரர்களில் உயிரிழந்தவர்கள் சிலரைத் தவிர்த்து மற்றவர்களின் தலைமையை ஏற்ற ஹழ்லரத் ஹுதைஃபத் துல் யமான் (ரலி) அவர்கள், திரண்டிருந்த ஒன்றரை லட்சம் பாரஸீகர்களில், முப்பதினாயிரம் பேர்களைக் கொன்று குவித்து எஞ்சியவர்களைக் கதி கலங்கி ஓடச் செய்து அன்று மாலைக்குள்ளாகவே அப்போரை முடித்துத் தீர்த்தார்கள்.

'ஃபத்ஹுல் ஃபுத்தூஹ்' என வரலாற்றில் பெயர் பெற்ற வெற்றிகளுள் அப்பெரு வெற்றியைத் தம் தோளில் சுமந்த அத் தானைத்தளபதி, பிரமிக்கத்தக்கவர்களாக தங்களைக் கண்டு கலங்கிய மக்களுக்கு அன்று மாலை விடுத்த அடைக் கல அறிக்கை பஞ்சைகளையும் பாவமற்ற குடிமக்களையும் கொன்று குவிக்கச் சளைக்காத இன்றைய நாகரிக உலகை நாணித் தலை குனியவே வைக்கும்!

"அமீருல் முஉமினீன் உமர் அல் ஃபாரூக் (ரலி) அவர் களின் ஊழியன் ஹுதைஃபத்துல் யமான் இன்று நிஹா வந்த் மக்களின் உயிர்களுக்கும் உடைமைகளுக்கும் உரிய

பாதுகாப்பை ஏற்கிறேன். எக்காரணம் கொண்டும் எவரும் அஞ்சத் தேவையில்லை. முஸ்லிம்களால் எந்த அநீதியும் எவருக்கும் இழைக்கப்பட மாட்டாது. மதம் மாறும்படி எவரும் நிர்ப்பந்திக்கப்பட மாட்டார். அவரவர்களின் வழி பாட்டு முறைகளிலிருந்து எவரும் தடுக்கப்பட மாட்டார் கள். வணக்கத் தலங்களுக்கு எந்தக் குந்தகமும் விளைவிக் கப்பட மாட்டாது. மக்களில் ஒவ்வொருவரும் ஜிஸ்யா வரி செலுத்தி, பயணிகளுக்கு வழி காட்டி, பாதைகளைச் சீர் படுத்தி, படையினருக்கு ஒத்துழைப்பு தந்து, ஆட்சிக்கு உறு துணையாக இருக்கின்றவரை அவர்களின் உயிர்களும் உடை மைகளும் நில புலன்களும் நம்முடைய பாதுகாப்புக்கு உட் பட்ட அமானிதங்களாக இருக்கும். வாக்குறுதிகளை மீறி துரோகமிழைப்பவர்களின் பொறுப்பு முஸ்லிம்களுடைய தல்ல—என ஹிஜ்ரி 19—ம் ஆண்டு முஹர்ரம் மாதம் வெளி யிடப்பட்ட இந்த அறிக்கை மக்களிடையே நிம்மதியையும் மகிழ்ச்சியையும் நிலவச் செய்தது.

சில நாட்களுக்குப்பின் கூஃபா திரும்பிய ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்கள் மீண்டும் அஜர் பைஜான், ஹமதான், ஜீலானின் புறமும் படை நடத்திச் சென்று வெற்றி முழங்கித் திரும்பினார்கள். அதன் பின்னரே அவர்கள் கலீஃபா உமர் (ரலி) அவர்களால் மதாயினின் ஆளுநராக அனுப்பப்பட்டார்கள்.

எளிமையின் உருத் தாங்கி எவ்வித ஆரவாரமுமின்றி பதவியேற்ற அவர்கள் எக்காலமும் தம்மருகே எந்த ஆடம் பரத்தையும் அண்டவிடாமல் பாதுகாத்துக் கொண்டனர். பொறுப்பேற்க பயணம் செய்து வந்த கழுதையே கடைசி வரையிலும் அவர்களின் வாகனமாயிருந்தது. ஒரு சாதாரணக் குடிலே அவர்களின் தங்குமிடமாக இருந்தது. தமக்கும் தம் வாகனத்துக்கும் முறைப்படி சமர்ப்பிக்கப்பட்ட உணவுக்கு மேலதிகமாக ஒரு கைப்பிரம்பையும் கூட அவர்கள் எவரிட

மும் பெற்றுக் கொள்ளவில்லை. தங்களின் ஊழியத்துக்கு பகரமாக தமக்களிக்கப்பட்ட மாதாந்திர ஊதியத்திலும் குடும்பத்துக்குத் தேவைப்பட்ட ஒரு தொகையை வைத்துக் கொண்டு மீதத்தை அவ்வப்போது அறம் வழங்கிவிட்டனர். கலீஃபா அவர்களிடமிருந்து அன்பளிப்பாகவும் ஒரு தொகை வந்த சமயம் அப்போதைக்கு அது தமக்குத் தேவையற்றிருந்ததால் தேவைப்பட்டிருந்தவர்களிடையே உடனேயே அதனைப் பங்கிட்டளித்து விட்டனர். மொத்தத்தில் பதவியினால் எந்தப் பலா பலனையும் அடைந்தனரில்லை ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி). ஆனால் அவர்களால் நாடும், மக்களும், நிர்வாகமும் பலன் பெற்றன; வளம் பெற்றன.

நிர்வாகத்தில் மிகக் குறுகிய காலத்தில் வெளிப்பட்ட வெளிச்சத்தைக் கண்டே அவர்களின் நிலையை நேரடியாக அறிய கலீஃபா அவர்கள் மதீனா வரவழைத்தனர் அவர்களை. ஆனால் பெருமானார் (ஸல்) அவர்களின் முன்னே எந்த நிலையில் உலவினாரோ அந்தக் கோலம் மாறாதவராக ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்களைக் கண்ட கலீஃபா அவர்கள் மீண்டும் அப்பொறுப்பின்பாலே அவர்களை அனுப்பி வைத்தார்கள். அதற்குப் பின் கலீஃபா உமர் (ரலி) அவர்கள் தாம் வாழ்ந்த காலம் வரை அவர்களை அப்பொறுப்பை விட்டும் நீங்கச் செய்யவே இல்லை.

கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்களின் காலத்திலும் தொடர்ந்து அப்பொறுப்பிலேயே இருந்தார்கள் ஹழ்லரத் ஹுதைஃபா (ரலி). எனினும் மார்க்கப் போரில் பேரார்வம் தணியப் பெறாதிருந்த அவர்கள் ஹிஜ்ரி 30—ம் ஆண்டில் ஹழ்லரத் ஸஈத் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்களோடு குராஸானின் புறம் படை நடத்திச் சென்றனர். அதன் வெற்றிக்குப் பின் 'ரை', 'ஆர்மீனி'யப் படையெடுப்புகளிலும் கலந்து வாகை சூடினர். படைமுகம் கண்ட புறமெல்லாம் வெற்றிப் பறை முழக்கி மீண்டும் மதாயினின் பொறுப்பை ஏற்ற

அவர்கள் தம் மரண காலம் வரையிலும் அப்பொறுப்பி லேயே நீடித்தார்கள். கலீஃபா உஸ்மான் (ரலி) அவர்க ளின் மரணத்துக்கு நாற்பது நாட்களுக்குப் பின் இவர்களும் மரணமடைந்தார்கள்.

மரணத் தறுவாயில் அவர்கள் மிகவும் சஞ்சலப்பட்டவர் களாகக் காணப்பட்டார்கள். கண்ணீர் அவர்களின் முகத் தின் இருபுறமும் வடிந்து கொண்டிருந்தது. தம்மைக் கண்டு வியப்படைந்து நின்ற மக்களுக்கு, ''உலகின் பிரிவினைப் பற்றி நான் ஓர் எள்ளளவும் கவலை கொள்ளவில்லை. செல்லுமிடத்தில் என் கதி என்னவாகும் என்பதை எண் ணியே நான் அழுகிறேன்'' என தம் நிலையை விளக்கினார் கள் அத்தோழர்.

''என்னைப் போர்த்துவதில் நீங்கள் விரயம் செய்ய வேண்டாம். உயர்ந்த துணிகளை அதற்காகத் தேட வேண் டாம். இறைவனின் சன்னிதானத்தில் எனக்காக நன்மைகள் காத்திருக்குமானால் நான் உயர்வளிக்கப்படுவேன். அவ்வா றின்றி என் தீமைகளே அங்கு மிகைத்திருக்குமானால் இந் தப் போர்வையும் என்னிடமிருந்து பறிக்கப்பட்டுப் போகும்'' என மரணத்தின் மடியில் மக்களுக்கு உபதேசித்த மாநபியின் அத்தோழர், ''என் ஆண்டவனே! உன்னை நான் எந்த அளவு நேசித்தேன் என்பது உனக்குத் தெரியும். உன் சந்திப்புஎனக்கு மங்களகரமானதாக இருக்கட்டும்'' என பிரார்த்தித்த வண்ணமே தங்களின் இமைகளை மூடிக் கொண்டார்கள்.

ஹழ்லரத் அலி (ரலி) அவர்களைக் கலீஃபாவாக ஏற்ற இவர்கள் அவர்களுக்கு வழிபட்டு நடக்கும்படி தம் மக்களுக் கும் அவ்விறுதிச் சமயத்தில் அறிவுறுத்திப் பிரிந்தனர். அபூ உபைதா, பிலால், ஸஃப்வான், ஸஈத் எனப்பட்ட அவர்க ளின் நான்கு மக்களில் பருவமடைந்திருந்த இருவர் ஸிப்

ஃபீன் போர்க்களத்தில் ஹழ்லரத் அலீ(ரலி) அவர்களுக்காதர வாக நின்று போர் புரிந்து உயிர் நீத்தனர்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் மிக மேலான தோழர்களில் ஒருவராக விளங்கிய ஹழ்லரத் ஹுதைஃபத்நுல் யமான் (ரலி) அவர்கள் மறுமை நாள் வரையும் தோன்றவிருக்கும் அத்தனைப் புரட்சிகளைப் பற்றியும் குழப்பங்களைப் பற்றியும் அறிந்திருந்தார்கள். குழப்ப காலம் நெருங்கி வருவதை நிதர்சனமாகவே உணரத் துவங்கிய அந்நாயகத் தோழர் தம்மை மட்டுமின்றி தம் சமூகத்தவரையும் அக்குழப்பத்தை விட்டும் காப்பதில் பெருங் கவனம் செலுத்தினார்கள்.

யூத, கிருஸ்துவர்களால் அவர்களின் வேதங்களில் ஏற்பட்டு விட்ட புரட்டுதல்களைப்போல்திருக்குர்ஆனிலும் எந்த பேதங்களும் ஏற்படாமல் காப்பாற்ற மேற்கொள்ளப்பட்ட முயற்சிக்கு முதல் காரணகர்த்தா ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் [ரலி] அவர்களே. அஜர்பைஜான், ஆர்மீனியப் பகுதிகளில் படை நடத்திச் சென்ற சமயம் அங்கே ஒன்று கலந்திருந்த ஸிரியப் படையினரும் இராக்கிய வீரர்களும் வெவ்வேறான தொனிகளில் திருமறையை ஓதி அதன் பொருள் பேதப்பட்டபோது ஒருவரையொருவர் குற்றஞ் சாட்டித் தர்க்கித்துக் கொள்ளக் கண்டு திடுக்கிட்ட ஹழ்லரத் ஹுதைஃபத்துல் யமான் (ரலி) அவர்கள், அங்கிருந்து பிரிந்து விரைந்து மதீனா சென்று, ''அமீரல் முஉமினீன்! நாங்கள் முதற்காரியமாக திருமறையை ஒரு முறைப் படுத்துங்கள், முந்திய சமுதாயத்தவரைப் போன்றே முஸ்லிம்களையும் பேதப்பட விட்டு விடாதீர்கள்'' என கலீஃபா உஃதமான் (ரலி) அவர்களை எச்சரித்தார்கள். கலீஃபா உஃதமான் [ரலி] அவர்கள் உடனடியாக முயற்சிகள் மேற்கொண்டு திருமறையை ஒரு முறைப் படுத்தினார்கள்.

கால மாறுதலுக்கிடையே ஞாலத்தைக் கோலமழியச் செய்யவிருக்கும் குழப்பத்தை விட்டும் காக்க ஒவ்வொரு வெள்ளிக் கிழமையின் பேருரையிலும் அலுவல் நெருக்கடிகளுக்கிடையே கிடைக்கப் பெறும் மற்ற சமயங்களிலும் மக்களைத் தூண்டிக் கொண்டிருக்கத் தவறவில்லை அத் தோழர்.

''மறுமை நாள் வரை தோன்றவிருக்கும் எல்லாக் குழப்பங்களைப் பற்றியும் நான் அறிந்திருக்கிறேன். நான் மட்டுமே அவற்றை அறிந்தவன் என்றும் நீங்கள் எண்ண வேண்டாம். நபிபெருமான் (ஸல்) அவர்கள் எங்களில் சிலரை அமர்த்தி அவற்றை எங்களுக்கு அறிவித்தார்கள். அந்தச் சிலரில் என்னைத் தவிர மற்றெவரும் இப்போது உயிருடனில்லை—என அவ்வவ்போது மக்களுக்கு நினைவூட்டுவார்கள்.

''மக்களே! நான் கூறுவதை நீங்கள் கவனத்தில் வையுங்கள். பெருமானார் (ஸல்) அவர்களிடத்தில் மற்ற தோழர்களெல்லாம் நன்மைகளைப் பற்றியே வினவித் தெரிந்து கொண்டிருந்தபோது நான் தீமைகளைப் பற்றியே அதிகம் வினவித் தெரிந்து கொண்டேன் — அவற்றிலிருந்து விலகித் தப்பித்துக் கொள்வதற்காக.

''அல்லாஹ் தன் தூதர்களுக்கெல்லாம் நாதராக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை அருள் புரிந்தான். அவர்கள் மக்களைக் குழப்பத்திலிருந்து நேரான ஒரு வழியின் பால், நிராகரிப்பிலிருந்து நன்னம்பிக்கையின் பால் அழைத்தார்கள். அவ்வழைப்பை ஏற்றவர்கள் ஏற்றார்கள். மரணித்த பிணங்களாக உலவிக் கொண்டிருந்த அவர்கள் உண்மையை ஏற்றுக் கொண்டதனால் உயிர்ப்பிக்கப்பெற்றார்கள். அதனைப் புறக்கணித்து தங்களின் நிராகரிப்பிலேயே நிலைத்திருந்தவர்கள் மரணித்துப் போனார்கள்.

"நபித்துவம் முற்றுப் பெற்றது. கிலாஃபத் முகிழ்ந்தது. இனி குழப்பங்களைக் கொண்ட முடியாட்சியும் தோன்றும். மக்களில் சிலர் தங்களின் நாவாலும் மனதாலும் கரங்களாலும் அதனை ஏற்க மறுப்பர். அவர்கள் பூரணமாகத் தங்கள் கடமையை ஆற்றியவராவார்கள். வேறு சிலர் மனதாலும் நாவாலும் புறக்கணித்து கரங்களைக் காத்துக் கொள்வர். அவர்கள் ஒரு வழியைத் தவறவிட்டவர்கள். மற்றும் சிலர் மனதால் மட்டுமே வெறுத்து தங்களின் நாவையும் கரங்களையும் காத்துக் கொள்வர். அவர்கள் இரு வழியைத் தவறவிட்டவர்கள். மற்றவர்கள் அதனைத் தீமையாகவே எண்ணவும் மாட்டார்கள்; மறுத்துப் பேசவே மாட்டார்கள். அவர்கள் நடைப் பிணங்களுக்கு ஒப்பானவர்கள்—என்றெல்லாம் மக்களுக்கு அறபோதங்கள் வழங்கிய ஹுதைஃபா (ரலி) 'குழப்பதலங்களுக்குச் செல்லாதீர்கள்' என மக்களை எச்சரித்தார்கள். 'குழப்பதலங்கள் எவை?' என வினவிய மக்களுக்கு 'செல்வந்தர்களுடையவும் அதிகாரிகளுடையவும் வாசல்கள்' என்றார்கள் அந்நாயகத் தோழர் — செல்வந்தர்களை அணுகும் மக்கள் அவர்களின் தவறான ஏவல்களுக்கு வழிப்படுகிறார்கள். மிதமிஞ்சி அவர்களைப் புகழ்கிறார்கள். இதுவே குழப்பங்களுக்கு அடித்தளம்."

வீணான வியாக்யானங்களை அவர்கள் வெறுத்தார்கள். அவை நயவஞ்சகத் தன்மையின் வெளிப்பாடுகள் என பெருமானார் (ஸல்) அவர்களின் முன்னே கண்டிக்கப்பட்டதென கூறி கண்டித்தார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள் உலகில் வாழ்ந்தபோதே திருமறையை முழுமையாக மனனம் செய்திருந்த அத்தோழர் பெருமானார் (ஸல்) அவர்களின் ஒரு நூற்றுக்கு மேற்பட்ட அருள் மொழிகளையும் தங்களின் நினைவில் காத்து மக்களுக்கு வெளிப்படுத்தியுள்ளார்கள்.

# 9. ஹழ்ரத் கஅப் இப்னு மாலிக் (ரலி)

"நாங்கள் எங்கள் இனத்தில் இன்னமும் இணை வைத்தே வணங்கிக் கொண்டிருந்தவர்களுடன் இணைந்து ஹஜ்ஜுக்காக மக்காவுக்குப் புறப்பட்டோம். எங்கள் பயணக் குழுவின் தலைவராயிருந்த பர்ரா இப்னு மஅரூர் (ரலி) கஅபாவின் புறம் முதுகைக் காட்டித் தொழ மனமொப்பாது அதன் புறமே முகம் திருப்பி நின்று தொழப் போவதாகக் கூறினார். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் ஜெருஸலத்திலுள்ள பைத்துல் முகத்தஸை நோக்கியே தொழுவதாக அதுவரை அறிந்திருந்த நாங்கள் அதன் படியே தொழுவோம் என்றோம். ஆனால் பர்ரா (ரலி) தம் எண்ணப்படியே செயல்படலானார். நாங்கள் அவரை குறை கூறிக் கொண்டேயிருந்தோம். மக்காவில் நுழைந்த பின் அவர் என்னிடம், ''உடன் பிறந்தார் மகனே! அல்லாஹ்வின் தூதரைச் சந்தித்தே நாம் இது பற்றி வினவோம் வாரும்'' என்றழைத்தார். ஆனால் பெருமான் முஹம்மத் (ஸல்) அவர்களை நாங்கள் அதற்கு முன் சந்தித்ததேயில்லை. எனவே அவர்களை நாங்கள் அடையாளங் காண முடியாது. எனினும் அவர்களின் சிறிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்களை எங்களுக்குத் தெரியும். வாணிப நிமித்தம் மதீனா வந்து போய் இருந்த அன்னவரை நாங்கள் பார்த்திருக்கிறோம். ''அப்படியானால் புனித வளாகத்துக்கு நீங்கள் செல்லுங்கள். அங்கே முஹம்மத் (ஸல்) அவர்கள் அப்பாஸ் (ரலி) அவர்களோடேயே காணப்படுவார்கள்'' என ஒருவர் கூறினார். நாங்கள் அங்கே சென்று அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு ஸலாமுரைத்தோம். அவர்கள் ஹழ்ரத் அப்பாஸ் [ரலி] அவர்களிடம் எங்களைப் பற்றி 'இவர்கள் யார்?' என வினவினார்கள். 'இவர் பர்ரா இப்னு

மஅரூர், இவர் கஅப் இப்னு மாலிக்' என அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு எங்கள் இருவரையும் அறிமுகம் செய்து வைத்தனர் அப்பாஸ் (ரலி). அதனைக் கேட்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் 'எந்த கஅப், கவிஞரா?' என கேட்டார்கள். 'ஆம்!' என்றனர் அப்பாஸ் (ரலி). என்னைச் சுட்டி அண்ணலார் (ஸல்) அவர்கள் அவ்விதம் வினவியதை நான் மறப்பதே இல்லை — என பரவசங் கொள்வர் ஹழ்லரத் கஅப் இப்னு மாலிக் (ரலி) அவர்கள்.

இவ்வாறாக மக்கமா நகரம் வரை அவரின் புலமை அறியப் பெற்றிருந்த ஹழ்லரத் கஅப் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் கஸ்ரஜ்களான ஸலமா குடும்பத்தைச் சார்ந்தவர்; ஹிஜ்ரத்துக்கு இருபத்தேழு ஆண்டுகளுக்கு முன் பிறந்தவர்; பெற்றோர்க்கு ஏகப் புதல்வராகப் பிறந்து மிக சொகுசோடு வளர்க்கப்பட்டவர். சிந்தனைச் செழுமையும் கவிநா வளமும் இயல்பாகவே அருளப் பெற்றிருந்த அவரின் வளர்ச்சி வாலிபத்தை எட்டுமுன்பாகவே முன்னூறு மைல் தொலைவிலுள்ள மக்க நகரிலேயே மக்களின் கவிதா ரசனையில் அவரின் பெயர் இடம் பெறலாகி விட்டதாலேயே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களையும் தம் முதல் சந்திப்லேயே அவர் கவர்ந்து விட்டார்.

மதீனாவில் ஹிஜ்ரத்துக்கு முன்னதாகவே ஹழ்லரத் அஸ்அத் இப்னு ஜ்ஸுராரா [ரலி] அவர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட முதல் ஜும்ஆ தொழுகையைப் பற்றியும் அப்போது அதில் கலந்து கொண்டவர்கள் நாற்பது பேர் என்பதையும் அறிவித்திருக்கும் இவர்களின் திருவாய் மொழியே [பக்கம்-116] ஹழ்லரத் முஸ்அப் இப்னு உமைர் [ரலி] அவர்களின் கரம் பற்றி முஸ்லிம்களான முந்தினவர்களின் வரிசையில் இவர்களைக் காட்டுகிறது. அபூ பஷீர் என்ற இடுகுறிப் பெயரால் அழைக்கப்பட்டு வந்த இவர்களை அண்ணலார் [ஸல்] அவர்கள் அபூ அப்துல்லாஹ் என்றழைக்கப்படச் செய்தார்கள். முஹாஜிர்களுக்கும் அன்

கொள்வேன் என்றெண்ணித் தங்கினேன். மூன்றாம் நாளும் நான் புறப்படவில்லை. இவ்வாறாக என் சோம்பலே என்னைத் தடைபடுத்தி நாட்களைக் கடத்தி விட்ட நிலையில், அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் படையோடு தபூக்கைச் சென்றடைந்து விட்டார்கள் என்ற செய்தி கிடைத்து என்னை மிகக் கைசேதமடையச் செய்தது. வீதிகளில் நடமாட நேரும் போதெல்லாம், வாகன வசதியோ போர்க் கருவிகளோ அறவே இல்லாத காரணத்தால் போரில் பங்கேற்க வாய்ப்பிழந்து அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களிடம் கண்ணீருகுத்துக் கைசேதப்பட்ட சில மெய்த்தோழர்களையும், வறுமையாலும் நோயாலும் பலஹீனப்பட்டு போரில் பங்கேற்கும் பொறுப்பிலிருந்து அல்லாஹ்வினாலேயே விடுவிக்கப்பட்ட முஸ்லிம்களையும் தவிர்த்து, அழுக்கேறிய இதயங்களோடு ஆண்டவனின் தூதரின் முன்னிலையில் கபட நாடகமாடும் வஞ்சகர்களேயல்லாமல் என்னைப் போன்ற உடல் திறனும் பொருள் வளமும் குறையறப் பெற்றிருந்தும் போருக்குச் செல்லாத எந்த ஒருவருடைய நடமாட்டத்தையும் காணாமல் சஞ்சலமடைந்தேன் நான். ஒரு சில நாட்களில் பெருமானார் (ஸல்) அவர்களும் மற்ற முஸ்லிம்களும் மதீனாவுக்கு வந்து விட்ட போது நான் திகைப்படைந்தே போனேன்.

''என் ஏந்தல் பெருமான் (ஸல்) அவர்களை எவ்விதம் சென்று நான் சந்திப்பேன். அவர்களின் கேள்விக்கு நான் என்ன பதில் கூறுவேன். நயவஞ்சகர்களில் ஏறத்தாழ எழுபது அல்லது எண்பது பேர்—ஒவ்வொருவராகச் சென்று பெருமானார் (ஸல்) அவர்களைச் சந்தித்து பொய்யான காரணங்களைக் கூறி தங்களின் இயலாமையை மன்னிக்கக் கோரினார்கள். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் 'அல்லாஹ்வே உங்களை மன்னிக்கட்டும்' என்று கூறி அவர்களுக்கெல்லாம் விடை தந்து கொண்டிருந்தார்கள். அவ்விதமே சென்று ஏதாவது காரணம் கூறி தப்பிவர எனக்

கும் யோசனைகள் கூறப்பட்டன. ஆனால் போலிக் காரணங்களை எவரிடம் நான் கூறுவது? உலகாளும் மன்னராக மட்டுமே அவர்கள் இருந்திருப்பின் ஒரு நூறு பொய்க்காரணங்களைக் கூறி நான் தப்பிப்பேன். ஆனால் உள்ளங்களை ஊடுருவிக் காண வல்லமையருளப் பெற்றுள்ள அல்லாஹ்வின் தூதரிடமா நான் பொய் கூறத் துணிவது!

"முப்பதினாயிரம் பேர் பங்கேற்ற தபூக் படையெடுப்பின் போது எந்தப் பதிவேடும் வைக்கப்பட்டிருக்கவில்லை. நான் ஒருவனே அதில் கலந்து கொள்ளவில்லை என்பதை எல்லோருமே அறிந்து கொள்ளப் போவதுமில்லை. நபி பெருமான் (ஸல்) அவர்களும் வழி நெடுகிலும் ஏதும் விசாரிக்கவில்லை. தபூக்கை அடைந்த பின்னரே 'என்ன காரணத்தால் கஅப் இப்னு மாலிக் காணப்படவில்லை' என வினவினார்களாம். 'அவரேன் வரப்போகிறார். வாழ்க்கைச் சொகுசை விட்டு வெளிவர அவருக்கு நேரமேது?' என எங்கள் ஸலமா குடும்பத்தையே சார்ந்த ஒருவர் குறைபட்டிருக்கிறார். ஆனால் "அப்படிச் சொல்லாதீர்' என மஆத் இப்னு ஜபல் குறுக்கிட்டு, 'அல்லாஹ்வின் தூதரவர்களே! நல்ல இயல்புள்ள மனிதரவர். அவரிடத்தில் எந்தக் குறையும் நாங்கள் கண்டதில்லை' என பரிந்துரைத்திருக்கிறார். பெருமானார் (ஸல்) அவர்களும் மவுனித்திருந்து விட்டார்கள். எனவே நான் என்ன காரணம் கூறியிருந்தாலும் எம்பிரான் (ஸல்) அவர்கள் அதனை ஏற்றேயிருப்பார்கள். ஆனால், அதற்கான துணிவு எனக்கில்லை. ஆண்டவனின் அச்சம் என்னை அழுத்திக் கொண்டிருந்தது.''

**ம**னிதப் படைப்பினரிடையே மாநபித் தோழர்கள் பெற்றிருந்த தனியான குணலட்சணம் அதுவே! பெருமான் நபி (ஸல்) அவர்களின் அருட்பார்வை இதயங்களின் மாசையகற்றிஅவற்றை மறுவிலாதொளிரச் செய்துக் கொண்டிருந்தது. எனவே ஹழ்லரத் கஅப் இப்னு மாலிக் (ரலி)

அவர்கள் தங்கள் மாநபியின் முன் மெய்யை மறைத்து மாறான எதையும் பேசுவதேயில்லை என்ற மன உறுதி யுடன் சென்றார்கள். பெருமானார் (ஸல்) அவர்களின் சன்னிதானத்தை அடைந்தபோது அங்கே நிகழ்ந்ததென்ன? அவர்களே கூறுகிறார்கள் :

''பெருமானார் (ஸல்) அவர்கள் என்னைப் பார்த்து முறுவலித்தார்கள். அந்த முறுவலினூடே மகிழ்ச்சியைக் காண நான் தேடினேன். ஆனால் வருத்தமே அதில் மறைந்து தெரிந்தது என் கண்களுக்கு. 'வாரும் அபா அப்தல்லாஹ்! வாரும்' என்றென்னை வரவேற்ற என் ஏந்தலர் (ஸல்) அவர்கள்,''போருக்கு நீர் ஏன் வரவில்லை? உம்மிடம் வாகன வசதி இருக்கவில்லையா? அல்லது உடல் நலமற்றுப் போனீரா?'' என்றெல்லாம் கேட்டார்கள். நான் அமைதி யாகக் கூறினேன்: அல்லாஹ்வின் தூதரவர்களே! என்னிடம் எல்லா வசதிகளுமிருந்தன. என் உடல் நலனிலும் எந்தக் குறையும் இருக்கவில்லை. எனினும் என்னை ஷைத்தான் மிகைத்து விட்டான். என் சோம்பலே என்னை வஞ்சித்து அமரச் செய்து விட்டது என்று நான் அச்சத்துடனேயே கூறி முடிக்கக் கேட்ட அண்ணலார் (ஸல்) அவர்கள், ''நீர் மெய்யே கூறினீர். அப்படியானால் நீர் உம் வீட்டிலேயே தனித்திருந்து உம்மைப் பற்றிய இறைவனின் தீர்ப்பை எதிர் பார்த்துக் காத்திரும்'' என்று கூறிவிட்டார்கள்.

''வெளியில் வந்தபோது 'ஸலமா' குடும்பத்தினர் என் னைச் சூழ்ந்து கொண்டனர். எப்போதும் எந்தக் குறைக் கும் நீர் ஆளானதில்லையே! வஞ்சகர்கள் என்னென்ன காரணங்களையெல்லாம் கூறித் தப்பித்துக் கொண்டார்கள்! நீரும் ஒரு காரணத்தைக் கூறியிருந்தால் பெருமானார் (ஸல்) அவர்கள் ஏற்றிருப்பார்களே என்று கவலை தெரி வித்தார்கள். 'என்னைப் போலவே மற்றெவரும் வந்தனரா?' என அவர்களிடமே விசாரித்தேன். 'ஆம், ஹிலால் இப்னு உமையா, மிறாறா இப்னு ரபீஉ (ரலி) ஆகிய இருவரும்

வந்தார்கள். அவர்களும் நீர் கூறியவாறே கூறினார்கள். பெருமானார் (ஸல்) அவர்கள் உமக்களித்த தீர்ப்பையே அவர்களுக்கும் அளித்து அனுப்பினார்கள்' என கூறப்படக் கேட்டு நான் மன ஆறுதலடைந்தேன். அவ்விருவரும் பத்ருப் போரில் பங்கேற்ற புனிதர்கள். அவர்களும் நான் கூறியபடி தான்கூறினார்கள் என்றால் நான் கூறியது மிகச் சரி. மாறாக நான் எதைக் கூறியிருந்தாலும் பெருமானார் (ஸல்) அவர்கள் அதனை ஏற்றே இருக்கலாம். ஆனால் பின்னர் 'வஹீ' யின் வாயிலாக உண்மை அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டு விடுமானால் அதற்குப் பின் எந்த முகத்தோடு அவர்கள் முன்சென்று நிற்பேன். இப்போது நான் மெய்யே உரைத் திருப்பதன் காரணமாகவாவது இறைவனின் புறமிருந்து ஒரு நல்ல தீர்ப்பே எனக்குக் கிடைக்கலாம் என்ற நம்பிக்கையுடன் வீடு திரும்பினேன்.

''சோதனையின் மறு அத்தியாயம் எங்களுக்குத் துவங் கியது! மாநபி பெருமான் (ஸல்) அவர்கள் எந்த ஒரு முஸ் மும் எங்களோடு பேசவோ, எங்களருகே அமரவோ கூடாது என கட்டளையிட்டு விட்டார்கள். அதன்படியே எந்த முஸ்லிமும் எங்களோடு பேசுவதில்லை; எங்கள் மூவரையும் ஏறெடுத்தும் பார்ப்பதுமில்லை; நாங்கள் எவரும் ஸலா முரைத்தாலும் பதிலுரைப்பதுமில்லை. ஹிலால் இப்னு உமையா, மிறாறா இப்னு ரபீஉ (ரலி) ஆகிய இருவரும் தங்களின் முதுமையின் காரணமாக வீடுகளை விட்டும் வெளிவருவதில்லை; தங்களின் விதியை நினைத்து அழுத வண்ணம் முடங்கிக் கிடந்தார்கள். நான் மட்டும் வழமை போல் வீதிகளில் நடமாடிக் கொண்டுதானிருந்தேன்; கடைத் தெருக்களுக்கெல்லாம் செல்வேன்; தொழுகைக் காக பள்ளிக்கும் வருவேன்; கூட்டுத் தொழுகைகளிலும் கலந்து கொள்வேன்; தொழுகை முடிந்து ஒரு புறம் அமர்ந் திருப்பேன். எவரும் என்னிடம் பேச மாட்டார்கள்; என் னைத் திரும்பியும் பார்க்க மாட்டார்கள். அவர்களில் எவ

ரும் என்னை அறியவே மாட்டார்கள் போல் தோன்றியது சூழல். ஏதோ ஒரு புதிய பூமிக்குத் தடம் பெயர்ந்து வந்து விட்ட அன்னியனாகவே நான் காணப்பட்டேன். பூமி எவ்வளவோ விரிந்திருந்தும் எனக்கு அது சுருங்கி விட்டது. என் உயிர் எனக்கு கனக்கலாயிற்று. என்றாலும் நான் தொய்வடையவில்லை; வேளை தவறாமல் பள்ளிக்குச் சென்ற வண்ணமிருந்தேன்; பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஸலாமுரைப்பேன்; அவர்களின் உதடுகளில் இலேசான அசைவாவது தெரியாதா என கவனிப்பேன். தனித்துத் தொழும் போது கூட, அண்ணலார் (ஸல்) அவர்கள் என்னைப் பார்க்கிறார்களா என ஓரக் கண்களாலேயே பதுக்கமாக நோட்டமிடுவேன். என் ஏந்தல் பெருமான் (ஸல்) என்னைப் பார்த்து கொண்டுதான் இருப்பார்கள். அந்தப் பார்வையில் பரிவையும் நான் கண்டேன். ஆனால் நான் தொழுகையை சலாமுரைத்து முடிக்குமுன் சட்டென அவர்கள் தங்கள் முகத்தைத் திருப்பிக் கொள்வார்கள். கலக்கம் என்னை வெகுவாக அலைக்கழித்த ஒரு நாள் நான் மதீனாவை விட்டும் வெளியே நடந்தேன். என் ஒன்று விட்ட சகோதரர் அபூகத்தாதாவின் தோட்டம் எதிரே தெரிந்தது. அதன் மதில் மேல் ஏறி நின்ற எனக்கு உள்ளே அபூகத்தாதா பணியில் ஈடுபட்டிருப்பது தெரிந்தது. நான் ஸலாமுரைத்தேன். பதிலேதும் கூறவில்லை அவர்; தம் முகத்தையும் திருப்பிக் கொண்டார். என் சிறிய தந்தையின் மகன் மட்டுமல்ல அபூ கத்தாதா, இளமை முதலே என்னோடு ஒன்றித்து வளர்ந்த உயிர்த் தோழரும் கூட. ''அபா கத்தாதா! நான் ஓர் இணை வைப்பவனல்லன்; நயவஞ்சகனுமல்லன்; அல்லாஹ்வையும் அவன் தூதரையும் உளமாற நேசிப்பவன் என்பது உமக்குத் தெரியாதா? அவ்வாறிருந்தும் என்னிடம் நீர் ஏன் பேசுவதில்லை?'' என நான் கேட்டேன். அவர் ஏதும் பதில் கூறவில்லை. மறு முறையும் மறு முறையும் அவ்வாறே கேட்டேன். மூன்றாம் முறையாகக் கேட்ட போது 'அல்லாஹ்வும் அவன் தூதருமே அதனை அறிந்த

வர்கள்' என்று மட்டும் கூறி அவர் திரும்பிக் கொண்டார். என் கண்கள் நீரை உகுத்தபடியே சுவரை விட்டும் நான் இறங்கினேன். மீண்டும் என் கால்கள் நகரின் புறம் திரும்பின.

''நாற்பது நாட்கள் கழிந்து போயிருந்தன. மற்றொரு நாள் நான் வீதியில் நடமாடிக் கொண்டிருந்தபோது, தானியப் பொதிகளோடு வாணிப நிமித்தம் மதீனா வந்திருந்த ஒரு கிருஸ்துவர் என்னைப் பற்றி விசாரித்த வண்ணமிருந்தார். மக்களில் ஒருவர் 'இவர்தாம்' என என்னைக் காட்டி விட்டு நகர்ந்தார். என்னை அணுகினார் அக்கிருஸ்துவர். கஸ்ஸானிய அரசரிடமிருந்து தாம் வந்திருப்பதாகக் கூறிக் கொண்ட அவர் பட்டுத் துணியால் சுற்றப்பட்டிருந்த ஒரு கடிதத்தை என்னிடம் தந்தார். அவரின் அரசரின் கடிதமே அது. அதனைப் பிரித்து நான் படித்தேன். ''உம்முடைய தலைவர் தம்மை விட்டும் உம்மைப் பிரித்து விட்டதாகவும், இதர மக்களும் உம்மைப் பிரிந்து நிற்பதாகவும் நாமறிந்தோம். அவ்வாறான அவர்களின் அலட்சியத்துக்கோ அவமதிப்புக்கோ உரித்தாக வேண்டியவரல்லர் நீர். இக்கடிதம் கண்டதும் புறப்பட்டு நீர் எம்மிடம் வந்தீரானால் உம்முடைய கண்ணியத்தையும் மரியாதையையும் நாம் எவ்விதம் உயர்வடையச் செய்கிறோம் என்பதைக் காண்பீர்—என எழுதப்பட்டிருந்த வாசகங்கள் என் தலையைச் சுழலச் செய்தன. முன்னரே ஓர் அலட்சியத்தால் இம்மை வாழ்வைக் குலையச் செய்து கொண்ட என் மறுமை வாழ்வையும் பாழடையச் செய்ய வந்த சோதனையா இது? என்றெண்ணிய போது கவலையும் கோபமும் என்னைச் சூழ்ந்து கொண்டன. ''என் ஏந்தலரின் இந்த அலட்சியப் பார்வை அந்த அரச போக வாழ்வை விட ஆயிரம் மடங்கு மேலானது எனக்கு. அவர்களின் கருணையுள்ளம் என் மறுமை வாழ்வை அழகாக்கும். போய்ச் சொல்லும் உம் அரசரிடம்'' என நான் அக்கிருஸ்துவரிடம் இரைந்தேன்.

அக்கடிதத்தையும் சுக்கல் சுக்கல்களாகக் கிழித்து அவரின் எதிரிலேயே தீயிட்டுப் பொசுக்கினேன். இந்தச் செய்திகளும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு தெரியத்தான் செய்தன.

''என் நிலைமை மோசமாகத் தொடங்கிய நாற்பதாம் நாள் பெருமான் (ஸல்) அவர்களின் மற்றொரு தோழர் எனக்காக அங்கே காத்திருந்தார். நான் என் மனைவியை விட்டும் விலகியிருக்க வேண்டுமென நபிபெருமான் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டிருப்பதாக அவர் கூறினார். 'விவாக விலக்கு செய்திட உத்திரவிட்டார்களா?'' என வினவினேன். 'இல்லை, பிரிந்திருந்தால் போதுமானது' என்றாரவர். உடனே நான் என் மனைவியை அவளின் தாய் வீட்டுக்கு அனுப்பி விட்டேன்; அங்கேயே தங்கி என் பற்றிய இறைவனின் தீர்ப்பைக் கேட்கக் காத்திருக்குமாறு கூறினேன்.

''மற்ற இரு தோழர்களுக்கும் அதே விதமாகத்தான் கட்டளையிடப்பட்டிருந்தது. ஹிலால் (ரலி) அவர்களின் மனைவி நபிபெருமான் (ஸல்) அவர்களிடம் வந்து, தம் கணவர் முதுமையால் பலஹீனமடைந்து விட்டிருப்பதால் அவருக்குப் பணிவிடை செய்ய தம்மை அனுமதிக்க வேண்டுமென கோரினார். அவ்வாறே அவருக்கு அனுமதியளித்த அண்ணலார் (ஸல்) படுக்கையை விட்டும் விலகியிருக்க கண்டிப்பாய் எச்சரித்தார்கள். 'அவருக்கிருக்கும் கவலையிலும் துக்கத்திலும் அந்த நினைவு குறுக்கிட இடமே இல்லை' என்றவராக விடைபெற்றார் அவ்வம்மையார். அவ்வாறே அனுமதி பெற எனக்கும் யோசனை கூறப்பட்டது. ஆனால் நான் முதியவனல்லனே! எனவே நான் தனித்தேயிருந்தேன்.

''மேற்கொண்டும் பத்து நாட்கள் ஓடி மறைந்தன. சரியாக ஐம்பதாம் நாள் காலை, என் நிலையை எண்ணி நொந்தவனாக நான் என் வீட்டின் மேல் தளத்தில் படுத்துக்

கிடந்தேன். காலை தொழுகை முடிந்து விட்டிருந்தது. திடீரென, ''கஅபுக்குச் சோபனமுண்டாகட்டும். இறைவன் அவரின் பச்சாதாபத்தை ஏற்றுக் கொண்டான்'' என ஒரு குரல் மலையுச்சியிலிருந்து ஒலித்தது. ஸித்தீக்குல் அக்பர் ஸையிதினா அபூ பக்கர் (ரலி) அவர்களின் குரலே அது என்பது எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. உடனே நான் சிரம் பணிந்து என் இறைவனுக்கு நன்றி செலுத்தினேன். சற்று நேரத்தில் தம் புரவிமீதமர்ந்து வந்த மற்றொரு தோழர் என் முன் வந்து நின்று இச்செய்தியைக் கூறினார். எனக்கேற்பட்டிருந்த மகிழ்ச்சியில் நான் போர்த்தியிருந்த இரண்டு மேலாடைகளையும் கழற்றி அவருக்கு அன்பளிப்பாகத் தந்து விட்டேன்.''

காலைத் தொழுகைக்குப்பின் நபி பெருமான் (ஸல்) அவர்கள் பள்ளியில் தோழர்களிடையே இந்நற்செய்தியை அறிவித்தார்கள். அதனைக் கஅப் (ரலி) அவர்களிடத்தில் சென்றறிவிக்க பல தோழர்கள் புறப்பட்டனர். அந்தப் பேற்றினை முதலில் தாமே பெற்றுக் கொள்ள வேண்டுமென எண்ணி தம் புரவியில் இவர்ந்து முந்திக் கொண்டார் ஒரு தோழர். ஆனால் நன்மைகளை அள்ளிச் சேர்ப்பதில் ஸித்தீக்குல் அக்பர் ஸையிதினா அபூ பக்கர் (ரலி) அவர்களை மிகைக்க வல்லவர் எவர்! பள்ளிக்கும் ஹழ்லரத் கஅப் (ரலி) அவர்களின் இல்லத்துக்கும் இடையேயிருந்த ஒரு மலையைச் சுற்றிக் கொண்டுதான் மற்றவர்களெல்லாம் செல்ல வேண்டியிருந்தது. ஆனால் ஹழ்லரத் அபூ பக்கர் (ரலி) அவர்கள் அந்த மலையின் மீதே ஏறி நின்று உரத்த குரலால் பெருமானார் (ஸல்) அவர்களின் நன்மாராயத்தை அனைவருக்கும் முன்பாக ஹழ்லரத் கஅப் (ரலி) அவர்களின் செவிபடச் செய்து விட்டார்கள்.

மாற்றாடை வாங்கியுடுத்துக் கொண்டு தங்கள் மாநபியைக் காண புறப்பட்டனர் ஹழ்லரத் கஅப் (ரலி). வழி

நெடுகிலும் அவர்களைக் கண்ட மற்ற தோழர்கள் வாழ்த்துகளை வழங்கினர். பள்ளியை அடைந்தனர் ஹழ்ரத் கஅப் (ரலி). இவர்களின் முஹாஜிர் சகோதரர் ஹழ்ரத் தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி) அவர்கள் சபை நடுவேயிருந்து எழுந்து நின்றனர்; ஓடிச் சென்று வாழ்த்துக்களைப் பொழிந்து இவர்களை ஆரத் தழுவிக் கொண்டனர். மற்ற தோழர்கள் அமைதியோடு அமர்ந்திருந்தனர். அனைவருக்கும் ஸலாமுரைத்து பெருமானார் (ஸல்) அவர்களின் முன் அமைதியுடன் வந்தமர்ந்தனர் ஹழ்ரத் கஅப் (ரலி).

அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களின் திருமுகம் விண்ணின் மதியாய்த் தண்ணொளி பரப்பிக் கொண்டிருந்தது. ''அபா அப்தல்லாஹ்! உம் தாயின் வயிற்றிலிருந்து நீர் பிறந்த நாள் முதல் இன்றைக்கிடைப்பட்ட நாட்களில் இதை விட மேலான மங்களகரமான நாள் உமக்கு மற்றெதுவுமில்லை'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் புகழ்ந்தார்கள். ''பெருமானே! தாங்கள் என்னை மன்னித்து விட்டீர்களா?'' என ஹழ்ரத் கஅப் (ரலி) அவர்கள் கண்கள் கலங்க வினவினார்கள். ''இல்லை. உம்முடைய இறைவனே உம்மை மன்னித்து விட்டான்'' என்றுரைத்த நாயகமாமணி (ஸல்) அவர்கள் தங்கள்பால் வந்திருந்த புதிய செய்தியை ஓதலானார்கள் :

وَعَلَى الثَّلٰثَةِ الَّذِيْنَ خُلِّفُوْا حَتّٰٓى اِذَا ضَاقَتْ عَلَيْهِمُ الْاَرْضُ بِمَا رَحُبَتْ وَضَاقَتْ عَلَيْهِمْ اَنْفُسُهُمْ وَظَنُّوْٓا اَنْ لَّا مَلْجَاَ مِنَ اللّٰهِ اِلَّآ اِلَيْهِ ثُمَّ تَابَ عَلَيْهِمْ لِيَتُوْبُوْا اِنَّ اللّٰهَ هُوَ التَّوَّابُ الرَّحِيْمُ

''(அல்லாஹ்வின் உத்திரவை எதிர்பார்த்துத் தீர்ப்பு கூறாது) விட்டு வைக்கப்பட்டிருக்கும் மூவரையும் (அல்லாஹ் மன்னித்து விட்டான்.) பூமி இவ்வளவு விஸ்தீரணமாக இருந்தும் [அது] அவர்களுக்கு

> மிக்க நெருக்கமாகி, அவர்கள் உயிர் வாழ்வதும் மிகக் கஷ்டமாகி விட்டது. அல்லாஹ்வையன்றி, அவனை விட்டும் தப்புமிடம் அவர்களுக்கு இல்லவே இல்லை என்பதையும் அவர்கள் திண்ணமாக அறிந்து கொண்டனர். ஆதலால் அவர்கள் (பாவத்திலிருந்து) விலகிக் கொள்ளும் பொருட்டு அவர்(களுடைய குற்றங்)களை மன்னி(த்து அவர்களுக்கு அருள் புரிந்)தான். நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்போனும் கிருபையுடையோனுமாயிருக்கிறான். —அல்குர்ஆன் 9 : 118

இறைவன் தம்பால் புரிந்த இந்தப் பேரருளுக்கு நன்றியாகத் தங்களின் உடைமைகளனைத்தையும் அவன் பெயரால் அறம் வழங்கிடத் துணிந்தனர் ஹழ்லரத் கஅப் இப்னு மாலிக் (ரலி). ஆனால் அவ்வாறு செய்வதன் மூலம் வறுமையின் வயப்பட்டு விடவேண்டாம் என அவர்களை எச்சரித்து பெருமான் நபி (ஸல்) அவர்கள் அவரின் உடைமைகளில் முன்றிலொரு பங்கைத் தானம் வழங்கிடக் கூறினார்கள்.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! நான் உண்மையை ஒப்புக் கொண்டதன் காரணமாகவே என்னை மன்னித்தருளிய அந்த என் இறைவனுக்கு நான் வாக்களிக்கின்றேன்: இனியும் என் வாழ்நாளில் எந்தச் சமயத்திலும் நான் உண்மையையே நிலை நிறுத்துவேன். என் வாழ்நாளில் இன்று வரை நான் என் மனமறிந்து எந்தத் தவற்றையும் செய்யத் துணிந்ததில்லை. இன்று என் மீது சொரியப் பட்டுள்ள என் இறைவனின் கருணையும் கிருபையும் ஈடிணை இல்லாதது. இனியும் என் வாழ்நாள் முழுதும் என்னை என் இரட்சகன் சகல வழிகளிலும் காத்தருள் புரிவான் என்ற நம்பிக்கையில் நான் உறுதி கொள்கிறேன்.'' என்று தம் உணர்ச்சிகளைப் பொழிந்த ஹழ்லரத் கஅப் (ரலி) அவர்கள் கைபரில் தமக்கிருந்த உடைமைகள் அனைத்தையும் அல்லாஹ்வின் பெயரால் தானமாக வழங்கினார்கள்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அவையினை அழகு பெறச் செய்த முப்பெருங்கவிஞர்களில் ஹழ்லரத் ஹஸ்ஸான் இப்னு ஃஸாபித் (ரலி) அவர்கள் எதிரிகளின் பாரம்பரிய இழுக்கினைப் பழித்துப் பாட, ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்கள் அவர்களின் நிராகரிப்பினை இழித்துப் பாட, ஹழ்லரத் கஅப் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் தங்கள் போர்ப் பரணிகளால் வைரிகளின் நெஞ்சங்களைக் கலங்கச் செய்து வந்தார்கள். இவர்களின் கவிதைகளால் மகிழ்ந்து அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் 'ஒரு முஸ்லிம் தம் வாளாலும் நாவாலும் போர் செய்கிறார்' என புகழ்ந்துரைத்தார்கள்.

கலீஃபா உஃஸ்மான் (ரலி) அவர்கள் கொல்லப்பட்ட அன்று இவர்கள் பாடிய இரங்கற்பா இதயங்களைக் கரையச் செய்தது. அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் பிரிவுக்குப் பின் முப்பத்தொன்பதாண்டு காலம் உயிர் வாழ்ந்திருந்த இவர்கள் குழப்பம் சூழ்ந்த காலத்தில் எப்புறமும் சாராது தனிமையில் அமைதி காத்தனர். எனினும் அத்தனிமையிலும் அவர்கள் மேற்கொண்டிருந்த அறிவியல் பணியை அவர்களால் வெளியிடப்பட்டுள்ள எண்பது ஹதீஃஸ்கள் அடையாளங் காட்டுகின்றன. அப்துர் ரஹ்மான், அப்துல்லாஹ், உபைதுல்லாஹ், முஈத், முஹம்மத் எனப்பட்ட ஐந்து ஆண்மக்களைத் தம் வழிவாறுகளாக வாழவிட்டு இந் நாயகப் பெருந்தோழர் ஹிஜ்ரி 50—ல் ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்களின் ஆளுகையின்போது தம் எழுபத்தெட்டாம் வயதில் மரணமடைந்தார்கள்.

# 10. ஹழ்லாத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி)

"பயணத்தை எளிதாக்கி வைத்து சுகமே எங்களை எல்லையில் கொணர்ந்து சேர்த்த இரட்சகா!

''கிருபாவாரியை அள்ளிச் சொரிவதே உன் மகிமையா கும். குறைகள் அனைத்தை விட்டும் நீ தூய்மையானவன். என்னை என் குடும்பத்தாரளவில் மீட்டுச் செல்லாதே.

''முஸ்லிம்கள் இதோவந்துவிட்டனர்;(இப்னுரவாஹா!) ஸிரிய பூமியின் குடியிருப்புக்குச் சமீபமாக உன்னை விட்டு விட்டனர். கருணை நிறைந்த (இறை)வனின்பால் செல்ல உன்னை விட்டு, எல்லா உறவினர்களும் தங்களின் பந்தங் களை அறுத்துக் கொண்டனர்.

''(என்) ஈத்தஞ் சோலையே! பழுத்துத் தொங்கும் உன் குலையை உண்டு மகிழ பறிக்க வேண்டிய தேவை இப் போது எனக்கில்லை — என்ற பொருள் பதிந்த கவிதா வரிகளைப் பாடிய வண்ணம் தம் வாகனத்தைச் செலுத்திக் கொண்டிருந்தனர் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா [ரலி].

ஸிரியர்களோடு போராட மூவாயிரம் பேர்களைக் கொண்ட ஒரு படையை ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு ஹாரிஃஸ் [ரலி] அவர்களின் தலைமையில் அனுப்பி வைத்த அண்ணல் எம்பெருமானார் [ஸல்] அவர்கள், ஒருக்கால் படைத்தலை வர் ஜ்ஸைத் [ரலி] போரில் கொல்லப்பட்டுப் போனால் ஹழ்லரத் ஜஅஃபர் இப்னு அபூதாலிப் [ரலி] அவர்கள் படைத் தலைமையை ஏற்க வேண்டுமெனவும், அவரும் கொல்லப்பட்டால், ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்கள் படைத்தலைமையை ஏற்க

வேண்டுமெனவும், அவரும் கொல்லப்பட்டுப் போனால் படையினர் தாங்களாகவே ஒரு தலைவரைத் தங்களுக்கிடையே தெரிந்தெடுத்துக் கொள்ள வேண்டுமெனவும் கட்டளையிட்டிருந்தார்கள். வீரமரணம் அவர்களுக்கு விதிக்கப்பட்டு விட்டது என்பதை உணர்த்த அந்தச் சைக்கினையே அம்மூவருக்கும் போதுமானதாயிருந்தது. அதனால் எழுந்த மனக்கிளர்வையே மந்தகாசக் குரலில் கவிதையாகப் பொழிந்து கொண்டு சென்றனர் ஹழ்லரத் இப்னு ரவாஹா (ரலி). ஆனால் அதில் தொனித்த மரணத்தின் வாடையை நுகர்ந்து கலங்கினார் பின்னால் அமர்ந்திருந்த ஓர் இளைஞர். அவரின் அழுகுரல் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்களுக்கு எரிச்சலூட்டியது. ஒட்டகையினின்றும் பாய்ந்திறங்கி ''சிறுவனே! அல்லாஹ் எனக்கு வீர மரணத்தை அருள் புரிந்து இவ்வுலகின் துயரங்களிலிருந்தும் துன்பங்களிலிருந்தும் விடுதலை நல்கினால் உனக்கென்ன இழப்பு'' என்று சினந்தவர்களாகத் தரையில் மண்டியிட்டு விழுந்தார்கள்; நீண்ட நேரம் பிரார்த்தித்து பின்னர் எழுந்த அவர்கள், அந்த இளைஞரை நோக்கி ''மகனே! என் இறைவன் என் வேண்டுதலை ஏற்றுக் கொண்டான். நீ என் வாகனத்தில் பாதுகாப்பாக அமர்ந்து குடும்பத்தளவில் திரும்பச் செல்'' என்றார்கள்.

எண்ணியவாறே வீர மரணம் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்களை அணைத்தது. வீடு திரும்பினார் இன்னும் இருபது வயதுகளையும் அடையப் பெறாத ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி).

**ஹி**ஜ்ரத்தின்போது மிகச் சிறுவர் ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி). அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் பவனி மதீனாத் திருநகருள் நுழைவதைத் தொலைவிலேயே கண்டு, தங்களின் விளையாட்டை மறந்து, 'ஜாஅ ரஸூலுல்லாஹ், ஜாஅ ரஸூலுல்லாஹ்

—அல்லாஹ்வின் தூதர் வந்து விட்டார்கள், அல்லாஹ்வின் தூதர் வந்து விட்டார்கள்' என குதூகலித்து, தங்கள் வீடுகளுக்குச் சேதி கூற ஓடியவர்களுள் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி) அவர்களும் ஒருவர்,

கஸ்ரஜ்களைச் சார்ந்த ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி) சிறு குழந்தையாக இருந்தபோதே தந்தையை இழந்தனர். கருணை மனமும் தயாள குணமும் கொண்ட ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா [ரலி] பாரம்பரியத் தொடர்பில் சிறிய தந்தை முறையாக வேண்டும் இவர்களுக்கு. அன்னவரே குழந்தை ஜ்ஸைதைத் தம் பொறுப்பில் ஏற்று வளர்க்கலாயினர். அக்கபாவில் அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களைச் சந்தித்து மதீனா திரும்பிய ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா [ரலி] அச்சமயம் எட்டே வயதுகளை அடைந்திருந்த சிறுவர் ஜ்ஸைதுக்கும் இஸ்லாமியக் கோட்பாடுகளைக் கற்பித்துக் கொடுத்தனர். சிற்றப்பரின் நல்லுரையினை ஏற்று பாலகர் ஜ்ஸைதும் ஹிஜ்ரத்துக்கு முன்னதாகவே இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டனர்.

பருவமடையாதிருந்த காரணத்தால் இவர்கள் பத்ரு, உஹது போர்களில் பங்கேற்க அனுமதிக்கப்படவில்லை. ஹிஜ்ரி 5-ம் ஆண்டில் நடைபெற்ற போருக்காக அகழ் தோண்டும் பணியிலேயே முதன் முதலாக ஆர்வமுடன் பங்கேற்ற இவர்கள் அதனைத் தொடர்ந்து அண்ணலவர்களின் காலத்தில் நடைபெற்ற அனைத்துப் போர்களிலும் பங்கேற்றுள்ளனர். இவர்களின் சொல்லை, பொய்யான தன் சத்தியத்தினால் பொய்ப்பிக்க நயவஞ்சகர்களின் தலைவனான அப்துல்லாஹ் இப்னு உபை செய்த முயற்சியை இறைவனே தன் வேத வசனங்களால் முறியடித்தான். அதுவே இஸ்லாத்தின் மூலம் ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் [ரலி] மிக இளம் வயதிலேயே பெற்ற பெரும் பேறாகும்.

அகழ்ப் போரிலிருந்து விரண்டு திரும்பிய குரைஷி களின் தூண்டுதலால் பனீ முஸ்த்தலிக் என்னும் ஓர் அரபுக் கோத்திரத்தார் மதீனாவின் மீது படையெடுத்து வர முன் னேற்பாடுகளை மேற்கொண்டுள்ள செய்தி அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களுக்குக் கிட்டியது. புதிய அவ்விஷ மிகளை அவர்களின் எல்லையிலேயே சென்று முடமாக்கி விடத் திட்டமிட்டு அண்ணலார் [ஸல்] அவர்கள் முஹா ஜிர்களோடும் அன்ஸார்களோடும் புறப்பட்டார்கள். நய வஞ்சகர்களும் பலர் இப்படையெடுப்பில் கலந்து கொண் டார்கள்.

தாக்குதலில் பெரு வெற்றியும் பெற்று முஸ்த்தலிக் களை முறியடித்த முஸ்லிம்கள் ஓய்வுக்காக அங்கேயே தங்கி யிருந்தார்கள். அவர்களில் இருவர் அங்கிருந்த ஒரு கிணற்ற டியில்நீர் இறைத்துக் கொண்டிருந்தார்கள். ஒருவர்முஹாஜிர் களைச் சார்ந்த ஜஹ்ஜாஹ் கிப்ஃபாரீ (ரலி), மற்றவர் அன்ஸார்களின் ஆதரவைப் பெற்றிருந்த 'ஜுஹைனா' கோத்திரத்தைச் சார்ந்த ஸினான் இப்னு வப்ரா (ரலி). திடீரென அவ்விருவருக்குள் ஏதோ சச்சரவேற்பட்டு முஹா ஜிர் தோழர் அன்ஸார்களின் ஆதரவாளரை அடித்து விட்ட னர். உடனே அன்ஸார்களைச் சார்ந்த அத்தோழர் அன்ஸார் களை உதவி கோரி அழைத்தார். அன்ஸார்கள் சிலர் கூடி விடவே முஹாஜிர் தோழரும் அச்சமடைந்து முஹாஜிர் களைக் கூவியழைத்தார். அவர்களிலும் சிலர் கூடி விட்ட னர். இரு சாராரும் வாதிட்டுக் கொண்டனர். தர்க்கம் வளர்ந்து அதனால் எழுந்த கூச்சல் கூடாரத்துள் ஓய்வு கொண்டிருந்த அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் செவியையே எட்டியது. உடனே அண்ணலார் (ஸல்) அவர் கள் எழுந்து வெளியே வந்து பார்த்தபோது தர்க்கஞ் செய்துக் கொண்டிருந்த இரு சாராரிலும் ஒரு சிலர் வாட் களையே உருவிப் பிடித்திருந்த காட்சி பெருமானார் (ஸல்) அவர்களையும் வருத்தமடையச் செய்தது.

''என்ன இது அறியாமைக் காலத்தின் கூச்சல், உங்களின் தற்போதைய நிலைமை என்ன? அறியாமைக் காலத்தின் இந்தக் கூக்குரல் உங்களிடையே எங்ஙனம் எழுந்தது?'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் எழுப்பிய வினாக்கள் அனைவரையும் உணர்வு மீளச் செய்தன. அவர்கள் ஹழ்லரத் ஐஹ்ஜாஹ், ஸினான் (ரலி) இருவரின் கரங்களையும் பிடித்து ஒன்று சேர்த்து ஒருவரோடொருவர் கட்டி அணைத்து மகிழச் செய்தார்கள்; பகை மறைந்து எல்லோர் முகங்களிலும் நகை மலர்ந்து அவரவர்களின் இருப்பிடங்களுக்கே திரும்பினார்கள்.

ஒரு புறம் அழுக்கடைந்த மனங்களைக் கொண்ட தன் சீடர்களுடன் அமர்ந்து வஞ்சக நெஞ்சினனான அப்துல்லாஹ் இப்னு உபையும் உரையாடிக் கொண்டிருந்தான். கிணற்றடியின் கூச்சல் அவன் செவிகளிலும் விழுந்தது. என்ன விஷயம் என விபரமறிந்து வர தன் சீடர்களுள் ஒருவனையே அனுப்பி வைத்தான் அப்துல்லாஹ். அவன் சென்று வந்து எல்லா விவரங்களையும் கூறினான். உடனே அப்துல்லாஹ் வின் மூளை துருதுருக்கலாயிற்று. இந்தச் சம்பவத்தை எரியச்செய்வதெப்படி என திட்டமிட்டான். அவனின் நாவு தன் உபதேசத்தைத் துவங்கிற்று. ''எல்லாம் உங்கள் கரங்களால் நீங்களே தேடிக் கொண்ட தீவினை. அகதிகளாக வந்த அவர்களுக்கு நீங்கள் உங்கள் உணவுகளிலும் உடைமைகளிலும் சம பங்கைப் பிரித்துத் தந்தீர்கள். அதனை உண்டு இன்று அவர்கள் உங்கள் மீதே ஆதிக்கம் செலுத்த நினைக்கிறார்கள். 'நாய்க்கு உணவூட்டி கொழுக்கச் செய். அது உன்னையே தன் உணவாக்கிக் கொள்ளும்' என்ற சொல் இவர்களின் விஷயத்தில் மிகவும் சரியாகி விட்டது. இனி மதீனாவுக்குத் திரும்பிய பின் மேன் மக்களாகிய நாம் இந்த ஈனர்களை விரட்டியடிப்போம். இவர்களெல்லாம் தங்களின் தேவைகளை இறை தூதரிடமேயல்லவோ

பெற்றுக் கொள்கிறார்கள். இனி இவர்கள் பிரிந்து செல்லும் வரை நீங்கள் எதையும் அந்தத் தூதரின் சன்னிதானத்துக்கு அனுப்பி வைக்காதீர்கள், அப்படிச் செய்தாலே இவர்களெல்லாம் பசிதாங்காமல் தாங்களாகவே மதீனாவை விட்டும் ஓடி விடுவார்கள் — என்றெல்லாம் அப்துல்லாஹ் இப்னு உபை செய்த உபதேசங்களைத் தற்செயலாக அவ்வழியே வந்த ஹழ்ரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி) அவர்களின் செவிகளும் கேட்டு விட்டன.

அச்சமயம் ஹழ்ரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி) மிகச் சிறுவராகவே இருந்தனர். எனினும் அவர்களின் நெஞ்சில் நிறைந்த நம்பிக்கை — ஈமான் — குமுறியது. அவர்களும் ஓர் அன்ஸாராகவே இருந்த போதினும் முஹாஜிர்களைப் பற்றிய தூஷணையான சொற்களைப் பொறுக்க முடியவில்லை அவர்களால். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் ஒரு முஹாஜிரேயன்றோ. தங்களின் மனக்குமுறலை ஹழ்ரத் ஜ்ஸைத் (ரலி) அவர்கள் தங்களின் சிறிய தந்தை ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்களிடம் வெளியிட, சீற்றமடைந்த ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் எல்லா செய்திகளையும் தெரிவித்து விட்டார்கள்.

நபிபெருமான் (ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு உபையை அழைத்து விசாரித்தபோது தான் அப்படிச் சொல்லவே இல்லை என சாதித்தானவன்; ''பெருமானே! தங்களை அல்லாஹ்வின் தூதரென சத்தியமாக ஏற்றிருப்பவன் நான். இந்தச் சம்பவத்துக்கும் எனக்கும் தொடர்பே இல்லையே! அவ்வாறிருக்க நான் இப்படியெல்லாம் பேசுவேனா? இது அபாண்டமான பழி'' என்று பலவாறாக சமாதானம் கூறி அடித்தடித்து சத்தியம் செய்தான். அந்தத் தோரணை சிறுவர் ஜ்ஸைதே ஏதோ கேட்டு வேறேதோ தவறாகக் கூறியிருக்கலாம் என சிறிய தந்தையார் இப்னு ரவாஹா (ரலி) அவர்களுட்பட பல மூத்த அன்ஸார்களை

முடிவு கொள்ளச் செய்தது. வீணாக தூதர் நாயகம் (ஸல்) அவர்களை வெறுப்படையச் செய்து விட்டதாக, தம் சிறிய தந்தையாருட்பட பலரும் கண்டிக்கக் கேட்டு மனஞ் சோர்ந்து ஒரு புறம் அமர்ந்து விட்டனர் ஹழ்ரத் ஜ்ஹைத் இப்னு அர்க்கம் (ரலி). வீணர்களின் நடிப்புத் திறனுக்கு முன் வலுவிழந்து போன தம்முடைய சொல்லை உண்மைப் படுத்த நாதியற்றுப் போன கதியை எண்ணி அவர்கள் தனிமையில் கண்ணீர் உகுத்தனர். அவர்களின் நெஞ்சத்தின் ஒலம் அல்லாஹ்வின் மணி மண்டபத்தையே எட்டி விட்டது.

சற்று நேரத்தில் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு வேத வெளிப்பாடுகள் தோன்றலாயின :

إِذَا جَاءَكَ الْمُنَافِقُونَ قَالُوا نَشْهَدُ إِنَّكَ لَرَسُولُ اللَّهِ وَاللَّهُ يَعْلَمُ
إِنَّكَ لَرَسُولُهُ وَاللَّهُ يَشْهَدُ إِنَّ الْمُنَافِقِينَ لَكَاذِبُونَ ○

"(நபியே! உள்ளொன்று வைத்து புறமொன்று பேசும்) நயவஞ்சகர்கள் உம்மிடம் வந்து, "நிச்சயமாக நீர் அல்லாஹ்வின் தூதர்தாம் என்று நாங்கள் சாட்சி கூறுகின்றோம்'' என்பதாகக் கூறுகின்றனர். நிச்சயமாக நீர் அவனுடைய தூதர்தாம் என்பதை அல்லாஹ் நன்கறிவான். எனினும் இந்நயவஞ்சகர்கள் நிச்சயமாகப் பொய்யையே கூறுகின்றனர் என்று அல்லாஹ் சாட்சியம் கூறுகிறான்.'' என தொடங்கிய (63 : 1) வேத வெளிப்பாடுகளிடையே,

هُمُ الَّذِينَ يَقُولُونَ لَا تُنْفِقُوا عَلَىٰ مَنْ عِنْدَ رَسُولِ اللَّهِ حَتَّىٰ يَنْفَضُّوا
وَلِلَّهِ خَزَائِنُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَلَٰكِنَّ الْمُنَافِقِينَ لَا يَفْقَهُونَ ○

"இவர்கள்தாம் (மற்ற ஜனங்களை நோக்கி,) "அல்லாஹ்வுடைய தூதருடன் இருப்பவர்கள் (அவரை

விட்டும்) கலைந்து விடும் வரையில் அவர்களுக்கு நீங்கள் யாதொரு தானமும் செய்யாதீர்கள்'' என்று கூறுகின்றனர். (நபியே! நீர் கூறும்:) வானங்கள் பூமியிலுள்ள பொக்கிஷங்கள் (யாவும்) அல்லாஹ்வுக்குச் சொந்தமானவையே எனினும் இந்த நயவஞ்சகர்கள் (இதனை) உணர்ந்து கொள்ள மாட்டார்கள்.

يَقُولُونَ لَئِن رَّجَعْنَا إِلَى الْمَدِينَةِ لَيُخْرِجَنَّ الْأَعَزُّ مِنْهَا الْأَذَلَّ
وَلِلَّهِ الْعِزَّةُ وَلِرَسُولِهِ وَلِلْمُؤْمِنِينَ وَلَٰكِنَّ الْمُنَافِقِينَ لَا يَعْلَمُونَ

''அன்றி, ''நாங்கள் மதீனாவுக்குத் திரும்ப வந்தால் கண்ணியமுள்ளவர்கள், (விசுவாசங் கொண்ட இந்த) இழிவானவர்களை அதிலிருந்து நிச்சயமாக வெளியேற்றி விடுவார்கள்'' என்றுஅவர்கள் கூறுகின்றனர். (நபியே! நீர் கூறும்:) கண்ணியமெல்லாம் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும், விசுவாசிகளுக்கும் சொந்தமானது. எனினும், இந்த நயவஞ்சகர்கள் (அதனை) அறிந்து கொள்ள மாட்டார்கள்.'' என்றிறங்கிய (63 : 7, 8) வேதச் செய்திகள் ஹழ்ரத் ஜ்ஸைத் (ரலி) அவர்களின் ஒவ்வொரு சொல்லையும் உண்மைப் படுத்துவனவாயிருந்தன. அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹழ்ரத் ஜ்ஸைத் (ரலி) அவர்களை அழைத்து வரச் செய்தார்கள். புன்முறுவலுடன் அத்தோழரை வரவேற்ற அண்ணலார் (ஸல்) அவர்கள் அருகேயிருந்த தோழர்களிடம் 'சிறுவரின் காதுகள் உண்மையானவை, அல்லாஹ்வே சாட்சி கூறி விட்டான்' என்றவர்களாக மேற்கண்ட வசனங்களைக் கொண்ட தொடரை ஓதிக் காட்டினார்கள்.

இச்சம்பவத்துக்குப் பின் ஹழ்ரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி) அவர்கள் அண்ணலெம்பெருமான் (ஸல்)

அவர்களின் தனியன்புக்கும் அருட்பார்வைக்கும் உரித்தானார்கள்.

அநாதையாக விடப்பட்ட தம்மை அரவணைத்து வளர்த்த தம் சிறிய தந்தையையும் மூத்தாப் போரில் இழந்து பிரிந்து வந்தபின் பள்ளியிலேயே தங்கி பெருமானார் (ஸல்) அவர்களிடம் ஞானங் கற்றார்கள். அல்லாஹ்வின் தூதரிடத்தில் அளவற்ற விசுவாசமும் பற்றுதலும் கொண்டிலங்கிய அவர்கள் அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களுக்குப் பின் அவர்களின் அறபோதங்களை மூத்த பல நாயகத் தோழர்களிடத்தில் தொடர்ந்து கற்பதிலும், கற்றவற்றை பிறருக்குக் கற்பிப்பதிலுமே காலத்தைக் கழித்தார்கள். அவர்களைக் கொண்டு அண்ணலார் (ஸல்) அவர்களின் எழுபது அருளுரைகள் அறிவிக்கப்பட்டுள்ளன. ஏறத்தாழ தங்களின் எண்பதாம் வயது வரை கூஃபாவில் வாழ்ந்த இப்பெரியார் தங்கள் காலத்தின் பெரும் ஞானியாகவும் 'தக்வா' வென்னும் இறையச்சம் மிகுந்த பெரியாராகவும் விளங்கினார்கள்.

பிந்திய காலத்தில் கலீஃபா அலீ (ரலி) அவர்களின் ஆதரவாளராக விளங்கிய இவர்கள் ஸிப்ஃபீன் போரிலும் பங்கேற்றார்கள். கூஃபாவில் அவர்கள் வாழ்ந்து கொண்டிருந்தபோதே கர்பலா சம்பவமும் நடைபெற்றது. நபி திருப்பேரர் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் வெட்டப்பட்ட சிரசைக் காணக்கூடிய துர்ப்பேறும் அவர்களுக்கு எதிர்ப்பட்டது. அப்புனித சிரசை ஒரு தட்டில் வைத்து எடுத்து வரப்படவும் அச்சமயம் கூஃபாவின் ஆளுநராக அமர்ந்திருந்த கொடுங்கோலன் உபைதுல்லாஹ் இப்னு ஜ்லியாத் தன் கைப்பிரம்பினால் இமாம் அவர்களின் உதடுகளைத் தொடவும் கண்டு வெகுண்டெழுந்த இவர்கள், "ஈனனே! என்ன காரியம் செய்கிறாய் நீ. ஆண்டவனின் மீதாணையாக அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள்

அவ்வுதடுகளை முத்தமிட நான் கண்டுள்ளேன்'' என இப்னு ஜ்ஸியாத்தைக் கண்டித்தார்கள். ஆனால் கஸ்தூரியின் வாசனையறியாத கழுதைகளுள் ஒருவனாயிருந்த உபைதுல்லாஹ் இப்னு ஜ்ஸியாத் பெருமானார் (ஸல்) அவர்களின் பேரரின் மகிமையையே உணராத நிலையில் பெருமானார் (ஸல்) அவர்களின் தோழரின் பெருமையை எங்கிருந்து அறிவான். புனித குடும்பத்தாருக்கு இழைக்கப்பட்ட கொடுமையைக் கண்டு கண்களில் நீர் குமிழியிட நின்ற ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி) அவர்களை நோக்கி, ''என்ன அழுகின்றீர் கிழவரே! உம் கண்கள் அழுதபடியே இருக்கட்டும். முதுமையின் காரணமாக உம் புத்தி பேதலித்து விட்டதென நான் எண்ணாதிருந்தில் உம் சிரசை இச்சமயம் துண்டாடியிருப்பேன்'' என சுடு மொழி பகர்ந்தானவன்.

எத்தகைய கொடுமை நிலவிய காலத்திலும் பெருமானார் (ஸல்) அவர்களுடைய குடும்பத்தார்களுடையவும், தோழர்களுடையவும் மரியாதையைப் பேணத் தவறாதவர்களாகவும், அவர்களின் துயரங்களைக் கண்டு துடிப்பவர்களாகவுமே வாழ்ந்தார்கள் அத்தோழர்.

பெருமானார் (ஸல்) அவர்கள் வாழ்ந்தபோதே ஒரு சமயம் ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி) அவர்கள் கண்களில் நோயுற்று விட்டார்கள். இளம் தோழரைக் காண வந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள் ஆறுதல் வழங்கித் திரும்பினார்கள். அந்நோயகன்று ஹழ்லரத் ஜ்ஸைத் (ரலி) அவர்கள் நலம் பெற்றபின் அவர்களைக் கண்டு மகிழ்ந்த அண்ணலார் (ஸல்) அவர்கள், ''எனக்குப் பின் ஒரு சமயம் நீர் பார்வை இழந்து விடுவீராகில் என்ன செய்வீர்?'' என வினவினார்கள்.

''பெருமானே! பொறுமையுடன் அதற்கான மறுமைப் பலனை எதிர் நோக்கிக் காத்திருப்பேன்'' என்றனர் ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி).

''அப்படியானால் அஃதொன்றே உம் பாவங்களனைத் தூக்கும் மறுமையில் மன்னிப்பாகி விடும்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் நவின்றார்கள். இந்த முன்னறிவிப்பின் படியே ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி) அவர்கள் தங்களின் பிந்திய காலத்தில் பார்வையை இழந்து விட்டனர். ஆனால் நீண்ட பொறுமைக்குப்பின் மீண்டும் அவர்கள் பார்வை திரும்பப் பெற்றே வாழ்ந்து மறைந்தனர் என அவர்களின் திருமகளார் உனீஸா (ரலி) அறிவிக்கின்றார்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைத் தாம் கண்ணாறக் கண்டதையும், அவர்களின் பின்னே நின்று தொழுததையும், அவர்களின் திருவாய் மொழிகளைச் செவியேற்றதையும் அவர்களின் பெருமைகளாய்ப் புகழ்ந்து பேசுபவர்களிடமெல்லாம், ''நண்பர்களே! காலம்கடந்துவிட்டது. முதுமை என்னை அணைத்துக் கொண்டது. நீங்கள் கூறுவதெல்லாம் கனவாகவும் நினைவாகவும் மாறிவிட்டன. மறதியும் சுருகுதல்களும் இப்போது இம்முதியவனைச் சூழ்ந்து கொண்டன. எனவே நான் கூறுவனவற்றை மட்டும் செவியேற்றுக் கொள்ளுங்கள். அதற்கு மேல் அதிகமாக எனக்குச் சிரமம் தராதீர்கள்'' என அடக்கத்துடன் வேண்டிக் கொண்டனர் ஹழ்லரத் ஜ்ஸைத் இப்னு அர்க்கம் (ரலி).



# 11. ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி)

பொழுது புலர்ந்தது. சோம்பல் முறித்து படுக்கையை விட்டு எழுந்தார் உவைமிர் இப்னு ஜ்லைத்; தம் காலைக் கடன்களை முடித்தார்; பூசை அறைக்குள் நுழைந்தார்; அங்கே தாம் வைத்து வணங்கி வந்த தெய்வத்தைத் துடைத்தார்; முந்திய நாள் ஒரு யமானிய வணிகர் தமக்கு அன்பளிப்பாக வழங்கிய பட்டுத் துணியை அதற்குப் போர்த்தினார்; உயர்ந்த மணம் பூசினார் அதன் மேல்; அதன் முன் வணங்கி எழுந்து கடைத் தெருவை நோக்கி நடக்கலானார்---தம் வாணிபத்தைக் கவனிக்க.

குறுக்கும் நெடுக்குமாக மக்கள் பரபரப்புடன் சென்று கொண்டிருந்தனர் தெருக்களில். அவர்களில் மிகுதமான பேர் மதீனாவுக்கு வந்து தங்கியுள்ள முஹம்மத் (ஸல்) போதிக்கும் மார்க்கத்தைச் சார்ந்தவர்களாகவே தெரிந்தனர். ஏன் இந்தப் பரபரப்பு இவர்களிடையே அதிகாலையில்? விசாரித்தபோது தெரிய வந்த செய்தி, அவர்களெல்லாம் பத்ருப் போர்க்களத்திலிருந்து திரும்பியுள்ளார்கள் என்பதே! வெற்றியுடன்தான் திரும்பியுள்ளனர் என்பதை அவர்களின் பெருமிதம் புலப்படுத்தியது. அதைப் பற்றிய எந்த அக்கறையும் கொண்டிருக்கவில்லை உவைமிர். ஆனாலும் அவருக்குத் தெரியவேண்டிய செய்தி ஒன்று மட்டும் இருந்தது. அப்துல்லாஹ் இப்னு ரவாஹா என்னவானார்? அவரும் தானே போருக்குச் சென்றிருந்தார். வினவியபோது ஓர் இளைஞர் கூறினார், ''அப்துல்லாஹ் ஒரு பெருங்கண்டத்தில் சிக்கினார். எனினும் தற்போது வாகை சூடி வந்து கொண்டிருக்கிறார்'' என்று. அதனைக் கேட்டு பெருமூச்செறிந்தார் உவைமிர். ஏனெனில் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா அவரின் உயிருக்குயிரான தோழர்.

மதீனாவின் அன்ஸார்களில் பெரும்பாலோர் விவசாயத்தையே தொழிலாகக் கொண்டிருந்த போதிலும் அவர்களில் கணிசமான பேர் வாணிபத்திலும் ஈடுபட்டிருந்தனர். யூதர்களுக்கென தனியே கடைத் தெருக்கள் இருந்ததேபோல் இவர்களுக்காகவும் தனி கடைத்தெரு இருந்தது. அவ்வணிகர்களுள் ஒருவரே கஸ்ரஜ்களைச் சார்ந்த உவைமிர் இப்னு ஜ்ஸைத். தம் பெண்மகவின் பெயரால் அபுத்தர்தா என அவர் அழைக்கப்பட்டார்.

மாநபித் தோழர் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்களுடன் உயிருக்குயிரான தோழமை கொண்டிருந்தும் 'அக்கபா'வில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைச் சந்தித்து அவர்களின் அருளாசியை அடைய தம்முடைய அந்தத் தோழர் பெற்ற பேற்றினில் அபுத்தர்தா அவர்கள் பங்கேற்கவில்லை. பூர்வீக மார்க்கத்தின் பிடி அவரைத் தடுத்து நிறுத்தி விட்டது. அவரின் சுய சிந்தனை இஸ்லாத்தின்பால் திரும்ப அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் மதீனா வந்த பின்னரும் இரண்டாண்டுகள் கழிய வேண்டியிருந்தது.

இந்த இரண்டாண்டுகளுக்கிடையில் அவ்விருவரின் தோழமை என்னவோ தொய்வின்றியே தொடர்ந்தது. பத்ருப் போரும் துவங்கியது. ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்கள் போர் மேல் செல்லத் துணிந்தது கண்டு அபுத்தர்தா அவர்களின் மனம் வருந்தவே செய்தது. நல்ல படை பலத்துடன் ஓராயிரம் பேர்களாகத் திரண்டு வந்துள்ள குரைஷிகளுடன் போரிட, எந்த விதமான ஆயுதப் பலமுமின்றி—போதிய முன்னேற்பாடுகளுமின்றி, மக்காவிலிருந்து வந்து ஒரு நபியென தம்மை அறிவித்துக் கொண்டுள்ள புதிய பயணியின் வாக்குறுதிகளையே நம்பித் துணிந்துள்ள—மூன்றிலொரு பங்கிலும் குறைவான பேர்களையே கொண்ட குழுவுடன் புறப்பட்டுச் சென்ற தம்

தோழரைப் பற்றிய கவலை சூழப் பெற்ற அபுத்தர்தா வழி மேல் விழி வைத்து அத்தோழரைப் பற்றிய செய்திக் காக ஒவ்வொரு நாளும் காத்திருந்தார். பெருங்கண்டத்தில் சிக்கி, பின்னர் வாகை சூடி வருகின்றார் தம் தோழர் என செவியுற்றதும் அவர் பெருமூச்செறிந்ததில் வியப் பில்லை. ஆனால்,

இதே விதமான பெருமூச்சுகள் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்களின் உள்ளத்திலிருந்தும் கடந்த பல மாதங்களாக ஒவ்வொரு நாளும் வெளிவந்துக் கொண்டிருந்தன—பாழ் நரகை நோக்கி மனிதனை இழுத் துச் செல்லும் பாட்டையிலிருந்து தடம் பெயர மறுக்கும் தம் தோழரை எண்ணி! ஒவ்வொரு நாளும் தம் தோழரை யும் தாம் ஏற்றுள்ள புதிய வழியின்பால் அழைத்த வண் ணமேயிருந்தனர் ஹழ்லரத் அப்துல்லாஹ் (ரலி). எனினும் அதைப் பற்றிய சிந்தனை எழ விடாமல் அபுத்தர்தா அவர் களைத் தடுத்தே வந்தன வளர்ந்தோங்கிய அவரின் வாணிப மும் வற்றாத மவுட்டீக நம்பிக்கையும்.

ஒரு நாள் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) தம் தோழரின் வீட்டுக்குச் சென்றார்கள். அபுத்தர்தா அவர்கள் அச்சமயம் வீட்டில் இருக்கவில்லை. ஆனால் அவர் வைத்து வணங்கி வந்த கற்சிலை கண்ணில்பட்ட போது எழுந்த ஆத்திர உணர்வுகளை ஹழ்லரத் அப்துல் லாஹ் அவர்களால் அடக்க முடியவில்லை. என்றைக்காயி னும் ஒரு நாள் தோழமையில் விரிசலை உண்டாக்கக் கூடிய அதனை அன்றே ஒழித்திட முடிவெடுத்த அவர் கள் அக்கற்சிலையைச் சுக்கல் சுக்கலாக உடைத்தெறிந்து விட்டு வீடு திரும்பினார்கள்.

அபுத்தர்தா அவர்களின் மனைவியோ கணவருக்கு என்ன பதில் கூறுவதென தெரியாது கை பிசைந்து நின்றார்.

வீடு திரும்பிய அபுத்தர்தா வழமையைபோல் தம் பூஜை அறையினுள் நுழைந்தார். அங்கே அவர் கண்ட காட்சி அலைப் பறக்கச் செய்தது அவரின் கண்களில். 'தங்களின் தோழர் செய்து விட்டுச் சென்ற கோலமே இது' என அவரின் மனைவி விளக்கினார். 'கொன்றே திரும்புகிறேன் இப்னு ரவாஹாவை' என அபுத்தர்தா கொதித்து நின்றாராயினும் சில வினாடிகளில் அவரின் சிந்தனை விழித்துக் கொண்டது! தன்னையே காத்துக் கொள்ள திறனற்ற இந்த தெய்வம் நமக்கென்ன பலன் விளைவிக்கப் போகிறது என்றெழுந்த எண்ணம் அவரை இஸ்லாத்தின் பால் திரும்பச் செய்தது. விடுவிடுவென ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்களின் வீடு சென்ற அவர் அந்தத் தம் தோழரையும் அழைத்துக் கொண்டு சென்று அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைக் கண்டு இஸ்லாத்தை ஏற்றார்.

இப்போது அந்தத் தோழர், அபுத்தர்தா (ரலி) அவர்களின் பார்வையில் ஒரு புதிய கோணத்தில் தெரியலானார்கள். அவரிடமும் மற்ற முஸ்லிம்களுக்குமிடையிலும் காணப்பட்ட பழக்க வழக்கங்கள் வணக்க வழிபாடுகள் செயல் முறைகள் யாவும் அபுத்தர்தா (ரலி) அவர்களைப் பெரிதும் ஈர்த்தன. பேணுதலிலும் இறையச்சத்திலும் ஞான வழிபாட்டிலும் அவர்களெல்லாம் அடைந்துள்ள முன்னேற்றங்கள் அபுத்தர்தா (ரலி) அவர்களைக்கவலையுறச் செய்தன. அவசியமின்றி தாம் இழைத்து விட்ட ஈராண்டு காலத் தாமதத்தை நினைத்துச் சஞ்சலமுற்ற அவர்கள் அவ்விடைக் காலத்தில் தம்மால் இழக்கப்பட்டுப் போன நன்மைகளை எந்த விதத்திலும் ஈடு செய்திட ஆர்வங் கொண்டவர்களாக ஓயாத வணக்க வழிபாடுகளில் ஈடுபடலானார்கள்; வாணிபத்தையும் வெறுத்தொதுக்கினார்கள். வாணிபத்தை இஸ்லாம் தடை செய்யவில்லையானா

லும் வணக்கத்தின் இன்பத்தை அது குறைத்து விடுமோ என ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அஞ்சினார்கள்.

''அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களின் கரங்களைப் பற்றிய சமயம் நான் ஒரு வணிகனாகவே இருந்தேன். இஸ்லாத்தை ஏற்ற பின்னர் வாணிபத்தோடேயே வணக்க வழிபாடுகளையும் சேர்த்துக் கொள்ள நினைத்தேன். ஆனால் என் எண்ணத்தில் வெற்றி காண முடியவில்லை. இரண்டில் ஒன்றை மட்டுமே தக்க வைத்துக் கொள்ள வேண்டி ஏற்பட்டபோது நான் வணக்க வழிபாட்டையே தேர்ந்தெடுத்தேன். வட்டியையே (ஹராமாகத்) தடுத்து அல்லாஹ் நமக்கு வாணிபத்தை அனுமதித்துள்ள போதிலும் [திருக்குர்ஆன் (24 : 37) சுட்டிக் காட்டுகிறபடி]

رِجَالٌ لَّا تُلْهِيهِمْ تِجَارَةٌ وَلَا بَيْعٌ عَن ذِكْرِ اللَّهِ

''அல்லாஹ்வின் நினைவை விட்டும் வாணிபமோ, கொள்வினை கொடுப்பினைகளோ தடுத்துவிட முடியாத மனிதர்'களில் ஒருவனாக இருக்க விரும்பி நான் வாணிபத்தை விட்டொழித்தேன். அபுத்தர்தாவின் ஆன்மாவைத் தன்பிடியுள் வைத்துள்ள அந்த ஒருவனின் மீதாணையாகக் கூறுகிறேன், ஐங்காலத் தொழுகைகளில் ஒரு நேரத்தையும் தவற விடாமல் நான் நிறைவேற்றத் தோதாக பள்ளியின் நுழைவாயிலேயே என் வாணிபத் தலம் அமையப் பெற்றாலும் சரி, அவ்வாணிபத்தில் கிடைக்கும் ஆதாயத்தைக் கொண்டு அறம் வழங்கத் தோதாக நாளொன்றுக்கு நாற்பது பொற்காசுகள் லாபமாகக் கிடைக்குமென்றாலும் சரியே, அதனை நான் விரும்பவில்லை. ஏனெனில் அது பற்றிய மறுமை நாளின் விசாரணைக்கு நான் அஞ்சுகிறேன்—என ஹழ்ரத் அபுத்தர்தா [ரலி] அவர்களே அறிவித்துள்ளார்கள்.

வாணிபத்தை மட்டுமே அவர்கள் வெறுத்தொதுக்க வில்லை. உலகாயத சுக போகங்களனைத்துமே அவர்களிட மிருந்து விடை பெற்றுக் கொண்டன. பசிக்குத் தேவை யான சிறிதளவே உணவு. மானத்தை மறைக்கப் போது மான மிகச் சாதாரண உடை இவ்வாறான எளிமை மாற் றங்களோடு, கிடைப்பதைக் கொண்டு தேவைகளை முடித் துக் கொள்ளும் மன நிறைவைப் பயிற்சியாக்கிக் கொண்ட னர் அபுத்தர்தா [ரலி]. அவர்களின் பகற் காலங்கள் அனைத் தும் பசியோடு நோன்புகளில் கழியலாயின; இரவுகளனைத் தும் விழித்திருந்து வணக்கம் புரிவதிலேயே கழிக்கப்பட்டன.

அவர்களின் இல்லத்தில் அமைதி சூழ்ந்திருந்தது. கணவர் எவ்வழியோ அவ்வழியே அவரின் மனைவி உம்மு தர்தாவும். கணவரோடேயே சேர்ந்து அவரும் இஸ்லாத்தை ஏற்றவரே.

ஒரு நாள் மாநபித் தோழர் ஹழ்லரத் ஸல்மான் ஃபார்ஸீ [ரலி] அவர்கள், அபுத்தர்தா (ரலி) அவர்களின் இல்லத்துக்கு வந்தார்கள். இஸ்லாத்தை ஏற்ற பின் இந்த இருவரும் அண்ணலெம்பெருமான் [ஸல்] அவர்களால் சகோ தரர்களாகப் பிணைக்கப்பட்டிருந்தார்கள். அதன் பலனாக அவ்விருவருக்குமிடையே உறவுப் பழக்கம் வளர்ந்திருந்தது. ஹழ்லரத் ஸல்மான் [ரலி] அவர்கள் அவ்வப்போது தம் சகோதரரின் இல்லத்துக்கு வருவதும் அங்கு தங்குவதும் வழக்கம். அவ்வாறாகவே அன்று வந்த ஸல்மான் [ரலி] உம்மு தர்தா (ரலி) அவர்களின் வாடிய முகத்தையும் தலைவிரி கோலத்தையும் கண்டு வியந்தார்கள். ஏனிந்த நிலை என ஹழ்லரத் ஸல்மான் [ரலி] அவர்கள் வினவின போது உம்மு தர்தா [ரலி] அவர்கள், ''தங்களின் சகோதரர் பகலெல்லாம் பசித்து நோன்பிருப்பவராகவும் இரவெல்லாம் விழித்து வணக்கம் புரிபவராகவும் உலகை ஒதுக்கி வாழ் கையில் எனக்கு மட்டுமென்ன மகிழ்ச்சி வேண்டிக் கிடக் கிறது?'' என்றார். அந்த பதிலால் அதிகம் கவலை கொண்

டனர் ஹழ்ரத் ஸல்மான் (ரலி). இத்தகைய விரக்தியான வாழ்க்கையை இஸ்லாம் போதிக்கவில்லையே! பெண்ணினத்தின் விடிவுக்கென்றே வந்தவர்களல்லவா தூதர் நாயகம் (ஸல்) அவர்கள். இத்தகைய சிந்தனையில் ஹழ்ரத் ஸல்மான் (ரலி) அவர்கள் ஆழ்ந்திருந்தபோதே ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்களும் அங்கு வந்து விட்டார்கள்.

ஒருவருக்கொருவர் முகமன் கூறிக் கொண்ட சகோதரர்கள் உரையாடலாயினர். சற்று நேரத்தில் அவர்களுக்கு முன்னே உணவு கொண்டு வந்து வைக்கப்பட்டது. ஹழ்ரத் ஸல்மான் [ரலி] அவர்களை உண்ணுமாறு உபசரித்தார்கள் ஹழ்ரத் அபுத்தர்தா [ரலி]. அவர்களையும் உண்ணுமாறு ஹழ்ரத் ஸல்மான் [ரலி] அவர்கள் கூறினார்கள். தாங்கள் நோன்பிருப்பதாக ஹழ்ரத் அபுத்தர்தா [ரலி] அவர்கள் கூறினார்கள். அப்படியானால் நோன்பாளியின் முன்னே தாம் உண்ணுவதெங்ஙனம்? என வினவினார்கள் ஹழ்ரத் ஸல்மான் [ரலி]; அவர்களும் உடனமர்ந்து உண்டாலே தாம் உண்ண முடியும் என ஒதுங்கினார்கள். வேறு வழியின்றி ஹழ்ரத் அபுத்தர்தா [ரலி] அவர்களும் உடன் அமர்ந்து உணவுண்டார்கள்.

பல்வேறு உரையாடல்களில் அன்றைய பொழுது கழிந்தது. இரவானதும் ஹழ்ரத் ஸல்மான் (ரலி) அவர்கள் படுத்துறங்க வசதிகளைச் செய்தனர் ஹழ்ரத் அபுத்தர்தா [ரலி]; படுக்கையில் தம் சகோதரரை இருக்கச் செய்து தாம் தொழுகைக்கென எழுந்தனர். அவர்களையும் தம் அருகே அமரச் செய்து கொண்ட ஹழ்ரத் ஸல்மான் (ரலி) அவர்கள், "சகோதரரே! இறைவனுக்கு நாம் ஆற்றவேண்டிய கடமைகளையே போன்று நம் உடலுக்கு ஆற்றவேண்டிய கடமைகளும் உண்டு. அதற்காகவே நான் உண்ணுகிறேன்; உறங்குகிறேன். இஃதே போல் உம் மீதும் இறைவனுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளும் உண்டு; உம் உடலுக்கு 'ஆற்ற

வேண்டிய கடமைகளும் உண்டு; உம் மனைவிக்கு ஆற்ற வேண்டிய கடமைகளும் உண்டு. இவை ஒவ்வொன்றைப் பற்றி யும் மறுமையில் நீர் வினவப்படுவீர். ஒன்றை நிரப்பமாக்கி விட்டதன் காரணமாக தவற விட்ட கடமையைப் பற்றிய விசாரணையிலிருந்து நீர் தப்பிக்க முடியாது. எனவே நீர் இப்போது உம் மனைவியாருடன் சேர்ந்து உறங்குவீராக, பின்னிரவில் எழுந்து தொழுவீராக'' என எடுத்துரைத் தார்கள். அதனை ஏற்று ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் அன்று இரவு உறங்கவே வேண்டியதாயிற்று.

பின்னிரவில் எழுந்து இருவரும் ஒன்றாகவே தொழுதார் களாயினும் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களுக்கு தங்களின் வாலாயமான வணக்க முறை குறைபட்டு விட்ட தாகவே தெரிந்தது. காலைத் தொழுகையைப் பள்ளியில் முடித்த பின்னர் தோழர்கள் இருவரும் பெருமானார் (ஸல்) அவர்களின் முன் அமர்ந்து இரவு தங்களிடையே நடை பெற்ற சர்ச்சையை விவரித்தனர். அதனைக் கேட்டு அண்ண லெம் பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் அபுத் தர்தா (ரலி) அவர்களை நோக்கி, ''ஸல்மான் மிகச் சரியா கவே கூறியுள்ளார். மார்க்கத்தை அவர் உம்மைவிட அதிக மாகவே விளங்கியுள்ளார்'' என்றுரைத்தார்கள். அதற்குப் பின் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களின் துறவற வாழ்க்கை ஓரளவு மாற்றம் கண்டதென்றாலும் அவர்களின் வணக்க வழிபாடுகளில் எந்தத் தொய்வும் ஏற்படவில்லை.

வணக்க வழிபாடுகள் தவிர்த்த மற்ற சமயங்களில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அருகேயிருந்து அறிவியல் ஞானம் பெற்றனர் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி). எம்பெருமானார் (ஸல்) அவர்களின் காலத்திலே திருக்குர் ஆனை முழுமையாக மனனம் செய்த ஹாபிழ்ல்களில் அவர் களும் ஒருவர். வேதத்தின் நாதத்தையும் தூதர் நாயகம் (ஸல்) அவர்களின் போதங்களையும் கற்றுச் சிறந்து அதன்

படியே வாழ்ந்து மக்களுக்கும் வழி காட்டிய இவர்கள் பிந்திய காலத்தில் 'ஹக்கீமுல் உம்மத் — சமுதாயத்தின் அறிவியல் ஞானி' என மக்களால் புகழப் பெற்றனர்.

பத்ருப் போர் நடைபெற்ற காலத்தில் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றே இருக்க வில்லை. அதனையடுத்தே முஸ்லிமான அவர்கள் மறு ஆண் டில் நடைபெற்ற உஹதுப் போரில் புரவி மீதமர்ந்துப் போராடிய திறன் கண்டு பெருமானார் (ஸல்) அவர்களே, 'மிகச் சிறந்த புரவி வீரர்' என அவர்களைப் பாராட்டினார் கள். அதற்குப் பின் அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ் நாளில் நடைபெற்ற எந்தப் போரிலும் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) பங்கேற்கத் தவறவில்லை.

பெருமானார் (ஸல்) அவர்களைப் பிரிந்த பின் நீண்ட தோர் இடைக் காலத்தை அமைதியோடேயே கழித்தனர் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி). கலீஃபா உமர் (ரலி) அவர் களே அவ்வமைதியைக் கலைத்தார்கள். ஸிரிய பூமி வெற்றி கொள்ளப்பட்ட சமயம் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர் களை டமாஸ்கஸின் ஆளுநராக நியமிக்க எண்ணினார்கள் கலீஃபா. ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களோ எந்த அதிகாரத்தையுமே ஏற்க மறுத்தனர். எனினும் அவர்களின் நினைவில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அருள்மொழியொன்று பளிச்சிட்டது. ''சோதனைப் புயல் அலை வீசிப் பாயும் அச்சமயம் ஈமானின் சுடர் ஸிரியாவில் ஒளிவீசிப் பிரகாசிக்கும்'' என தம் ஏந்தல் நாயகம் [ஸல்] அவர்கள் அருளிய திருவாய் மொழியை நினைவு கூர்ந்த ஹழ்லரத் அபுத்தர்தா [ரலி] ஸிரியாவிலேயே சென்று வாழ கலீஃபா அவர்களிடம் அனுமதி கோரினார்கள். ஆனால் கலீ ஃபா அவர்களோ மக்கள் பணி ஏதேனுமொன்றைப் பெறுப் பேற்கச் சம்மதித்தாலன்றி மதீனாவை விட்டும்வெளிச்செல்ல தம் அனுமதியை எதிர்பார்க்கவே வேண்டாம் என கண்டிப்

புடன் கூறிவிட்டார்கள். அப்போதும் அரசியல் பணி எதையுமே ஏற்க மறுத்து, தாம் மக்களிடையே அறிவியல் பணி புரிவதாக வாக்களித்துப் புறப்பட்டார்கள் ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி).

ஸிரியாவை அடைந்த அவர்கள் கல்வித் துறையில் முழு மூச்சுடன் ஈடுபட்டார்கள். டமாஸ்கஸ் நகரின் ஒரு பள்ளியில் அமர்ந்து திருமறை வசனங்களையும், திருநபியின் திருவாய் மொழிகளையும், வழி முறைகளையும் மக்களுக்குப் போதிக்கலானார்கள். மாணவர்களின் பெருங் கூட்டம் பாடங் கற்றது. திருக்குர்ஆனை மனனஞ் செய்வதிலும், அதற்கு விளக்கங் கற்பதிலும், ஹதீஃஸ் பாடங்களைக் கற்பதிலும் தனித்தனியே மாணவர்கள் ஈடுபட்டிருந்தனர். பாடங்களைக் கற்பித்ததோடன்றி, கற்க வந்த அம்மாணவர்களுக்குள்ளேயே கற்பிக்கத் திறன் கொண்ட ஆசான்களை உருவாக்கி அவர்களில் ஒவ்வொருவரின் பொறுப்பிலும் பத்து பத்து மாணவர்களாக அமர்த்தி பாடசாலையை நிர்வகித்தார்கள் ஹழ்ரத்அபுத்தர்தா (ரலி). ஒவ்வொரு குழுவினராக, தனித்தனியே அமர்ந்து பாடங்களைக் கற்க, ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்களின் கண்ணோட்டமும் செவிப்புலனும் அத்தனை மாணவர்களையும் ஆக்கிரமித்து நின்றன. எங்கெங்கே குறைகள் தடுமாற்றங்கள் தென்பட்டனவோ அங்கெல்லாம் அவர்களே நேரடியாக ஈடுபட்டு தெளிவேற்படச் செய்தார்கள். இவ்வாறாக ஏறத்தாழ ஆயிரத்து அறுநூறு மாணவர்கள் அவர்களிடம்கிராஅத் கலையைக்கற்றனர். அறிவியல் ஞானம் பெற நாட்டின் நாற்புறமிருந்தும் வந்து திரண்டிருந்த மாணவர்கள் புடை சூழ ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் நடந்து செல்லும் காட்சி ஓர் அரசரின் பவனியையே மக்களுக்கு நினைவூட்டுவதாயிருந்தது.

மற்ற மூன்றாம் நிலை உள்ளைப் பெரும் நட்டத்திலாக்கி விடும். பள்ளிவாசல்களையே இல்லிடமாக்கிக் கொள்பவர்களுக்கு அல்லாஹ் மன நலத்தையும் வளத்தையும் வாக்களிக்கிறான். தனக்குப் பொருத்தமான பாதையில் அவர்களைத் திருப்பி விடுகிறான்'' என்றெல்லாம் அவருக்கு அறிவுரை கூறினார்கள் பெருமானாரின் திருத்தோழர்.

சில இளைஞர்கள் ஓரிடத்தில் கூடி நின்று இரைச்சலிட்டு உரையாடிக் கொண்டிருந்தனர். அவ்வழியாகச் செல்ல நேர்ந்த ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் அவ்விளைஞர்களை நெருங்கி, ''மக்களே! முஸ்லிம்களுக்கு அடைக்கலத் தலம் அவர்களின் இல்லங்களே. அவை அவர்களின் பார்வைகளையும் எண்ணங்களையும் தீமைகளை விட்டும் பாதுகாப்பவை. கடைத்தெருக்களில் இவ்வாறாக உலவுவது உங்களை தீய இச்சைகளின்பால் ஆக்கி விடும். இது நாசகாரத்துக்கான வழியாகும்'' என அறிவுரை கூறினார்கள்.

இவ்வாறாக மக்களுக்கு அவ்வப்போது நல்லுரைகள் வழங்கி வழிகாட்டிக் கொண்டிருந்தார்கள் அத்தோழர்: அறியாதவர்களுக்கு அறிவொளியூட்டினார்கள்; மறந்திருந்தவர்களுக்கு நினைவூட்டினார்கள்; நன்மையை ஏவவும் தீமையைத் தடுக்கவும் கிடைத்த எந்த வாய்ப்பையும் நழுவ விடவில்லை அந்நாயகத் தோழர்.

மார்க்க ஞானத்தில் அவர்களுக்கிருந்த புலமையை மதித்து தொலைதூரங்களிலிருந்தும் மக்கள் சட்ட விளக்கங்களைப் பெற நாடி அவர்களிடம் வந்தனர்.

''ஒருவன் திருமணத்தைப் பற்றிய எண்ணமேயற்று இருந்தான். அவன் தாய் அவனை நிர்ப்பந்தப்படுத்தி ஒரு பெண்ணை அவனுக்குத் திருமணம் செய்து வைத்தாள். கணவனும் மனைவியும் மனமொத்து வாழ்ந்து வர

கின்றனர். இப்போது அந்தத் தாய் தன் மகனை அவனின் மனைவியை விவாக பந்தத்திலிருந்து விடுவித்து விடும்படி நிர்ப்பந்திக்கிறாள். ஆனால் மகனோ முறையான காரண மின்றி விவாகரத்துச் செய்ய மறுக்கிறான். மாநபியின் தோழரே! இதுபற்றி தங்களின் தீர்ப்பென்ன?—என்று கூஃபாவிலிருந்து வந்த ஒருவர் வினவினார்.

''அவர் தம் மனைவியை விவாகரத்துச் செய்தாலும் சரி அல்லது தம்முடனேயே வாழச் செய்தாலும் சரியே, இது விஷயத்தில் தீர்ப்பு கூறுவதை விட 'தாயின் பாதத் தடியில் தனையனின் சுவனம் உள்ளது' என அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் அருளிய திருவாக்கை அவருக்கு எத்தி வைப்பதையே நான் பொருத்தமாகக் காண்கிறேன்— என அவருக்கு விடை கூறினார்கள் ஹழ்ரத் அபூதர்தா (ரலி).

அபூ ஹபீபா தாஈ எனப்பட்ட அவர்களின் சீடரொரு வர், ''என் உடன் பிறந்தார் ஒருவர் என்னிடம் ஒரு தொகையை அல்லாஹ்வின் பாதையில் செலவழிக்கும்படி கூறி தந்து விட்டு மரணித்து விட்டார். அதனைச் செல வழிக்க மேலான மார்க்கத்தைக் காட்டித் தாருங்கள்'' என வினவக் கேட்டு, ''மார்க்கப் போராளிகளிடையே அதனைப் பங்கிட்டளித்து விடுவதையே மேலாக நான் காணுகிறேன்'' என விடையளித்தார்கள்.

தனித்த ஒரு கிராமத்தில் தாம் குடியிருப்பதாக ஸஅத் இப்னு அபீ தல்ஹா என்பவர் கூறக் கேட்ட இவர்கள், ''அருகிலிருக்கும் நகருக்கு ஐந்து நேரமும் சென்று தொழுது வாரும். பாங்கொலியும் தொழுகையும் இல்லாத இடத்தில் ஷைத்தான் ஆதிக்கங் கொள்வான். தனித்து உலவும் ஆட்டை ஓநாய் கொன்று தின்று விடும்'' என்றெல்லாம் அவருக்கு அறிவுரைகள் கூறினார்கள்.

அல்லாஹ்வின் திருமறையையும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் வாக்கையும் வழி முறைகளையுமே வாழ்க்கை நடைமுறைகளனைத்துக்கும் முன்மாதிரியாகப் பேணிய அவர்களிடமிருந்து பெருமானார் திருநபி (ஸல்) அவர்களின் ஒருநூற்று எழுபத்து ஒன்பது மணிமொழிகளை உலகம் பெற்றுள்ளது. மாறான நடைமுறைகளை எங்கு, எவரிடம், எப்போது கண்டாலும் நிர்த்தாட்சண்யமாகக் கண்டிக்க ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் பின்னடைந்ததில்லை. ஒரு சமயம் ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்கள் வெள்ளிப் பாத்திரமொன்றை ஒருவரிடம் பெற்றுக் கொண்டு அதற்குப் பகரமாக தோராயமான ஒரு தொகையைத் தர முற்பட்டபோது அவ்வாறு தருவதை அண்ணலார் (ஸல்) அவர்கள் தடுத்திருப்பதைச் சுட்டிக் காட்டி வெள்ளிக்குப் பகரமாக வெள்ளியையே தரவேண்டுமென ஆளுநரையே திருத்தவும் அவர்கள் தயங்கவில்லை!

எவ்வளவோ ஆரவார மரியாதை சூழ்ந்திருந்த நிலையிலும் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களின் வாழ்வு மிக எளிமையுடையதாகவே விளங்கியது. துறவறக் கோலமும் பற்றற்றிருந்த மனப்பான்மையுமே அவர்களிடம் குடி கொண்டிருந்தன. ஈரானிய, ரோமானிய சாம்ராஜ்யங்கள் நிலை புரண்டு அவற்றின் கருவூலங்கள் வெற்றிப் பொருள்களாக முஸ்லிம்களால் அள்ளி வரப்பட்டு, மக்களின் உடையிலும் நடையிலும் பளபளப்பும் செழிசெழிப்பும் மின்ன விட்ட நிலையிலும் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களின் தோற்றமும் வாழ்வும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் காலத்தில் அவை கொண்டிருந்த கோலத்தை விட்டும் மாறவே இல்லை. ஸிரியாவின் வனப்பும் பொருளாதாரப் பெருக்கமும் அவர்களிடம் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தி விடவில்லை. எளிமையும் வாக்கில் மென்மையும் கொண்ட அந்நபிமணித் தோழர் டமாஸ்கஸின் பள்ளிவாசலில் தங்களின் கரங்களாலேயே மரம் நடுவர்; நீர் இறைப்

பர்; நூர்த்துத் துப்புறவு செய்வர். 'பள்ளியின் இமாமாகிய தாங்கள் இவற்றையெல்லாம் செய்யாதீர்கள்' என மக்கள் தடுப்பார்கள். 'இதில் கிடைக்கும் மன இன்பத்தையும் நாளை இதற்குரிய கூலியாககிடைக்கக்கூடிய நன்மைகளையும் நீங்கள் அறியமாட்டீர்கள்' என ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) புன்முறுவலுடன் அவர்களுக்குப் பதில் கூறுவார்கள்.

எப்போதும் புன்முறுவலுடனேயே காணப்பட்ட அவர்களிடம் மக்கள் ஏளப்பம் கண்டு விடுவார்கள் என நண்பர்கள் எச்சரித்தார்கள். 'அதற்கென்ன செய்யட்டும் நான். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் எப்போதுமே புன்முறுவலோடேயேயேன்றோ காணப்பட்டார்கள்' என அவர்களையே வினவினார்கள் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி).

தங்களின் உழைப்புக்கான எந்த ஊதியத்தையும் அவர்கள் பெற்றுக் கொள்ளவில்லை. பைத்துல் மாலிலிருந்து வருவாய்ப்படி அவர்களுக்கு வந்து கொண்டிருந்தது. கலீஃபா உமர் (ரலி) அவர்கள் வருவாய்ப்படியை நிர்ணயித்த சமயம் பத்ருப் போரில் பங்கு பற்றியவர்களுக்கெல்லாம் மற்றவர்களுக்குடையதைவிட கூடுதலான தொகை நிர்ணயித்திருந்தார்கள். ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் பத்ருப் போரில் சம்பந்தப்படாதவர்களாகவே இருந்த நிலையிலும் அன்னார் பெற்றிருந்த மற்ற மேலான தகுதிகளை மதித்து அவர்களுக்கும் பத்ரின் தோழர்களுக்கெல்லாம் நிர்ணயித்திருந்ததே போன்ற தொகையை நிர்ணயித்திருந்தார்கள் கலீஃபா. அவ்வாறாக வந்த வருவாய்ப் படியிலும் மிகக் குறைந்த அளவையே தம் குடும்பத் தேவைக்காகவே வைத்துக் கொண்டு மற்றதையெல்லாம் தர்மமாகப் பங்கிட்டுத் தந்திடுவார்கள் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி).

''பொன்னையும் பொருளையும் நீங்கள் ஏன் வெறுத்தொதுக்குகிறீர்கள். மற்றவர்களெல்லாம் சேமிக்கிறார்களே?'' என அவர்களின் மனைவியாரே கேட்டனர்.

"பளுவைச் சுமந்தவன் எளிதில் தாண்ட முடியாத ஒரு பயங்கரப் பாலத்தைத் தாண்ட வேண்டியிருப்பது பற்றி என் ஏந்தல் நாயகம் (ஸல்) அவர்கள் எச்சரிக்கக் கேட்டிருக்கிறேன். எனவேதான் நான் பாலத்தைத் தாண்டத் தோதாக பளுவை என் மீது சுமத்திக் கொள்ளாமல் தவிர்த்து வருகிறேன்'' என அவருக்கு விளக்கினார்கள் மாநபியின் அத்தோழர்.

விருந்தினர்களை உபசரிப்பதில் மட்டும் பேரின்பம் கண்டனர் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி); விருந்தினர் வந்தவுடனேயே அவர்கள் தங்கக் கூடிய காலவரையை சூசகமாகவே தெரிந்து கொள்வார்கள்; ஓரிரு நாட்கள் தங்கிச் செல்பவர்களானால் அவர்கள் சங்கடமின்றி தங்குவதற்குண்டான ஏற்பாடுகளைச் செய்வார்கள்; உடனே புறப்பட்டுவிடக் கூடியவர்களென தெரிந்தால் அவர்களின் வழியுணவைத் தயாரித்து சித்தப்படுத்துவார்கள். அவ்வாறாகவே ஒரு சமயம் சில விருந்தினர்கள் வந்து தங்கினர். அறுசுவையுடன் கூடிய சூடான உணவு குளிர்காலத்துக்கேற்ற முறையில் அவர்களுக்குக் கிடைத்தது. ஆனால் படுத்துக் கொண்ட போது போர்வை மட்டும் அவர்களுக்குத் தரப்படவில்லை. அவர்களில் குளிரின் சிரமத்தைத் தாங்கிக் கொள்ள முடியாத ஒருவர் தாம் சென்று ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களிடமே முறையிட்டு போர்வை வாங்கி வருவதாகப் புறப்பட்டார். மற்றவர்கள் தடுத்தும் அவர் கேட்கவில்லை. ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களின் வாசலை அவர் அடைந்தபோது அவர்கள் அங்கே படுத்திருக்கக் கண்டார். அவர்களின் மனைவியார் அருகே அமர்ந்திருந்தார். அவ்விருவரின் உடல்களிலும் குளிரைத் தாங்கப் போதுமற்ற மெல்லிய ஆடைகளே கிடந்தன. அபுத்தர்தா (ரலி) அவர்களின் மனைவியார் குளிரைத் தாங்க முடியாமல் பட்ட சிரமத்தைக் கண்ட விருந்தினர், ''ஏன் இந்த நிலை. நீங்களும் எங்களைப் போலவே சிரமப்படுகிறீர்களே. போர்த்துக் கொள்ள ஏதும் இல்லையா உங்களிடம். உங்களின் உடைமை

கவெல்லாம் எங்கே?'' என அபுத்தர்தா (ரலி) அவர்களி டமே விசாரித்தார்.

''எங்களின் உடைமைகளெல்லாம் நாங்கள் சென்ற டைய வேண்டியுள்ள மற்றொரு வீட்டில் இருக்கின்றன. (மறுமையின்) அந்த வீட்டுக்குச் செல்லும் பாதை மிகக் கரடுமுரடானது. நாளை நாங்கள் எங்கள் வீட்டுக்குச் செல்லப் புறப்படுகையில் உடைமைகளைச் சுமந்து செல்லும் சிரமம் ஏற்படாதிருக்க நாங்கள் கிடைப்பதையெல்லாம் அவ்வப்போது அவ்வீட்டளவில் அனுப்பி விடுகிறோம். அதனாலேயே எங்களிடம் இப்போது போர்வைகள் இல்லை. இருந்திருந்தால் முன்னதாகவே அவற்றை உங்களிடம் அனுப்பியிருப்போம்'' என அவருக்கு விளக்கிய ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் இறுதியாக, ''நான் கூறிய வற்றை உம்மால் புரிந்து கொள்ள முடிந்ததா?'' என வின வினார்கள்.

''ஆம், முடிந்தது. உண்மையாகவே நீங்கள் உங்கள் பயணத்தை சுலபமானதாக்கிக் கொண்டீர்கள்'' என்றார் அவ்விருந்தினர்.

கலீஃபா உமர் (ரலி) அவர்களே தம் ஸிரியப் பயணத் தின்போது திடீரென ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர் களைக் காண நாடி அவர்களின் இல்லம் சென்றார்கள். நள்ளிரவில் எந்தவித முன்னறிவிப்பும் செய்யாமல் சென்ற கலீஃபா அவர்கள் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களின் இல்லத்தையடைந்து கதவைத் தொட்டபோதே அது திறந்து கொண்டது. அதில் எந்தத் தாழ்ப்பாளும் இடப்பட்டிருக்க வில்லை. உள்ளே கும்மிருட்டு, ஒரு விளக்கும் ஏற்றப் பட்டிருக்கவில்லை. கலீஃபா அவர்களின் முகமன் குரல் கேட்டு ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் எழுந்து வந்து கலீஃபா அவர்களின் கரம் பிடித்து வரவேற்று அழைத்துச் சென்றனர். இருவரும் சென்று ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி)

அவர்களின் படுக்கையிலேயே அமர்ந்து உரையாடலாயினர். இருளின் காரணத்தால் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்ளவும் முடியவில்லை. கலீஃபா அவர்கள் தடவித் துழாவிப் பார்த்த போது அந்தப் படுக்கை ஓர் ஒலைப் பாயாக இருந்தது. வாகனத்தில் அமர விரிக்கும் ஒரு முரட்டுப் புடவை தலையணையாக இருந்தது. போர்த்துக் கொள்ள குளிரைத் தாங்க உதவாத ஒரு மெல்லிய துணி கிடந்தது. அவற்றையெல்லாம் கவனித்துத் திகைப்படைந்தார்கள் கலீஃபா! ''ஆண்டவன் உம்மீது அருள் பாலிப்பானாக அபா தர்தா! உம்முடைய தேவைக்கான அளவுக்கு நான் உமக்கு அனுப்பி வைக்கவில்லையா? உம்முடைய வருவாய்ப்படி உம்மிடம் சேர்ப்பிக்கப்படவில்லையா? பின் ஏனிந்த நிலை? ஊழியத்துக்கு ஓர் அடிமையும் உம் வாசலில் காணப்படவில்லையே! ஒளியேற்ற ஒரு விளக்கையும் கூட நீர் வைத்துக் கொள்ளாததேன்?'' என வினவினார்கள் கலீஃபா.

''அமீரல் முஉமினீன்! அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அருள் மொழியைத் தாங்கள் மறந்து விடவில்லையே'' என கலீஃபா அவர்களையே வினவினார்கள் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி).

''எந்த அருள் மொழியை?'' என கேட்டார்கள் கலீஃபா.

''ஒரு வழிப்பயணிக்குடையதேயான உடைமைகளையே நீங்கள் உங்களோடு எப்போதும் பெற்றிருக்க வேண்டுமன்றோ அண்ணலார் (ஸல்) அவர்கள் நமக்கருளினார்களன்றோ?'' என ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் வினவ ''ஆம்'' என்றார்கள் கலீஃபா.

''இன்று எந்த நிலையில் நாம் இருக்கின்றோம். என்னென்ன மாற்றங்களெல்லாம் நம்மிடையே விளைந்து

விட்டுள்ளன? என்னென்ன தேவைகளெல்லாம் நமக்கு ஏற்பட்டுள்ளன?'' என கேள்விகள் தொடரத் தொடர கலீஃபா அவர்களிடமிருந்து எழுந்த கேவல் ஒலி ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்களையும் அழவே செய்தது. இருவரும் அழுதே தீர்த்த நிலையில் காலைத் தொழுகையின் பாங்கொலியும் கேட்டது.

''நான் அவர்களைக் காணச் சென்ற ஒரு சமயம் ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் ஒரு தோலின் மீது படுத்திருந்தார்கள். ஒரு முரட்டுத் துணி அவர்கள் மீது போர்த்தப்பட்டிருந்தது. நோயுற்றிருந்த அவர்களின் உடல் வியர்த்துக் கொண்டிருந்தது. 'தங்களின் இந்தப் படுக்கையின் மீது ஒரு மெல்லிய துணியை விரித்து விடுகிறேன். அமீருல் முஃமினீன் அவர்கள் அனுப்பியுள்ள போர்வைகளில் ஒன்றை உங்கள் மீது போர்த்தி விடுகிறேன்'' என நான் வேண்டினேன். வேண்டாமென அவற்றை மறுத்த ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) ''நமக்காக மற்றொரு வீடுண்டு. அவ்வீட்டின் புறமே நாம் குடிபெயர்ந்து செல்ல வேண்டியுள்ளது. அதற்கேற்பவே நாங்கள் இங்கே சித்தப்படுத்திக் கொள்கிறோம்'' என்றுரைத்தார்கள்—என ஹழ்ரத் காலித் இப்னு ஹுனைர் [ரலி] அறிவிக்கின்றனர்.

ஹழ்ரத் உஸ்மான் துன்னூரைன் (ரலி) அவர்கள் கிலாஃபத்தை ஏற்றபோது, ஸிரியாவின் ஆளுநராக இருந்த ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்கள் கலீஃபா அவர்களின் அனுமதி பெற்று ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்களை டமாஸ்களின் நீதிபதியாகப் பொறுப்பேற்கச் செய்தார்கள். ஆளுநர் ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்கள் ஏதேனும் காரியமாக தாம் வெளிச் செல்ல நேரும் சந்தர்ப்பங்களில், தம்முடைய நிர்வாகப் பொறுப்புகளையும் இவர்களிடமே ஒப்படைத்துச் செல்வார்கள். இவ்வாறான பொறுப்புகளை ஏற்க நேரிட்ட காலங்களிலும் தம் அறிவியல் பணி

தடைபடாதவாறு நேரங்களை வகுத்து கல்விக் கூடங்களையும் கண்காணித்து வந்நார்கள் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி).

காலப்போக்கில் மக்களிடையே விளைந்த மாறுதல்கள் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களை சஞ்சலங் கொள்ளச் செய்தன. செல்வச் செழிப்பிலே மயங்கிய மக்கள் மறுமைக்கான நற்செயல்களை உதாசீனப்படுத்தி மாட மாளிகைகளை எழுப்புவதிலும் தோட்டந்துரவுகளை அலங்கரிப்பதிலுமே ஆழ்ந்து விடக் கண்டு நபிமணித் தோழரின் நெஞ்சம் குமுறலாயிற்று. பள்ளிகளில் மக்களைக் கூடச் செய்து அவர்களின் முன்னே சொன்மாரி பொழிந்தார்கள் நாயகத் தோழர்.

"மக்களே! என் சொற்களைக் கேட்பதை விட்டும் உங்களை முகந்திரும்பிக் கொள்ளச் செய்வது எது? நான் உங்களிடம் எந்தச் சன்மானத்தையும் எதிர்பார்க்கவில்லையே. என் செயல்களுக்குரிய பிரதிபலனை நான் வேறோர் இடத்திலல்லவோ நம்பிச் செயல்படுகிறேன்.

"அல்லாஹ் தன் அருட்கொடைகளை உங்கள் மீது பூரணமாகச் சொரிந்திருக்க நீங்களோ அவனுடைய கட்டளைகளை மறந்தலைகிறீர்கள். உங்களில் கற்றறிந்தவர்கள் மறைந்த வண்ணம் உள்ளனர். மற்றவர்களோ கற்கத் துணிகிறீர்களில்லை. பெருவாரியான பொருள்களை நீங்கள் சேமிக்கிறீர்கள். அவற்றை நீங்கள் உண்டு முடிக்கப் போவதில்லை. பெரும் பெரும் கட்டிடங்களை நீங்கள் எழுப்புகிறீர்கள். அவற்றில் நீங்கள் நிரந்தரமாகத் தங்கியிருக்கப் போவதில்லை. உயர்ந்த ஆசைகளை நீங்கள் மேற்கொள்கிறீர்கள். அவையெல்லாம் நிறைவேறப்போவதில்லை. இது பற்றி நீங்கள் வெட்கமுறவில்லையா?

"உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களும் நிறையச் சேமித்தார்கள். மலைகளையே குடைந்து மண்டபங்களை உரு

வாக்கினார்கள்; கற்பனைகளைக் கடந்த நம்பிக்கைகளைக் கொண்டிருந்தார்கள். அவர்களின் சேமிப்புகள் அனைத்தும் நாசமாயின. நிர்மாணங்கள் யாவும் அழிந்தன. நம்பிக்கைகளில் அவர்கள் மோசம் போயினர். 'அதன்'னிலிருந்து 'அம்மான்' வரை பரவிக் கிடந்த அவர்களுக்குப் புதை குழிகளே புகலிடமாகி விட்டன.

''மக்களே! நான் சொல்வதைக் கவனியுங்கள். உங்களுக்காக உணவளிக்க அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளான். ஆனால் அந்த உணவை நீங்கள் தேடித் திரிகிறீர்கள். அதே சமயம் உங்கள் கடமை(யான நற்செயல்)களை நீங்கள் உங்கள் பாராமுகத்தால் அழித்துக் கொண்டிருக்கிறீர்கள். தொழுகைக்காக நீங்கள் காலந் தாழ்த்தி வர அஞ்சுகிறீர்களில்லை. திருக்குர்ஆனை உங்களின் செவிகள் கேட்பதோடு சரி அதனை நீங்கள் பேணுவதில்லை.

''மக்கட் பெருக்கமும் பொருட்களின் செழிப்புமே எந்த நன்மையும் விளைவிக்கமாட்டா. நீங்கள் கல்வியைப் பெருகச் செய்யுங்கள். பண்பாடுகளை வளரப் பெறுங்கள். வணக்க வழிபாடுகளில் ஒருவரையொருவர் முந்துங்கள். உங்களைக் கொண்டு நன்மைகள் வெளிப்படும்போது இறைவனுக்கு நன்றி செலுத்துங்கள்; தீமைகள் விளைந்திடில் பிழை பொறுக்கத் தேடுங்கள்.

''மரணம் உங்களைத் தேடி வருமுன் நீங்கள் உங்களை அதற்கென சித்தப் படுத்திக் கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களை நோக்கிக் கொண்டிருக்கிறான் என்று உணர்ந்த நிலையிலேயே அவனை நீங்கள் வணங்குங்கள். சுகபோகத்தில் உங்களை ஆழ்த்திவிடும் பெருங்குவியலைவிட அல்லாஹ் உங்களுக்குச் சித்தப்படுத்தும் குறைந்த செல்வமே மேலானது என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள்.

—என்றெல்லாம் மக்களுக்கு அச்சமூட்டி எச்சரித்த அம் மாமேதை ஒரு நாள் பள்ளியின் மேடையில்,

''மக்களே! ஒரு நாளைப் பற்றி நான் அஞ்சுகிறேன். நான் கற்றவற்றைப் பற்றியும், செயல்பட்டதைப் பற்றியும் அன்றைய தினம் என்னிடம் வினவப்படும். அல்லாஹ்வின் திருவேதம் அப்போது என்னைப் பற்றி சாட்சியம் கூறும், ''ஏவப்பட்டவற்றை நீ நிறைவேற்றினாயா?'' என்று என்னை வினவப்படும். ஏவல்கள் பற்றிய திருமறை வசனங்கள் ஒவ்வொன்றும் அப்போது எனக்கெதிராக நின்று பேசும். ''தடுக்கப்பட்டவற்றை விட்டும் உன்னை நீ எந்த அளவுக்குப் பேணிக் கொண்டாய்?'' என்றும் அப்போது என்னிடம் வினவப்படும். ''இல்லை, அந்தப் பேணுதலே என்னிடம் காணப்படவில்லை'' என்று திருமறையில் விலக்கல் பற்றியுள்ள ஒவ்வொரு வசனமும் என்னைப் பற்றி குற்றஞ்சாட்டும். மக்களே! அச்சமயம் என் நிலை எவ்வாறிருக்கும், என் கதியாதாகும்'' என ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) கலங்கியதாக இப்னு அஸாக்கிர் (ரஹ்) குறிப்பிடுகின்றார்கள்.

ஒரு நாள் கவலை சூழ்ந்த வண்ணம் தங்களின் இல்லத்தினுள் நுழைந்த அவர்களை அண்மி ''என்ன நேர்ந்தது?'' என அவர்களின் மனைவி உம்முதர்தா (ரலி) அவர்கள் வினவினார்.

''என் சொல்வேன், மக்களின் வாழ்க்கை தடம்புரண்டு விட்டது. அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் காலத்திலிருந்த நற்செயல்கள் எதுவும் இன்று மக்களிடம் காணப்படவில்லை—கூட்டுத் தொழுகை ஒன்றைத் தவிர்த்து'' என பெருமூச்செறிந்தனர் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி).

துறவிப் பெருந்தோழர் ஹழ்லரத் அபூதர் [ரலி] அவர்கள் ஸிரியாவிலிருந்து வெளியேற்றப்பட்டது பற்றிச் செவியுற்ற ஹழ்லரத் அபுத்தர்தா [ரலி] அவர்கள் மிகவும் மனம் வருந்தினார்கள். மனம் திடுக்கிட்டவர்களாகத் தங்களின்

திருக்கரங்களை ஏந்திய அவர்கள், ''மக்கள் அவரைப் புறக்கணித்தனர்; நான் புறக்கணிக்கவில்லை. அவரிடம் அவர்களே குற்றம் கண்டனர்; நான் காணவில்லை. அவரை வெளியேற்றியவர்களோடு நான் பங்கு பெறவில்லை. ஏனெனில் அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்கள் அவருக்குச் சமமாக எவரையும் நினைக்கவில்லை என்பதை நான் அறிவேன்'' என உளமுருகப் பிரார்த்தித்தார்கள்.

ஹிஜ்ரி 32-ம் ஆண்டில் அவர்கள் நோயுற்றனர். வழக்கத்துக்கு மாறாக நாளுக்கு நாள் நோய் வளர்ந்தது. குணமடையும் அறிகுறி ஏதும் உடலில் காணப்படவில்லை. மரணத்தின் அழைப்போலையே அது என உணர்ந்தபோது மாநபியின் திருத்தோழர் தேம்பித் தேம்பி அழுதனர். சூழ இருந்தவர்களுக்குப் பெரும் வியப்பாயிருந்தது. அருகிலமர்ந்திருந்த அவரின் மனைவியார் கேட்டார், ''மாநபியின் அருமைத் தோழரல்லவோ தாங்கள். மரணத்தைப் பெரிதாய் விரும்பிக் காத்திருந்தீர்களே. இப்போது எதை எண்ணி அழுகிறீர்கள்?'' என்று.

''ஆம், உண்மைதான். எனினும் மரணம் வந்து விட்டது என்பதை எப்போது உணர்ந்தேனோ அப்போதிருந்து என் இதயம் என் வசம் இல்லை. என் கதி யாதாகுமோ தெரியவில்லை. என் பாவங்களை எண்ணியே இப்போது நான் அழுகிறேன்'' என ஹழ்லரத் அபுத்தர்தா [ரலி] விடையிறுத்தார்கள்.

''இப்போது நீங்கள் எதை எதிர்பார்க்கிறீர்கள்?'' என மீண்டும் மனைவியார் கேட்க, ''என் இறைவனின் மன்னிப்பை'' என்றனர் மாநபியின் தோழர்.

தம் மகனார் பிலாலை அழைத்து, ''இத்தகைய ஒரு நாள் உனக்கும் நிச்சயம் வரும். அதற்காக உன்னை சித்தப்படுத்திக் கொள்'' என அறிவுறுத்தினார்கள்.

சில நாட்களுக்கு முன் ஹழ்ரத் யூஸுஃப் இப்னு அப்துல்லாஹ் [ரலி] அவர்கள் ஞான விளக்கம் தேடி வந்திருந்தனர். 'என்ன காரியமாக வந்தீர்!' என படுக்கையிலிருந்தவாறே ஹழ்ரத் அபுத்தர்தா [ரலி] வினவினார்கள். சூழ்நிலையை அவதானித்த ஹழ்ரத் யூஸுஃப் இப்னு அப்துல்லாஹ் [ரலி] அவர்கள், 'தங்களைக் கண்டு செல்லவே வந்தேன்' என்றார்கள்.

''பொய் மிகத் தீயது. எனினும் பிழை பொறுக்கத் தேடுவதால் மன்னிக்கப்பட்டுவிடும்'' என்று ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் கூறக் கேட்டு ஹழ்ரத் யூஸுஃப் (ரலி) அவர்களின் மெய்சிலிர்த்தது!

மாநபித் தோழர் ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் [ரலி] அவர்களின் திருமகனாரே ஹழ்ரத் யூஸுஃப் (ரலி). பெருமானார் (ஸல்) அவர்களின் திருத்தோழமையைப் பெற்ற 'ஸஹாபி'யே அன்னவரும். ஞானங் கற்க வந்த அச்சீடர் தம் ஆசானின் நோய்வயப்பட்ட நிலை கண்டு சிரமந்தரப் பின்னடைந்து, 'கண்டு செல்ல வந்தேன்' என்று மட்டும் கூறி நிறுத்திக் கொண்டார்களேயன்றி பொய்யாக ஏதும் கூறவில்லையாயினும் ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் கூறிய மறுகணமே பிழை பொறுக்கத் தேடிக் கொண்டனர்.

மரணம் ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்களை நெருக்கிக் கொண்டிருந்தது. அவர்கள் தங்களருகேயே தங்கி விட்டிருந்த ஹழ்ரத் யூஸுஃப் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்களிடம் தம் நிலையைப் பற்றி மக்களுக்கு அறிவிக்குமாறு கட்டளையிட்டார்கள். செய்தி பரவி மக்களும் அவர்களின் இல்ல வாயிலில் திரண்டு விட்டனர். பெருங்கூட்டம் தம்மைக் காணக் காத்திருக்கிறது என்று தெரிந்ததும் ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் படுக்கையோடேயே தம்மை வீட்டுக்கு வெளியே கொண்டு

செல்ல ஏவினார்கள். அவ்வாறே செய்யப்பட்டது. மரணத்தின் மடியிலும் தம் கடமை மறவாத அம்மாநபித்தோழர் தம் படுக்கையிலிருந்தவாறே திரண்டு நின்ற மக்களுக்கு பெருமானார் (ஸல்) அவர்களின் திருவாய் மொழியொன்றை எடுத்தோதலாயினர். அருள்வாய் மொழியை நிறைவுறக் கூறி முடித்த பெருமானாரின் திருத்தோழர் மறுகணமே, ''இதோ இறப்பின் தூதுவர் வந்து விட்டார்'' என மொழிந்தவர்களாக தங்களின் இமைகளை மூடிக் கொண்டனர். ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களின் புனித ஆன்மா பிரிந்து சென்றது.

ஹழ்லரத் அபுத்தர்தா [ரலி] அவர்கள் இரு பெண்மணிகளை மணமுடித்திருந்தனர். அபீ ஹத்ரு (ரலி) எனப்பட்ட ஒரு நபிமணித்தோழரின் மகள் கைரா எனப்பட்டவரே முதல் மனைவியார். இவர் மட்டுமே நாயகத் தோழமையைப் பெற்றவர். சிறந்த அறிவு படைத்தவராகவும் வணக்க வழிபாடுகளில் பேணுதலுடையவராகவும் திகழ்ந்தாரவர். அவரைக் கொண்டும் அண்ணலார் [ஸல்] அவர்களின் பல அருள்மொழிகள் வெளியிடப்பட்டுள்ளன. இவரின் வயிற்றில் பிறந்த தர்தா என்ற பெண்மகவின் பெயராலேயே பெற்றோர் இருவரும் அபுத்தர்தா, உம்மு தர்தா என அழைக்கப் பெற்றனர். ஹழ்லரத் உஸ்மான் கனீ (ரலி) அவர்களுடைய கிலாஃபத்தையும் கண்ட இவ்வம்மையார் ஹிஜ்ரி 30-ம் ஆண்டில் ஹழ்லரத் அபுத்தர்தா (ரலி) அவர்களுக்கு முன்னதாகவே மரணித்து விட்டார்.

இரண்டாம் மனைவியாருக்கு பெருமானார் (ஸல்) அவர்களின் தோழமை கிடைக்கப் பெறாவிடினும் நாயகத் தோழரின் இல்லறத்தில் பங்கேற்றதன் பலனாகவே அவர் சோபிதமடைந்தார். கிராஅத் கலையில் தம் கணவர் தந்த அற்புதப் பயிற்சியின் பலனாக கிராஅத் கலையில் தேர்ச்சி

பெற்றிருந்த இவ்வம்மையார் ஹதீஃஸ்களையும் கற்றிருந்தார். உமையா கலீஃபாக்களில் ஒருவரான அப்துல் மலிக் இப்னு மர்வான் ஓர் இரவு தம் அடிமையைக் கூவியழைத்தார். பலமுறை அழைத்தும் பதில் வராமல் போகவே அவ்வடிமையை ஏசிச் சாபமிட்டார் அப்துல் மலிக். மறு நாள் அவரைச் சந்தித்த இவ்வம்மையார் ''சாபமிடுபவருக்கு ஒரு நாளும் தியாக மரணம் கிட்டாது. மறுமையில் அவர் தம் பரிவுரைக்கு பேறும் பெறமாட்டார்'' என்ற அண்ணலார் (ஸல்) அவர்களின் அருள்மொழியை எடுத்துரைத்தனர். கணவரின் இறப்புக்குப் பின்னும் நீண்ட காலம் வாழ்ந்த இவ்வம்மையாரை மறுமணம் புரிந்து கொள்ள ஆளுநர் முஆவியா (ரலி) அவர்கள் விழைந்தனராயினும் அவர்களின் அழைப்பை இவ்வம்மையார் ஏற்கவில்லை.

பிலால், யஜ்ஸீத் என்ற இரு ஆண் மக்களும்; தர்தா, நஸீபா என்ற இரு பெண் மக்களும் ஹழ்ரத் அபூத்தர்தா (ரலி) அவர்களின் வழிவாறுகளாய்ப் பிறந்தனர். அவர்களில் பிலாலும் தர்தாவுமே பிந்திய வரலாற்றில் சிறந்தனர்.

தந்தையைப் போன்றே தனையர் பிலாலும் அறிவிற் சிறந்து திமஷ்கின் நீதிபதிப் பதவியிலும் சில காலம் அமர்ந்து பின்னர் ஹிஜ்ரி 92-ல் மரணமடைந்தனர்.

தர்தா என்ற பெண் மகவோ தாம் பெற்றிருந்த அறிவுத் திறனாலும் குண அழகாலும் சிறு வயதிலிருந்தே சிறப்புற்றார். அவரைப் பெற்றவர்கள் இருவரும் அவரின் பெயராலேயே தங்களை அழைக்கச் செய்து கொண்டது போலவே அவரின் மாற்றாந்தாயும் கூட அவரின் பெயரால் உம்முதர்தா என்றே தாமும் அழைக்கப்படுவதை விரும்பினார். அதனால் அவ்வம்மையார் சிறிய உம்முதர்தா (ஸுகரா) என அறியப்பட்டனர்.

தர்தா (ரலி) அவர்களின் சிறப்புகளையறிந்து ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்களே தம் மகன் யஜ்ஸீதுக்கு அவரை மணமுடித்துக் கொள்ள விரும்பி பெண் கேட்டார்களாயினும் அதனை ஏற்க மறுத்து ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்கள் தம் மகளை ஸஃப்வான் இப்னு அப்துல்லாஹ் என்பவருக்கு மணமுடித்தளித்தார்கள். காரணம் வினவப்பட்டபோது, ''அரண்மனை வாழ்வையும், அணிகலன்களையும், சில அடிமைகளையும் பரிசுப் பொருள்களாகப் பெற்றுத் தந்து என் மகளின் மறுமை வாழ்வை நான் பாழடிக்கத் துணிய மாட்டேன்'' என்றார்கள் அத் தந்தை. குரைஷித் தலைவர் ஸஃப்வான் இப்னு உமையாவின் பேரரே ஸஃப்வான் இப்னு அப்துல்லாஹ். அன்னார் மிகச் சிறந்த 'தாபஈ'யாகவும் விளங்கினார்கள்.

''செயலுடன் கூடிய சிந்தனையாளர்—கற்றபடி நின்ற பேரறிஞர்'' என ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்களை ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் புகழ்ந்துரைத்தார்கள்.

தங்களுக்குப் பின் ஞானத்தைக் கற்றுக் கொள்ள தங்களின் சீடர்களுக்கு ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்களுட்பட நாற்பெரும் நபிமணித் தோழர்களைக் காட்டித் தந்த ஹழ்ரத் மஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்கள், ''ஞானம் அவரின் நெஞ்சத்தில் பொதிந்து கிடக்கின்றது'' என்று ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்களைப் பற்றி குறிப்பிட்டார்கள்.

பிந்திய காலத்தில் 'மஸ்ரூக்' என்ற 'தாபஈ' பெரியார், ''நபிமணித் தோழர்கள் அனைவரின் ஞானங்களையும் ஆறு பேர்களிடமிருந்து நான் கற்றுக் கொண்டேன். ஹழ்ரத் அபுத்தர்தா (ரலி) அவர்களும் அவ்வறுவருள் ஒருவர்'' என நினைவு கூர்ந்தனர்.



# 12. ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி)

**ம**தீனா வாழ்வின் பிந்திய கால கட்டத்தில் ஒரு நாள்! தங்களுக்கு வெளிப்படுத்தப்பட்ட வேத வசனங்களை அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் ஓதிக் கொண்டிருந்தார்கள். அவற்றைப் பதிவு செய்ய நியமிக்கப்பட்டிருந்த எழுத்தர்கள் கவனமுடன் கேட்டுப் பதிந்த வண்ணமிருந்தவர். நடுத்தர வயதும் செக்கச் சிவந்த முகப்பொலிவும் கொண்ட ஒரு வாலிபரும் அவ்வெழுத்தர்களில் இருந்தார். ஓதி முடித்ததும் அண்ணலார் (ஸல்) அவர்கள் 'அபல் முனத்திர்!' என அவரை அழைத்து ''அல்லாஹ் குர்ஆனை உமக்கு ஓதிக் காட்ட எனக்குக் கட்டளையிட்டுள்ளான்'' என்றார்கள்.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! என்னைக் குறிப்பிட்டேயா அல்லாஹ் தங்களுக்குக் கட்டளையிட்டுள்ளான்'' என அவ்வாலிபர் கேட்டார்.

'ஆம்' என அண்ணலார் (ஸல்) அவர்கள் நவிலக் கேட்டு தம் செவிகளையே நம்ப முடியவில்லை அவருக்கு!

''பெருமானே! இறைவனின் திருச்சன்னிதானத்தில் என் பெயரே உச்சரிக்கப்பட்டதா?'' என மீண்டும் வினவினார்.

'ஆம்' என அண்ணலார் (ஸல்) அவர்கள் உறுதிபட விளம்பிடக் கேட்டு அவரின் விழிகள் மளமளவென நீரைச் சொரிந்தன மகிழ்ச்சிப் பெருக்கால்; இறைவனின் பேரன்பை உணர்ந்த நன்றிப் பெருக்கால்.

**க**ஸ்ரஜ்களைச் சார்ந்த நஜ்ஜார் குடும்பத்தில் பிறந்த ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களையே 'அபல்

முனத்ஸிர்!' என பெருமானார் [ஸல்] அவர்கள் இடுகுறிப் பெயரிட்டு அழைத்தார்கள். துஃபைல் என்ற மகனைப் பெற்றிருந்ததால் 'அபுத்துஃபைல்' என்றும் அவர்கள் அழைக்கப் பெற்றார்கள். கல்வியிலும் புலமையிலும் தாம் பெற்றிருந்த மேலான தகுதிகளினால் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்கள் 'ஸையிதுல் அன்ஸார் — அன்ஸார்களின் தலைவர்' என்ற தகைமையையும் பெற்று விளங்கினார்கள்; திருக்குர்ஆனை திருத்தமுற திறம்பட ஓதப் பெற்றிருந்த பேற்றின் பலனாக, 'ஸய்யிதுல் கிராஅ — ஓதும் கலையில் முதல்வர்' என்ற சங்கையையும் ஏற்றார்கள். பிந்திய காலத்தில் கலீஃபா உமர் [ரலி] அவர்கள் 'ஸய்யிதுல் முஸ்லிமீன் —முஸ்லிம்களின் தலைவர்' என அவர்களைக் கண்ணியப் படுத்தினார்கள்.

இளமையிலேயே கல்வியறிவு பெற்றிருந்த ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்கள், யூதர்களோடிருந்த மிகுநமான பழக்க உறவால் 'தவ்ராத்'தையும் நன்கு கற்றிருந்தார்கள். பிந்திய காலத்தில் கிருஸ்துவர்களோடும் தொடர்பு கொண்டு 'இஞ்சீ'லையும் கற்றுத் தேர்ந்தார்கள். அவ்வேதங்களில் அவர்களுக்கு அறியக் கிடைத்திருந்த முன்னறிவிப்புகளே இஸ்லாத்தின்பால் அவர்களை விரையச் செய்தன. அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களோடு அன்ஸார்கள் பெற்ற 'அக்கபா'வின் சந்திப்புகளில் அவர்கள் காணப்படாவிடினும் கூட ஹிஜ்ரத்துக்கு முன்னதாகவே ஹழ்லரத் முஸ்அப் (ரலி) அவர்களின் கரங்களில் இஸ்லாத்தை ஏற்றவர்களில் ஒருவராகவே அவர்களை வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள்.

ஹிஜ்ரத்துக்குப்பின் பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களின் குண அழகையும் தோற்றப் பொலிவையும் கண்டு மிக மகிழ்ந்தார்கள்; கல்வியறிவும் அவர்கள் பெற்றிருந்தமையறிந்து

'வஹீ'யாக வரும் வேதச் செய்திகளை எழுதும் எழுத்தர்களில் ஒருவராக அவர்களையும் நியமனம் செய்தார்கள். அன்ஸார்களில் அப்பணியில் முதன் முதலாக நியமிக்கப்பட்டவர்கள் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களே. இக்காரணத்தாலேயே அன்ஸார்களிடையே அவர்கள் அதிகமாக மதிக்கப் பெற்றார்கள்.

வஹீயாக வரும்போது பதிவு செய்வதன்றி அல்லாஹ்வின் வேத வசனங்களை அவ்வப்போது மனனம் செய்துவிடுவார்கள் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி). அற்புதமான நினைவுத் திறன் அவர்களுக்கு அமைந்திருந்தது. பெருமானார் (ஸல்) அவர்களின் வாழ்நாளிலேயே திருக்குர்ஆனை முழுமையாக மனனம் செய்து விட்டிருந்த 'ஹாபிழ்ல்'களில் அவர்களும் ஒருவரே. திருத்தமுடன் அதனை இனிமையுற ஓதுவதில் அவர்கள் பெற்றிருந்த தேர்ச்சி கண்டே அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் 'ஸய்யிதுல் கிராஅ' என அழைத்து அவர்களைச் சிறப்பித்தார்கள்.

திருக்குர்ஆனை மற்றவர்களுக்கு ஓதிக் கற்பிக்க மேவான தகுதி படைத்தவர்களாக பெருமானார் [ஸல்] அவர்களாலேயே சுட்டிக் காட்டப்பட்ட நாற்பெரும் தோழர்களில் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்களும் ஒருவர். ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு 'மஸ்ஊத் [ரலி] அவர்களும் அந்நால்வருள் ஒருவரே. இவ்விருவருக்குமிடையிலேயே ஒரு வசனத்தை ஓதுவதில் தர்க்கம் ஏற்பட்டுவிட்டது. ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் [ரலி] அவர்கள் அவ்வசனத்தை ஓதுவதைக் கேட்டு ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்கள் சினமடைந்தார்கள். ஏனெனில் அவர்கள் ஓதிய முறை அண்ணலார் [ஸல்] அவர்களிடமிருந்து உப்பை [ரலி] அவர்கள் கற்ற முறைக்கு மாற்றமாயிருந்தது. இருவரும் தர்க்கித்துக் கொண்டு அண்ண

லார் [ஸல்] அவர்களிடம் சென்று முறையிட்டார்கள். இருவரையும் அதே வசனத்தைத் தனித்தனியே ஓதச் செய்து கேட்ட பெருமானார் [ஸல்] அவர்கள் இருவர் ஓதுவதும் சரியே என்று கூறினார்கள்!

''அதனைக் கேட்டு நான் பயங்கரச் சந்தேகத்துக்குப் பலியாகி விட்டேன். அறியாமைக்கால தடுமாற்றங்களுக்கே நான் பலியாகி விடவிருந்தேன். என் நிலையை உணர்ந்த என் ஏந்தலர் [ஸல்] அவர்கள் தங்களின் திருக்கரத்தை என் நெஞ்சில் வைத்தார்கள். அதன் ஸ்பரிசம் தந்த திடுக்கத்தால் என் உடல் வியர்த்துக் கொட்டியது. தொப்பலாடிப் போன நான் அல்லாஹ்வையே என் முன் காண்பதே போன்ற அச்சத்திற்கு ஆளானேன். அச்சமயம் அண்ண லார் [ஸல்] அவர்கள் என்னை நோக்கி, ''திருக்குர்ஆனை என் சமுதாயத்தவர்க்கு ஒரே முறையாக ஓதிக் கற்பிக்கும் படியாக இறைவனின் கட்டளையை என்னிடம் ஜிப்ராஈல் தெரிவித்தார். என் இறைவனிடம் நான் மன்னிப்பையும் அவனின் கருணையையும் கிருபையையும் நாடிப் பிரார்த்தித்தேன். அதன் பேரில் இரு வேறு முறைகளில் கற்பிக்க என் இறைவன் எனக்குக் கட்டளையிட்டான். அவனிடத்தில் நான் மீண்டும் மீண்டும் மன்னிப்பையும் கருணையையும் கிருபையையும் யாசித்து மன்றாடினேன், இறுதியாக ஏழு முறைகளில் அருள்மறையைக் கற்பிக்க எனக்கு அனுமதி கிடைத்தது'' என அறிவித்தார்கள்— என்று ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்களாலேயே அறிவிக்கப் பட்ட செய்தியை எடுத்தெழுதும் விரிவுரையாளர்கள், அந்த ஏழுவகையான கிராஅத்துகளை ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்கள் அறிந்து கொள்வதற்காகவே அவர்களுக்கு ஓதிக் காட்டும்படி அல்லாஹ் அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களுக்குச் செய்தியறிவித்ததாகக் குறிப்பிடுகிறார்கள்.

அந்தக் கட்டளையாலும் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்களின் மாண்பு மாநபித் தோழர்களிடையே மணம் பெறலாயிற்று; பெருமானார் (ஸல்) அவர்களின் அன்பும் பெருகலாயிற்று. மாமறையின் ஞானக் கலையைப் பூரணமாகவே அத்தோழருக்குக் கற்பிக்க பெருமானார் (ஸல்) அவர்கள் இன்னும் அதிகமாக அக்கறை செலுத்தினார்கள். எவ்வித ஐயத்தையும் எந்த சந்தர்ப்பத்திலும் அண்ணலார் (ஸல்) அவர்களை அணுகிக் கேட்க ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களுக்கு அனுமதியிருந்தது. அதன் பலனாக அண்ணலார் (ஸல்) அவர்களிடமிருந்தே ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்கள் திருக்குர்ஆனின் ஏழுவிதமான கிராஅத்களையும் கற்றுத் தேர்ந்தார்கள்; மற்றவர்களுக்குக் கற்பிக்கவும் செய்தார்கள்.

பலதரப்பட்ட அரபுக் கூட்டத்தினரும் மதீனாவில் தங்கி திருமறையை ஓதக் கற்கலானபோது அவ்வாறு கற்பிக்க அமர்த்தப்பட்டவர்களில் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களும் ஒருவராவர். ஒரு சமயம் அவர்களிடத்தில் புதிதாக வில்லொன்றிருக்கக் கண்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் அது ஏதென வினவினார்கள். ஹழ்லரத் துபைல் இப்னு அம்ரு தவ்ஸீ (ரலி) அவர்களுக்குத் தாம் குர்ஆன் ஓதக் கற்பித்ததாகவும் அதற்குக் கைம்மாறாக அன்னார் தந்த வில்லே அது எனவும் உப்பை (ரலி) அவர்கள் தெரிவித்தனர். ''அதுவே உமக்கு நரகத்தின் ஒரு துண்டாகி விடக் கூடும்'' என நபிபெருமான் (ஸல்) அவர்கள் அருளக் கேட்டு ஹழ்லரத் உப்பை (ரலி) உடனேயே அதனைத் திருப்பித் தந்து விட்டார்கள்.

மற்றொரு தோழர், தமக்கு ஓர் அத்தியாயத்தைக் கற்றுத் தந்தமைக்காக ஓர் ஆடையை அன்பளிப்பாக ஹழ்லரத் உப்பை (ரலி) அவர்களிடம் அனுப்பி வைத்தார். அதனைப் பற்றி அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களிடம் கூறிய

போது அண்ணலார் (ஸல்) அவர்கள், ''அதனை நீர் பெற்றுக் கொண்டீரானால் பின்னர் நெருப்பிலாலான ஓர் ஆடையையும் நீர் அணிவிக்கப் பெறுவீர்'' என எச்சரித்தார்கள். ஹழ்லரத் உப்பை (ரலி) அவர்கள் அதனைப் பெறாமலே திருப்பி விட்டனர்.

இத்தகைய எச்சரிக்கைகளால் அச்சமடைந்த ஹழ்லரத் உப்பை (ரலி) அவர்கள் ''அல்லாஹ்வின் தூதரவர்களே! திருக்குர்ஆனை எங்களிடம் கற்றுக் கொள்ளும் எங்களின் சிடர்களின் இல்லங்களில் நாங்கள் உணவுண்டு விடுகிறோமே எங்கள் கதி என்னவாகும்?'' என்று வினவியபோது பெருமானார் (ஸல்) அவர்கள், ''அந்த உணவு உமக்கென பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டதல்ல. அவர்களுக்காகத் தயாரிக்கப்படும் அதனை நீர் அங்கிருக்க நேரும் உணவு வேளைகளில் நீரும் அதில் பங்கு பெறுகிறீர். ஆனால் உமக்காகவே ஒரு பொருள் ஒதுக்கப்பட்டு உம்முடைய சேவைக்குப் பகரமாக அதனை நீர் அனுபவித்தீரானால் உம்முடைய மறுமைப் பயனை அழித்துக் கொண்டவராவீர்'' என அருளினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் சொற்கள் ஒவ்வொன்றையும் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்கள் கண்ணெனப் போற்றினார்கள். கல்வியோடு ஞானத்தையும் ஒழுக்கத்தையும் இறையச்சத்தையும் பெற்றுச் சிறந்த நாயகத் தோழர்களில் ஒருவராக ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்கள் மிளிர்கிறார்கள்.

''திருமறையின் வசனங்களில் மிகச் சங்கை பெற்ற வசனம் எது?'' என பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு சமயம் கேட்டார்கள்.

ٱللَّهُ لَآ إِلَٰهَ إِلَّا هُوَ ٱلْحَىُّ ٱلْقَيُّومُ ۚ لَا تَأْخُذُهُۥ سِنَةٌ وَلَا نَوْمٌ

''அல்லாஹ் (எத்தகைய மகத்துவமுடையவனென்றால்) அவனைத் தவிர வேறு நாயன் (இல்லவே) இல்லை. (அவன்) நித்திய ஜீவன்; (என்றும்) நிலையானவன்—என துவங்கும் (2 : 255) வசனத்தை ஓதிக் காட்டினார்கள் ஹழ்லரத் உப்பை [ரலி]. அகமகிழ்ந்து அத் தோழரின் நெஞ்சத்தைத் தடவிய அண்ணலார் (ஸல்) அவர்கள் 'அல்லாஹ் உம் ஞானத்தை வளரச் செய்வானாக' என வாழ்த்தினார்கள்.

பள்ளியில் அமர்ந்திருந்த மற்றொரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள், ''தவ்ராத்திலும் ஜபூரிலும் இஞ்சிலிலும் இல்லாத—குர்ஆனில் மட்டுமே இறக்கப்பட்டுள்ள ஓர் அத்தியாயத்தை உமக்குக் காட்டித் தரட்டுமா?'' என வினவினார்கள்.

''என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம். தாங்கள் அவசியம் அதனை எனக்குக் கற்பிக்க வேண்டும்'' என்றார்கள் ஹழ்லரத் உப்பை (ரலி).

''ஆகட்டும். இந்தப் பள்ளியின் வாசலைக் கடந்து வெளியில் செல்லுமுன் நீர் அதனை அறிந்து கொள்விர் என நம்புகிறேன்'' என பெருமானார் (ஸல்) அவர்கள் அருளினார்கள்.

''சற்று நேரம் கழித்து அவர்கள் எழுந்து நின்றார்கள். நானும் அவர்களோடு எழுந்து கொண்டேன். என் கரங்களை அவர்களின் கரங்களால் பற்றிக் கொண்டு அவர்கள் பேசிக் கொண்டே நடந்தார்கள். எங்கே அவர்கள் வாசலைத் தாண்டி விடுவார்களோ என்ற அச்சத்தால் நான் பின்னடையலானேன். வாசலை நெருங்கி விட்டபோது, ''அல்லாஹ்வின் தூதரவர்களே! தாங்கள் என்னை அறியச் செய்வதாக வாக்களித்த அந்த அத்தியாயம்...'' என நினைவூட்டினேன்.



''தொழுகையை எவ்விதம் நீர் துவங்குகிறீர்?'' என பெருமானார் (ஸல்) அவர்கள் வினவினார்கள். 'ஃபாத் திஹா—தோற்றுவாய்' எனப்படும் ஆரம்ப அத்தியாயத்தை நான் ஓதலானேன்.

''அதுவே அந்த அத்தியாயம். அல்லாஹ் தன் திரு மறையில்,

وَلَقَدْ آتَيْنَاكَ سَبْعًا مِنَ الْمَثَانِي وَالْقُرْآنَ الْعَظِيمَ

''நிச்சயமாக நாம் உமக்கு திரும்பத் திரும்ப ஓதக் கூடிய ஏழு வசனங்களை(யுடைய 'அல்ஹம்து' எனப்படும் அத்தியாயத்தை)யும், இந்த மகத்தான குர் ஆனையும் அருளினோம்'' (அல்குர்ஆன்-15 : 87) என்று கூறுகிறான் என்றார்கள்—என ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களே அறிவித்துள்ளார்கள்.

ஒரு சமயம் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களி டத்தில் ஒரு தோழர் வினவினார், ''அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே! நோய்களினாலும் பிற சிரமங்களாலும் நாங்கள் துன்புறுகிறோமே இதனால் ஏதும் மறுமைப் பயன் கள் எங்களுக்குண்டா?'' என்று.

''ஆம். உங்களுக்கு வரும் நோய்களும் எதிர்படும் சிரமங்களும் உங்களின் பாவங்களுக்குப் பரிகாரமாகி விடு கின்றன'' என பெருமானார் (ஸல்) அவர்கள் அவருக்குக் கூறினார்கள்.

அச்சமயம் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர் கள் இடைமறித்து ''அல்லாஹ்வின் தூதரவர்களே! சிறு சிறு துன்பங்களும் கூட நம் பாவங்களுக்கு பரிகாரமாகி விடு வனவா?'' என்று கேட்டார்கள்.

''சின்னஞ்சிறு துன்பங்களெல்லாம், ஒரு முஸ்லிமின் காலில் முள்குத்தி அதனால் ஏற்படும் வேதனையும் கூட அவரின் பாவத்துக்குப் பரிகாரமாகி விடுகிறது'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அந்தத் திருவாய் மொழி ஆண்டவனின் அருளையும் கருணையையும் ஹழ்லரத் உப்பை (ரலி) அவர்களின் அகக் கண்களுக்கு முன் காட்சியளிக்கச் செய்தது. உணர்ச்சி வசப்பட்ட அவர்கள், ''அப்படியானால் தொழுவதை விட்டும் ஹஜ்ஜு செய்வதை விட்டும் மார்க்கப் போர் புரிவதை விட்டும் என்னைத் தடுத்தபர்த்தாத வகையில் நிரந்தரமாக என் மீது காய்ச்சல் இறங்கலாகாதா?'' என தங்கள் மாநபியின் செவி கேட்கக் கூறினார்கள். அவர்களின் நாவிலிருந்து அச்சொல் வெளி வந்த நேரம் இறைவனின் அங்கீகாரத்துக்குரிய நேரமாக அமைந்து விட்டது.

அன்று முதல் அவர்களின் உடல் எந்நாளும் காய்ச்சலால் கொதித்த வண்ணமே இருந்தது. ஆனால் அவர்கள் அந்தக் காய்ச்சலோடேயே எல்லாப் பணிகளையும் அயர்வின்றி ஆற்றிய வண்ணமேயிருந்தனர். என்றாலும், நிரந்தரமான அந்தக் காய்ச்சலின் பிரதிபலிப்பாக அவர்களின் பிற்கால சுபாவத்தில் கோபம் அதிகமாக இருந்தது. அதன் தாக்கம் கலீஃபா உமர் (ரலி) அவர்களின் காலத்தில் நல்ல படி மக்களுக்குப் புலப்பட்டது.

ஒரு சமயம் பள்ளியில் திருக்குர்ஆன் ஓதிக் கொண்டிருந்த ஒருவரை கலீஃபா உமர் (ரலி) அவர்கள் தடுத்து நிறுத்தினார்கள். ஏனெனில் அதில் ஒரு வசனத்தை கலீஃபா உமர் [ரலி] அவர்கள் அறிந்திருந்த முறைக்கு மாற்றமாக அவர் ஓதினார். அவ்வாறு அவருக்கு ஓதக் கற்பித்தது யார்? என கலீஃபா அவர்கள் வினவ, 'உப்பை இப்னு கஅப் (ரலி)' என்றாரவர். அவரை அழைத்துக் கொண்டு ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களைச் சந்தித்து கலீஃபா அவர்கள் 'இவர் இவ்வாறாக ஓதுகிறார். நீரே

இவ்வாறாகக் கற்பித்ததாகவும் கூறுகிறார்' என முறையிட்டார்கள். அதனைக் கேட்டு ஹழ்ரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்கள் ''ஆம்! அவர் மிகச் சரியாகவே, நான் கற்பித்தபடியே ஓதுகிறார். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களிடமிருந்து நானும் இவ்வாறே ஓதக் கேட்டுள்ளேன்'' என்றார்கள். அதனைக் கேட்டு கலீஃபா உமர் (ரலி) அவர்கள் வியப்படைந்தவர்களாக, ''என்ன அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்கள் உமக்கு இப்படித்தான் கற்பித்தார்களா?'' என வினவினார்கள். ஹழ்ரத் உப்பை [ரலி] அவர்களும் 'ஆம்' என்றார்கள். அப்போதும் கலீஃபா அவர்களின் வியப்பு நீங்கவில்லை. மீண்டும் ஐயத்தோடேயே அவர்கள் கேட்டபோது ஹழ்ரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்களின் கோபம் பொங்கியது. ''இந்த வசனத்தை அண்ணலார் (ஸல்) அவர்கள் எனக்கு இப்படியேதான் ஓதிக் காட்டினார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களின் இதயத்தில் ஜிப்ரஈல் [அலை] அவர்களும் இதே விதமாகவே இறக்கினர். ஜிப்ரஈல் [அலை] அவர்களுக்கும் அல்லாஹ்வும் இதே விதமாகவே வெளிப்படுத்தினான். அதற்கு முன்னதாக கத்தாபுடையவும் அவருடைய திருமகனா[ர் கலீஃபா உம]ருடையவும் யோசனை கேட்கப்படவில்லை'' என ஹழ்ரத் உப்பை [ரலி] அவர்கள் பேசிய தோரணை கண்ட கலீஃபா அவர்கள் 'அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர்' என தங்களின் காதுகளைப் பொத்திக் கொண்டவர்களாகத் திரும்பி விட்டார்கள்.

மற்றொரு நாள் இதே போல் குர்ஆனை ஓதிக் கொண்டிருந்த ஒருவர் ஓதிய வசனத்தைக் கேட்டு கலீஃபா உமர் [ரலி] அவர்கள் அவரைத் தடுத்து நிறுத்தினார்கள். அவர், ஹழ்ரத் அபுத்தர்தா [ரலி] அவர்களுடன் ஸிரியாவிலிருந்து வந்திருந்த பயணிகளுள் ஒருவர். ஹழ்ரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்களிடமே அவர் குர்ஆன் ஓதக் கற்றதா

கத் தெரிந்து கொண்ட கலீஃபா அவர்கள் உடனே உப்பை [ரலி] அவர்களை அழைத்து வர ஆள் அனுப்பினார்கள்.

இல்லத்தில் தங்களின் ஒட்டகைக்கு இரையூட்டிக் கொண்டிருந்தார்கள் ஹழ்ரத் உப்பை (ரலி). கலீஃபாவின் அழைப்பைச் செவியுற்ற அவர்கள் அழைக்க வந்த தூதரி டமே தாம் அழைக்கப்படும் காரணத்தை வினவினார்கள். பள்ளியில் நடைபெற்ற சம்பவத்தை அத்தூதர் கூறினார். மறுகணமே கோபம் தொற்றிக் கொண்டது ஹழ்ரத் உப்பை [ரலி] அவர்களை. வாகனத்துக்குத் தீனியூட்டிக் கொண்டிருந்த கையையும் அவர்கள் கழுவவில்லை; அதற் காகச் சுருட்டி விட்டிருந்த சட்டையின் கையைப் பிரித்து விடவும் இல்லை. அதே கோலத்தில் கலீஃபா அவர்களின் முன் வந்து நின்ற அவர்கள் என்ன விஷயம் என வினவி னார்கள். கலீஃபா அவர்கள் பயணியிடம் ஓதக் கேட்ட வச னத்தைக் குறிப்பிட்டு ஓதச் சொன்னார்கள்; பயணிக்கு தாம் கற்பித்திருந்தபடியே ஓதிக் காட்டினார்கள் ஹழ்ரத் உப்பை [ரலி]. கலீஃபா அவர்கள் அதே வசனத்தை அங்கி ருந்த ஹழ்ரத் ஜைத் இப்னு ஃஸாபித் [ரலி] அவர்களிட மும் ஓதக் கேட்டார்கள். அவர்கள் ஓதிய முறை ஹழ்ரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்கள் ஓதிய முறைக்கு மாற்ற மாக இருந்தது. அதுவே சரி என்றார்கள் கலீஃபா. மறு கணமே ஹழ்ரத் உப்பை [ரலி] அவர்கள் ஆவேசங் கொண் வர்களாக, ''அமீரல் முஉமினீன்! ஆண்டவன் மீதாணை யாக, நீங்களெல்லாம் கடைத் தெருவில் உங்கள் கொடுக் கல் வாங்கல்களில் ஈடுபட்டிருந்த சமயங்களிலும் நான் அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களிடம் பாடங் கற் றுக் கொண்டிருந்தேன் என்பதைத் தாங்கள் அறிந்தே இருக்கிறீர்கள். அவ்வாறிருந்தும் என் தகுதி உதாசீனம் செய்யப்படுகிறது. ஆண்டவன் மீதாணையாகக் கூறுகிறேன். தாங்கள் கட்டளையிட்டால் இனி நான் கற்பிப்பதைவிட்டு மரணம் என்னை அணுகும் வரையிலும் என் வீட்டுக்குள்

ளேயே தங்கி தனிமை வாழ்வை மேற்கொள்கிறேன்'' என்றார்கள். ஆனால் கலீஃபா அவர்கள் அவ்வாறு அவர்களை விட்டுவிடவில்லை. ''அப்படி ஒருபோதும் கட்டளையிடுவதற்கில்லை. அல்லாஹ் உமக்கருளியுள்ள ஞானத்தை நீர் மற்றவர்களுக்குக் கற்பிக்கத்தான் வேண்டும்'' என அவர்களை சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தார்கள்.

இவ்வாறான தர்க்கங்கள் பல நேரங்களில் ஏற்பட்டபோதிலும் கலீஃபா அவர்களிடம் ஹழ்ரத் உப்பை இப்னு கஅப்(ரலி)அவர்களின் தகுதிகுறைவடையவில்லை. தர்க்கங்களனைத்தும் அந்த நாயகத் தோழர்களிடையே வேதவசனங்களிலும் தூதர் நாயகத்தின் திருவாய் மொழிகளிலும் பேதங்கள் ஏற்பட்டு விடாமல் காப்பதற்காகவே நடைபெற்றனவேயொழிய தங்களின் தராதரப் பேதமோ சொந்தக் குரோதமோ அவர்களிடையே தலை நீட்டியதில்லை. அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களின் அருள்வாக்கின்படி தங்களிடையே காணப்பட்ட கருத்துப் பேதங்களை அல்லாஹ்வின் அருளாகவே மதித்து அவர்கள் தங்களில் ஒருவருக்கொருவரை முகம் பார்க்கும் கண்ணாடியாக்கி அக வாழ்வை அழகுபடுத்திக் கொண்டார்கள்.

அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்களுக்குப்பின் கிலாஃபத்தை ஏற்ற ஹழ்ரத் அபூபக்கர் [ரலி] அவர்களாலும் மதிக்கப் பெற்றார்கள் ஹழ்ரத் உப்பை இப்னு கஅப் [ரலி]; கலீஃபா அவர்களால் அவ்வப்போது ஆலோசனை கேட்க அழைக்கப்படும் துணைவர்களில் ஒருவராகவும் இருந்தார்கள்.

பின்னர் கிலாஃபத்தை ஏற்ற உமர் [ரலி] அவர்களும் அத்தோழரை மிகவும் உபசரித்தார்கள். தங்களின் ஆலோசகர் வட்டத்திலும் அவர்களை அங்கம் பெறச் செய்தார்கள். தர்க்கங்களும் கருத்து விளக்கங்களும் அந்நாயகத் தோழர்கள் தங்களிடையே பரிமாறிக் கொண்டார்களே

யன்றி மக்களிடையே ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்களைப் பற்றி புகழ்ந்து போற்றுபவர்களாகவே இருந்தார்கள் கலீஃபா. ஸிரியப் பயணத்தின் போது அவர்கள் ஆற்றிய ஒரு பேருரையினூடே 'குர்ஆனில் நாட்டமுடையவர்கள் உப்பை இப்னு கஅபிடம் செல்லுங்கள்' என்று குறிப்பிட்டார்கள். ரமழ்லான் மாதத்தில் தராவீஹ் தொழும் வழி முறையை ஏற்படுத்திய கலீஃபா அவர்கள் மதீனாவின் பள்ளியில் அத்தொழுகையை நடத்த ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்களையே இமாமாக நியமனம் செய்தார்கள். நாட்டின் ஏதாவதொரு பகுதிக்கு தம்மை ஆளுநராக ஏன் அனுப்பி விடக்கூடாது என ஹழ்லரத் உப்பை (ரலி) அவர்களே வினவிய போதும்கூட இவர்களின் அறிவு ஞானத்தைப் பெரிதும் மதித்த கலீஃபா அவர்கள் 'மதீனாவின் மக்களுக்கு உங்களின் அறிவியல் பணியே மிக அவசியமானது' என்று கூறி விட்டார்கள்.

''ஃபாரூக்குல் அஅலம் [ரலி] அவர்களின் கிலாஃபத்தின் போது எங்களில் ஒருவர் கலீஃபா அவர்களிடம் ஒரு தேவையை நாடிச் சென்றார். அது இரவு நேரமாக இருந்தது. எனவே அவருக்கு பேச ஒரு வாய்ப்பு தரப்பட்டது. அவர் தம் பேச்சினூடே உலகத்தைக் குறிப்பிட்டார். மிக அற்பமான பொருளாக இவ்வுலகத்தை உருவகப்படுத்திக் காட்டிய அவர் அதனைக் கொண்டு எந்தப் பயனுமே இல்லை என விவரித்தார். அவர் தம் பேச்சை நிறைவு செய்த பின்னர் கலீஃபா அவர்களின் அருகேயிருந்த ஒரு மனிதர், ''உம்முடைய முழுப்பேச்சும் சரியானதே ஆயினும் உலகத்தைப் பற்றிய உம் கருத்தைத் திருத்திக் கொள்வீராக. இந்த உலகத்தைப் பற்றி நீர் இன்னும் அறிய வேண்டியவை உள்ளன. நம்முடைய மறுமைப் பயணத்துக்குத் தேவையான கட்டுணவு இந்த உலகத்தில்தான் இருக்கிறது. இங்கே நீர் ஆற்றக் கூடிய செயல்களைத்தான் மறுமையில் பெறுவீர்'' என்றெல்லாம் எடுத்துரைத்தார் அவர். உலகைப்பற்றி எங்கள

னைவரையும் விட அதிகம் தெரிந்தவராக இருந்தார். 'அமீரல் முஃமினீன்! இவர் யார்?'' என வினவப்பட்ட போது, ''இவர் ஸய்யிதுல் முஸ்லிமீன் — முஸ்லிம்களின் தலைவர் — உப்பை இப்னு கஅப்'' என்றார்கள் கலீஃபா — என அபீ பஸரா [ரலி] அறிவிக்கின்றனர்.

வாழ்நாள் முழுவதையும்அறிவையும்ஞானத்தையும்பரப்பு வதற்கென்றே கழித்தார்கள் ஹழ்லரத் உப்பை [ரலி]. மற்ற பல முஹாஜிர்களும் அன்ஸார்களும் சந்தைகளிலும் தோட் டந்துரவுகளிலும் தங்களின் வருவாய்க்காக உழைத்துக் கொண்டிருந்தபோது இவர்கள் மஸ்ஜிதுன் னபவீயில் கடை விரித்து மறை ஞானத்தையும் பெருமானார் [ஸல்] அவர் களின் உரை ஞானத்தையும் மக்களிடையே வினியோகித் துக் கொண்டிருந்தார்கள். அன்ஸார்களில் இவர்களை விடச் சிறந்த அறிஞராக எவரும் இருக்கவில்லை. இவர்களை விடச் சிறந்த 'ஹாஃபிழ்'லாகவும் 'காரி'யாகவும் முஹா ஜிர்களிலும் எவரும் இருக்கவில்லை. பெருமானார் [ஸல்] அவர்களிடம் ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர் கள் பெற்றிருந்த ஞானம் அண்ணலார் [ஸல்] அவர்களின் பிரிவுக்குப்பின் ஹழ்லரத் அபூபக்கர் [ரலி] அவர்களைத் தவிர மற்றெவரையும் அவர்களுக்கு உவமை கூற முடியாத வாறிருந்தது.

ஹதீஃஸ் கலையிலும் இவர்கள் சிறந்த நினைவாற்றல் பெற்று விளங்கினர். அண்ணலார் (ஸல்) அவர்கள் ஒரு வெள்ளிக்கிழமையன்று குத்பா பேருரையாற்றுகையில் திருமறையில் 'தவ்பா' என்ற தலைப்பிலுள்ள ஒன்பதாம் அத்தியாயத்தை ஓதக் கேட்ட ஹழ்லரத் அபூதர் [ரலி] அவர்களும் ஹழ்லரத் அபுத்தர்தா [ரலி] அவர்களும் 'இவ் வத்தியாயம் எப்போது இறங்கியது. இதுவரை நாங்கள் செவியுறவில்லையே'' என வினவியபோது ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் [ரலி] அவர்கள் அவ்விருவரையும் வாய்மூடி இருக்கும்படியாக மட்டும் சைக்கினை செய்து விட்டார்கள்.

தொழுகை முடிந்ததும் அவ்விருவரும் ஹழ்லரத் உப்பை (ரலி) அவர்களை அண்மி தங்களின் வினாவுக்கு அவர்கள் விளக்கம் பகராதது பற்றி வினவினார்கள். ஹழ்லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களோ, 'குத்பாவின்போது உங்கள் வாய்களை அசைத்ததால் நீங்கள் ஜும்ஆவின் நன்மை யையே இழந்து விட்டீர்கள்' என்றார்கள். திடுக்கிட்ட அவ்விருவரும் அண்ணலார் (ஸல்) அவர்களிடம் சென்று அதுபற்றி முறையிட்டபோது பெருமானார் (ஸல்) அவர் களும் 'அவர் கூறியது சரியே' என்றார்கள்.

கலீஃபா உமர் (ரலி) அவர்களின் காலத்தில் மஸ்ஜி துன் னபவியின் விஸ்தரிப்புக்காக அருகிலிருந்த ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களின் இல்லத்தை அன்பளிப்பாகவோ கிரயம் பெற்றோ தந்து விடுமாறு கலீஃபா அவர்கள் கேட்ட போது எந்த விதமாகவும் தம் இல்லத்தைத் தர ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்கள் மறுத்து விட்டார்கள். கலீஃபா அவர்களுக்கும் ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு மிடையே தர்க்கமேற்பட்டு இருவரும் தங்களிடையே ஹழ் லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்களை நடுவராக அமர்த்தினார்கள். ஹழ்லரத் உப்பை (ரலி) அவர்கள், ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களின் சம்மதமின்றி அவர் களின் வீட்டை பள்ளியுடன் இணைக்க கலீஃபா அவர் களுக்கு உரிமையில்லை என தீர்ப்பு வழங்கினார்கள். 'எந்த அடிப்படையில் இவ்வாறு தீர்ப்பு வழங்குகிறீர்?' என கலீ ஃபா அவர்கள் வினவினார்கள். அதற்கு விடையாக ஹழ் லரத் உப்பை இப்னு கஅப் (ரலி) அவர்கள், ''அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அறவுரையைக் கொண்டே நான் தீர்ப்பு வழங்கினேன். அல்லாஹ் தன் தூதர் தாவூத் (அலை) அவர்களை 'பைத்துல் முகத்தஸ்' பள்ளியைக் கட்ட ஏவினான். அவ்வாறாகவே ஹழ்லரத் தாவூத் (அலை) அவர்கள் பள்ளியைக் கட்ட முற்பட்டபோது அதற்காகத்

20

தேர்ந்தெடுக்கப்பட்ட இடத்தில் ஒரு மனிதனின் இல்லமும் இருந்தது. அதற்கு மாற்றிடம் பெற்றோ கிரயம் பெற்றோ அதனைத் தந்து விடுமாறு கோரப்பட்டபோது அம்மனிதன் அதற்கு இணங்கவில்லை. பெருந்தொகை பெறவே ஆசை கொண்டு அம்மனிதன் பிணங்குகிறான் என ஐயமுற்ற ஹழ்லரத் தாவூத் (அலை) அவர்கள் எவ்வளவோ உயர்ந்த தொகை தருவதாகக் கூறியும் அம்மனிதன் இணங்கவே இல்லை. வேண்டுமென்றே அம்மனிதன் வீம்பு பிடிப்பதாக எண்ணிய ஹழ்லரத் தாவூத் (அலை) அவர்கள் பலவந்த மாகவே அந்நிலத்தை பள்ளிக்காகச் சேர்த்துக் கொள்ள நாடியபோது இறைவன் ஹழ்லரத் தாவூத் [அலை] அவர்களுக்குச் சேதியனுப்பினான். 'மக்கள் என்னை வணங் குவதற்காகவே பள்ளியெழுப்ப நான் உம்மை ஏவினேன். நீரோ மக்களின் உடைமைகளைப் பறிக்க நினைக்கிறீர். பறிக்கப்பட்ட பிறரின் உடைமையிலமர்ந்து வணங்கப்படு வது என்னுடைய பெருமைக்கு உகந்ததல்ல'' என ஹழ்ல ரத் ஜிப்ராயீல் (அலை) அவர்கள் வந்து கூறிய செய்தியை அறிந்த ஹழ்லரத் தாவூத் (அலை) அவர்கள் தங்கள் முயற் சியை நிறுத்திக் கொண்டார்களாயினும், ''இறைவா! தடை பட்டு விட்ட இக்காரியத்தை என் மகனைக் கொண்டாவது நீ நிறைவு பெறச் செய்'' என வழுத்தி வந்தார்கள். அவ் விறைஞ்சுதல் ஏற்கப்பட்ட தன் பலனாக அவர்களின் திருமக னார் ஹழ்லரத் ஸுலைமான் (அலை) அவர்கள் பைத்துல் முகத்தஸைக் கட்டி முடித்தார்கள் என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூற நான் செவியேற்றுள்ளேன்'' என விளக்கினார்கள்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் ஒரு நூற்று அறுபத்து நான்கு அருள்மொழிகளை அறிவித்துள்ள இவர் கள் மார்க்கத் தீர்ப்பு வழங்குவதிலும் தங்களின் காலத்தில் நிகரற்று விளங்கினார்கள். விபச்சாரத்துக்குரிய தண்டனை களை விளக்கிய அவர்கள் விபச்சாரம் செய்தவன் மணமா காத இளைஞனாகில் அவனைச் சவுக்காலடிக்க வேண்டும்.

மணமுடிக்கப் பெற்ற வாலிபனாகில் கல்லெறிந்து கொல்லப் பட வேண்டும்; மணமுடிக்கப் பெற்ற வயோதிகனாகில் சவுக்காலடித்துத் தண்டிக்கப்பட்டு கல்லெறிந்தும் கொல்லப் பட வேண்டும் என்றார்கள்.

திருக்குர்ஆனின் அறிவார்ந்த, ஆத்மார்த்த செய்திகளை யெல்லாம் மக்களுக்கு விளக்கிய அவர்கள் அதன் வழி நடந்தே முஸ்லிம்கள் தங்களின் இம்மையையும் மறுமையை யும் அலங்கரிக்கச் செய்து கொள்ள முடியும் என போதித் தார்கள்.

''திருக்குர்ஆனை உங்களுக்கு முன்னிலையாக்கிக் கொள்ளுங்கள். அதன் தீர்ப்புகளுக்கும் கட்டளைகளுக்கும் வழிப்படுங்கள். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் உங்களுக்கென விட்டுச் சென்றுள்ளது அதுவே. எவருமே குறை கூறத் துணிய முடியாத சாட்சியம் அது உங்களுக்கு. உங்களுக்கு முன் சென்றோர் பற்றியும், உங்களைப் பற்றி யும், உங்களுக்குப் பின் வருவோர் பற்றியும் செய்திகளைத் தன்னுள்ளே பொதிந்துள்ள அதுவே உங்களுக்கிடையே மிகச் சரியான நீதிபதி.

''அல்லாஹ்வின்பால் கொண்ட அச்சத்தின் காரண மாக ஒரு பொருளை விலக்கி விட்டவனுக்கு நிச்சயமாக அல்லாஹ் அதனைவிட மேலான ஒரு பொருளை அவன் நினைத்தேயிராத ஒரு வழியில் அருள்வான். அல்லாஹ் வினால் அருளப்பட்ட ஒன்றின் தராதரத்தை மதிக்காது அதனை தவறான வழியில் பயன்படுத்துபவனிடம் நிச்சய மாக அல்லாஹ் தன் வேதனையை அவன் நினைத்தே பார்த்திராத வழியாக வந்தடையச் செய்வான்.

''நன்னம்பிக்கை கொண்ட ஒரு நல்லடியாரிடம் நான்கு தன்மைகள் குடி கொண்டிருக்கும் :

1. துயரம் அவரை அணுகும்போது அவர் பொறுமை கொள்வார்;

2. கிடைக்கப் பெறும் அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துவார்;

3. பேசும்போது உண்மையே பேசுவார்;

4. தீர்ப்பு வழங்கினால் நீதியுடன் வழங்குவார்.

''அவருடைய சொல்லில் ஒளி வீசும். அவருடைய அறிவு சுடர் பரப்பும். அவர் நுழையும் இடம் பிரகாசிக்கும். அவர் வெளிப்பட்டால் வெளிச்சந் தருவார். மறுமை நாளில் அவர் ஒளியின்பால் மீள்வார். இதையே அல்லாஹ் 'நூருன் அலா நூர் — ஒளிக்கு மேலான ஒளி' என்கிறான்.

—என்றெல்லாம் உபதேசித்த அந்த ஞானாசிரியரின் முன்னே ஹழ்ரத் உமர் அல் ஃபாரூக், அபூஹுரைரா, அபூ மூஸா அஷ்அரீ, அபூ அய்யூப் அன்ஸாரி, உபாதா இப்னு ஸ்வாமித், அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ், அனஸ் இப்னு மாலிக் (ரலி) போன்ற ஞானக் கருவூலங்களெல்லாமும் கூட அமர்ந்து பாடங் கேட்டார்கள்.

அவர்களின் கோபாவேசத்துக்கு அஞ்சி மாணவர்கள் அதிகமாக கேள்விகளைத் திரும்பத் திரும்பக் கேட்க அஞ்சி மிக கவனமாகக் கேட்பார்கள். மிக அமைதியான சூழலிலேயே பாடங்கள் நடைபெறும். பாட கூடங்களே போதனைக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்க மாட்டா. பாதையோரங்களில் தங்களின் வாகனத்தில் அமர்ந்தவாறே அவர்கள் தங்கள் போதனைகளைத் துவக்கி விடுவர்; மாணவர்களெல்லாம் சூழ்ந்து நின்ற வண்ணமே பாடங் கற்பர்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் பிரிவுக்குப் பின் மதிக்கப் பெற்ற மாபெரும் ஞானாசிரியராக மதீனாவிலேயே தங்கள் வாழ் நாளெல்லாம் அறிவியல் பணியாற்றிய இம்மேதை தங்களின் வாக்கைப் போலவே வாழ்ந்து காட்டி மறைந்தார்கள்.



# 13. ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி)

வணங்குவதற்குரியவன் அல்லாஹ் ஒருவனே என்ற தத்துவ விருட்சத்தை வேரறுக்க, 'மற்றெவர்க்கும் நாம் தலை வணங்கோம்' என சூளுரைத்துப் புறப்பட்டனர் முஹாஜிர்களும் மதீனாவின் அன்ஸார்களும்.

பூமண்டலத்தைப் பற்றிப் படர்ந்துள்ள ஹிஜ்ராவின் சகாப்தம் பிறந்து ஓராண்டு காலத்தையே முழுமையாக நிறைவு படுத்தியிருந்தது. மழலை நிலையிலேயே அதன் மென்னியை நெறிக்க மக்காவாசிகளும் ஓராயிரம் பேர் வந்து கொண்டிருந்தனர். அவர்களைச் சமாளிக்கப் புறப்பட்டவர்களே முஹாஜிர்களும் அன்ஸார்களும்.

மதீனாவிலிருந்து பத்ரென்னும் தலத்திற்கிடைப்பட்ட ஏறத்தாழ எண்பத்து ஐந்து மைல்கள் தொலைவைக் கொண்ட பாலைவனப் பாதையைக் கடக்க அம்முன்னூற்றுப் பதிமூன்றுபேர் பெற்றிருந்த வாகனங்கள் எழுபது ஒட்டகைகளும் இரண்டே குதிரைகளுமே! என்றாலும் என்ன?

மூன்று அல்லது நான்கு பேர்களுக்கு ஓர் ஒட்டகை என அவர்கள் பகுத்துக் கொண்டனர்; இருவர் ஒட்டகையிலமர்ந்து கொள்ள மற்றவர் ஒட்டகையை வழி நடத்திச் செல்வது என முறை வகுத்துக் கொண்டனர்.

பயணம் துவங்கியது. முதலாம், இரண்டாம் தரிப்பிடங்களைக் கடந்தனர் பயணிகள். அமர்ந்து செல்பவர்களும் வழி நடத்தி நடந்தே செல்பவர்களும் முன்னரே வகுத்துக் கொண்ட முறைப்படி ஆங்காங்கே நிலைமாறிக் கொண்டனர். மூன்றாவதாக நிலை மாறி அவர்கள் தங்கள் பயணத்தைத் துவக்கியபோது ஒரு கண்கொள்ளாக் காட்சியைக் கண்டது ஹிஜாஸின் வான மண்டலம். இரண்டு தோழர்களை ஒட்டகையிலமரச் செய்து அதன் கயிற்றைப் பற்றி

வழி நடத்திப் புறப்பட்டார்கள்—பிரபஞ்சத்தை வழி நடத்த வந்திருந்த பெருமான் முஹம்மத் (ஸல்) அவர்கள்!

ஒட்டகையில் அமர்ந்திருந்த இருவரில் ஒருவர் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் இளவல் அலீ (ரலி) ஆவர். மற்றவர் மதீனாவில் அபூ லுபாபா என அறியப்பட்டிருந்த அன்ஸாரித் தோழர். ஈனமும் கொலையும் நூறாண்டு காலத்துக்கும் மேலாக தங்களிடையே விளைத்திட்ட பவநோய் தீர்த்திட வந்த ஒரு தேற்றரவாளரை நடக்கவிட்டு ஒட்டகையிலமர்ந்து வர 'அன்ஸாரி'ன் மனம் எங்ஙனம் ஒப்பும். ''என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம். அல்லாஹ்வின் தூதரவர்களே! தாங்கள் ஒட்டகையிலமர்ந்தே வரவேண்டும். நானே நடந்து வருவேன்'' என துடித்த வண்ணமே இருந்தார் அத்தோழர். ''நடப்பதற்கு நீர் என்னை விட ஆற்றல் பெற்றவருமல்லர். நன்மைகளைத் தேடுவதில் நான் உம்மைவிட தேவை குறைந்தவனுமல்லன்'' என கூறி பெருமானார் (ஸல்) அவர்கள் அவரை ஒட்டகையில் அமரவே செய்தார்கள். ஒட்டகை அவரையும் சுமந்து நடந்தது. அவராலோ தம் மனதின் பளுவைச் சுமக்க முடியவே இல்லை. வகுத்துக் கொண்ட வழி முறைக்கு மாற்றமாகச் செயல்படுவது பெருமானார் (ஸல்) அவர்களின் பெருமைக்கு உகந்ததுமல்ல. முடிவாக, 'ரவ்ஹா' என்ற தலத்திலிருந்து அண்ணலார் (ஸல்) அவர்கள் அவரை மதீனாவுக்கே சென்று தங்களின் பொறுப்புகளை நிர்வகிக்கும்படி ஏவி அனுப்பி விட்டார்கள்.

'அவ்ஸ்'களைச் சார்ந்த 'அம்ரு இப்னு அவ்ஃப்' குடும்பத்தில் உள்ளவரே ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி). ரிஃபாஆ இப்னு அப்துல் முன்த்ஸிர் என்பது அவரின் இயற்பெயர். அக்குடும்பத்தவர்களின் குடியிருப்பு 'குபா'வில் இருந்தது. மக்காவிலிருந்து குடி பெயர்ந்து வந்த முஹாஜிர்களில் பெரும்பாலோரை முதன் முதலாக வரவேற்று விருந்தினர்

களாக ஏற்றுக் கொண்டவர்கள் அவர்களே. பெருமானார் (ஸல்) அவர்களும் கூட ஹிஜ்ரத்தின் போது மதீனாவை அடையுமுன் சில நாட்கள் அக்குடும்பத்தாரிடையே தங்கியிருந்தார்கள். 'அக்கபா'வில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் கரம் பற்றிய எழுபத்து மூன்று பேர்களில் 'நகீப்'களாக நியமிக்கப் பெற்ற பன்னிருவருள் ஒருவராகவும் ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) இருந்தனர். 'குபா'வில் தங்கிய அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை உபசரிக்கப் பெற்ற பேற்றினால் மேலும் நெருக்கமான தொடர்பு அவர்களுக்குக் கிடைத்தது.

பயண இடைவழியிலேயே ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்கள் மதீனா திரும்பி விட்டாலும் பெருமானார் (ஸல்) அவர்களின் பணிகளையே பொறுப்பேற்றுத் திரும்பியதால் 'பத்ரின் தோழர்க'ளில் ஒருவராகவே அவர்கள் கணிக்கப் பெற்றார்கள். அடுத்து நடைபெற்ற உஹத், அகழ், கைபர் போர்களிலும் அவர்கள் பங்கேற்றார்கள்; ஹுதைபியாவிலும், மக்க நகரப்பிரவேசத்திலும் கலந்து கொண்டார்கள். ஹுனைன், தாயிஃப் படையெடுப்புகளிலும் பங்கேற்ற அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களின் பிரிவுக்குப் பின் நான்கு கலீஃபாக்களின் காலத்திலும் வாழ்ந்து ஹழ்லரத் அலீ [ரலி] அவர்களின் கிலாஃபத்தின் போதே மறைந்தார் தார்கள். எனினும் பெருமானார் [ஸல்] அவர்களின் பிரிவுக்குப் பின் இவர்களைப் பற்றிய எந்தச் செய்தியும் வரலாற்றில் காணக் கிடைக்காததைக் கவனிக்கும்போது பெருமான் நபி (ஸல்) அவர்களைப் பிரிந்த ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) தங்கள் வாழ்நாளை வணக்க வழிபாடுகளிலேயே தனித்துக் கழித்திருப்பார்கள் என்றே தெரிகிறது. ஆனால் பதினான்கு நூற்றாண்டுகள் கடந்தும் அவர்களின் திருப்பெயரை உலகம் மறந்து விடாதபடி மதீனாவின் பள்ளியில் அவர்களின் பெயரால் 'ஸுத்தூனெ அபூ லுபாபா' என்ற ஒரு தூண் இன்றும் நின்று விளங்குகிறது. இதன் வரலாறு ஹழ்லரத்

அபூ லுபாபா (ரலி) அவர்கள் கொண்டிருந்த இறையச்சத்தையும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள்பால் அத்தோழர் கொண்டிருந்த பக்திப் பேணுதலையும் மவுனமாகவே பேசிக் கொண்டுள்ளது.

ஹிஜ்ரி 5-ம் ஆண்டில் நடைபெற்ற அகழ்ப் போரையடுத்து முற்றுகை சூழப் பெற்ற பனூ குறைழ்லா யூதர்கள் தங்களின் நிலை திக்கற்றதாகி விட்டதை உணர்ந்தபோது, ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களோடு கலந்துரையாட விரும்பி அவர்களுக்கு அழைப்பு விடுத்தனர். இஸ்லாத்துக்கு முன்னர் குறைழ்லாக்களுக்கும் அவ்ஸ்களுக்கும் இடையே உடன்பாடு கொண்டிருந்த வகையில் ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களோடு குறைழ்லாக்களுக்கு மிக நெருங்கிய தொடர்பு இருந்தது. அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களை குறைழ்லாக்களைச் சந்தித்து வர அனுமதித்து சில தோழர்களுடன் அனுப்பி வைத்தார்கள்.

குறைழ்லாக்களின் கோட்டைக்குள் நுழைந்த ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களைப் பெண்களின் ஓலக்குரலே வரவேற்றது. தங்களின்கையறுநிலையைப்பற்றிபுலம்பி, சிறார்களையும் அணைத்த வண்ணம் குறைழ்லாக்களின் பெண்களெல்லாம் கதறியழுத கோலம் ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களின் மனதை நெகிழச் செய்து விட்டது. ஆண்களோ தங்களுக்குள்ளேயே குழம்பிக் கிடந்தனர். அவர்களில் பலருக்கு பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு நபியே என்ற நம்பிக்கை இருக்கத்தான் செய்தது. அத்தகையவர்களுள் ஒருவரான அக்கோட்டையின் தலைவர் தங்களின் பாவச் செயலுக்குக் கழுவாயாக இஸ்லாத்தை ஏற்று தங்களின் மக்களையும் உடைமைகளையும் பாதுகாத்துக் கொள்ளலாம் என்று யோசனை கூறினார். ஆனால், "அதை விட மரணிப்பதே மேல். தவ்ராத்தையும் மூஸா

(அலை) அவர்களின் போதனைகளையும் விட்டு வேறொன்றை ஏற்பதா'' என மற்றவர்கள் முரண்டு பிடித்தனர். குறைழ்லாக்கள் உடன்பாடுக்கு மாறுபடுவதை முதலிலேயே கண்டித்த அம்ர் இப்னு ஸுஃத்ஆ எனப்பட்டவர், நம் குற்றத்துக்குரிய தண்டமாக ஒரு தொகையையேனும் முஹம்மத் (ஸல்) ஏற்றுக் கொள்வாரா என முயற்சிப்போம் என்றார். 'அரபிகளிடம் தண்டம் செலுத்துவதா? அதைவிட சாவதே மேல்' என அதற்கும் முரண்பட்டனர் குறைழ்லாக்கள். அவர்களின் முரட்டுப் பிடிவாதத்தில் வெறுப்படைந்த சிலர் பிரிந்து வெளியேறி பெருமானார் (ஸல்) அவர்களிடம் இஸ்லாத்தை ஏற்கச் சென்றும் விட்டனர். எஞ்சி நின்றவர்களே ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களோடு உரையாடினர்.

தாங்களும் கோட்டையை விட்டும் வெளியேறி சரணடைந்து விடத்தான் வேண்டுமா? வேறு வழியேதும் தங்களுக்கு இல்லையா? என அவர்கள் வினவினர்.

'ஆம்' என வேறு வழியற்ற நிலையை அவர்களுக்கு விளக்கிய அதே சமயம் ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்கள் தங்களின் கை விரல்களால் தங்கள் கழுத்தைச் சுட்டிக் காட்டி விட்டார்கள். சரணடைந்து பின்னரும் அவர்கள் கொல்லவேபடுவர் என்றுணர்த்துவதாக இருந்தது அச்செயல்.

இனி யூதர்கள் சரணடையத் தயங்கலாம்; தப்பிக்க அவர்களுக்கு வழியே இல்லை என்றாலும் தாமதிக்கலாம். அதனால் முஸ்லிம்களின் சிரமம் கூடுமே! எத்தகைய பாதகத்தை இழைத்து விட்டோம் என்ற குற்ற உணர்வு தம்மைத் தொற்றிக் கொண்ட துரிதத்தை ''என் பாதங்கள் அசையு முன்னதாகவே என் பாதகச் செயலை நான் உணர்ந்து விட்டேன்'' என ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களே குறிப்பிடுகிறார்கள்.

அவர்களின் முகம் வெளிறியது; நா குழறியது.

إِنَّا لِلَّهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُونَ

''நிச்சயமாக நாம் அல்லாஹ்விடமிருந்தே வந்தோம். நிச்சயமாக அவனிடமே நாம் மீளுவோம்.'' (அல்குர் ஆன்—2 : 156) என்றனர் அபூ லுபாபா (ரலி). ''என்ன நடந்து விட்டது?'' என திடுக்கிட்டவராகக் கேட்டார் யூதத் தலைவர் கஅப் இப்னு அஸத். ''அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் நான் துரோகமிழைத்து விட்டேன்'' என்றனர் ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி). அச்சத்தால் வடிந்த கண்ணீர் அவர்களின் தாடியை நனைத்து விட்டது. குறைழ்லாக்களை விட்டுப் பிரிந்த அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் செல்வதெங்கே-துணையாக வந்து வெளியே காத்திருந்த தோழர்களின் முகங்களையும் காண நாணி கோட்டையின் மற்றொரு வாசல் வழியாக வெளி யேறி பள்ளியை நோக்கியே நடந்தனர்.

முன்னரே அவர்கள் இழைத்து விட்டிருந்த ஒரு தவறும் இப்போது அவர்களுக்கு நினைவில் வந்தது. ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களுக்குச் சொந்தமான, பழுத்துச் செழித்த ஓர் ஈச்ச மரத்தை, அவர்களின் பாதுகாவலிலேயே வளர்ந்த ஓர் அடிமை தமக்குச் சொந்தமானதென பெருமா னார் (ஸல்) அவர்களிடம் வந்து முறையிட்டு நின்றார். பெரு மானார் [ஸல்] அவர்கள் ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர் களை அழைத்து விசாரித்தபோது அது தமக்கே சொந்த மென வாதித்தார்கள். உண்மையும் அவ்வாறே வெளிப்பட் டது. தீர விசாரித்து பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்ல ரத் அபூ லுபாபா (ரலி) அவர்களின் புறமே தீர்ப்பளித்து விட்டார்கள். அதுவரை அம்மரம் தமக்கே கிட்டும் என எண்ணியிருந்த அவ்வடிமை பெருமானார் (ஸல்) அவர்களின் தீர்ப்பைக் கேட்டு அடைந்த ஏமாற்றத்தை அவரின் முகம்

பிரதிபலித்தது. அநாதையான அவரை நிராசையடையச் செய்துவிடாதிருக்க நாடி, நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் அம்மரத்தை தமக்கு அன்பளிப்பாகத் தந்து விடும்படி ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களிடம் கேட்டார்கள். அன்பளிப்பாகப் பெற்று அம்மரத்தை அவ்வடிமைக்கே தந்துவிட பெருமானார் (ஸல்) அவர்கள் கொண்டிருந்த உள்ளுணர்வைப் புரிந்து கொண்ட ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்கள் அவ்வாறு தர மறுத்து விட்டார்கள். ''அப்படியானால் அபா லுபாபா! நீரே அந்த மரத்தை அவ்வநாதைக்குத் தந்து விடும். அதற்குப் பகரமாக அதே போன்றொன்றை சுவர்க்கத்தில் நீர் பெற்றுக் கொள்வீர்'' என்றும் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். விசாரணைக்குத் தம்மை ஆளாக்கிய அவ்வடிமையின் செயல் முறைகளில் எரிச்சலடைந்திருந்த ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அதற்கும் மறுத்து விட்டார்கள். அந்த மறுப்பினால் அண்ணலார் (ஸல்) அவர்களின் மனம் அத்தோழரைப் பற்றிய ஒரு கவலையைப் பெற்றதானாலும் அவரின் உரிமையை இழக்க பெருமானார் (ஸல்) அவர்கள் அவரை நிர்ப்பந்திக்கவில்லை. அல்லாஹ்வின் தூதரின் வேண்டுதலைத் தாம் புறக்கணித்து விட்ட அந்தச் சம்பவம் ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களின் மனதையும் ஒவ்வொரு நாளும் உறுத்திய வண்ணமே இருந்தது.

பனூ குறைழ்லாக்களை முற்றுகையிட்டு நின்றிருந்த அவ்விடைப்பட்ட காலத்திலேயே ஓர் இரவு தாம் கண்ட ஒரு கனவும் அவர்களை வருத்தியது. நாற்றமெடுத்த ஒரு சேற்றுக் குட்டையில் கிடந்து மீள முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தனர் ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி). மரணத்தின் பிடியே தம்மை அழுத்துகிறதோ என்று அஞ்சப்பட்ட நிலையில் திடீரென வசந்தம் கமழும் ஒரு நீரோடையின் கரையில் தென்றலைச் சுகித்த வண்ணம் தாம் நிற்கக் கண்ட ஹழ்லரத் அபூலுபாபா (ரலி) அதில் குளித்

தெழுந்தனர். கனவும் கலைந்தது. விடிந்ததும் அது பற்றி அவர்கள் விளக்கம் கேட்கவே, ஒரு பெருத்த சங்கடத்தில் அவர்கள் சிக்குவர் என்றும் பின்னர் மீட்சியும் பெறுவர் என்றும் ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் விளக்கம் கூறினார்கள்.

தூதர் நாயகம் (ஸல்) அவர்களுக்குத் துரோகமிழைத்து அல்லாஹ்வின் சாபக் கேட்டுக்கு ஆளாவதை விடவும் பெருத்த சங்கடம் எதுவாக இருக்க முடியும்? இதயம் மலையாகக் கனக்க, கண்கள் அருவியெனப் பொங்க, பெருமானார் (ஸல்) அவர்களின் பள்ளியை அடைந்த ஹழ்ரத் அபூ லுபாபா (ரலி) அவர்கள் அங்கிருந்த தூண்களில் ஒன்றில் தம்மைப் பிணைத்தவர்களாக ''அல்லாஹ் என் பாவத்தை மன்னிக்காதவரை இதனை விட்டும் நான் நகரப் போவதில்லை. தொழுகைக்காகவும் என் இயற்கைக் கடன்களை கழிப்பதற்காகவுமேயன்றி எவரும் என்னை அவிழ்த்து விடத் தேவையுமில்லை'' என்றவர்களாக அமர்ந்து விட்டனர்.

இந்தச் சம்பவங்கள் பற்றி அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் செவியுற்று வருத்தமடைந்தார்கள். 'அவர் நேரே என்னிடமே வந்து முறையிட்டிருந்தால் நானே அவருக்காகப் பிழை பொறுக்கத் தேடியிருப்பேனே?'' என கவலையுற்ற அவர்கள் 'இனி இறைவனே அவர் பற்றி தன் கருணையை வெளிப்படுத்தும் வரை அவர் பொறுத்திருக்கட்டும்' என்று கூறி விட்டார்கள்.

நாட்கள் ஒன்றிரண்டெ ஓடி மறைந்தன. யூத குறைழ் லாக்கள் மற்றெந்த வழியுமின்றி சரணடைந்தார்கள். அவர்களில் ஆண்களனைவரும் ஹழ்ரத் ஸஅத் இப்னு மஆத் (ரலி) அவர்கள் வழங்கிய தீர்ப்பின்படி (பக்கம்-139) கொல்லப்பட்டும் போனார்கள்.

ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்களோ தூணில் தம்மைப் பிணைத்துக் கொண்டபடியே கிடந்தனர். தொழுகை வேளைகளிலும் மற்ற அவசியத் தருணங்களிலும் அவர்களின் மகளார் வந்து அவர்களை அவிழ்த்து விடுவார்; தேவை முடிந்ததும் மறுபடியும் பிணைத்து விடுவார்; அவ்வப்போது ஓரிரு கவளங்கள் உணவை நிர்பந்தமாகக் கெஞ்சியழுது தம் தந்தையின் வாயில் ஊட்டி விடுவார்; ஓரிரு மிடர் தண்ணீரையும் பருகச் செய்வார். ஆனால் போதுமான உணவின்றி ஏதும் பருகுவதுமின்றி உறக்கமுமின்றி கண்ணீரும் கம்பலையுமாகவே ஆறு நாட்களை முழுமையாகக் கழித்து விட்ட ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) ஏழாம் நாள் காலை பலஹீன மிகுதியால் மயங்கிச் சாய்ந்தனர்.

அதே சமயம் அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்களின் இல்லத்தில் துயில் கொண்டிருந்த பெருமானார் (ஸல்) அவர்கள் தங்கள் மதிவதனம் மலர சிரித்தபடியே எழுந்தார்கள்.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! எந்நாளும் அல்லாஹ் தங்களை மகிழச் செய்யட்டும். இப்போது தங்களின் மகிழ்ச்சிக்குக் காரணம் என்ன?'' என அன்னை உம்முஸலமா (ரலி) அவர்கள் வினவினார்கள்.

பெருமானார் [ஸல்] அவர்கள் ''அபூ லுபாபாவின் பாவம் மன்னிக்கப்பட்டது'' என்றார்கள்.

''பெருமானே! இப்போதே இதனை நான் அபூ லுபாபா (ரலி) அவர்களுக்கு அறிவித்திடவா?'' என வினவினர் அன்னை.

''உம் விருப்பப்படியே செய்யும்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அனுமதி வழங்கிய மறுகணமே தம் இல்லச் சாளரத்தின் வழியே பள்ளியின் புறம் நோக்கி அன்

னையார் அவர்கள் ''அபா லுபாபா! உமக்குச் சோபனம். உம் பாவம் மன்னிக்கப்பட்டு விட்டது'' என அறிவித்தார்கள்.

சாளரத்திற்கு நெருக்கமாகவே பள்ளியில் இருந்த பலரின் செவிகளிலும் விழுந்த இச்செய்தி மதீனா முழுவதிலும் விரைந்து பரவியது. மக்கள் ஒருவர் பின் ஒருவராக ஹழ்லரத் அபூ லுபாபா [ரலி] அவர்களை வாழ்த்த பள்ளிக்கு விரைந்து வந்த வண்ணமேயிருந்தனர். ஹழ்லரத் அபூ லுபாபா அவர்களுக்கும் உணர்வு மீண்டது. தம்பிழைபொறுக்கப்பட்ட செய்தி கேட்டு மகிழ்ந்த அவர்கள் தம்மை அவிழ்த்து விட வந்தவர்களை மட்டும் தடுத்து விட்டார்கள்- பெருமானார் (ஸல்) அவர்களே அவர்களின் கரங்களால் தம்மை விடுவிக்கட்டும் என விழைந்தவர்களாக.

தொழுகைக்காக அண்ணலார் (ஸல்) அவர்கள் பள்ளிக்கு வந்த போது ஹழ்லரத் அபூ லுபாபா (ரலி) அவர்கள் பிணைக்கப் பட்டிருந்த கயிற்றைத் தங்களின் கரங்களாலேயே அவிழ்த்து விட்டதோடு அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்களின் இல்லத்தில் அன்று காலை தங்களுக்கு வெளிப்பட்ட வேதச் செய்தியையும் ஓதிக் காட்டினார்கள்.

يَاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تَخُوْنُوا اللّٰهَ وَالرَّسُوْلَ وَتَخُوْنُوْٓا اَمٰنٰتِكُمْ وَاَنْتُمْ تَعْلَمُوْنَ ○
وَاعْلَمُوْٓا اَنَّمَآ اَمْوَالُكُمْ وَاَوْلَادُكُمْ فِتْنَةٌ ۙ وَّ اَنَّ اللّٰهَ عِنْدَهٗٓ اَجْرٌ عَظِيْمٌ ○

''விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வுக்கும் [அவன்] தூதருக்கும் மோசம் செய்யாதீர்கள். தவிர நீங்கள் (செய்வது அக்கிரமம் என) அறிந்து கொண்டே உங்களிடம் உள்ள அமானிதப் பொருள்களிலும் மோசம் செய்யாதீர்கள். அன்றி உங்களுடைய பொருள்களிலும், உங்களுடைய சந்ததிகளிலும் (உங்களுக்குப்) பெரும் சோதனை இருக்கிறது என்பதையும் நிச்சய

மாக அல்லாஹ்விடத்தில்தான் (உங்களுக்கு) மகத்தான வெகுமதி இருக்கிறதென்பதையும் நீங்கள் உறுதியாக அறிந்து கொள்ளுங்கள்.''

(அல்குர்ஆன் — 8 : 27, 28)

தம் பிழை பொறுக்கப்பட்டதற்குரிய நன்றியாக தம் உடைமைகளனைத்தையும் தர்மமாகவழங்கிட ஹழ்லரத் அபூ லுபாபா [ரலி] அவர்கள் துணிந்தார்கள். எனினும் பெருமானார் [ஸல்] அவர்கள் அதில் மூன்றில் ஒரு பங்கையே ஏற்றார்கள். அபூ லுபாபா [ரலி] அவர்கள் பிழை பொறுக்கத் தேடி தங்களைப் பிணைத்துக் கொண்ட அத்தூண் 'மஸ்ஜிதுன் னபவீ'யில் 'அபூ லுபாபாவின் தூண்' என அடையாளமிடப்பட்டதாக இன்றளவும் விளங்கி வருகிறது. ஹஜ்ஜை முடித்து பெருமானார் (ஸல்) அவர்களின் மண்ணறையைத் தரிசிக்க வருவோர் அனைவரும் அத்தூணின் முன் நின்று தொழுது தங்களின் பாவங்களையும் பொறுத்தருளும்படி இறைவனிடம் மன்றாடுகின்றனர் — நிச்சயம் தங்களின் மன்றாட்டம் ஏற்கப்படும் என்ற நம்பிக்கை நிறையப் பெற்றவர்களாக.



# 14. ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி)

'கஸ்ரஜ்'களின் தலைவரான ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்கள் பெற்ற ஆண்மக்கள் மூவர். அவர்களுள் ஹிஜ்ரத்துக்கு முன்னதாகவே முஸ்லிமாகி, தம் தந்தையைப் போன்றே மாநபியின் தோழமையை ஏற்றுச் சிறக்கப் பேறு பெற்றவர் ஸையிதினா அபுல் ஃபழ்ல் ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்களாவர். இவர்களின் தந்தை ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள் மட்டுமின்றி தாய் ஃபக்கீஹாவும் பாட்டியார் உமராஹ் பின்த் மஸ்ஊத் (ரலி) அவர்களும் அப்போதே முஸ்லிம்களாகி விட்டிருந்ததால் சிறுவர் கைஸ் (ரலி) முற்றிலும் இஸ்லாமிய சூழ்நிலையையே உணர்ந்தவராய் வளர்ந்தனர். அண்ணலார் (ஸல்) அவர்கள் மதீனா வந்தடைந்த ஆரம்ப நாட்களிலேயே ஒரு நாள் ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்கள், தம் மகனை அழைத்து வந்து, ''அல்லாஹ்வின் தூதரவர்களே! இந்த என் மகனை தங்களிடம் ஒப்படைக்கின்றேன். தங்களின் பணி விடையில் ஈடுபட்டிருக்கச் செய்யுங்கள்'' என விட்டுச் சென்றனர்—என இப்னு ஹம்பல் [ரஹ்] அவர்கள் எழுதுகிறார்கள். அன்று முதல் கிடைத்த பொன்னான தோழமை சிறுவர் கைஸ் (ரலி) அவர்களின் இயல்பிலேயே அமைந்திருந்த குணச் சிறப்புகளை மெருகு பெறச் செய்தது.

அடக்கமும் ஒழுக்கமும் அணிகலன்களாக அமைந்து, அண்ணலார் (ஸல்) அவர்களின் அன்புக்கு நெருக்கமாக்கியது அவ்விளைஞரை. ஒரு சமயம் தம் இல்லத்துக்கு வந்திருந்த தூதர் பெருமான் [ஸல்] அவர்களை வரவேற்று, விருந்தளித்துபசரித்து, அவர்கள் விடைபெற விழைந்தபோது தம் வாகனத்திலேயே அவர்களை அமர்த்தி வழியனுப்பிய

ஹழ்லரத் ஸஅத் இப்னு உபாதா [ரலி] அவர்கள், தம் மைந்தர் கைஸ் [ரலி] அவர்களையும் உடன் அனுப்பி அண்ணலார் (ஸல்) அவர்களின் இல்லம் வரை சென்று திரும்பக் கட்டளையிட்டிருந்தார்கள். ஹழ்லரத் கைஸ் [ரலி] அவர்களும் வாகனத்தோடேயே நடந்து சென்றார் கள். சற்றுத் தொலை கடந்ததும் அண்ணலார் (ஸல்) அவர்கள், இளைஞர் கைஸ் (ரலி) அவர்களையும் தம் பின்னே வாகனத்தில் அமர்ந்து கொள்ளக் கூறினார்கள். ஆனால் கைஸ் [ரலி] அவர்கள் மரியாதையுடன் மறுத்து நடந்தே சென்று கொண்டிருந்தார்கள். ஓரிரு முறை வற் புறுத்திய பின் பெருமானார் [ஸல்] அவர்கள், தம் பின்னே வாகனத்தில் அமர்ந்தே வருமாறும் இல்லாவிடில் வீடு திரும்பி விடுமாறும் கூறினார்கள். இளைஞர் கைஸ் [ரலி] அவர் களோ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் பின்னே அவர்களுக்குச் சமமாக அமருவதைப் பேணுதல் குறைவாக எண்ணி அஞ்சி தங்களின் இல்லத்துக்கே திரும்பி விட் டார்கள்.

நல்ல திடகாத்திரமான உடல்வாகும் அவர்களுக்கு அமைந்திருந்தது. அண்ணல் எம்பெருமான் [ஸல்] அவர்க ளின் அவையில் ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் [ரலி] அவர் கள் இருந்த பொலிவை அரச தர்பாரில் நிற்கும் தலைமைக் காவலருக்கு ஒப்பாக ஹழ்லரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

மூன்று தலைமுறைகளாக அவர்களின் முன்னோர்களி டையே வளர்ந்தோங்கி வந்த வள்ளன்மை ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்களை விட்டும் பிரியவில்லை. அன்ஸார்களில் மற்றெந்த குடும்பமும் இத்தகைய பேற்றி

னைப் பெற்றிருக்கவில்லை என வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள்.

ஹிஜ்ரி 8-ல் ஹழ்ரத் அபூ உபைதா (ரலி) அவர்களின் தலைமையில் நடைபெற்ற படையெடுப்பிலும், மக்க நகர வெற்றிப் பிரவேசத்திலும் காணப்படுபவற்றைத் தவிர்த்து ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்களின் நடவடிக்கைகள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் பிரிவுக்குப் பின் நான்காம் கலீஃபா ஹழ்ரத் அலீ (ரலி) அவர்களின் கால வரலாற்றிலேயே காணக் கிடைக்கின்றன. இளமையிலிருந்தே தம்மிடம் உள்ளன்புடன் கூடிய தோழமை பூண்டிருந்த இவர்களை, கலீஃபா அலீ (ரலி) அவர்கள் தாங்கள் கிலாஃபத்தை ஏற்ற சமயம் எகிப்தின் ஆளுநராக அனுப்பி வைத்தார்கள். குழப்பம் அலை வீசிய சூழ்நிலையில் பொறுப்பேற்றுச் சென்ற ஹழ்ரத் கைஸ் (ரலி) அவர்கள் தங்களின் அறிவார்ந்த நடவடிக்கைகளாலும் திறன்பட்ட நிர்வாக முறைகளாலும் எகிப்தை முழுக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார்கள். ஸிரியாவில் தனியதிகாரம் செலுத்திக் கொண்டிருந்த ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்களின் கவனத்தையும் கவர்ந்தது எகிப்தில் ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் மேற்கொண்டிருந்த நிர்வாகத் திறன்!

ஸிரியாவின் புறம் கலீஃபா அலீ (ரலி) அவர்களின் நடவடிக்கையை எதிர்பார்த்தேயிருந்த ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்கள், அதே சமயம் எகிப்தின் புறமிருந்து கலீஃபாவின் ஆளுநரால் விளையக் கூடிய நெருக்குதலையும் கற்பனை செய்து பார்க்கத் தவறவில்லை. அதனைத் தவிர்க்க, ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்களை எவ்வாறாயினும் தம் சார்புடையவராக்கிக் கொள்ள ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்கள் மேற்கொண்ட எந்த முயற்சியும் பலனளிக்கவில்லை. ஹழ்ரத் கைஸ் (ரலி) அவர்கள் தமக்கு ஆதரவாகத் திரும்பி விடில் அதற்குப் பகரமாக 'இராக்'

கைத் தாம் வெற்றி கொண்டால் அதன் ஆளுநராக ஹழ்ரத் கைஸ் (ரலி) அவர்களையே நியமிப்பதாகவும், அவரின் குடும்பத்தைச் சார்ந்த ஒருவரையே ஹிஜாஸின் அதிகாரத்தில் அமர்த்துவதாகவும் இவையல்லாமல், விரும்புமளவு பொன்னையும் மணிகளையும் சன்மானமளிப்பதாகவும் ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்களால் காட்டப்பட்ட ஆசைகள் அனைத்தும் விழலுக்கு இறைத்த நீராக விரையமாமயினவேயன்றி கலீஃபா அலீ (ரலி) அவர்கள்பால் ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் கொண்டிருந்த விசுவாசத்தில் சிறு மருவும் கூட ஏற்படவில்லை.

அத்தகைய உறுதி மனப்பான்மை கொண்ட ஆளுநரை, தங்களின் குதர்க்க புத்தியால் விமர்சித்து, கலீஃபா அலீ (ரலி) அவர்களைக் கொண்டே திரும்ப அழைக்கச் செய்தார்கள் கூஃபாவாசிகள்!

ஏழே பேர்களோடு எகிப்துக்குச் சென்று அதிகாரத்தை மேற்கொண்ட ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் நாட்டைப் பூரணமாகத் தம் கட்டுப்பட்டிலாக்கி விட்ட போது அவர்களின் கரம் பிடித்து பிரமாணம் செய்யாத ஒரு கூட்டமும் அங்கிருந்தது. குர்த்துபாவில் வாழ்ந்த அக்கூட்டத்தார் முந்திய கலீஃபா ஹழ்லரத் உஃஸ்மான் (ரலி) அவர்களின் கொலையைப் பெருங் கொடுமையாகக் கருதினார்கள்; அதற்குப் பழி தீர்க்கும் முகமாக புதிய கலீஃபா அலீ (ரலி) அவர்கள் என்ன நடவடிக்கைகள் எடுக்கிறார்கள் என்று கவனிக்க, தங்களுக்கு அவகாசமளிக்க வேண்டும் என கேட்டார்கள். கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்களிடம் பிரமாணம் செய்யாவிட்டாலும் அவகாசமளிக்கப்பட்ட அவர்கள் ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களுக்கு எதிராகவும் எந்த நடவடிக்கையிலும் ஈடுபடாமல் அமைதியாகவே இருந்தார்கள். அதே போல் எகிப்திலேயே வாழ்ந்து

கொண்டிருந்த ஹழ்லரத் முஸ்லிமா இப்னு முக்லித் (ரலி) எனப்பட்ட அன்ஸாரித் தோழரும் ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களிடம் பிரமாணம் செய்யவில்லை. என்றாலும் அவரும் ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்கள் எகிப்திலிருக்கும் காலம் வரை அவர்களுக்கெதிராகத் தம் நாவை உசுப்பவும் மாட்டாரென வாக்குறுதி செய்திருந்தார். இவற்றையெல்லாம் ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களும் விவேகத்துடன் ஏற்றுக் கொண்டார்கள் என்ற செய்தி தலைநகரில் கலீஃபா அவர்களை எட்டியபோது, அங்கிருந்த சில கூஃபா வாசிகள் அவ்வாறு அவர்களை விட்டு வைக்கலாகாது எனவும் பலவந்தப்படுத்தி உடனடியாகவே பிரமாணம் செய்ய வைக்க வேண்டுமென்றும் கலீஃபா அவர்களை வற்புறுத்தினார்கள்.

கலீஃபா அவர்களும் ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களுக்கு அவ்வாறே எழுதினார்கள். அதற்குப் பதிலாக ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்கள், "அவர்கள் தற்சமயம் கொண்டுள்ள அமைதியால் நமக்கு எந்த நட்டமும் ஏற்படவில்லை. அவர்களைப் பலவந்தப்படுத்தி போரைத் துவக்கினால் அவர்களனைவரும் நமக்கெதிரானவர்களோடு சேர்ந்து நமக்குச் சிரமத்தை விளைவிக்கக் கூடும்" என எழுதினார்களாயினும் கூஃபா வாசிகளின் குதர்க்க மதியில் அது உரைக்கவில்லை. ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களுக்கு ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்களோடு ஏதோ தொடர்பிருக்க வேண்டும். அதனாலேயே நம்மை ஏற்காதவர்களை விட்டு வைத்திருக்கிறார் என சந்தேக வித்துகளைத் தூவலானார்கள்.

அதனைப் பொருட்படுத்தாது கலீஃபா அலீ (ரலி) அவர்கள், ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களின் யூகப்படியே எகிப்தின் நிர்வாகம் நடைபெறட்டும் என்று விட்டு விட்டார்கள். அதே சமயம் கூஃபாவில் ஹழ்லரத் கைஸ் (ரலி)

அவர்களைப் பற்றி சந்தேக வித்துகள் தூவப்படுவதை ஒற்றர்கள் மூலம் அறிந்த ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்கள் சமயோசிதமாக ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களைப் பற்றி தம் அவையில் பகிரங்கமாகவே புகழ ஆரம்பித்து விட்டார்கள். அன்னார் தம் தோழமையைப் புறக்கணிக்க வில்லை என்றும், தம் எழுத்தோலைகளைக் கண்ணியப் படுத்தி, அதன் பலனாகவே தமக்காதரவானவர்களை யெல்லாம் எகிப்தில் நிம்மதியாக நடமாட விட்டிருப்ப தாகவுமெல்லாம் ஹழ்லரத் முஆவியா (ரலி) பரப்பிய புகழ் மொழி ஒற்றர்கள் மூலமாக கூஃபாவை எத்தி அங்கு தூவப்பட்டிருந்த சந்தேக வித்துகளை வட்டம் பெறச் செய்தன. கூஃபாவாசிகளின் நச்சரிப்பினாலேயே கலீஃபா அலீ (ரலி) அவர்கள் முஹம்மத் இப்னு அபூபக்கர் (ரலி) அவர்களை எகிப்தின் புதிய ஆளுநராக நியமித்து அனுப்பி வைத்தார்கள்.

ஹழ்லரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் (ரலி) அவர்களின் மூலம் தம் பதவி நீக்கம் பற்றியறிந்த ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்களடைந்த துயரத்துக் கோர் அளவே இல்லை. எனினும் கலீஃபா அவர்கள் கட்டளையிட்டிருந்தபடி பொறுப்புகளை ஹழ்லரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் (ரலி) அவர்களிடம் ஒப்படைத்து மதீனா வந்தடைந்தார்கள் ஹழ்லரத் கைஸ் (ரலி). இத்தகவல்கள் அனைத்தையும் அறிந்து ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்கள், எவ்வாறாயினும் ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களை வசப்படுத்தி, தம்மிடம் அழைத்து வந்து விடுமாறு மர்வானை அனுப்பி வைத்தார்கள். ஆனால் மர்வான் தம் முயற்சிகளில் வெற்றி பெறவில்லை. எவ்வித நப்பாசைகளுக்கும் மசியாத தம்மை மர்வான் நிர்ப்பந்தங்கொண்டு நெருக்கத் திட்ட மிடுவதையறிந்த ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்கள் மதீனாவை விட்டே வெளியேறி கூஃபா வந்தடைந்தனர். நேரிடை யாகவே அவர்களிடம் எல்லா விபரங்களையும் கேட்டறிந்த

கலீஃபா அவர்கள் அதற்குப்பின் அத்தோழரை தம் அருகிலேயே இருக்கச் செய்துக் கொண்டார்கள். அதற்குப் பின் நடைபெற்ற ஸிப்ஃபீன் போரிலும் ஹழ்ரத் கைஸ் (ரலி) அவர்கள் கலந்து கொண்டார்கள்; காரிஜீகளுக்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட நஹ்ரவான் நடவடிக்கையிலும் பங்கேற்றார்கள்.

ஹிஜ்ரி 40—ல் கலீஃபா அலீ (ரலி) அவர்களின் மரணத்தையடுத்து கிலாஃபத்தை ஏற்ற இமாம் ஹஸன் (ரலி) அவர்களுக்கும் துணையாக இருந்தார்கள் ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி). அச்சமயம் ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்கள் ஸிரியாவிலிருந்து ஒரு பெரும் படையை 'இராக்'கின் புறம் அனுப்பி வைத்தார்கள். அச்செய்தி கிடைக்கப் பெற்ற ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள், ஸிரியப் படையினரைத் தடுத்து நிறுத்த உறுதி கொண்டு தங்களின் தலைகளை மொட்டையடித்து, உயிர்களின் மீது பிரமாணம் செய்தளித்த ஐயாயிரம் வீரர்களுடன் புறப்பட்டார்கள். ஸிரியப் படைகள் அப்னாரை வந்தடைந்திருந்தன. ஹழ்ரத் கைஸ் (ரலி) அவர்களும் படைகளுடன் அப்னாரிலேயே பாளையமிறங்கினார்கள். அதே சமயம் ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்களுக்கும் இமாம் ஹஸன் (ரலி) அவர்களுக்குமிடையே சமாதானம் ஏற்பட்டு விட்டது.

ஹழ்ரத் முஆவியா (ரலி) அவர்களிடம் நகரை ஒப்படைத்து விட்டு உடனே மதாயின் திரும்புமாறு இமாம் ஹஸன் (ரலி) அவர்கள் எழுதிய கடிதம் கிடைத்தபோது ஏற்பட்ட ஏமாற்றம் எரிச்சலைத் தந்தது ஹழ்ரத் கைஸ் (ரலி) அவர்களுக்கு; படையினரனைவரையும் ஒன்று கூட்டி இமாமவர்களின் கடிதப்படி நகரை ஒப்படைத்து விட்டு திரும்புவதா அல்லது இமாமவர்களின் தலைமையின்றியே தியாகத்துக்குத் துணிவதா எனஅவர்களையே முடிவு செய்யும்படி விட்டனர். படையினரோ ஒட்டு மொத்தமாக அப்

போதைய சூழ்நிலையில் அமைதியையே விரும்பினர். எனவே ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் ஸிரியப் படையினரிடம் நகரை ஒப்புவித்து விட்டு மதாயின் திரும்ப வேண்டியதாயிற்று.

மதாயினில் மிகச் சில நாட்களே தங்கிவிட்டு மதீனா வந்தடைந்த ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் எல்லா அரசியல் நடவடிக்கைகளையும் விட்டொதுங்கி தனிமை வாழ்வை மேற் கொண்டனர். ஏறத்தாழ இருப தாண்டு காலத்தை வணக்க வழிபாடுகளிலேயே மூழ்கிக் கழித்த அம்மாநபித் தோழர் ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்களின் ஆட்சியின் இறுதிக் காலத்தில் மதீனாவிலேயே மரணமடைந்தார்கள்.

**சோ**தனை காலத்தில் அரபு நாட்டின் அரசியல் வல்லு னர்களாகக் கணிக்கப் பெற்ற ஐவருள் ஒருவராக ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்களை வரலாற்றாசிரியர் கள் குறிப்பிடுகிறார்கள்.

ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களை வசப்படுத்தி தம்பால் அழைத்து வர ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்களால் அனுப்பி வைக்கப்பட்ட மர்வான் மதீனாவில் தம் முயற்சியில் தோல்வி கண்டு, ''என்ன முயன்றும் என் வலையில் சிக்காது தப்பி அவர் அலீ (ரலி)யைச் சென்றடைந்து விட்டார்'' என எழுதிய கடிதத்தைப் பெற்ற ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்கள் மர்வானுக்கு எழுதிய மறுகடிதத்தில் 'கைஸுக் குப் பதிலாக ஓரிலட்சம் வீரர்களை நீர் அலீ (ரலி)க்குத் தந்து உதவியிருக்கலாமே' என தம் கவலையைத் தெரிவித் திருந்தார்கள். ஓர் அரசியல் வித்தகரின் கரங்களாலேயே தம் அரசியல் வித்தகத்துக்கு ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர் கள் சூடிக் கொண்ட புகழாரமே இது!

''இஸ்லாம் தந்திரங்களுக்குத் தடை விதிக்காதிருப்பின் அரபு உலகையே என்னிடம் பணியச் செய்திருப்பேன்'' என ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களே ஒரு சமயம் குறிப்பிட்டுள்ளார்கள்.

நான்கு தலைமுறைகளுக்கு பாரம்பரியச் சொத்தாக மாறி வந்த வள்ளன்மை கைஸ் இப்னு ஸஅத் [ரலி] அவர்கள் மரணப்படியேறும் வரையும் கூட அவர்களை விட்டும் பிரிய வில்லை. மதீனாவின் மக்களில் மிக அதிகமான பேர் இவர்களுக்குக் கடன் பட்டிருந்ததாலேயே இவர்களைக் காண நாணி இவர்கள் நோய்வயப்பட்டிருந்த ஆரம்ப நாட்களில் இவர்களை வந்து சந்திக்காதிருந்தனர். அத்தகையவர்களுக்கிருந்த தங்கடத்தையுணர்ந்து ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்கள் தமக்குச் சேர வேண்டிய கடன் தொகை முழுவதையும் தாம் மன்னித்து விட்டதாக ஒரு நாள் அறிவிப்புச் செய்த பின்போ பெருங் கூட்டமே அவர்களின் இல்லத்தில் திரண்டு விட்டது. மேல் வீட்டில் படுக்கையிலிருந்த ஹழ்லரத் கைஸ்[ரலி] அவர்களைக் காண ஒருவரோடொருவர் முண்டியடித்து முந்தியதில் படிக்கட்டின் தலைவாயிலும் தகர்ந்து விட்டது.

கஃஸீர் இப்னு ஸலத் எனப்பட்டவர் ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்களுக்குக் கடன் பட்டிருந்தார். அத்தொகையை அவரிடம் கேட்டுப் பெறுமாறும், அவர் அதனைத் தர மறுத்திடில் மதீனாவில் உள்ள அவரின் வீட்டை விற்றாகிலும் கடன் தொகையைத் தமக்கனுப்பி வைக்குமாறும் ஹழ்லரத் முஆவியா (ரலி) அவர்கள் மதீனாவின் ஆளுநர் மர்வானுக்கு எழுதினார்கள். மர்வான் அவருக்கு மூன்று நாட்கள் தவணை தந்திருந்தார். தவணை காலத்துக்குள் அப்பெரியார் எவ்வளவோ முயன்றும் முழுத் தொகையும் தேறவுமில்லை, தம்மிடமிருந்த ஒரே வீட்டை

விற்கவும் அவருக்கு மனமில்லை. 30,000 காசுகள் குறைவு பட்டன. கடைசியாக அவருக்கு ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்களின் நினைவு வரவே அவர்களிடமே சென்று 30,000 காசுகள் கடனாகக் கேட்டார். ஹழ்லரத் கைஸ் (ரலி) அவர்களும் தந்துதவினார்கள். ஆனால் கடன் தீர்க்கப்பட்ட பின் மர்வானின் இதயத்தில் அப்பெரியாரின் மீது இரக்கம் சுரந்தது. பணத்தையும் விட்டையும் அப்பெரியவருக்கே திருப்பித் தந்து பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டார் மர்வான். ஹழ்லரத் கஃஸீர் அவர்கள் கடனாகக் கேட்டுப் பெற்ற தொகையை எடுத்துக் கொண்டு வந்து ஹழ்லரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்களைச் சந்தித்தனர். ஆனால் அதனைத் தாம் அல்லாஹ்வுக்காகவே அழகிய கடனாகத் தந்ததாகவும் எனவே அதனைத் தாம் திரும்பப் பெற முடியாதெனவும் மறுத்து விட்டார்கள் அந்நாயகப் பெருந்தோழர்.

தம் வறுமை நிலையை இவர்களிடம் முறையிட வந்த ஒரு மூதாட்டி 'தம் வீட்டில் எலிகளின் நடமாட்டமே இல்லை' என கூறக் கேட்ட இவர்கள், உணவுத் தானியங்களே தம் வீட்டில் இல்லை என்பதை வெளியிடும் அவரின் சூசகத்தை வெகுவாக இரசித்து, 'கவலையுறாதீர் நாளையே உம் வீட்டில் எலிகளைக் குடிபுகச் செய்வேன்' என அதே சூசகத்தோடு பதிலளித்து அம்மூதாட்டியை மகிழச் செய்தனுப்பியதோடு அன்று மாலையே தானியப் பொதிகளை அம்மூதாட்டியின் வீட்டில் கொண்டு இறக்கச் செய்தார்கள்.

''அவர் வாரி வழங்கிய நிகழ்ச்சிகளை என் நூலின் பெருக்கத்துக்கு அஞ்சி நான் நிரப்பாமல் விடுகிறேன்'' என்று 'உஸ்துல் காபா'வின் ஆசிரியர் இப்னு அஃஸீர் (ரஹ்) குறிப்பிடுகின்றனர்.

''மாநபித் தோழர்களில் மிகப் பெரும் கருணையாளரும் வள்ளலுமாவார் அவர்'' என 'அஸ்மாவுர் ரிஜா'லின் தொகுப்பாளர்கள் கூறுகின்றனர்.

ஹழ்ரத் உஃஸ்மான் (ரலி) அவர்களின் கிலாஃபத்தை குழப்பம் வளைத்திருந்த நெருக்கடியான காலத்தில் இவர்களிடம் விரைந்து வந்த ஹபீப் இப்னு மஸ்லமா தம் குதிரையை இவர்கள் முன் நிறுத்தி இவர்களை ஏறிக் கொள்ளுமாறு வேண்டியபோது, 'குதிரையின் உரிமையாளரே முன்னதாக அதன் மீது அமரவேண்டும்' என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அறிவித்துள்ளதைக் கூறி இவர்கள் தாம் முன்னதாக ஏற மறுத்து விட்டனர். அவ்வறவுரையைத் தாமும் அறிந்தேயிருந்த போதினும் தராதரத்தில் தம்மை விட உயர்ந்த இவர்களை நிறுத்தி முன்னதாக தாம் ஏறி அமர தம் உள்ளம் ஒரு போதும் ஒருப்படாதென ஹபீப் இப்னு மஸ்லமா கூறி நின்றனர்.

ஹழ்ரத் கைஸ் (ரலி) அவர்களின் முகத்தில் இறுதி வரை ஒரேயொரு முடியும் முளைக்காததால் பிந்திய காலத்தில் இவர்களை 'விலைக்காவது ஒரு தாடி வாங்கி வைத்துக் கொள்ளக் கூடாதா?'' என விளையாட்டாக வினவி நபித்தோழர்கள் நகைப்பதுண்டு. எனினும் இயற்கையாக அமைந்து விட்ட அந்த ஒரு குறையைத் தவிர்த்து, ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் சின்னஞ்சிறு வழி முறைகளையும் கண்ணெனப் போற்றிப் பேணி வாழ்ந்தார்கள்.

'காதிஸிய்யா'வில் ஹழ்ரத் ஸஹ்ல் இப்னு ஹனீஃப் (ரலி) என்ற நபிமணித் தோழரோடு அமர்ந்திருக்கையில் அவ்வழியாக ஒரு பிரேத ஊர்வலம் செல்லக் கண்டு ஹழ்ரத் கைஸ் இப்னு ஸஅத் [ரலி] அவர்கள் எழுந்து நின்றனர். 'அது ஒரு திம்மியின் சடலமே. தாங்கள் ஏன் தேவை

யற்று எழுந்து நின்றீர்கள்' என்று ஹழ்ரத் ஸஹ்ல் இப்னு ஹனீப் [ரலி] அவர்கள் வினவியபோது, ''அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்கள் ஒரு பிரேத ஊர்வலம் செல்லக் கண்டு எழுந்து நின்றார்கள். அது ஒரு யூதரின் சடலம் என அவர்களுக்கு அறிவிக்கப்பட்டபோது, 'ஆயினும் என்ன அதுவும் ஓர் ஆன்மாவேயன்றோ' என அண்ணலார் (ஸல்) அவர்கள் நவின்றார்கள்'' என விளக்கினார்கள்.

முஹர்ரம் மாதத்தில் ஆஷூரா நாளன்று நோன்பு நோற்க அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களால் ஏவப்பட்ட கடமை ரமழான் மாத நோன்பின் சட்டம் பிறந்த பின் தளர்த்தப்பட்ட போதினும் இவர்கள் ஆஷூராவுடைய நோன்பையும் தவறாது பேணினார்கள்.

'ஃபித்ரா'வென்னும் தர்மத்தைப் பற்றி அவர்களிடம் ஒருவர் கேட்டபோது, ''ஜக்காத் எனப்படும் ஏழைவரி பற்றிய சட்டம் வருவதற்கு முன்னதாக நபி பெருமான் [ஸல்] அவர்கள் 'ஃபித்ரா' வழங்கும்படி எங்களை ஏவியிருந்தார்கள். 'ஜக்காத்' பற்றிய சட்டம் வந்த பின்னர் அவர்கள் எங்களை அது பற்றி ஏவவுமில்லை, தடுக்கவுமில்லை. எனவே நாங்கள் தொடர்ந்து அதனையும் நிறைவேற்றுகிறோம்'' என தெரிவித்தார்கள்.



# 15. ஹழ்லரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி)

ஹிஜ்ரத்துக்கு முன்னதாகவே இஸ்லாத்தை ஏற்ற அன்ஸார்களில் கஸ்ரஜ் கோத்திரத்தைச் சார்ந்த ஸஅத் இப்னு மாலிக் [ரலி] எனப்பட்ட தோழர், மதீனாவில் மதி முகம் மலரச் செய்த மாநபிபெருமான் [ஸல்] அவர்களின் சன்னிதானத்தில் தம் ஐந்து வயதுச் சிறுவரைக் கரம்பிடித்து அழைத்து வந்து நின்றார் ஒரு நாள்.

''அல்லாஹ்வின் தூதரவர்களே! இதோ என் இதயக் கனி'' என அவர் தம் முன்னே நிறுத்திய சிறுவரின் சிரசைப் பரிவுடன் வருடிய பெருமானார் (ஸல்) அவர்கள் சிறுவரின் 'பெயரென்ன?' என வினவினார்கள்.

'ஹ(ஜ்)ஸன்' என்றார் தந்தை. கடுமை என்ற பொருள் தரும் அச்சொல்லை மாற்றி அண்ணலார் [ஸல்] அவர்கள், ''இன்றுமுதல் இப்பிள்ளையின்பெயர் 'ஸஹ்ல்'—மென்மை'' என்றார்கள். 'அப்படியே' என கட்டளையைச் சிரமீதேற்றார் அத்தந்தை.

'பனீ ஸாஇதா'க்களைச் சார்ந்த அன்றைய சிறுவர் ஸஹ்ல் இப்னு ஸஅத் [ரலி] அவர்கள் பிற்காலத்தில் ஸஹ்ல் ஸாஇதீ எனவும் அறியப்பட்டார்கள். அபூ யஹ்யா, அபுல் அப்பாஸ், அபூ மாலிக் என்றெல்லாம் பிற்காலத்தில் புனை பெயர்கள் தாங்கி தொண்ணூற்று ஆறாண்டு காலம் நடமாடிய அப்பெரியாரே பெருமானார் (ஸல்) அவர்களின் தோழர்களில் மதீனாவில் இறுதியாக மரணமடைந்தவராவார்கள்.

'ஸாபி[க்] கூனல் அவ்வலூன்' என்ற சங்கைக்குரியவர்களில் ஒருவரான ஸஅத் இப்னு மாலிக் (ரலி) பத்ருப் போரில் பங்கேற்க எல்லா முன்னேற்பாடுகளையும் செய்த வண்ணமிருந்த போதிலும் அல்லாஹ்வின் அழைப்பு போர் துவங்க ஓரிரு நாள் முன்னதாகவே அவருக்கு வந்து விட்டது! அதனை ஏற்று தந்தை ஸஅத் [ரலி] மறுமைப் பய

ணம் புறப்பட்டுச் செல்ல, அநாதையாகி நின்றார் ஏழே வயதுகளையடைந்திருந்த சிறுவர் ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி). ஆனால் 'எண்ணங்களின் அடிப்படையிலேயே சகல பலாபலன்களும்' என்ற தத்துவங் கண்ட தூதர் நாயகம் [ஸல்] அவர்கள் பத்ருப் போரின் வெற்றிப் பொருள்களில் மறைந்த தோழர் ஹழ்ரத் ஸஅத் இப்னு மாலிக் (ரலி) அவர்களுக்கும் ஒரு பங்கு பிரித்து அவரின் வழிவாறாக நின்ற சிறுவர் ஸஹ்ல் இப்னு ஸஅத் [ரலி] அவர்களைப் பலன் பெறச் செய்தார்கள்.

அநாதைகளுக்கொரு நிழற் கொடையாக வாழ்ந்த அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் தம் இம்மை வாழ்வுக்கு விடை கூறிப் பிரிந்த சமயத்திலும் ஹழ்ரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அவர்களின் வயது பதினாறாகவே இருந்தது. வானேந்த அண்ணலார் (ஸல்) அவர்களால் வரையறுக்கப்பட்டிருந்த பதினைந்தாம் வயதினை ஹழ்ரத் ஸஹ்ல் (ரலி) அவர்கள் எத்து முன்னரே தபூக் படையெடுப்பும் முடிந்தது விட்டது. எனவே அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ் நாட்களில் நடைபெற்ற எந்தப் போரிலும் பங்கேற்க அவர்களுக்கு வாய்ப்பே இல்லை. எனினும் ஹழ்ரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் [ரலி] அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்கள் சென்ற எந்தப் போர்க்களங்களையும் விட்டுப் பிரிந்திருக்கவில்லை என்றே அன்னவரால் நேரிடையாகவே அறிவிக்கப்பட்டுள்ள பல ஹதீஸ்—நபிமொழி—கள் அடையாளங் காட்டுகின்றன.

உஹதுப் போரின்போது எட்டே வயதுகளை அடையப் பெற்றிருந்த அவர்கள் தம்மையொத்த மற்ற சிறுவர்களோடு சேர்ந்து நகரைக் காவல் புரிந்தனர். எனினும் அண்ணலார் [ஸல்] அவர்களுக்கு போரில் விளைவிக்கப்பட்ட இன்னல் பற்றிச் செவியுற்ற அவர்கள் பதறித் துடித்து விரைந்தனர் போர்க்களம் நோக்கி. அதன்பின் நடைபெற்ற சம்பவத்தை, ''அண்ணலார் [ஸல்] அவர்களின் பற்கள் பெயர்ந்து விழும்படியாக அவர்கள் மீது கல்லெடுத்து வீசி,

அவர்களின் முகத்தை காயமுறச் செய்த அன்று அண்ண லார் [ஸல்] அவர்களின் காயத்தைக் கழுவியவர் யார்? அதற்கு நீரூற்றியது யார்? என்ன மருந்து போடப்பட்ட தென்பனவற்றையெல்லாம் ஆண்டவன் மீதாணையாக நான் அறிவேன். மாநபியின் மகளார் ஃபாத்திமா (ரலி) காயத்தைக் கழுவினார். அலீ [ரலி] தம் கேடயத்தில் நீர் அள்ளி வந்து ஊற்றினர். இரத்தப் பெருக்கு நிற்காதது கண்டு ஃபாத்திமா நாயகியார் ஒரு கோணித் துண்டை எரித்து அதன் சாம்பலைக் காயத்தின் மீது அப்பினார். இரத்தம் நின்றது'' என ஹழ்ரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் [ரலி] அவர்களே விவரித்துள்ளதை 'புகாரீ'யில் காணலாம்.

''அண்ணலார் (ஸல்) அவர்களோடிருந்து நாங்கள் அகழ் தோண்டிக் கொண்டிருந்தோம். எங்களின் தோல் களில் நாங்கள் மண் சுமந்து கொட்டிக் கொண்டிருந்த போது பெருமானார் (ஸல்) அவர்கள், ''இறைவா! மறுமை யின் சுகத்தைவிட நல்ல சுகம் ஏதுமில்லை. முஹாஜிர்கள் மீதும் அன்ஸார்கள்மீதும்நீகருணை புரிந்தருள்'' என வழுத்தி னார்கள்—என்று ஹழ்ரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் அகழ்ப் போர் நிகழ்ச்சியை விவரித்துள்ளார்கள்.

கண்களில் நோயுற்று கால்களில் நடக்கவும் சிரமப்பட் டுத் தவித்த வேங்கையின் வேந்தர் அலீ (ரலி) அவர்களின் கண்களில் பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் உமிழ் நீரைத் தடவி, தங்களின் கொடியையும் அவரிடமே தந்து கைபர் கோட்டையைத் தகர்க்க அனுப்பி வைத்த அற்புதச் சம்பவம் பற்றி 'புகாரீ'யில் காணப்படும் ஹதீஃஸும் ஹழ்ல ரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் [ரலி] அவர்களால் அறிவிக்கப் பட்டதே. அச்சம்பவத்தின்போது அவர்களின் வயது பனிரண்டே!

இத்தகைய அறிவிப்புகள் அந்த இளமையிலும் அல் லாஹ்வின் தூதர் [ஸல்] அவர்களிடத்தில் ஹழ்ரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் கொண்டிருந்த பக்தியை

யும் பாசத்தையும் தெரிவிக்கின்றன. மஸ்ஜிதுன் னபவீயில் ஒரு தூணில் சாய்ந்தபடியே உரைகள் நிகழ்த்தி வந்த நபிபெருமான் (ஸல்) அவர்கள் அமர்வதற்கேற்ப ஒரு மேடையை சித்தப்படுத்திக் கொள்ள விரும்பியபோது காடு சென்று அதற்கென மரம் வெட்டிக் கொணர்ந்தளித்தவர் கள் இவர்களே.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அறபோ தங்களை நேரடியாகவே கேட்டறியும் வாய்ப்பினைக் குறை வாகவே இவர்கள் பெற்ற போதினும் அண்ணலார் (ஸல்) அவர்களின் அருமைத் தோழர்களான ஹழ்லரத் உப்பை இப்னு கஅப், ஆஸிம் இப்னு அத்தீ, அம்ரூ இப்னு உபஸா (ரலி) போன்றோரிடம் அவற்றைக் கற்றனர். புகழ் பெற்ற நபிமணித் தோழர்களெல்லாம் முதுமையடைந்து மறையத் தொடங்கிய பிந்திய காலத்திலும் ஆன்மீகக் கல்வி தடை பட்டு விடாமல் தொடர பணியாற்றிய இவர்களிடமிருந் தும் உலகம் ஒரு நூற்று எண்பத்தெட்டு அருள்மொழிகளை அடையப் பெற்றிருக்கிறது. ஹதீஃஸ் அறிவிப்பாளர்களின் வரிசையில் இவர்கள் பத்தொன்பதாம் இடத்தைப் பெற் றுள்ளார்கள்.

அண்ணலார் [ஸல்] அவர்களிடத்தில் கொண்டிருந்ததே போல் அவர்களின் குடும்பத்தவரிடமும் ஹழ்லரத் ஸஹல் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் மாறாத அன்பு பூண்டிருந்த னர். பிந்திய காலத்தில் மதீனாவின் அதிகாரியாக வந்த —மர்வானின் குடும்பத்தைச் சார்ந்த—ஒருவர் இவர்களை அழைத்து அலீ [ரலி] அவர்களைப் பற்றி மக்கள் முன்னே இழிவாகப் பேசச் சொன்னபோது இவர்கள் கண்டிப்புடன் மறுத்து விட்டனர். [அலீ [ரலி] என பெயர் குறிப்பிடாமல்] ''அபூ துராபின் மீது ஆண்டவனின் சாபமுண்டாவதாக'' என்று மட்டுமாவது பேச்சிடையே இணைத்துக் கொள்ளு மாறு வேண்டப்பட்டபோதும் ''அண்ணல் எம்பெருமானார் [ஸல்] அவர்களால் அலீ [ரலி]க்கு அன்புடன் சூட்டப்பட்ட பட்டப் பெயரல்லவோ 'அபூ துராப்—மண்ணின் தந்தை' என்

பது. அலீ [ரலி] அவர்களைப் புளகாங்கிதங் கொள்ளச் செய்யும் புனை பெயரல்லவோ அது'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அப்பெயர் கொண்டு அலீ [ரலி] அவர்களை அழைக்க நேர்ந்த சம்பவத்தையும் அவர்கள் விளக்கிய விவேகம் கண்டு வாயடைத்துப் போனார் அதிகாரி.

ஹிஜ்ரி 74-ல் அதிகாரமேற்று வந்து ஹழ்ரத் அனஸ் இப்னு மாலிக், ஜாபிர் [ரலி] போன்ற பெரும் பெரும் நபி மணித் தோழர்களையெல்லாம் சிறுமைப்படுத்தும் நோக்குடன் அவர்களின் கழுத்துக்களில் முத்திரையிடச் செய்த ஹஜ்ஜாஜ் இப்னு யூஸுஃபின் கொடுமையை விட்டு இவர்களும் தப்பவில்லை. ஹழ்ரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் [ரலி] அவர்களை அழைத்து வரச் செய்து ''மதீனாவிலேயே வாழ்ந்து கொண்டிருந்தும் கலீஃபா உஸ்மான் [ரலி] அவர்கள் துரோகிகளால் முற்றுகை சூழப்பட்ட காலத்தில் நீர் ஏன் கலீஃபா அவர்களுக்கு உதவவில்லை'' என விசாரித்த ஹஜ்ஜாஜ், ''நான் உதவ விரைந்தேன்'' என இவர்கள் கூறியும் ஏற்காமல், ''நீர் பொய்யுரைக்கின்றீர்'' என இடையிலேயே குறுக்கிட்டு இவர்களின் கழுத்திலும் முத்திரையிடச் செய்தார்.

அதற்குப் பின்னரும் ஹழ்ரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அவர்கள் மனஞ்சலிக்காமல் நெடுங்காலம் மார்க்கப் பணியாற்றி வந்தார்கள்.

قَالَ رَسُوْلُ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ

''அல்லாஹ்வின் தூதரவர்கள் கூறக் கேட்டேன்'' என குறிப்பிட உரிமையுடையவராக எனக்குப் பின் எவரையும் நீங்கள் காணமாட்டீர்கள்'' என குறிப்பிட்டு தங்கள் மாநபியின் மணிமொழிகளை மக்களிடையே மணங்கமழச் செய்து வந்த இம்முதுபெருந் தோழர் ஹிஜ்ரி 91-ல் தங்களின் 96-ம் வயதில் இவ்வுலக வாழ்வுக்கு விடை கூறிப் பிரிந்தார்கள். மதீனாவில் மாநபித் தோழர்களின் நடமாட்டம் இவர்களின் மறைவோடேயே நிறைவடைந்தது.




எம். எஸ். முஹம்மது தம்பி

அன்ஸார் பப்ளிஷர்ஸ்

125, இராமசாமித் தெரு, சென்னை—600 001

தொலைபேசி எண் : 514535

பொருளடக்கம்



நபிமணித் தோழர்களின் வரலாற்று வரிசையில் அன்ஸார்களை மட்டுமே கொண்ட ஒரு தனித் தொகுப்பு இந்நூல்.

பிந்திய காலத்தில் தோன்றவிருப்பதாக முந்திய வேதங்களில் முன்னறிவிக்கப்பட்டிருந்த தூதர் நாயகம் [ஸல்] அவர்களுக்குத் துணை புரிவதற்கென்றே பண்படுத் தப்பட்டு வந்த ஒரு பாரம்பரியத்தினர் மதீனாவின் அன்ஸார்கள்.

மத, மொழி, இன வேறுபாடுகள் அனைத்தையும் தாங்கி மனித வர்க்கம் ஆதிக்கம் கொண்டுள்ள இந்த பூமி யின் மொத்தப் பரப்பளவில் மட்டுமின்றி, சஞ்சரிக்கும் அத்தனை கோளங்களிலும் இன்று புகழப்பட நிர்ப்பந்திக் கப்பட்டு விட்ட திருப்பெயருக்குரியவர்கள் பெருமான் முஹம்மத் (ஸல்) அவர்கள். அவர்களின் புகழுடலைத் தாங்கி நிற்கும் பூமியைக் காண தவங்கிடக்கிறது உலகம் இன்று. ஆனால் அப்பெருமகனார் பூமியில் வாழ்ந்தபோது அவர்களைக் காண்பதொன்றே கொலைக்களத்துக்கு அழைத்துச் செல்லப்பட போதுமான குற்றமாகக் கருதப் பட்ட காலமும் ஒன்றிருந்தது!

